

கவிஞர்

# வாலி

எழுதும்

# ராமானுஜ காவியம்

புரட்சி மகானின்

புனித வரலாறு!



தீபாவளி முதல்

புதுக் கவிதை ராக்கெட்!



அடுத்த
இதழில்
அட்டகாச
ஆரம்பம்!



கவிஞர் **வாலி**
எழுதும்

# ராமானுஜ காவியம்

சீர்திருத்தவாதியின்
சீர்மிகு சரிதம்!



ஓவியம்:
கோபுலு

# ராமானுஜ



## வாணி வழங்கிய வரம்

1

வானத்தை விடவும் -
வயதான பிறகும் -
விருத்தமொடு விளங்காது;
விருத்தமொடு விளங்கும்...

மார்க்கண்டேய
மொழியை;
மூத்த குடியின்
மூன்றாம் விழியை...

முறையாய்க் கல்லாத -
முட்டாள்; இதனைக்
குறையாய்க் கருதாது -
கலைமகள் நட்டாள் -

வித்தை எனும்
வித்தை - என்
புத்தியெனும் செய்யுள்;

# காவியம்

உடன்–
பூத்ததில் செய்யுள்!

வெண்பூ மேலமர்ந்து
வீணை தடவும்
பெண்பூ –
செலுத்தினாள் – இச்
சிறியன் மேல்...

தண்பூ தனைவெல்லும்
தன்னிரண்டு
கண்பூ!

அடடா!
அவளது...

கண்பூ பட்டதும் –
பண்பூ பூத்திடும் –
பாமரம் ஆனது –
பாமரம்!

என் –
எழுத்தும் எண்ணமும்
ஏடும் எழுதுகோலும் – நான்
வழுத்தும் வாணியவள்
வழங்கிய வரம்!

தலையலால் கை மாறிலை;
தாழ்த்தினேன் சிரம்!

## இரு தாய்க்கும் என் வணக்கம்

எனக்கு –
இரண்டு தாய்; இந்த –
இரண்டு தாய் இல்லையேல் –
இருந்திருக்கும் என் வாழ்வு –
இருண்டதாய்!

தலைப்பால் எனைமூடி – ஒருத்தி
முலைப்பால் தந்தாள்; அறியாமை –
உலைப்பால் வாடிடாது – ஒருத்தி
கலைப்பால் தந்தாள்!

ஒரு தாயால் – நான்
உயிரும் மெய்யும் பெற்றேன்;
ஒரு தாயால் – நான்
உயிரும் மெய்யும் கற்றேன்!

ஒரு தாய் – என்னை
உருவாக்கிய இடம் –

பள்ளியறை;
இன்னொரு தாயும் – என்னை
உருவாக்கிய இடம் –
பள்ளியறை!

என் –



கவிஞர் **வாலி**

இனிய தாய் -
இருவர்க்கும் -
என்றும்...

மேலாடை -
நூலாடை!

தாங்கினாள் ஒரு தாய்
தன்மடியில் - இந்தத்
தமிழனை! இவனை -
வாங்கினாள் ஒரு தாய்
தன் பிடியில்; அவள் பேர்
தமிழனை!

தந்தேன் வணக்கம் - இரு
தாய்க்கும்;
தந்தால்தான் -
தமிழ்க் கவிதை...

வாய்க்கும் - என்
வாய்க்கும்!

## பிழை பொறுப்பீர்

**நூ**ற்கடல் கம்பனே
நுவன்றான் - தன்னைப்
பாற்கடல் பருகப்
புகுந்த பூசையாய்;

பரிகாசம்
பொருட்படுத்தாது
இதிகாசம்
இயற்றினான்...

அவன் -
ஆசை ஆசையாய்!
ராம காதை போல்
ராமானுஜன் காதையும் -
ஈர்க்க வல்லது
எவரது காதையும்!

கல்வியிற் சிறந்த
கம்பனே -
காதை எழுதக்
கூசினான்; தன்னைப்
பேதையர்
பித்தர்
பட்டியலில் வைத்துப்
பேசினான்!

நானோ - ஒரு
நிரட்சரகுட்சி;
செவ்வானை யளக்க
சிறைவிரித்த சின்னப் பட்சி!

விசும்பின் -
விசாலம் அறிய...

வால் நீண்ட
வலியனுக்கு வந்தது
வேணவா; அதுவும்
வெகுநாள் அவா!

வலியன் -
வல்லூறு போல் -
வலியன் அல்ல;
மெலியன்!



ஆயினும் -
ஆசை உந்த -
விரித்தது சிறையை; காற்றில் -
விடுத்தது குறையை!

எம்பெருமான்
எதிராஜன் பெருமை -
விசும் பொத்தது; நான்
வலிய னொத்தவன்!

இறை நெறியும்
மறை நெறியும்
இழையோடும் இக்கதையில் - என்
பிழையோடும்!

ஆன்மவிசாரத்தில்
ஆழங்காற்பட்ட
மேன்மக்களுக்கு - இதுபற்றி
வேண்டாம் விசனம்;

ஏனெனில் -
எல்லோரும் அறிவர் -
'வேட்கை வெட்கமறியாது' எனும் -
வெகுநாள் வசனம்!

காவியத் தலைவன்

பாவேந்தன்
பாரதிதாசன்
பாட்டில் வைத்துப்
பரவிய...

எதிராஜன் -
எனப்படும் ராமானுஜன்தான்...

அற்றை நாளில்-
அதுகாறும்...

தனியார் துறைக்குத்
தாரை வார்த்த முக்தியை -
பொதுத் துறைக்குப்
பெயர்த்து வந்தவன்; உய்வழி -
பேசிய மறைகளைப்
பெட்டியில் மறைக்காது -
தேசிய மயமாக்கி
தேசத்தவர்க்குத் தந்தவன்!

இவன்
இயற்றிய
சமயப் புரட்சி - ஓர்
இமயப் புரட்சி!

அரிசனம்;
அயல்சனம்; இரண்டும்-
சரிசனம் - என
சாதித்தது இவன் தராசு;
உடனே -
உறுமியது வைதிக மிராசு!

வர்ணங்கள் நான்கால்
வரையப் பெற்றிருந்த -
மன்பதை -
என்பதை...

ஒரே வர்ணத்தால் - இவன்
ஓஹோவென வரைந்தான்;
வழக்கம்போல் -
வைதிகன் இரைந்தான்!

இவன் -
கீழ்சாதிமேல் கைபோட்ட
மேல்சாதி; இதனை -
முதன் முதல் செய்த
முப்புரி நூல்சாதி!

தீண்டாமையைத் -
தீண்டியே கொன்றான்;
நிற்க -
நிழலற்ற...
சாயச் -
சுவரற்ற...

தெருக்குலத்தார் தம்மைத் -
திருக்குலத்தார் என்றான்!

இது மட்டுமோ விந்தை?
இன்னும் இயற்றினான்
எந்தை!

காமக்கிரியை புரியும்
கணிகையர்குலப் பெண்ணுக்கு -
ஈமக்கிரியை புரிந்தான்;

புள்ளினம் யாவிற்கும்
பறந்திட இடங்கொடுக்கும் -
வெள்ளிவானாய் விரிந்தான்!

ஈர மனத்தவன்; ஈ எனாமலே -
ஈயும் இனத்தவன்!

இருக்கும் நீரெலாம் -
இரக்கும் நிலத்திற்கீந்து -
இறக்கும் மேகமும் -
இவனும் ஒன்று;

நரகம் வருமென -
நன்கு தெரிந்தும்...

ஓதற் கரிய
ஒரு மந்திரத்தை - ஊர் உய்ய

ஓதினான் கோபுர
உச்சியில் நின்று!

இது மட்டுமோ விந்தை?
இன்னும் இயற்றினான் எந்தை!

முக்கா டிடுகின்ற -
முகமதியப் பெண்ணுக்கு -
நிக்கா முடித்தான் -
நாராயண னோடு;

அரங்கன்பால் -
அவளுக் கிருந்த...

அலுக்க வொண்ணாத
அன்பைக் கண்டு - அவளைத்
துலுக்க நாச்சியாய்த்
துதிக்கிறது நாடு!

ஆக -



ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே...
மதப்புரட்சி செய்த
மகான்;
இவன் கைக்குள்
இருந்தது -
சண்டித்தனம் செய்த
சனாதனக் குதிரையின் லகான்!

இருபதாம் நூற்றாண்டின் - இரு
இணையற்ற சிந்தனையாளரோடு...

உவமித்து ராமானுஜனை -
உரைக்கப் போயின்...

பூணூல் -
போட்டிருந்த -
பெரியார் எனலாம்; திருமண்-
ஆறிரண்டு -
அணிந்திருந்த -
அம்பேத்கார் எனலாம்!

ஜன்மபூமி

பத்து மாதப் -
பிள்ளைத் தாய்ச்சி போல்...

தொந்தி சரிந்த -
தண்ணீர் மேகம் -
அந்திப் பொழுதில் -
அன்ன வயல்களின் -

மீதூர்-திருப்பெரும்
பூதூர்-திருமகளின்
முகவரியாய் முகங்காட்டும் -
மூதூர்!

நதியலை

நாணலை
மோகித்து
மோதூர்;

வண்டுகள்
வனசம் மேல்
உட்கார்ந்து
ஊதூர்;

மாருதம்
மாதரார்
கூந்தலைக்
கோதூர்;

ஆரணம்
அந்தணர்
ஓயாது
ஓதூர்!

ஏதூர்-தனக்கு
எதிர் ஊர்? எனப் -
பூதூர் கேட்பதுண்டாம் கேள்வி;

ஏனெனில் -
எண்டிசை அதிர...

ஆதிகேசவன்
ஆலயத்தில்
அன்றாடம் நடக்கும் வேள்வி!

தேவர்க்குத்
தும்மல் வரும் அளவு -
உயரப் போகும்
ஓமப் புகை; தேவர் -
ஈயும் நலங்களால் - குறையும்
ஈமப் புகை!

ஒவ்வொரு நாளும் -

ஒவ்வொரு நொடியும் -
உற்சவம்;
உற்சாகம்!

மண்வளம் அப்படி;
மனவளம் அப்படி;
தங்கம் விளைந்தது -
தப்படிக்குத் தப்படி!

கவலை; நீர்த்
திவலை;
இரண்டும் ஊர்க்குள் -
இல்லாமல் இல்லை; இருந்தன!

கவலை -
கழனியில்; நீர்த்
திவலை - நீர்சேந்தும்
தவலையில்!

வாய்க்கால்கள்;
ஏர்க்கால்கள்; அவ்வூர்
வயல்களுக்கென -
வாய்த்த கால்கள்!

ஆதலால் -
அவை...

வருடம் பூராவும்
வாடாது நிற்கும்;
ஒரு மூடை நெல் -
ஒன்பது பொன்னுக்கு விற்கும்!

ஆகாயமும் -
அரிச்சந்திரன் மாதிரி;
ஒருநாளும் பொய்ப்பதிலை - அது
உதவுகின்ற விருஷ்டி!

நன்செய்;
புன்செய்;
நந்தவன மெங்கிலும் -
நவநவமான சிருஷ்டி!

ஊர் மக்களே -
ஊர் மண்ணெடுத்து - ஊருக்குக்
கண்ணேறு படுமெனக்
கழித்தனர் திருஷ்டி!

ஆனால், ஒன்று;
அந்த நாளில்...

அவ்வூர் அறிந்தது - அது
அடைந்திருக்கும் நேர்த்தியை;
அவ்வூர் அறியாதது - அது
அடைய இருக்கும் கீர்த்தியை!

ஒரு
பிள்ளை பிறந்து - தன்
புழுதியில் அளைந்து...

பின் -
பெரியவனாகி;
அரியவனாகி;
வணக்கத்திற்கு -
உரியவனாகி;

ராமானுஜன் எனும் - எதி
ராஜனாகி...

ஒரு -
சம்மட்டி நிகர்த்து -
சாதிகளைத் தகர்த்து -

சம திருஷ்டியே - கீதா
சாரமென்று உணர்ந்து...

ஒருகுடைக் கீழ் -
உயிர்க்குலம் அனைத்தையும் -
ஒருசேரக் கொணர்ந்து...

வெய்ய வினைநீங்கி
வைய மெலாம் -
உய்ய...

புகுத்துவான் நாட்டில்
புது நெறியை; எவர்க்கும்
பொருந்திவரும் - ஒரு
பொது நெறியை...

என்று அன்று -
எப்படி அறியும் -
திருப்பெரும் பூதூர் - எனும்
தொண்டை மண்டல மூதூர்?

- வளரும்

# ராமானுஜ காவியம்

கவிஞர் **வாலி**

## கேசவ சோமயாஜி

**வா**ழ்வாங்கு
வாழ்கின்ற
வாழ்வுக்கு
வியாகரணம்;

வண்மைக்கு
வாய்மைக்கு
விரிவான
வியாக்கியானம்;

வீதியில்
வருகையில்
வீடுகள்
வணங்கும்;

வேதியர்
வேந்தென
விழிகளில்
விளங்கும்!

அநேகருக்கு –
அத்தியாபகரான அவர்...
தாழங்குடை
தாங்கி வரும்
தருக்க சாத்திரம்;

திருமண் காப்பு
சாத்தி வரும்
திவ்வியப் பிரபந்தம்;

பஞ்சகச்சம்
உடுத்தி வரும்
பிரம சூத்திரம்;

பாதரட்சை
அணிந்து வரும்

2





பிரபத்தி மந்திரம்!

அவரது திருநாமம் -
ஆசூரி கேசவ சோமயாஜி;
கனபாடிதான்! ஆனால் -
கனக்காத தலையர்; சங்கோஜி!

'சோம · யக்ஞம்' என
சிலாகிக்கப்படும் -

வேள்வி -
வேட்டவர்...

'சோமயாஜி' என -
சொல்லப்படுவர்; அவரெலாம் -

வேள்வி விரலால் -
வானத்தைத் தொடுவர்!

தேரோடும் -
திருப்பெரும்பூதூரில்...
ஒரு
காக்காயையோ -
குருவியையோ -
கை தட்டி அழைத்துக் கேட்டால் -
கண்ணை மூடிக் கொண்டு சொல்லும்...

கனபாடி -
கேசவ சோமயாஜியின் -
வீட்டு விலாசம்;
வித்தியா விலாசம்!

கேசவ சோமயாஜி -
கைத்தலம் பற்றிய...

மாதுஸ்ரீ காந்திமதி - முயல்
மறுஇல்லாத மதி;
முப்பது நாளும் காந்தி வீசும் -
மதி; அந்த -
மதிக்கில்லை அமாவாசையெனும் -
திதி!

எவ்வளவு சௌந்தரியம்?
அவ்வளவு சௌலப்பியம்!
அவளுக்கு ஆரோடும் -
அப்படியொரு சௌஜன்னியம்!

அவள் -
வாழ்க்கைப்பட்ட இடம் போல் -
வசதிகள் பிறர்க்கு இராது;

ஆயினும் -
எளிவந்த தன்மை - அவள் போல்
எவர்க்கும் பூதூரில் வராது!

மரியாதைக்குரிய - அந்த
மாதரசி...

மார்க்கச்சில் -
மண்ணில் நிற்கும் பொறை;

மடிசாரில் -
மடியோடிருக்கும் நிறை;
கோயில் விட்டுக் -
குடும்பம் வந்த இறை;

'குறை சொல்லக் -
குறையில்லை!' எனும் -
குறையொன்றுதான் -
குறை!

நிஜமாய்ப் பிறந்து - ஒரு
நாயகனின் -
நிழலாகிப் போனவள்;
அவளுக்கென் றிருந்த அவளை
அவள் விடுத்து -
அவள் அவனுக்கென ஆனவள்!

லயம் சேர்ந்த
சுதியாகி - தன்
சுயம் தீர்ந்தாள்; அங்ஙனம் -
சுயம் தீர்வதே -
சுமங்கலிக் கழகெனும் - நன்
நயம் தேர்ந்தாள்!

நிலத்தில் இறங்கிய
நிமிடம் முதல் -
நிலம் பார்த்து நடப்பவள்;

'கிட' என்று -
கேள்வன் சொன்னால் -
கல் முள் மீதும் கிடப்பவள்!

அகமுடையானின்
அன்றாட -
ஆசார
அனுஷ்டானங்களில்...

மடிசஞ்சியாய்;
மான்தோலாய்;
செம்புச் செம்பாய்;
சிக்குப் பலகையாய்;

பஞ்ச பாத்திரமாய்;
பத்தாறு வேஷ்டியாய்;
அந்தரணியாய்;
உத்தரீயமாய்;

பவித்திரமாய்;
பலா மணையாய்;
பனை விசிறியாய்;
பாக்குப் பாயாய்;

திருமண் பெட்டியாய்;
தாம்பூலப் பெட்டியாய்;
சாலிக்கிராமப் பெட்டியாய்;
சாதிக்காய்ப் பெட்டியாய்;

இன்னும் -
எல்லாமுமாய்...

கரைந்து போனாள் -
காந்திமதி;
கேசவருக்குக் கிட்டிய -
குபேர நிதி!

சோமயாஜியை; அவரது -
சகதர்மிணியை...

உருமாறி -
உலகு வந்த -
பெருமாளாய்;
பிராட்டியாய்...

பார்த்தது ஊர்;
பாடியது சீர்!

இத் தகு -
இசைமிகு...

திவ்விய தம்பதியின் -
திருமாளிகையில்...

தூண் இருந்தது;
தூணைப் பிடித்துச் சுற்ற - ஒரு
துண்டு நிலா இல்லை!

முற்றம் இருந்தது; 12
முற்றத்து நீரில் அளைய - ஒரு
முயல் குட்டி இல்லை!

கூடம் இருந்தது;
கூடத்து ஊசலில் குந்த - ஒரு
குருவிக் குஞ்சு இல்லை!

விட்டம் இருந்தது;
விட்டத்து ஏணையில் ஆட - ஒரு
வெண்ணடைப் பிஞ்சு இல்லை!

ஒரு -
கருக்கலில்
கால் அலம்ப
கேசவ சோமயாஜி
கிணற்றடி செல்ல..

மொத்தையாய் -
மடி கனக்க - அவரது
மனைப்பசு -
சினைப்பசுவா, யிருப்பதையும்;

இரவுப் பனி -
இறங்கி உட்காரும் -
இலை வாழை -
குலைவாழையா யிருப்பதையும்;

கண்டு -
கவலைப் பட்டார்;
காலலம்பிய செம்பைக் -
கை நழுவ விட்டார்!

காரணம்...
கல்யாணம் முடித்து...

புகுந்த வீடு முற்றும் -
புதுவெளிச்சம் துப்பும்...

காந்திமதியாக வந்த
காந்திமதி - இன்னும்
காந்திமதியாகவே இருந்தாள்;
கர்ப்பவதியாக இல்லாமல்!

வருந்தினார் -
வேதியர்!

'வாரிசு வாய்க்காமல் -
வம்ச விருட்சம் -
விழுந்து விடுமோ - கால
வெள்ளத்தை வென்று நில்லாமல்?'

கலங்கினார் -
கேசவர்!

கதலி -
குலைவிடாவிடினும்...
கபிலை -
கருவுறாவிடினும்...
கதலிக்கோ -
கபிலைக்கோ -
கூடும் நரகமெனக் -
கூறும் நாலுண்டோ?

ஆனால் -
அங்ஙனமில்லையே -
மனுஷ்ய ஜாதியில்;
மனு நீதியில்!
திலமும்
தீர்த்தமும் இறைக்க...

ஒரு
புத்திர னில்லாது
போவோர் யாருமே -
'புத்'தெனும் நரகில்
புகுந்திட நேருமே!

அஞ்சினார் -
அந்தணர்!

குலம் வளராது - சிந்தா
குலம் வளர்வதை -
எஞ்ஞான்றும்
எண்ணி எண்ணி...

இமைகள் மேல் - மனச்
சுமைகள் அழுத்த;

அழுத்திய
அழுத்தலில்
விருட்டென
விழிகள் பிதுங்க;

பிதுங்கிய
பிதுங்கலில்
உள்ளிருந்த உறக்கம்
வெளியே வந்து விழ;

உறக்கம் தொலைத்த உள்ளம்
ஊமை அழுகை அழ...

நாள்கள்
நத்தைகளாயின;
சோமயாஜியின்
சிந்தையெல்லாம்
சிந்தாகுலச்
செத்தைகளாயின!

கவலைகளை
காந்திமதி காதுவரை
கொண்டுபோகவில்லை
கேசவர்; அவர்
ப்ாரியை மேல்
பழி போடுதல்
பாவமென எண்ணும்
பூசுரர்!

பூதானம்;
கோதானம்;
வஸ்திர தானம்;
வித்தியா தானம்;

என -
ஏலு மட்டும்...

சகல தானம் செய்தவர்க்கு
சந்தானம் வாய்க்கவில்லை;

பூதூர் பெருமாளைப் -
பிரார்த்தித்தும்...

செவிகளை - தெய்வ
சந்நிதானம் சாய்க்கவில்லை!

அன்னக்கூழ் அளாவ - ஓர்
ஆண்மகவைப் பெற - தனக்கு
ஆகூழ் அமையவில்லையே என...

சொல்லொணாச்
சோகாப்பில் -
சோர்ந்திருந்த
சோமயாஜி...

ஒரு
கிரகண காலத்தில்
கீழைக் கடலில் குளிக்க...

தனது -
தர்மபத்தினியோடு -
திருப்பெரும்பூதூரிலிருந்து -
திருவல்லிக்கேணி சென்றார்;

அம்புலியை -
அரவம்...

உண்ட பின்னும்; உண்டு -
உமிழ்ந்த பின்னும்...

திரை கடலில்
தீர்த்தமாடி விட்டு -
திருமேனியில்
திருமண்கள் சாத்திக்கொண்டு...

பார்த்தசாரதிப்
பெருமாள் முன் நின்றார்!

முதல் மூவரில் -
மூன்றா மவர்...

மங்களாசாசனம் செய்த -
மாலவனைத் தொழுதார்; அவனது -
வடிவழகாம் பொன் வயலை -
விழியேரால் உழுதார்!

பார்த்த சாரதியை;
பாஞ்ச சன்னியம் ஊதி -
ஆர்த்த சாரதியை;
அர்ச்சுனன் அவலம் -
தீர்த்த சாரதியை;
திருவாயால் கீதைத் தேன் -
வார்த்த சாரதியை;
வளநாட்டை தருமன்கை -
சேர்த்த சாரதியை;
சுயோதனன் செருக்கைப் -
பேர்த்த சாரதியை;
பாஞ்சாலியை சேலையினால் -
போர்த்த சாரதியை;
புல்லர் கூட்டத்தைத் -
தூர்த்த சாரதியை;
திருகி திருகி திருமீசை -
கூர்த்த சாரதியை;
கூடாதார் கண்ணுக்குக் -
கார்த்த சாரதியை;
களத்தினில் தேரோட்டி -
வேர்த்த சாரதியை;
வேயிசையால் கறவைகளை -
ஈர்த்த சாரதியை;
'ஈந்திடுக சந்ததியை!'...

என -
இறைஞ்சினார் -
காந்திமதி நாதர்;
கண்ணபிரான் தாதர்!

இதுவலால் - பக்கம்
இல்லாளை இருத்தி...

இறைவன் திருமுன் - ஓர்
இஷ்டியாகம் புரிந்தார்;
அகப்பையில் அவியெடுத்து -
அக்கினியில் சொரிந்தார்!

பெரும்பூதூர் -
போய்ச் சேர்ந்ததும்...

காந்திமதி - ஆனாள்
கர்ப்பவதி!

- வளரும்

கவிஞர் வாலி

# ராமானுஜ காவியம்



பிறந்தார்
பெரும்பூதூர் வள்ளல்!

3

காந்திமதி உண்டாயிருப்பது
கேசவ சோமயாஜி எனும் –

ஒரு
பிராமணரின் –
பிரத்தியேக சந்தோஷம்;

ஆயினும் –
அது...

ஒருவர் –
உவகையா யாகாது –
ஊரவர் –
உவகையா யானது!

பித்தவெடி வந்த
பாதம் போல் –

பாளம் பாளமாய்ப்
பிளந்திருந்த பூமி...

முழுகா திருக்கும்
முகில் ஒன்று – தன்
மண்டைக்கு மேல்
மேயக் கண்டு –

எங்ஙனம்
ஏகத்துக்கு சந்தோஷிக்குமோ –
அங்ஙனம்
அவ்வூர்சனம் சந்தோஷித்தது;
சந்தோஷத்தில் –
சளசள வென சம்பாஷித்தது!

பூதூர் வாழ் –

பிரஜைகள் மட்டுமன்றி...

புல் பூண்டு;
புழு பூச்சி;
மரம் மட்டை;
குளம் குட்டை;
கறவைகள்;
பறவைகள்;
அசையா வஸ்துகள்;
அசையும் வஸ்துகள்;

என –



எல்லாமே....

அந்தணர் மனைவி
அம்மாவாகப் போவதைக் கேட்டு -

அது அது -

அதனதன் பாஷையில்
அதனதனோடு அளவளாவி...
பரஸ்பரம்
பெரு மகிழ்ச்சியைப்
பதிவு செய்தன;

காந்திமதியம்மை
கூந்தலில் செருக -
காற்றும் கரிச்சானும்
காட்டுப்பூ கொய்தன!



மசக்கைக்காக
மாங்காய் பறிக்க
மூக்குச்சிவந்த கிளி
மூலைக்கு மூலை பறந்தது;

வாயும் வயிறுமாக
வாழ்கிற பெண்ணுக்கு
நோயும் நொடியும்
நெருங்காம லிருக்க..

மனைப்பசு - ஒரு
மரக்கால் கூடக் கறந்தது!

கேசவ சோமயாஜியின்
கிருகம்...

பளிச்சென்று
புதிய சோபையோடு பிறங்கியது;

எட்டத்து சொந்தம்
கிட்டத்து சொந்தம்
என்று...

மூட்டை
முடிச்சுகளோடு -
ஒரு பட்டாளமே
ஒரு சேர வந்து இறங்கியது!

தரையில்
திருவடி பாவாமல்...

தாய்வழிக் கிளைகளும்
தந்தைவழிக் கேள்களும்
காந்திமதியை - உள்ளங்
கையில் வைத்துத் தாங்கினர்;

கர்ப்பிணியா யிருக்கும்
காலத்தில் -

பெண்டிருக்கு அமையும்
பேரழகில் -
ஊர்க்கண் வந்து
உட்காரும் என்று...

அன்றாடம் -
ஆரத்தி சுற்றி -
நெற்றி வழித்து - விரல்களை
நிலம் வைத்து நெட்டி முறித்து -
கைமிளகாயில் துப்பச் சொல்லி -
கண்ணேறை அதில் வாங்கினர்!

சோமயாஜியின்
சகதர்மிணிக்கு -
சகலரும் இப்படி
சிசுருஷை செய்யுமாறு...

காலம் -
கட்டளையிட்டிருந்தது!

ஒரு
மகனின் வருகைக்காகவா?
அல்ல; அல்ல;
ஒரு
மகானின் வருகைக்காக!

ஆம்!
அளப்பரிய
அபிராமமும் அன்பும்
ஆன்றமைந்த பண்பும் -

ஒன்பது கஜப் புடவைக்குள்
ஒளிந்துகொண்டு வந்தாற்போல்...

ஆரும் கண்டு கைகூப்பும்
ஆரணங்கின் அடிவயிற்றில்;
ஆசூரி கேசவ சோமயாஜியின்
அகமுடையாள் மணி வயிற்றில்...

மகனாய் -
முளைத்திருப்பது...

'நாரணன் பூங்குடை;
நாரணன் பாதுகை;
நாரணன் இருக்கை;
நாரணன் படுக்கை!'

என -

20

ஆழ்வார்
அற்புதமாய்ப் பாடிய -
அரவரசன்;
ஆதிசேஷன்!

அங்ஙனம்
அவனை -

படிமிசை - ஒரு
பத்தினிப் பெண்ணின் -
பன்னீர்க் குடத்தில் போய்ப் -
படுக்கச் சொன்னவன்...

வைகுண்டத்தில் - வெள்ளை
வெள்ளத்தில் - தலைக்கொரு
கைகொடுத்து - பொய்யாய்க்
கண்ணுறங்கும் கரிய மால்!

ஆதிசேஷனை அழைத்து - ஒருநாள்
அனந்தபதுமநாபன் - தன்
விசனம் பேசினான்; வார்த்தையை
விரக்தியில் வீசினான்!

"நீ -
ஆயிரம் சிரசு -
அமைந்த அரவரசு; நீயெனது
அணுக்கமான கேள்; ஆகவே என் -
ஆற்றாமையைக் கேள்!

ஒவ்வொரு முறையும் -
உயிர்களை உய்விக்க...

வானம் விட்டு
வையம் வருகிறேன்;
வினைகள் நீங்கி
வீடுபெற உதவுகின்ற...

வாழ்க்கை நெறிகளை
வரைந்து காட்டியும்;
வாழ்ந்து காட்டியும்
விளக்கம் தருகிறேன்!

ஏற்றாரில்லை; நான்
எடுத்துரைத்த நெறிகளை -
நோற்றாரில்லை!

அதற்குக் காரணம்...
அவர்களை மீட்கத்தான் - நான்
அவதார மெடுத்து
அவனி வந்திருக்கிறேன்...

என்பதை -
எவரும் எண்ணவில்லை; அதைச்
சாடையாய்ச் சொல்லியும் -
சட்டை பண்ணவில்லை!

காகுத்தனாய் வந்தபோது - ஒரு
காவலனாகவும்...
கண்ணனாய் வந்தபோது - ஒரு
கோவலனாகவும்...

என்னைக் கண்டனர்; வேறென்ன
என்னுள் கண்டனர்?

'அழும்போது
அழுது;

சிரிக்கும்போது
சிரித்து;

விழும்போது
விழும்'

மற்றொரு
மானிடப் பிறவியாய் -
எனை எண்ணினர்; இறையென
எவர் நண்ணினர்?

அவதாரங்கள்
அர்த்தமற்றுப் போயின;
விழலுக் கிறைத்த
வெள்ளமாய் ஆயின!

எனக்குப் பின் -
எத்துணையோ...

ஆசாரியர்களை அனுப்பினேன்;

ஆழ்வார்களை அனுப்பினேன்;
அவர்கள் -
ஆக்கினர் பாசுரங்கள்;
அவற்றைக் கேட்டும் -
அகலவில்லை பாமரங்கள்!

ஒவ்வொருவருக்கும் உண்டு
உதிரத்தாய்; நான்
உதிரத்தாயல்ல; இந்த
உலகத் தாய்!

உயிர்க்குலம்
உய்யா திருப்பதா? அது -
உய்யா திருக்கையில் - நானெதும்
செய்யா திருப்பதா?

சகமாயைச்
சகதியில் சேய்;
அதை அலம்பும்
ஆதுரத்தில் ஆய்!

அழுக்கு ஆசை சேய்க்கு;
அலம்பும் ஆசை தாய்க்கு;
இல்லை ஒத்த ஆசை! இருந்தும் -
இருக்காதோ தாயின் ஒத்தாசை?

ஆதிசேஷா!
அன்பா!

நீ போய்
நிலத்தில் பிற;
கேசவ சோமயாஜியின்
குலத்தில் பிற;
போகப் போகப்
புரியும் பிற!

அவனி! அதை
அவனியிலிருந்தபடியே
கவனி!

எப்படிச் சொன்னால் - அது
ஏற்கும்?
நன்னெறிகளை விரும்பி -
நோற்கும்?

என்று கண்டுபிடித்து
இதம் பேசு; வருணம் -
நான்கையும் ஒன்றாய்க்கொண்டு -
நிதம் பேசு!

சாதி பாராது - தர்ம
சாஸ்திரங்களை
சாதி;
சாதி வருவது
சனன வழியல்ல என
சாதி;
சாதி உணர்வினைச்
சேதி; இச்
சகம் உணரட்டும் - நீ
சேதித்த சேதி!

பன்னக -
மன்னனே!
அனந்தமான புகழ்படைத்த -
அனந்தனே!

உன்னால் -
உய்யட்டும் மன்பதை;
உணரட்டும் - நீ
உய்விக்க வந்தவ னென்பதை!"

நாராயணன் நவின்றதும்
நாகராஜன்...

மனமொப்பி -
மகிழ்ச்சி மிகுந்தான்;
காந்திமதி -
கருவினில் புகுந்தான்!

இந்த விஷயத்தை -
இஷ்டியாகம் முடிந்த இரவே...

கேசவ சோமயாஜியின்
கனவில் வந்து -
காண்டீபன் மைத்துனன்
கூறிப் போனதால்...

22

ஒரு -
சத்புத்திரன்
ஜனனம் எதிர்பார்த்து -

இருப்புக் கொள்ளாது
இருந்தார் - ஒரு
பொருப்புக் கொப்பான
புகழ் பெற்ற -

அந்தணர் ஆசூரி; அன்றாடம் -
அதை அவர் கண்கள் காட்டின -
ஆனந்தத் தூறல் தூறி!

வளைகாப்பு சீமந்தம்
வரிசையாய் நடக்க -

ஆசூரி இல்லமே
அடுப் பணையாத
அன்ன சத்திரமாய்
ஆகிக் கிடக்க -

தீர்க்க சுமங்கலிகள்
தலைச்சன் பிள்ளைக்காரியை...

மணையிலே அமர்த்தி
மங்கலச் சடங்கு ஆற்றி -
பெரியாழ்வார் யாத்த
பல்லாண்டால் போற்றி -

பன்னீர் சந்தனம்
பூசி -
வெண்சாமரம்
வீசி -
குலவை யிட்டனர்;
குதுகலப் பட்டனர்!

பீடு மிகும்
பிங்கள ஆண்டில்;

சீர்மல்கும்
சித்திரைத் திங்களில்;

சந்திரன் பூக்கும்
சுக்கில பட்சத்தில்;

அரனார்க்குகந்த
ஆதிரையில்;
வானோர் ஏத்தும்
வியாழனில்;

நல்லொளி பரப்பும்
நண்பகலில்;

அளவிலா
அருந் தகவை - நாளை
அடைய இருக்கும் - ஓர்
ஆண் மகவை..

பெருமாட்டி காந்திமதி
பெற்றெடுத்தாள்;
பெறற்கரிய பெரிய
பெயரெடுத்தாள்!

கொற்றவி கோசலையிடம் -
கோதண்ட ராமன் போல்;

கஞ்சன் சோதரி தேவகியிடம் -
கண்ணபிரான் போல்;

வான்புகழ் அதிதியிடம் -
வாமன்ன் போல்;

பைந்தொடி ரோகிணியிடம் -
பலராமன் போல்;

அருள்சால் காந்திமதியிடம் -
ஆதிசேஷன் அவதரித்தான்;
அவதரித்து அழகிய -
அல்லிப்பூ அதழ் விரித்தான்!

கேசவ சோமயாஜி -
கண்ணீர்ப் பெருக்குடன்...

தொழுதார் தடக்கைகள்
தலைமேல் தூக்கி -
திருவல்லிக்கேணி யிருக்கும்
திக்கினை நோக்கி!

- வளரும்





"சாப்பிடாம எக்ஸ்ரே எடுக்கணும்னு சொன்னா நீங்க ஏன் சாப்பிட்டு எக்ஸ்ரே எடுத்தீங்க..?"

"நான் எக்ஸ்ரே எடுக்கற கிளினிக்காரர்தான் சாப்பிடாம இருக்கணும்னு நினைச்சுட்டேன் டாக்டர்!"

"அந்த டாக்டர் நோயாளிங்ககிட்டே ரொம்பக் கண்டிப்பா நடந்துப்பாரு..."

"அதுக்காக எனக்கு ஷுகர் இருக்குன்னு சொல்லிட்டு என்னோட ரேஷன் கார்டைப் பிடுங்கி வெச்சுக்கறது நல்லாயில்லை!"

"ஆபரேஷனுக்கு அப்புறம்தான் எதுவுமே சொல்ல முடியும்..."

"முன்னாடி எதுவும் சொல்ல முடியாதா டாக்டர்..?"

"ஃபீஸை வேணும்னா முன்னாடி சொல்றேன்!"

# வாய்விட்டுச் சிரிங்க





4

# ராமானுஜ காவியம்

கவிஞர் **வாலி**

## பெரிய திருமலை நம்பி

**வே**ய்களில்
வாய்வைக்கும்
வேழங்கள் மேயும்
வேங்கட மலை; அடிவயிற்றில் -

நோந்து தடவாது
குட்டிகள் ஒட்டிய
குரங்குகள் பாயும்
கோவிந்தன் குன்றம்!

புல்லும்
பனித்துளியும் -
புல்லும்
புலரி;

காலும் - வாய்க்
காலும்
ஆலும்
அதி காலை!

ஒரு

26

சிற்றோடை ஓரம் நின்று
சந்தி செய்கிறார்...

ஸ்ரீசைல பூரணர் - என
சிறப்பிக்கப்படும்
பெரியவர் -
பெரிய திருமலை நம்பி!

திருவரங்கம் விட்டுத்
திருவேங்கடம் வந்தவர்
திருமலை நம்பி; திருமலைத்
திருமாலை நம்பி!

அலர்மேல் மங்கையின்
அகமுடையானின்
திருப்பணிக்கே - தன்னை
அருப்பணித்தவர்;
அவனன்றி
அயல் விஷயங்களில்
விருப்பு வைத்த நினைப்புக்கு
நெருப்பு வைத்தவர்!

'பகை அணங்கு ஆழியும்
பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக்
கையின் ஏந்தி...' என...

இளங்கோவடிகள்
இயற்றிய -
சிலப்பதிகாரம்
சிறப்பித்துப் பாடும்...

செம்மலை ஏறிநிற்கும்
செம்மலை;

ஆகாய் கங்கையெனும்
அருவியின்...

தண்ணலை காலலம்பும்
அண்ணலை;

சதா விழிகளால் -
சாப்பிடுவார் திருமலை நம்பி;

'காக்கும்! காக்கும்!
காக்கும்!' எனக்
கரங்குவித்து நின்றிடுவார்
கால்முளைத்த கருமலை நம்பி!

அவர் பக்தி –
அலாதியான பக்தி;
ஆழ்வார்கள் அநுசந்தித்த
அநாதியான பக்தி!

ஒரு சமயம்
உலகளந்த பெருமானின்
அரவிந்த அடியிணையில்
அமரும் தும்பியாவார்;

அவரே –
அபயம் வேண்டி...
பிறிதொரு சமயம்
பிளிறிக் கொண்டு
'ஆதிமூலமே!' என்றழைத்து
அலறும் தும்பியாவார்!

ஒரு நாளைக்கு
ஒரு நூறு தரமாவது...
'கோவிந்தா!' என உன்னைக்
கூவாவிடில் என் நாவரிந்து –
'நாவிந்தா' என நான்
நின்முன் நீட்டுவேன் என்பார்;

'கோவிந்தா!' என உன்னைக்
கூடாவிடில் என் உயிர்கிள்ளி –
'பூவிந்தா' என உனது
பொன்னடி சூட்டுவேன் என்பார்!

படாத பாடு
படுத்தும் அவரது,
பக்தி அவஸ்தை –
பார்க்காது விவஸ்தை!

ஓர் அவுணனை
உகிர் கொண்டு முன்னம் –
துண்டுசெய்த பெருமாளுக்குத்
தொண்டுசெய்யும் நம்பிக்கு...

இரண்டு
இளைய சகோதரிகள் உண்டு –
காந்திமதி என்று;
த்யுதிமதி என்று!

தங்கைகளைத் தனது
தனயைகள்போல் – இரு
அங்கைகளில் வைத்து
ஆளாக்கிய திருமலை நம்பி...

நல்லதொரு
நாள் பார்த்து –
கோதறு
கோள் பார்த்து –

காந்திமதியை
கேசவ சோமயாஜி கைகளிலும்;

மற்றொருத்தியை
மழலை மங்கலம்
கமலநயன பட்டரின்
கைகளிலும்...

ஒருசேர –
ஒப்படைத்து...

முடிந்தது கடமையென – பெரு
மூச்சு விட்டார்;

பின் –
பெருமாள் கைங்கரியத்தில் –
முப்பொழுதும்
முழுகி விட்டார்!

தற்சமயம் –
திருமலையில்...

ஒரு
சிற்றோடையில் – சந்தி
செய்துகொண் டிருக்கையில்...

'ஒரு மகள் தன்னை உடையேன்;
உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்;
செங்கண்மால் தான்கொண்டு
போனான்!'
எனும் –

பெரியாழ்வார் பாடிய
பாசுரம் – எங்கிருந்தோ வந்து
திருமலை நம்பியின்
திருச்செவியில் விழுந்தது;
திருமலை நம்பியின் –



திருவுள்ளத்தில்...

பாசுரங்களை மீட்டுப்
பாருக்குத் தந்த -
நாத முனிகளின் -
நினைவு எழுந்தது!

நாதமுனி எனும் -
நல்லாசான் தான்...

வைணவம் -
வணங்கும் -

குரு பரம்பரையின் -
குடுமி; பின்னால் -
வருபரம்பரைக்கு - ஞானத்தை
வைத்துப்போன தருமி!

காட்டுமன்னார் கோயிலில் -
கண்மலர்ந்த பெருமகன்;

வீரநாராயணபுரம் - என
விளிக்கப் பெறும் -
அவ் -
அழகிய ஊருக்கு - தன்
பிறப்பால்
பீடுகள் சேர்த்த திருமகன்!

பாட்டும் பைந்தமிழும்
பழுதறக் கற்றவன்;

சுருங்கச் -
சொலப் போனால்...

தமிழுக்கே -
தன்னை விற்றவன்!

ஒரு சமயம் -
'ஓராயிரத்துள் இப்பத்தும்!'
என -
எவரோ பாடிய -

ஒரு சொற்றொடரைக் கேட்டு -
ஒண்டமிழில் சொக்கி -
அனைத்துப் பாசுரங்களையும் -
அடைய வேண்டி...

திருக்குருகூர் எனும் - ஆழ்வார்
திருநகரிக்குச் சென்று -

தவமிருந்து பெற்றான் -
தமிழ்ச் செல்வத்தை;

பக்திப் பயிர் -
படிமிசை தழைக்க -
நம்மாழ்வார் -
நட்ட நல்வித்தை!

பழஞ் சுவடிகள்
பதிந்து வைத்திருந்த -
பாசுரங்களைப் பெற - நாதமுனி
பட்டானே பாடு...

அது என்ன -
அவ்வளவு இலேசா?

அந்த வகையில் - அவன்
அந்நாளைய உ.வே.சா.!
ஆச்சரியம்;
ஆனால் உண்மை!

ஆதித் திராவிடர்களைப் போல் -
ஆழ்வார்களின் தமிழுக்கும் -
ஆகாதென மறுக்கப்பட்டது -
ஆலயப் பிரவேசம்;

ஆதி நாள்களில் -
அந்தளவு இருந்தது -
வைதிகர் களின் -
வடமொழி விசுவாசம்!

வேதங்களும்
உபநிஷதங்களும்
வடமொழியிலேயே -
வார்க்கப்பட் டிருந்ததால்...

அவை தமிழர்க்கு
அடைத்த கதவென ஆயின;
தொன்மரபு வாய்ந்த
தென்திசை மாந்தர்க்கு -
வீடு பேறு பெறும்
வாய்ப்புகள் அற்றுப் போயின!

வேள்வி -
வேட்டல்;
வேதாந்த -



விசாரம்;

இவை -
இரண்டு மட்டுமே -

மறையோர் கொண்ட
மதமாக இருந்தது; அது
மண்டையில் ஏறிய
மதமாகவும் இருந்தது!

ஆழ்வார் பெருமக்களோ -
அருந் தமிழால்...

தித்திக்கத் தித்திக்கத்
தெய்வத்தை அழைத்தனர்;

தமிழுக்குள் - தமிழெனும்
சிமிழுக்குள்...

மூவடியால் உலகளந்த
முதல்வனை நுழைத்தனர்;

விருத்தத்திலும்
வெண்பாவிலும்
அகவலிலும்
அந்தாதியிலும்...

நாயகன் மேன்மையை
நகைபோல் இழைத்தனர்;
தத்துவச் சூரணத்தைத்
தமிழ்த்தேனில் குழைத்தனர்!

எந்த சாதிக்காரனும்
ஏறலாம் மோட்சம்;
ஆம்!
ஆறிரு -
ஆழ்வார் பாடல் சொன்னது -
அதற்கான சூட்சம்!

பாமரத்தனமான
பக்தியின் மீசுரம் -

பரம பதத்திற்கான
பயணச்சீட்டு - எனப்
பகர்ந்தது -
பன்னிருவர் பாசுரம்!

இவையெலாம்
ஏயதா யில்லை...

அந்நாளைய
அந்தண வைதிகர்க்கு;
அவர்களை
ஆட்டி வைத்தது...

சாதிக் கிறுக்கு;
சமயக் கிறுக்கு;
சனாதனக் கிறுக்கு;
சமஸ்கிருதக் கிறுக்கு!

சாதி பலவற்றைச்
சேர்ந்த ஆழ்வார்களை -
சிலா ரூபத்தில் வைத்து
சேவிப்பதையும்; அவர்கள் -

பலாச்சுளைத் தமிழில்
பாடிய பிரபந்தங்களை -
பழமறைக்கு நிகராக -
பாவிப்பதையும்;

வயதான வைதிகம்
வழிமொழிய வில்லை;
விசாலமாக - அதன்
விழி விரியவில்லை!

பழமை விரும்பிகள் -
பிரபந்தங்களை...

'சதுர்மறைப் பொருளைச்
சொல்லும் பாட்டல்ல;
குலாசாரத்தைக்
கொல்லும் பாட்டு!' என...

தூஷித்து - அவற்றிற்குத்
தீ வைக்கத் தலைப்பட்டனர்;

அந்த
அறியாமையை என்சொல்ல?

கன்னித் தமிழ் -
கண்டு; அதைக்
காஞ்சிரமாய்க் -
கண்டு...

உண்மைக்கு
ஒருகாத தூரம் நின்று -
வெண்மைக்கு விலைப்பட்டனர்!

'ஆழ்வார்கள் அருளிய தமிழ் –
அமிழ்து! அமிழ்து! என இமிழ்;
அவ் வமுதில் யாண்டும் அமிழ்;

தமிழ் எதிர்ப்பெல்லாம் –
தண்ணீர்க் குமிழ்;
ஆரெதிர்த் தாலும்
அஞ்சாமல் –
அவர் முகத்தில்
அன்போடு உமிழ்!'

என –
எவரும்...

அந்நாளில்
ஆர்த்து எழவில்லை;
தமிழர் எழாததால் –
தமிழும் எழவில்லை!

நாலாயிரம்
நந்தனார் ஆனது;
வைதிக நந்தி
வழிமறித்து நின்றது!

நாயகன் எங்கள்
நாதமுனி வந்தான்;
நந்தி நானூறடி
நகர்ந்து சென்றது!

வாயிலில் நின்ற
வண்ணத் தமிழைக்
கோயிலின் உள்ளே
கூட்டிச் சென்று...

போக்கினான் –
பார்ப்பனர் மேலிருந்த பழி;
போக்கி – தமிழர்ச்சனைக்குப்
போட்டனன் பிள்ளையார்சுழி!

பதிகம் அருளிய
பசுந்தமிழ் அருமையை –
அதிகம் ஆக்கினார்
அடுத்துவந்த ஆளவந்தார்;

ஆளவந்தார் வந்தபிற்பாடு –
ஆழ்வாரெல்லாம் வாழவந்தார்!

ஆளவந்தார் எனும்
அருந்தகை...

பிரபந்தங்களை – மேலும்
பிரகாசப்படுத்திய தீரர்;
வேதமுனி என விளங்கிய –
நாதமுனி பேரர்!

பெரியவர் –
பெரிய திருமலை நம்பி...

ஆளவந்தாரின்
அடியார்;

திருப்பதியில்
திருப்பணி புரியும் – இன்னொரு
தொண்டரடிப்
பொடியார்!

இன்னணம்
இது காறும்...

பெரியாழ்வார்
பாசுரம் ஒன்று கேட்டு –
பழம் நினைவுகளில் மூழ்கிய –
பெரிய திருமலை நம்பி...

ஆள்
அரவம் கேட்டு –
சகஜ நிலைக்குச்
சட்டெனத் திரும்ப –

பெரும்பூதூரிலிருந்து
பாகவதர் ஒருவர் வந்து...

அம்மையார் காந்திமதி
ஆண்மகவை ஈன்றிருக்கும்
கற்கண்டுத் தகவலை – அவர்
காதுகளுக்குத் தந்தார்;

அடுத்த கணமே –
ஆர்வம் கொப்புளிக்க...

திருமலை நம்பி
திருமலை நீங்கி – ஒரு
புள்ளெனப் பறந்து
பூதூர் வந்தார்!

**– வளரும்**



"லஞ்சம் இல்லாத இடம் ஏது? லஞ்சத்தால இவனைச் சரிக்கட்டியாச்சு! மணியைக் கொடுத்துட்டா போதும்... அவனே நாம சொல்ற பூனைக்கு கட்டி விட்டுருவான்!"





# மணி மணியான சிரிப்புகள்!

இருட்டா
இருந்தா என்ன? பூனைக்கும்,
நம்ம அண்ணனுக்கும் உனக்கு
வித்தியாசம் தெரியலையா?





---

இது பூனையைவிட
கொஞ்சம் பெரிசா
இருக்கும் போலிருக்கே!





# ராமானுஜ காவியம்

**நாமகரணம்**

**த**லைமயனிடம்
தந்தாள் தங்கை; தன் –
தலைவனிடம்
தான் வேண்டி
வாங்கி வந்த
வலம்புரிச் சங்கை!

நாலு நாள் சிசு;
நிற்குமா சிரசு?

திருமலை நம்பி
தனது
உத்தரீயத்தை
உருட்டிப் பந்தாக்கி...

ஆடும் தலைக்கு
அண்டக் கொடுத்து –
அப்படியே
அலாக்காகத் தூக்கி...

அழகு பார்த்தார்; தன்
அகண்ட மார்பில் சேர்த்தார்;

✦ கவிஞர் வாலி

5

உள்ளமெனும்
விசும்பில்...

ஆனந்த மேகங்கள்
அணிதிரள - ஓவென
அப்படியே ஒரு பாட்டம்
அழுது தீர்த்தார்!

அவர்
அல்லும் பகலும்...

தங்கை
தாயாவது
தள்ளிப்போகிறதே - என
தவித்துக் கிடந்தவர்;
கோவிந்தன் சந்நிதியில் - கை
குவித்துக் கிடந்தவர்!

கன்றோடு இன்று
கறவையைப் பார்க்கையில் -
குன்றோடு நின்று
குறைகளைத் தீர்ப்பவன் -

சேவடியை
சிந்தித்தார்; திரு
வாய்மொழியைச் சேவித்து
வந்தித்தார்!

சர்வாங்க
க்ஷவரத்திற்கு...

திதி; பட்சம்;
திகைந்து வராததால்
திருமலை நம்பி
திட்சை விட்டிருந்தார்;

தாடையிலிருந்து



தாழ இறங்கிய
தாடி முடியால் – தன்
தொப்புளைத் தொட்டிருந்தார்!

குனிந்து அவர்
குழந்தையை முத்தமிடுகையில்...

உள்நாசியின்
உட்புகுந்து
ஓர் உரோமம்

ஒவ்வாமை உண்டாக்க –

அச் அச் என – அந்த
அனிச்ச மலர் தும்மியது;

சுவாச இழை
சிறிது நைய – அந்த
சிரமத்தில்
சின்ன மார்பு விம்மியது!



அதைக் கண்டு
அலமந்து -
தவித்துத்
தண்ணீராய்ப் போனாள் தாய்;

திருமலை நம்பியின்
திருக்கரத்திலிருந்து
காந்திமதியம்மையின்
கைகளுக்கு மாறியது சேய்!

விசிப்பலகையில்
விசிராந்தியாக உட்கார்ந்து -
விசிறிக்கொண்டு...

தன்
தங்கையிடமும்
தங்கையின் பர்த்தாவிடமும்
திருமலை நம்பி...

பிறந்த பிள்ளையின்
பிரபாவம் பேசி -

மஞ்சள் தடவிய
மந்திராட்சதை போல் -
வாஞ்சை தடவிய
வார்த்தைகளைத் தூவி -

வழங்கினார்
வேண ஆசி!

'குழந்தை
கொள்ளை அழகு!

மெதுமெது வென்றிருக்கும்
மென்மையில்...

மயில் இறகு - என்
மருமானின் மேனிக்குப் பிறகு!

இது இப்படி;
அது அப்படி;
என்று -
எவ்வளவோ சொல்லலாம்;
என்ன சொன்னாலும் -

எஞ்சி நிற்கும் சொல்லெலாம்!

எதை விட?
எதைத் தொட?
எல்லாம் உசத்தி; குழந்தை -
ஏறக்கட்டும் -
எல்லாரையும் அசத்தி!

தேக்குக் கடைசல் மாதிரி -
மூக்கு முழி;

சிறுகுளத்தில்
சில்லெறிந்தால் விழுமே -
சின்னக்குழி - அதுபோல்
கன்னக்குழி!

அந்தக் கன்னத்தில் -
ஆசை ஆசையாய் நாம்...

வைக்கும்
வாய் முத்தத்தில் -
கைக்கும்
கரும்புக் கழி;

திவ்வியமா யிருக்கிறது -
தலைச் சுழி!

ராத்திரிக்கு -
ராத்திரி...

ஒண்கலை நிலா காட்டி - தன்
ஒக்கலை நிலாவுக்கு -
அம்மா -
அம்மம் ஊட்டுகையில்...

அதைக் கண்டு -
அன்றாடம் -

அழுக்காய் வரும் நிலாவுக்கு
அழுக்காறு வரும்;

ஒண்கலை நிலாவை விட -
ஒக்கலை நிலா -
ஒளியைத் துப்புவதில் - கூடவே
ஒருசில விழுக்காடு பெறும்!

34

பிள்ளைக்குப் -
பல் விளக்குகையில்...

தங்கையே!
தினம் தினம் -
நன்றாக -
நாக்கு வழி;

நாளை -
நாடு பெற இருக்கிறது
நல்லுபதேசங்கள் - அந்த
நாக்கு வழி!

விழுந்து விழுந்து
விளையாடி....
தினம் அப்பிவரும்
தெரு மண்; அனுமதி! அது ஆடிய -
தெரு மண் ஆகும் நாளை -
திருமண்!

இரு கண்ணுக்கும்
இறக்கம் ஏற்றம்
இல்லாது - நீ
இடு மை;
அப்படித்தான்
அந்தக் கண்கள் -
நாளை காக்க இருக்கின்றன -
நடுமை!

சாதியைச் சொல்லி - அதை
சாதிக்கு ஆக்கிடாதே உடந்தை;
அது -
ஆர்க்கும் பொதுவான -
நீதியைச் சொல்லி - இந்
நிலங்காக்க வந்த குழந்தை!

கண்ணன் மாதிரி - உன்
கண்மணியையும்
கட்டி மேய்க்கிறது
கஷ்டம்;

வேதியன் குசேலனின்
வீடு போலவே - அதற்கு
வருணத்தில் தாழ்ந்த
விதுரனின் வீடுகூட இஷ்டம்!'

இன்னணம்
இடைவெளி இன்றி...

திருமலை நம்பி - ஒரு
தீர்க்கதரிசி போல் -
தங்கையின் -
தலைச்சன் பற்றி...

நெடிய உரை
நிகழ்த்தினார்;
பெற்றோர் நெஞ்சைப்
பெரிதும் நெகிழ்த்தினார்!

பன்னிரண்டாம் நாள்;
புண்ணியாகவாசனம்!

ஒரு
பாகவத கோஷ்டி -
பிராதக் காலத்திலிருந்து...

பிராசீன பத்ததியில்
படித்துக் கொண்டிருக்கிறது -
பிரபந்த வாசகம்!

நல்லி பெற்ற
நல்ல பிள்ளைக்கு - திரு
நாமம் சூட்டும்
நல்விழா;

கேசவ சோமயாஜியின்
கிருகத்தில்...
கூடம் நிறையக் -
கூட்டம்;
நெல் போட்டால் -
நெல் விழா!

காந்திமதியின்
கூடப் பிறந்த -

தங்கை
த்யுதிமதியும்; அவளது -
கணவர்

கமலநயன பட்டரும்...

முன்ரேழியில் நின்று -
முகமன் கூறுகின்றனர் -
ஊர்க்கும்;
உறவான பேர்க்கும்!

திருமேனியெங்கும்
துவாதச புண்டரீகம்
சாத்திக் கொண்டிருக்கும்
சிரௌதிகள்...

சாமம்; யஜுர்;
சொல்ல...

ஆதிகேசவப் பெருமாள் - கோயில்
அரையர் பெருமக்கள் -

'மன்னுபுகழ் கௌசலை தன் -
மணிவயிறு வாய்த்தவனே!'
எனும் -
ஏரார்ந்த -
குலசேக ராழ்வாரின்
காகுத்தன் தாலாட்டை...

கலீர்கலீரெனக்
காற்சதங்கை ஒலிக்க -
அழகுறப் பாடி
அபிநயிக்க...

பின்ரேழியை ஒட்டியிருக்கும்
பெருமாள் அறையில்...

சந்தனப் பெட்டியில்
சயனித்திருக்கும்
சேஷசாயிப் பெருமாளின்
சாலிக்கிராமத்திற்கு...

கிருஷ்ண துளசியும் - பச்சைக்
கற்பூரமும் சேர்த்த -
தீர்த்தத்தால்
திருமஞ்சனம் செய்து;

பட்டுக்கரை போட்ட - சின்ன
புது வஸ்திரம் சாத்தி;

நாண்மலர் சமர்ப்பித்து -
நறும் புகை காட்டி;

சின்னமணி அடித்து -
திருவாராதனம் முடித்து;

அக்கார அடிசிலை
அமுது செய்வித்து;

கூப்பிய கரத்தொடும் -
குனிந்த சிரத்தொடும் -

கள்ளர் மரபில்
கண்மலர்ந்த கலியனாம் -
திருமங்கை யாழ்வாரின்
திருநெடுந்தாண்டகத்தை -

சேவித்துக் கொண்டிருந்தார்
ஸ்ரீவைஷ்ணவர் திருமலை நம்பி;

கேசவ சோமயாஜியும்
கமலநயன பட்டரும்
பிற காரியங்களைப்
பார்த்துக் கொள்வாரென நம்பி!

ஆரம்பம்
ஆனது -

யதா சாஸ்திரம்
யக்கியம்;
அக்கினி சந்தானம்
அதில் முக்கியம்!

அக்கினிதான்
அஞ்சல் பெட்டி;

அவியை
அதில் சேர்த்தால் -
அமரர்க்குப் போய்ச் சேரும்;
அதற்கில்லை அட்டி!

வேத பாராயணம்
விண்ணைப் பிளந்தது;

ஓமப்புகை

36

ஓங்கி வளர்ந்து
விண்ணுக்கும் மண்ணுக்குமான -
தூரத்தை அளந்தது!

ஓமப்புகை - உடலுக்கு
சேமப் புகை; அது
ஔஷதத்துக்கு நேர் - என
ஓர்ந்து உள்ளிழுத்தது ஊர்!

ததியாராதனை
திவ்வியமாக நடந்தது -
மத்தியான்னம்; விதவிதமான
சித்திரான்னம்!

சாயந்திரம்
சகல பெண்டுகளும் கூடி...

'சித்திரையில் ஆதிரை நாள் -
வந்துதித்த தேசிகனோ!'
என்று பாடி...

காந்திமதியின்
குழந்தையை -
வண்ணச் சிறு தொட்டிலில்
விட்டனர்; குலவை -
இட்டனர்!

தாய்மாமன் - பெரிய
திருமலை நம்பி - தனது
தங்கையின் தனயனுக்கு...

சங்கு சக்கரக் குறிகளைச்
சாத்தி;
'நூறும் புகுக!' என
நெஞ்சுருக வாழ்த்தி...

'இலட்சுமணன்;
இராமானுஜன்;
இளையாழ்வான்!' என -

மூன்று திருநாமங்களை
முன்நின்று சூட்டினார்;

சேயின் -
செவியண்டை வாய் வைத்து -
மூன்று நாமங்களையும் -
மும்முறை சொல்லிக் காட்டினார்!

பிறகு -
பந்துக்களிடம்...

'இதோ! இருக்கிறானே -
இவன் -

சர்வ லக்ஷண
சம்பன்னன்;
சகலரும் கொண்டாடப் போகும் -
சார்வபௌமன்!

அதுவுமன்றி - இவன்
அந்த...

ஆதிசேஷனின்
அச்சு;
அறத் தேருக்கு
அச்சு;

நேருக்கு நேர்
நின்று வாதிடுவார் -
ஆருக்கும் ஏற்படும்
அச்சு!'

என்று -
ஏகமாய்ச் சிலாகித்தார்
சிசுவை; சகோதரி ஈன்ற -
வசுவை!

தூங்கிக் கொண்டிருந்த
தொட்டில் குழந்தை -
சின்ன இதழ் விரித்தது;
சின்னதாய்ச் சிரித்தது!

'நரி மிரட்டுகிறது!' என்றாள் -
நூற்றுக் கிழவி யொருத்தி;
அதற்கும் சிரித்தது -
அந்தச் சிறிய செம் பருத்தி!

– வளரும்

# ராமானுஜ காவியம்

6

## திருக்கச்சி நம்பிகள்

அந்த ஊர்
அந்தமுள்ள ஊர்; அவ்
அந்தத்திற்கு
அந்தமில்லா ஊர்!

கொடிமரம்;
கைகாட்டி மரம்;
பாய்மரம்;
பெருமாள் கோயில் சாமரம்;

இத்தியாதி மரங்கள் தவிர -
இதர மரங்களெல்லாம்...

புஷ்பவதியாகும் பருவத்தில்
புஷ்பவதியாகி
புஷ்பிக்கும் பருவத்தில்
புஷ்பிக்கும் ஊர்;

பூமரம் ஏந்தும்
பூவும்;
பூமரத்தை ஏந்தும்
பூவும்;

பொலபொலென இல்லாமல்
புஷ்டியாயிருக்கும் ஊர்;

பூக்களென்னும்
பயணியர் விடுதியில்...

இருந்து
இளைப்பாறிப் போகும்
இளங் காலுக்கு
இஷ்டியாயிருக்கும் ஊர்!

வாசத்தேனை
வாங்கிப்போக
வாடிக்கையாய் வரும்
வண்டுகளுக்கு...

சரக்கில்லை என்று
சொல்லாமல்...

பட்டுவர்டா பண்ணும் - பூ
மொட்டுவாடா ஊர்!

● கவிஞர் **வாலி**

அப்பேர்ப்பட்ட
அவ்வூர்...

வாவியில் அல்லி; நந்த
வனத்தினில் மல்லி; இன்னும்
பூவினம் சொல்லி – மாளாத
பூவிருந்த வல்லி!

ஒரே நேரத்தில்
ஒருவர்...

தனவானாகவும்
கனவானாகவும்
திகழ ஒண்ணுமோ?
திகழுமாறு காலம் பண்ணுமோ?

'ஒண்ணும்;
பண்ணும்!' என்று...

நாவிருந்த பேரெல்லாம்
நாளும் பேச – வாழ்ந்தார்
பூவிருந்த வல்லியில் – ஒரு
புண்ணியர்; கண்ணியர்!

வைசியகுலத்தில் வந்தவர்;
வணிக வேந்தர்; அவரை –
வணக்கத்திற்குரிய –
வாழ்த்துதலுக்குரிய –
வீரராகவ செட்டி – என்று
விளிப்பர் மாந்தர்!

அறமெனும் சொல்லுக்கு – அவர்
அர்த்தமாக இருந்தார்;
அறவழியில் வராவிடில் – அது
அமுதமாயினும் அருந்தார்!

'வேர்வைக்கும் –
வாய்மைக்கும் ஏற்பவே – வெற்றி
வேர்வைக்கும் –



வியாபாரத்தில்!'

என்று –
எல்லோர்க்கும் சொல்லுவார்;
சொன்னதோடு நில்லாமல் – தானும்
சொன்னவழியில் செல்லுவார்!

ஆதலால் –
அவரது...

கல்லா கண்டது
காசு மேல் காசு; ஆனால் –
கண்டதில்லை யாரும்–அந்தக்
காசுமேல் காசு!

செட்டியின்
சம்சாரம் –
பெரும் குணவதி;
பெயர் கமலை!

அம்மையாரை
அவ்வூர் தொழுதது;

அதற்குக் காரணம்
அவர் இன்னோர் அமலை!

ஆம்!
அந்தப் பெருமாட்டிக்கு...

உட்கார –
ஒரு தாமரைப்பூ;



நீட்டி மடக்க -
நான்கு கரங்கள்;

இவை -
இல்லையே தவிர -
மற்றப்படி - அவர்
மகாலட்சுமிதான்!

அம்மையார் -
அகழ்வாரைத் தாங்கும் நிலம்;
அவர் வாழ் -
அகம்தான் திவ்வியத்தலம்;

அளப்பரு -



அன்பின் பண்பின் கொள்கலம்;
அவர்தான் –
அரிவையர்க்கான குருகுலம்!

வீரராகவ செட்டியின்
வாரிசுகளாக...

நன்கு வளர்ந்த
நான்கு பிள்ளைகள்;

தலைக்குத் தலை
தலையெடுத்து ஆடாமல்
தலை சொன்னால்
தலையாட்டும் அவர்களால்...

தலைவனிடமோ தலைவியிடமோ
தலைகாட்டவில்லை சள்ளைகள்!

உயர்ந்த பட்சமாக –
உவமித்தால்...

வீரராகவ செட்டியை
வீரராகவராகவே சேவித்த
நான்கு குகன்கள் – அந்த
நான்கு மகன்கள்!

கடைக்குட்டியாய்க்
கண்மலர்ந்த –
திருமகன்தான்
திருக்கச்சி நம்பி;

இல்லறம் கைத்து – பின்னாளில்
இராமானுஜர் கலங்குகையில்...

சம்சார
சாகரத்திலிருந்து – அவர்
கரையேறக்
காரணமான அம்பி!

இயல்புகளிலோ...
இயக்கங்களிலோ...

தமையன்மாரிடமிருந்து
தனித்துத் தெரிந்தார்

திருக்கச்சி; அவர் –
தனிக்கட்சி!

கடைப்பிள்ளை என்ற
காரணத்தால்...

செல்வர் நால்வருள்
செல்வன் நம்பியை
செல்வத்துள் செல்வமாய்
செல்லத்துள் செல்லமாய்

தழுவினர் –
தாய் தந்தை;

ஆனால் –
அந்த செல்வனோ...

'செல்வம்! செல்வம்!' என்று
செல்வமே சொல்லுவதால் –
செல்லும் செல்வம் மேல்
செல்லாதொழித்தான் சிந்தை!

பொருட்கட்சி
மருட்கட்சி என்று –
அருட்கட்சி அணைந்தார்
திருக்கச்சி!

வீழும் செல்வங்களை
விசிறி வீசினார்;

வளநகர் காஞ்சிவாழ் –
வரதராஜன் என்னும்...

வீழாத செல்வத்திற்கு
வாழ்நா ளெல்லாம்
விசிறி யாகி
விசிறி வீசினார்!

வால வட்டத்தில்
வாழ்கிற வயதில் – வஞ்சி விழி
நீல வட்டத்தில்
நெஞ்சு நின்று நினைவழியாமல்;

இவையெல்லாம்.

இறுதி வருகின்ற...

காலகட்டத்தில்
கைதராதென்று - கஞ்சிவரதன்
ஆலவட்டத்தில்
ஆசை வைத்து அஃதைச் செய்தார்;

கச்சி நம்பி - அந்தக்
கச்சி நம்பி கைங்கரியத்தில் -
உச்சி நம்பி - என்று
ஊர் நவிலுமாறு...

வரதராஜன் திருவடிகளில்
வியர்வையைப் பெய்தார்!

'நெற்றியில் -
நாமக் குறி;

உளத்தில் -
வைணவ நெறி;

விழியினில் -
வரதன் வெறி;

என்றிருந்தால்
என்றைக்கும்
புக வேண்டாம்
பிறவிப் பொறி!'

இன்னணம்
இசைத்த வண்ணம் -
திரிந்து கிடந்த
திருக்கச்சி நம்பி...

பிரியப்பட்டு - வெகு
பிரயாசைப்பட்டு -
பூவிருந்தவல்லியில் - ஒரு
பூந்தோட்டம் போட்டார்;

அதிகாலையில்
அதழ்கள்
அவிழும்
அழகு மலர்களோடு...

அளியும் வளியும் வந்து
அசடு வழிய நின்று
அரட்டை யடிக்க
அனுமதிக்க மாட்டார்!

'புஷ்பங்கள்
பெருமாளுக்கு உரியவை;

மோத்தல்
மொய்த்தல்
அபசாரத்திலும்
அபசாரம் என்று -

வண்டுக்கும் வாடைக்கும்
விவரமாய்ப் புரிய வை!'

என்று
எச்சரிப்பார் -
தோட்டத்துக் கூலியை; ஓரடி
தூக்கச் சொல்வார் முள்வேலியை!

தினப்படி
தினப்படி
திருக்கச்சி நம்பி
திருக்குடலைகளோடு வந்து...

ஆண்டாளின்
அப்பாவைப் போல் -

செடிக்கும் வலிக்காமல்
கொடிக்கும் வலிக்காமல்
கொய்து கொய்து
குடலைகளை நிரப்பிக் கொண்டு...

காஞ்சிபுரத்திற்குக்
கால்நடையாய்ச் செல்வார்;

வண்டு வந்து
வாய் வைக்காமல்
கொண்டு வந்த
குடலைப் பூக்களை...

பெருமாளுக்குச் சாத்தி -

பிரபந்தங்களைச் சொல்வார்!

திருப்பணி முடித்து
திருக்கச்சி நம்பி
பூவிருந்தவல்லிக்குப்
பிற்பகல் திரும்புகையில்...

பெரும்பூதூர்
போந்து...

கேசவ சோமயாஜி வீட்டில்
கொஞ்சம் ஓய்வெடுப்பார்;

நண்பரும்
நம்பிக்கு - ஒரு
கோழித்தூக்கம் போடக்
கோரைப் பாய்கொடுப்பார்!

நித்தியப்படி
நிகழ்ந்து வந்த -
நண்பர்களின் - இந்த
நெஞ்சார்ந்த சந்திப்பு...

பிள்ளை ராமானுஜன்
பிறக்கு முன்பே -
கொஞ்சம் கொஞ்சமாய்க்
குறைந்து போனது;

காரணம் -
காஞ்சிபுரமே -
திருக்கச்சி நம்பிக்குத்
தங்குமிடம் ஆனது!

என்ன நடந்தது
என்றால்...

வீரராகவ செட்டி - தன்
விருத்தாப்பியம் காரணமாக...

பெட்டியைத் திறந்து
பெருஞ்செல்வத்தை எடுத்து -
சரி
சமமாகப்

பிள்ளை நால்வருக்கும்
பங்கிட்டுக் கொடுத்து -

'வணிகத்தை
விருத்தி செய்வீர்!' என...

வாழ்த்தி - தான்
விலகி நின்றார்; சில
வருடங்கள் சென்றபின் -
'விருத்தி செய்தீரா?' என்றார்!

மூத்தவன் -
மும்மடங் காக்கினேன் என -

இரண்டாமவன் -
இருமடங் காக்கினேன் என -

மூன்றாமவன் -
மூவிருமடங் காக்கினேன் என -

கடைசிப் பிள்ளை - திருக்
கச்சி மட்டும்
மௌனம் காத்து - தூண்
மறைவில் நிற்க...

'மகனே! நீ
மேன்மை மிக்கவன்;
பெற்றோர் -
போற்றத் தக்கவன்!

வாணிகத்தில்
வாய்மை வழி நிற்பவன்;
வாய்மையையே
வாழ்வியலாய்க் கற்பவன்!

சம்பாதித்திருப்பாய் நிறைய;
சேமித்திருப்பாய் நிறைய;
சொல்! மகனே! சொல்! என் -
செவிமடல் செந்தேனால் நிறைய!'

வினவினார்
வீரராகவர்;
விளக்கினார்
வரதராஜ அன்பர்!

46

‘எந்தையே!
எளியேன்...

ஈட்டிய பொருள்
ஈண்டில்லை கரத்தில்;
சேமித்து வைத்துளேன் - அச்
செல்வத்தைப் பரத்தில்!

தாங்கள் தந்த
திரவியத்தை...

இறைவன் திருப்பணியில்
இறைத்தேன்; அங்ஙனம் -

இறைத்து தினம் உண்டேன்
இறைத்தேன்!’

செல்லப்பிள்ளை
செப்பியது கேட்டு...

செட்டியின் சினம்
சேர்ந்தது உச்சத்தை;
திட்டித் தீர்த்தார்
தனது எச்சத்தை!

‘வணிகர் குலத்தில்
உனக்கு இடமில்லை; இந்தப்
பரந்த வீடு
பாகவதர்கள் மடமில்லை!

நிற்காதே இங்கு;
நட!
ஆலயத் திருப்பணியே
ஆனந்தம் எனக் கிட!’

தந்தை சொல்லைத்
தலைமேல் ஏற்று...

நம்பி
நீங்கினார்
இந்த வீட்டை; எண்ணினார்
அந்த வீட்டை!

தாய் கமலையம்மை
தடுத்தாள்; திரும்பத்
தொழில் செய்யத் - தன்
தங்க நகைகளைக் கொடுத்தாள்!

‘அம்மா!
அப்பா சொன்னபடி...

ஆலயப் பணிதான்
ஆனந்தம்; அதுதான்
ஆன்ம ஞானத்திற்கு
ஆரம்பம்!’

என்று காஞ்சீபுரம்
சென்றார்; கச்சி நம்பி -
அன்று முதல் அங்கேயே
நின்றார்!

ஈரைந்தாம் நூற்றாண்டின்
இறுதிக்கு - இன்னும்
ஓரைந்து ஆண்டுகள் உளபோது
உதித்தவர் திருக்கச்சி;

பதினோராம் நூற்றாண்டின்
பதினேழாம் ஆண்டில் - காந்தி
மதியெனும் மங்கைநல்லாள்
மடிவந்தவர் இராமானுஜர்!

இராமானுஜரை விட
இருபத்திரண்டு வயது -
பெரியவர் நம்பி; மிக
அரியவர் நம்பி!

பின்னாளில் -
புரட்சிக் கருத்துக்களோடு -
புறப்பட்டுப் -
பொலிய இருக்கிறது...

இராமானுஜம் என்னும்
இந்து சக்தி; அதற்கு -
உத்தமர் திருக்கச்சிதான்
உந்து சக்தி!

— வளரும்

|| ஓம் நமோ நாராயணா // ஓம் நமோ நாராயணா ||

48

# ராமானுஜ காவியம்

7



## ராமானுஜனா? ராஜகுமாரனா?

'**ம**லடு' எனும்
மூன்றெழுத்துச் சொல்லையே -

உள்ளீடற்ற
ஒரு -

மலட்டுச் சொல்லாக
மாற்றியவன்;

தன்னை
தாயார் ஸ்தானத்திற்கு - ஓர்
ஏணிபோல் வந்து
ஏற்றியவன்!

கவிஞர் வாலி

இதற்கு மேலும் -
இராமானுஜன் மேல்...

பித்தேறிக் கிடக்கப்
பெற்றவளுக் கென்ன வேண்டும்?

தன்னிலிருந்து
தவமிருந்து
தானே பிரித்தெடுத்த தன்னை;

தங்க வயல்
தோண்டி எடுக்காது -
அங்க வயல்
அகழ்ந்து எடுத்த பொன்னை;

தரையில் விடுவாளா?
தலைமேல் தாங்கினாள் யாண்டும்!

தூளியில் விட்டது கொஞ்சம்;
தொட்டிலில் விட்டது கொஞ்சம்;
அந்தக் கொஞ்சத்திற்கே - அவளை
அனலில் விட்டது நெஞ்சம்!

கோழி -
கூவியது முதல்; சுவர்க்
கோழி -
கூவுவது வரை...

இராமனுஜனை
இடுப்போடு -
அவள்
வைத்திருப்பவள் அல்ல;
தைத்திருப்பவள்!

ராமானுஜனா?
ராஜகுமாரனா?

என
எவரும் -
வினவ;
வியக்க;

காந்திமதி - தன்
கைப்பெட்டிக்குள்..

பொத்திப் பொத்தி வளர்த்தாள்

பொக்கிஷத்தை; நாளை
பௌவம் போல் பொங்க இருக்கும்
பௌருஷத்தை!

எதிர்காலத்தில்
எதிகளின் ராஜன் எதிராஜன் -
என்றாகப் போகிறான்
என்பதாலோ என்னவோ...

அய்யங்கார் குமாரனை
அரசகுமார னாட்டம் - ஓர்
ஆளுமை துலங்க
ஆளாக்கினாள்...

காந்திமதி - எனும்
காந்தாத மதி!

பூவாய்ச் சிரிக்கும்
புத்திர ரத்தினம் -
ராவாய்ப் பகலாய்
ராஜாங்கம் நடத்த...

அப்பா வீடே
அரண்மனை யாச்சு;

அம்மா இடுப்பே
அரியணை யாச்சு;

சிலைத் தலைப்பே



சிறுகுடை யாச்சு;

சூப்பும் விரலே
செங்கோ லாச்சு;

குதலை மொழியே
கட்டளை யாச்சு;
கண்ணீர்த் துளியே
கைவா ளாச்சு;

பசும்பொன் தொட்டில்
பல்லாக் காச்சு;
ஆராட் டொன்றே
பாராட் டாச்சு!

கேசவ சோமயாஜிகூட
கேலி செய்தார் -

பெண்டாட்டியை; குடும்பத்தின்
பெருமாட்டியை!

'பிள்ளையாண்டான்
பிறந்ததிலிருந்து...

என்னைப் பற்றிய



||ஓம் நமோ நாராயணா||ஓம் நமோ நாராயணா||

எண்ணமும் இல்லை; உனக்கு -
உன்னைப் பற்றிய
உணர்வும் இல்லை!

குழந்தையே குழந்தையே என்று -
குழந்தை நினைப்பிலேயே - உன்னை
இழந்தையே இழந்தையே இன்று!

அதுதானோ உனக்கு -
ஆகாசம்; அவனி?

ஆகட்டும் -
அப்படியே;
ஆயினும் - கொஞ்சம்
அகத்துக்காரரையும் கவனி!'

நாயகன் இங்ஙனம்
நையாண்டி செய்தது...

காந்திமதிக்குக்
கூச்சத்தை உண்டாக்க -

அவளது
அழகிய -
நயன மேகம்
நாணமழை பெய்தது!

பொந்தோ சந்தோ -
போகுமிடமெல்லாம்...

குட்டியைக்
கவ்விக்கொண்டே போகும் -
மார்ச்சாலம்
மாதிரி...

அடுப்பங்கரையோ
ஆற்றங்கரையோ
இடுப்புக் குழந்தையை
இறக்கி விடாது -

காரிய மாற்றுவது
காந்திமதிக்கு
விடமுடியாத
வழக்கமாகி விட்டது;

அம்மா பிள்ளை
அன்னியோன்னியம் -
ஆர் பரிகசிப்புக்கும்
அப்பாற் பட்டது!

அதற்குக் காரணம்
அருமந்த புதல்வனை...

வாராது வந்த
மாமணியாய் எண்ணினாள்;
ஒரு நாளைக்கு
ஒன்பான் தினுசாக -

ஆசைப்பட்ட படியெல்லாம்
அலங்காரம் பண்ணினாள்!

வளரும் பிள்ளை -
வருங் காலத்தில்...

விறகா?
வீணையா?

வேயா?
வேணுவா?

காஞ்சிரமா?
கண்டா?

கரம்பா?
கழனியா?

என்பதெல்லாம்
எப்பொழுதும் -
ஒரு தாய்க்கு
வெள்ளிடை;

'விளையும் பயிர் -
முளையிலே!' என்பது
சிரஞ்சீவியான

சொலவடை!

உலக வழக்கில் -
ஒரு தாய்...

தனது
தோள் தழுவிய -

துகிலெடுத்து;
துகிலில் மறைந்துள - இரு
நகிலெடுத்து;

உற்ற பிள்ளைக்கு
ஊட்டுவாள் பால்!

கற்ற பிள்ளையாய்;
கல்விச் செல்வமெலாம்
பெற்ற பிள்ளையாய்;
பேதைமையும் பேதுறவும்
அற்ற பிள்ளையாய்;
அற்ப பயங்களைச்
செற்ற பிள்ளையாய்;
செகத்திடை பிறங்க வைக்கும்...

அன்னை ஊட்டிடும்
அப் பால்; உயிர்க்கு
ஆக்கம் தருவதில்
அம்புவியில் வேறுண்டோ -

அப் பாலுக்கு
அப்பால்?

காந்திமதி - தானொரு
குழந்தைக்குத் தாயாகு முன்பே...

பெரிய சுமங்கலிகள்
பேசக் கேட்டிருக்கிறாள் -

'நாய்ப்பால்
தாராளமாகப் பருகக் கிடைத்த -
வாய்ப்பால்...

பிள்ளைகள்
பெறும் -
அறிவை; அதன் -
செறிவை!

எனவேதான் -
இராமானுஜனுக்கு -
மூன்று வயது
முடிந்த பின்பும்...

அர்த்த ராத்திரியில்
அவன் அழுதால்...

காந்திமதி உடனே - தன்
கச்சை அவிழ்ப்பாள்;

மகனுக்கு
மார் கொடுத்து - அவன்
மண்டை மேல்
முந்தானையைக் கவிழ்ப்பாள்!

பிள்ளை - தன்
பால்பல்லால் வலிக்க..

அங்ஙனம்
அது
வலிக்கும்போது - அது
வலித்த இடம் வலிக்க...

விட்டு விட்டு
விட்டு விட்டு
ஊட்டுவாள் பால்; ஏணையில் -

இட்டு இட்டு
இட்டு இட்டு
ஆட்டுவாள் தால்!

'தாலோ! தாலேலோ!
தாலோ! தாலேலோ!

வாசவனார் முதலான
வானவரும் வந்தேத்தக்

# ஓம் நமோ நாராயணா!!

கேசவனார் குலத்துதித்த
கேசரியே! தாலேலோ!

ஆசூரி வமிசத்தை
அந்தகாரம் விழுங்காமல்
தேசூறி நிற்கின்ற
திருவிளக்கே! தாலேலோ!

விந்து விழுந்தாலும்
விளையாத களர்நிலமாய்
நொந்து விழுந்தாளின்
நோய் தீர்த்தாய்! தாலேலோ!

உகப்பன் என் புருஷன்
உன்னாலே எஞ்ஞான்றும்;
தகப்பன் என்னுமொரு
தகவளித்தாய்! தாலேலோ!

மைகுந்தும் பழனங்கள்
மலிந்துள்ள பூதூர்க்கு
வைகுந்தம் விட்டு வந்த
வாசுதேவா! தாலேலோ!

வினைவந்து சேராமல்
வையத்தார் உய்வதற்கென்
மனைவந்து சேர்ந்தவனே!
மாதவனே! தாலேலோ!

இராவணனே இவ்வுலகில்
இராவணம் இறுதி செய்த
இராவணனே! இரவிகுலத்து
இராகவனே! தாலேலோ!

உடுக்கை இடையுடையாள்
உடுக்கையை இழுக்கையிலே
உடுக்கை அடுக்கடுக்காய்
உதவியவா! தாலேலோ!

அகம்கொண்டு 'ஆரடா அவ்
அரி?'யென்று ஆர்த்தவனை
நகம்கொண்டு வகிர்ந்தவனே!
நரசிங்கா! தாலேலோ!

படியளந்த விண்ணளந்த
பூவடியால் மாவலியின்
முடியளந்த முழுமுதல்வா!
மணிக்குறளா! தாலேலோ!

மண்ணயர விண்ணயர
மாமகனே! நீ மட்டும்
கண்ணயர மாட்டாது
கரைவது ஏன்? கூறய்யா!

அப்பும் கூர்மையிலே
அடிபணியும் கண்விழியில்
அப்பும் கசிந்து வர
ஆரடித்தார்? கூறய்யா!

துப்பும் செக்கரிலே
தோற்றோடும் செவ்வாய்தான்
துப்பும் சிறுநகையைத்
திருடியதார்? கூறய்யா!

பண்ணையென இருந்தாலும்
போயவரைப் பிடித்துவந்து
வெண்ணெயிலே விலங்கிட்டு
வெய்யிலிலே நிற்கவைப்போம்!

ராஜாவா யானாலும்
ரதமேறிப் பிடித்து வந்து
ரோஜாவில் விலங்கிட்டு
ராப்புயலில் நிற்கவைப்போம்!

கனவானா யிருந்தாலும்
கையோடு பிடித்து வந்து
அனலாலே விலங்கிட்டு
அடைமழையில் நிற்கவைப்போம்!

தனவானா யிருந்தாலும்
தட்சணமே பிடித்து வந்து
மணலாலே விலங்கிட்டு
மடுவினிலே நிற்க வைப்போம்!

54

ஓம் நமோ நாராயணா

இறைச்சல் போட்டழுதால்
இளவரசின் போஷாக்கில்
குறைச்சல் என்றென்னைக்
குறை கூறும் ஊரெல்லாம்;

உன்னை நான் அழவைத்த
ஒருகுற்றம் காரணமாய்
என்னைத்தான் தண்டிக்க
எழுந்துவரும் பாரெல்லாம்!

எவ்வுயிரும் தன்னுடைய
இன்னுயிராய் எண்ணுகின்ற
செவ்வுயிரே! நான் பெற்ற
சீதனமே! தாலேலோ!

இலக்குவன் போலிருந்து
இந்திர சித்துக்களைக்
கலக்குவன் என்றெழுந்த
கருமணியே! தாலேலோ!

விழுதுவிட் டிருக்கின்ற
வைணவம் ஒருநாளும்
பழுதுபட் டிருக்காமல்
பார்ப்பவனே! தாலேலோ!

இன்னணம்
இரவு தோறும்...

பாடுகளைப்
பட்டவள் - பிள்ளையின்
பீடுகளைப்
பாடுவதை...

கேசவர் -
காதால் பருகுவார்;

பருகிப் பருகிப்
பகல் நேரத்துப்
பனித் துளியாய் உருகுவார்!

நகர்வதே -
நாலு பேருக்குத் தெரியாமல்...

நகர்ந்தன

நேரத்தின்
நாள்கள் - என்னும்
தாள்கள்!

கத்தரி;
காற்று;
கார்;
கூதிர்;

இவை போல்
இன்ன பிற...

வந்து வந்து போயின; ஓரிரு -
வருடங்கள் ஆயின!

ஒரு
விஜயதசமியில்
வித்தியாரம்ப நாளில்...

அட்சராப்பியாச வைபவம்
அமோகமாக நடந்தது -
ஆசூரி கேசவ சோமயாஜியின்
அரண்மனை அனைய இல்லில்;

அஞ்சு வயது ராமானுஜனின்
பிஞ்சு விரல்கள் -

எட்டெழுத்தை
எழுதின - ஒரு
வட்டிலில் நிறைய
விரவியிருந்த நெல்லில்;

அந்த -
அட்டாட்சரம் தானே
அறிவு வெளிச்சம் கொளுத்தி
ஆன்மாவிற்கு வழிகாட்டும்...

அல்லல் மிகுந்த -
அறியாமை என்னும் அல்லில்!

- வளரும்



"பாங்க்ல கொள்ளையடிச்ச பணமெல்லாம் எங்கே?"

"அதே பாங்க்ல மறுநாளே என் அக்கவுண்ட்ல டெபாசிட் பண்ணிட்டேன்.. பணம் எங்கேயும் போகலே.. இதைப் போய் கொள்ளைன்னு சொல்றாங் களே!"

– ஜோலார்பேட்டை நா.கோகுல்

வேண்டாம்..



# கள்ளச் சிரிப்பு

"ஹலோ, இன்ஸ்பெக்டரா? எங்க வீட்ல திருட வந்த ஒருத்தனைக் கையும் களவுமா பிடிச்சு வெச்சிருக்கோம். உடனே வர்றீங்களா?"

"அப்படியா.. அவன் இப்போ என்ன பண்ணிட்டிருக்கான்?"

"டி.வி. பார்த்துட்டிருக்கான் சார்.."

"உடனே டி.வி-யை ஆஃப் பண்ணுங்க. சட்டத்தைக் கையில எடுத்துக்கிட்டு நீங்களே அவனுக்குத் தண்டனை எல்லாம் தரக்கூடாது!"

– பெங்களூர் சிக்ஸ்முகம்



56

# ராமானுஜ காவியம்

## 8

**கவிஞர் வாலி**

பிள்ளைப் பிராயத்திலே...

உயிரில் தொடங்கும்;
மெய்யில் அடங்கும்!

எனினும் -
எல்லா எழுத்துமே...

உயிரெழுத் தாகி -
மெய்யெழுத் தாகி -

உலகின் கண்
உள்ள...

உயிர்க்கும் மெய்க்கும் -
உய்வகைகளை உபகரிக்கும்;

உள்ளுநரை உள்ளுவார் தம் -
உள்ளங்களை அபகரிக்கும்;

வாழ்வாங்கு வாழ்வதற்கு -
வித்தாரமாய் விவகரிக்கும்;

வாசித்து முடித்த பின்பு -
வாய்க்கு வெல்லம் கரிக்கும்!

இத்துணை
இசை வாய்ந்த...

அய்யன்
அருளிய -
செந்தமிழ் வேதம்
செப்புகின்றது:

'பிறப்பு ஒக்கும் -
எல்லா உயிர்க்கும்!'

திராவிட வேதம்
தெரிவித்த கருத்தை -
ஆரிய வேதமும்
அப்படியே ஒப்புகின்றது!

ஒரு
பிராமணத் தந்தைக்கும்;
ஒரு
பிராமணத் தாய்க்கும்;

பிள்ளையாய்ப்
பிறப்பதால் மட்டுமே - ஒருவன்

பிராமணன் அல்ல; அவனது
சனனம் - ஒரு
சான்றிதழ் ஆகாது - அந்தணச்
சாதியான் என்று சொல்ல!

ஒருவனை -
வேதியனாக்குவது...



அவனை ஏந்திய
கருப்பை அல்ல;
அவன் ஏந்திய
தருப்பை!

சம்போகத்தால் ஒருமுறை;
சம்ஸ்காரத்தால் ஒருமுறை;
என எந்த பிராமணனும் -
எய்துவான் பிறப்பை இருமுறை!

ஆதலால்தான் -

அந்தணனை...

'இருபிறப்பாளன்!' என -
இயம்பும் தென்மொழி;
'துவிசன்!' எனத் -
துலக்கும் வடமொழி!

ஓர் -
ஒற்றைப்படை வயதில் -
இராமானுஜனுக்கு -



இரண்டாம் பிறப்பை வழங்க...

கேசவ சோமயாஜி
குறித்தார் தேதி;

தனித் தனித்
திருமுகம் மூலம் -
தமர்க் கெல்லாம்
தெரிவித்தார் சேதி!

உதக சாந்திக்கும் -
உபநயனத்துக்கும் -

ஊர்ப்பட்ட சனம்;
இலை போட்டு -
இலை எடுத்து -
ஏழு எட்டு பந்தி தினம்!

யக்ஞும்;
யக்ஞோபவீத தாரணம்;
குமார போஜனம்;
மஞ்ச வேஷ்டியில் -
மௌஞ்சி பந்தனம்;
பிரம்மோபதேசம்;

பிரமசாரிப்
பையனுக்குப்
பெண்டுகள் இடும்
பிட்சை;
என -
எல்லா சம்ஸ்காரங்களும்...

மந்திர லோபம்;
கிரியா லோபம்;
தான்ய லோபம்;
திரவிய லோபம்;

இத்தியாதி...
இத்தியாதி...
லோபங்கள் கிஞ்சித்துமின்றி -
லோகமே கொண்டாடும்படி -

சாஸ்திரோக்தமாக;
சாங்கோபாங்கமாக;
சம்பிரமமாக;
சம்பூர்ணமாக;

நடந்தன; நாள்களும் -
நடந்தன!

அகத்து வாசலில்
ஆளோடியோடு -
அகலமாக
அமைந்திருந்த -

பெரிய திண்ணையே - வேத
பாடசாலையாகிப் போனது;

சாகை
சாகையாக -
அத்தியயனம்
ஆரம்பம் ஆனது!

ஆரணம் என்பது
ஆழங்காண ஆகாத மடு; தனது
அத்தனையே
ஆசாரியனாகக் கொண்டு - அதில்
ஆழங்காற்பட
ஆசைப்பட்டான் வடு!

பிராயம் பதினைந்து
பூர்த்தியாவதற் குள்ளாகவே...

இளையாழ்வான் எனப்படும்
இராமானுஜன் -
இருக்கை முதலாய்க் கொண்டு -
இருக்கின்ற ஈரிரண்டு -

எழுதாக் கிளவிகளையும் -
எடுத்து அடுக்கினான் நாவில்;

வேத வேதாந்த
விசாரங்களில்
வாது புரிந்திட
வரும்...

வித்துவான்களை
வீழ்த்தவல்ல
வார்த்தை வாளிகளை -
வாங்கி நின்றது அவன் நாவில்!

'முன்னூல் அறிந்து
முப்புரிநூல் அணிந்து - இனும்
பன்னூல் அறிவு
புந்தியில் அடைந்து - ஒரு
நன்னூல் நிலத்தில் கால் தோய
நடக்கிறது!' என...

இராமானுஜனை
இனம் கண்டது ஊர்; அவனது
ஏரார்ந்த விழிகள் - எவர்
எதிர்ப்படினும் - அவர்தம்
எண்ணக் கிணற்றில் இறங்கி
எடுத்தது தூர்!

58

அவ்வூரில் -
அனேகர் சித்தம்...

அவன்
அருட்பார்வை -
அழுக்கெடுத்ததால்
ஆனது சுத்தம்!

அவனை
அதற்காகத்தானே...

ஒரு
தாய்வழியாகத்
தரை இறக்கினான் -
திருமால் எனும்
கருமால்!

இளைய ஏறனைய -
இராமானுஜனின்...

சாமுத்திரிகா லட்சணங்கள்
சொல்லி மாளாது;
அவன்மேல் - போய்
அமர்ந்தநம் கண்கள் -
அவையாய் மீண்டாலன்றி - நாம்
அழைத்து மீளாது!

அஞ்சு புலன்களையும்
அந்த அந்த இடத்தில்
ஆடாது
அசங்காது இருக்க...

ஆணி அடித்து வைத்த
மாணி; அவன்முன்
நிற்பான் விசுவாமித்திரனும்
நாணி!

பிடரியில் - கைப்
பிடியளவு -
கோதி முடிந்த
குஞ்சி;

செவிமடல்களில் -
சிவப்புக்கல் கடுக்கன்;

புருவ மத்தியில் -
பளிச்சென்று புண்டரீகம்;

ஒரு
ஸ்தபதியே
ஸ்தம்பிக்கும் அளவு - மிகச்
செவ்வியதாய்ச்
செதுக்கிய நாசி;

வெண்கதிர்; செங்கதிர் -
வீற்றிருக்கும் விழிகள்;

மெல்லிய
முறுவலை -
அவ்வப்போது பிலிற்றும்
அதர பல்லவம்;

தவமும்
தண்ணளியும் -
அப்பிக் கிடக்கும்
ஆனனம்;

பணையொத்த - தோள்
பட்டைகளில்...

தழற்பொறி ஒற்றிய
தழும்பை வாங்கிய -
சங்கம்;
சக்கரம்;

மார்பை அளந்தபடி
மான்தோலும் மஞ்சளும் -
முடிந்து வைத்த
மூன்றுவட உபவீதம்;

மொழுமொழுவென்று
முழந்தாள்கள் வரை -
வழிந்து கிடக்கும்
வலக்கை; இடக்கை;

ஆடுசதைகள்
ஆட ஆட -
கடுகி நடக்கும்
கமலப்பூங் கால்கள்;

இடுப்பைச் சுற்றி
ஈரிரு முழத்தில் -

வெள்ளை வெளேரென -
ஒரு சோமன்;

பாலசூரியனை வழித்துப்
பூசினாற்போல் செக்கர்மேனி!

தாழங் குடைதாங்கி
தடக்கை வீசி வருகையில் - இள
வேழம் குடைதாங்கி
வருகிறதோ என்றிருக்கும்;

ராமானுஜன் எனும்
ராஜகுமாரனின் தரிசனத்தை...

விருந்து விருந்து - என
வியந்து வியந்து -
விழுந்து விழுந்து - ஊர்
விழியெலாம் தின்றிருக்கும்!

வைதிகன்;
லௌகிகன்;
ஆத்திகன்;
நாத்திகன்;

பண்டிதன்;
பாமரன்;
தனிகன்;
தரித்திரன்;

என
எல்லோருக்குமே -
பெருமளவு
பிடித்திருந்தது...

ஆசூரி குலத்துதித்த
அருணனை;

தகதகவெனப் பிரகாசித்த
தருணனை;

வருணம் பார்க்காது
வாஞ்சை மழையை வார்த்துநின்ற
வருணனை;

வருணனை மூலம்
வரகவியும் விளக்கவொணாக்

கருணனை!

இவ் ஈர்ப்புக்குக் காரணம் -
இராமனுஜனின்...

சௌரியம்;
சௌமியம்;
சௌலப்பியம்;
சௌஜன்னியம்!

பிள்ளைப்
பிராயத்திலேயே -

மனிதனை
மனிதனாகப் பார்க்கும்
மகோன்னதம் - அவன்
மனத்தில் இருந்தது; இந்த
மகோன்னதம் - வெறும்
மனோபாவம் அல்ல; பின்னாளில்
'எம்பெருமானார் தரிசனம்'
எனப் பேர்பெற்ற விருந்தது!

'வனப்பில் -
வாலறிவில் - ஒரு
வடு இல்லா -
வடு!'

என -
எல்லோரையும் -

இளங் கன்றான
இராமானுஜன் வசிகரித்தான்;
இராமானுஜனை -
இன்னொருவர் வசிகரித்தார்!

ஒருநாள் - அவரை
வெயில் தாழும் வேளையில் -
தெருவில் சந்தித்து
தெண்டனிட்டான்;

'இவர் ஓர் -
இறைமைத் தோன்றல்;
இதம் தரும் -
இவரோடு ஏன்றல்!'
என -

60

எண்ணி...

அவசர
அவசரமாக
அக்கணமே - தன்னை
அவருள் நட்டான்!

அவனது
அப்பாவிற்கு
அணுக்கமான ஆப்தரான
அவர்...

அஞ்சை அவிக்கும்
ஆறை அறிந்து - பிறவி
ஏழைத் தவிர்க்க
எட்டைத் துதிப்பவர்;
பகவானுக்கு மேலாக -
பாகவதர்களை மதிப்பவர்!

'மெய்ப்பொருள் யாதெனில்
மெய்ப்பொருள் ஒன்றே
மெய்ப்பொருள்; மற்றப்படி -
கைப் பொருள் என்பதும்
பைப் பொருள் என்பதும்
பொய்ப் பொருள்!'

என ஓர்ந்து -
எல்லாம் இருந்தும்
எதுவும் இராத ஏதிலனாய் -

விளாங்கனியும் ஓடும்போல்
விளங்கும் வித்தகர்;

கட்செவியோடு கிடந்தவன்
காஞ்சியில் கோயில் கொண்டபின் -

அன்றாடம்
அவனது...

உட்செவியோடு உரையாடிடும்
உரிமையுள உத்தமர்!

தான்
தாதுடைய தார்சூட்டி
வழிபடும்
வரதராஜப் பெருமாளுக்கு...

வேர்க்கும் வேர்க்கும் என்று -
வேர்க்க வேர்க்க விசிறி வீசி -
வேர்வையில் தனை நனைப்பவர்;

வேர்க்கெலாம் வேராயிருக்கும் -
வேர்க்கும் வேர்க்கும் என்று -
வேர்ப்பு மேவிட நினைப்பவர்!

அப்பா மூலமாகவும் -
அனேகர் மூலமாகவும் -

அவரை - 'ஓர்
அருள்மிகு அறிவன்!'
என இராமானுஜன்
ஏற்கெனவே அறிவன்!

சேவை சாதிக்கும் பெருமாளுக்கு
சேவை செய்யும்...

அந்த
அடியாரின்
அடியின்கீழ்
அடிப்பொடியா யிருந்து...

ஏவல் செய்ய இராமானுஜன் -
ஏங்கினான்; தனது
ஆசாரியனாகவே உள்ளத்தில் -
அவரை வாங்கினான்!

ஆன்றமைந்த - அவ்
அருளாளர்தான்...
திருக்கச்சி நம்பிகளெனும்
திருப்பணித் திலகம்; அவரை -
வழங்கியதால் - இன்றும்
வாய்வலிக்க நன்றிசொலும்
வைசிய குலத்திற்கு
வைணவ உலகம்!

முழுமுட்சுவான - அம்
முத்தர்...

முதல் வருணம்
முழந்தாளிட்டு வணங்கிய -
மூன்றாம் வருணம்!

— வளரும்



ரூ. 1000

ஜோக் 62

"என்ன செய்யறது? இப்படி ஏதாவது புதுமை செய்தாதான் கச்சேரி எடுபடுது!"

பாஸ்கி

"வாத்தியமே இல்லாம பாகவதர் பக்கத்துல ஒருத்தர் உட்கார்ந்துட்டிருக்காரே... யார் அவர்?"

"வித்வானோட பாட்டு வாத்தியார்... ரொம்ப ஸ்ட்ரிக்டாம்!"



62

## பெண் பார்க்கும் படலம்.

# 9

**பெ**தும்பைப் பருவம்
பெயர்ந்து – பிராயம்
பன்னிரண்டுக்குள்
பாதம் பதிக்கையில்...

அழகு! அழகு! அழகு!
அப்படியோர் அழகு!
ஆரால் கூற ஆகும் – அவளது
அழகுக்கோர் அலகு?

உச்சிப் பூ;
ஒன்னப் பூ;
ஒண்டொடி;
ஒட்டியாணம்;

அட்டியல்;
அக்குவடம்;
அங்குலி;
அருகாழி;

என –
ஏகத்திற்கு...

அபரஞ்சியாலும் –
ஆணிமுத்துக்களாலும் ஆன...

திருவாபரணங்களை
திருமுடி முதல்



திருவடி வரை
தரித்துக் கொண்டு...

வலக்கண்; இடக்கண்
வார்க்கும் தண்ணளியால் – நம்
அலக்கண் இடந்து
அருள்பாலிக்கும்...

ரங்கநாயகித் தாயாரோ;
செங்கமலத் தாயாரோ;
பத்மாவதித் தாயாரோ;
பெருந்தேவித் தாயாரோ;

மூலத்தானத்தில் –
மூச்சு முட்டுகிறதென்று...

கர்ப்பக்கிருகத்தை விட்டுக்
கால்நடையாய்க் கிளம்பி
காற்றாட
கடைவீதிப் பக்கம் வந்து...

ஜனங்களோடு
ஜனங்களாய்ப்

# ராமானுஜ காவியம்

கவிஞர் வாலி

புழங்குவதாக - ஒரு
பேச்சுக்கு வைத்துக் கொள்வோம்...

அவளிடமிருந்து புறப்படும்
அதீதமான - ஒரு
பிரகாசம் - நம் விழிகளைப்
பிடுங்கித் தின்னாதா?

உடனே -
உள்மனம் நம்மிடம் -
'கன்னத்தில் போட்டுக் கொண்டு -
காலில் விழுந்து சேவி!' என்னாதா?

அதுமாதிரிதான் -
அந்தப்...

பன்னிரண்டு வயதுப்

பெண்ணைப் பார்த்தால் - ஒரு
தெய்வீக அழகாய் - ஆர்க்கும்
தோன்றும்; பார்ப்பவர் -
உள்ளங்களில்
ஒருவித -
பயத்தையும் பக்தியையும்
பிரீதியையும் ஊன்றும்!

அம்பாளிடம் - தஞ்சம்
அடைந்திருந்த அழகெலாம் -
அப் பெண்ணிடத்தும் - தஞ்சம்
அடைந்திருந்ததாலோ என்னவோ...

தஞ்சமாம்பாள் - எனும்
திருநாமத்தை - அவள்
தாங்கி நின்றாள்; துழாய்போல் -



தூய்மையை வாங்கி நின்றாள்!

'பிராட்டி யனைய - இப்
பெண்ணரசை - முத்துடைப்
பந்தரின் கீழ் -

பாணிக்கிரகணம் செய்ய...

வருமாள் - எந்த ஊர்ப்
பெருமாள்?' என -

வயோதிகர் -
வட்டத்திலும்;





'மலரனைய - இம்
மங்கையை -
மன்றல் புரிவது - எவ்வூர்த்
தென்றல்?' என -

வாலிபர் -
வட்டத்திலும்;

பிரஸ்தாபங்கள் எழ -
பெண்ணைப் பெற்றோரைப் -
பிடித்துக் கொண்டது கவலை;

வெறும் வாயையே -
மெல்லும் ஊர் -
விடுமா கிடைத்த அவலை?

அவள் பிறந்தது
அந்தணர் குலம்;
ஆசாரம் அனுஷ்டானம்தான் -
அதன் பலம்!

விழுந்து விழுந்து
விழுப்பு மடி பார்த்து...

பட்டால் தீட்டு;
தொட்டால் தீட்டு;
என்று
எடுத்ததற் கெல்லாம்...

பஞ்சகவ்வியம் சாப்பிடும் -
பரம்பரை;

பிறந்தகத்து பந்தம் -
பெண் குழந்தைகளுக்கு...

அதிகப் பட்சம்
அகவை -
பத்துப்
பன்னிரண்டு வரை!

புக்ககம்
போய்த்தான் -
ஆக வேண்டும் ருது;
அவள்தான் வது!

ஒருவேளை
ஒன்பது வயதிலேயே
உடம்புவாகு காரணமாய்
உட்கார்ந்து விட்டால்...

வரன்
வாய்க்கிறது - அப்
பெண்ணின் தலைச்சுழி; அல்லது -
பெருமாள் விட்ட வழி!

புசுபுசுவென்று - தன்
பெண்ணின் வளர்த்தி கண்டு -
தாமதம் - இனியும்
தகாது என்று...

வலக் கண்ணுக்கு
ஒரு முட்டை;
இடக் கண்ணுக்கு
ஒரு முட்டை;

என -
இரண்டு கண்ணுக்கும்
விளக்கெண்ணெயை
ஊற்றிக் கொண்டு...

தஞ்சமாம்பாளின்
தகப்பனார் -
திக்கெலாம் தேடினார்; வரன் -
திகையாமல் வாடினார்!

நீரை வார்த்து - ஒரு
நம்பியின் கையில் - தனயையைத்
தாரை வார்த்துத்
தருவது என்பது...

தள்ளிப்போக என்ன காரணம்?
தவித்தார் அவ் வேத வாரணம்!

காலம் - அதைக்

66

கமுக்கமாக ரசித்தது;
'காரண மின்றிக்
காரிய மில்லை;
காரிய மின்றிக்
காரண மில்லை!'

எனும்
இந்தப்

பிரபஞ்ச ரகசியம் -
பழமறை பயின்ற - ஒரு
பிராமணனுக்கு ஏன்
பிடிபடாது போனதென்று...

அது
அவர் -
பாண்டித்தியத்தைப்
பரிகசித்தது!

தஞ்சமாம்பாள் -
தரணியில் சனித்தது...

ஒரு
சராசரி மனிதனுக்கு
சகதர்மிணி ஆகவா?
ஆகி - அவனது
ஆசாபாசங்களுக் கேற்ப...

சமைத்து -
சயனித்து -
சந்ததி ஈந்து -

வாழும் வரை -
வாழ்ந்து விட்டு -
வந்த சுவடே தெரியாமல் -

புருஷனுக்குப் -
பிந்தியோ முந்தியோ...

வியாதியோ வயோதிகமோ -
வாவெனக் கூவுகையில் -

வானமேறிப் போகவா?
தஞ்சமாம்பாள் -
தரணிக்கு வந்தது...

ஒரு
வரலாற்றுக்கு
வாழ்க்கைப் பட;

அல்லது...
அவள் ஆருக்கு
வாழ்க்கைப் பட்டாளோ - அவனை
வரலாறாக ஆக்கி விட!

ஆம்!
அவளுக்கு...

வாய்த்த கணவன் - ஒரு
வரலாறு தான்;

பிரபத்தியையே
பிரதானமாக் கொண்டு -

இன்றளவும்
எந்த -

விசிஷ்டாத்வைதம்
வழி நடக்கிறதோ...

அது
அந்த -
வரலாறு
வகுத்த ஆறுதான்!

கங்கை ஆறு;
காவிரி ஆறு;
என்பது போல்
என்றும்...

வறளா ஆறு - அந்த
வரலாறு!

அந்த

ஆற்றில்...
பிரவாகமாக ஓடுவது
பெருங் கருணை; அது -

அதுகாறும்
அழுத்தப்பட்டோர்
அனுபவித்தறியா
அருங்கருணை!

அதில் -
ஆரும் குளிக்கலாம்;
அதை -
ஆரும் குடிக்கலாம்!

இன்னார்க்கு
இன்னது என்று -
பிரத்தியேகப்
படித்துறை இல்லை;

இன்னார்
இறங்கிக் குளித்தால்...

தீர்த்தம்
தீட்டுப் படும்;

இன்னார்
எடுத்துக் குடித்தால்...

புனலின்
புனிதம் கெடும்;

என்று
எவரும் எவர்மீதும்
வாய்வழி வீசமுடியாது
வார்த்தைக் கல்லை!

'அருள் வெள்ளம் பாய்கின்ற
அவ்வாறு - பொதுவாகட்டும்
இறையன்பர் யாவர்க்கும்
இவ்வாறு!'

என்று
எடுத்து எறிந்தானே...

வெகுநாளாய் எழும்பி நின்ற
வகுப்பு வேலி; அவ்
வள்ளல்பிரான்
வழங்கியதலவோ -
வஞ்சிக்கொடி தஞ்சமாம்பாள்
வண்ணப்பிடர் வாங்கிய தாலி!

அங்ஙனம் இருக்க -
எங்ஙனம்...

தஞ்சமாம்பாளைத்
தவிர்த்துவிட்டு -
இயற்ற இயலும்
இராமானுஜன் வரலாறு?

அறிந்தோ -
அறியாமலோ...

அவள் குரலும்
அவளது ஆளன் குரலும் - ஒரே
அலைவரிசையில்
அமராது போனதால்தானே...

ஆவி ஏந்திய
ஆசைகளை எற்றிவிட்டுக் -
காவி ஏந்திக்
கர்ச்சித்தது வைணவ ஏறு!

பதினாறு வயதுப்
பிள்ளையாண்டானோடு -
பெண் பார்ப்பதற்காகப்
புறப்பட்டு வந்த -

கேசவ சோமயாஜியும்
காந்திமதியும்...

வண்ண
வேலைப்பாடுகளோடு -

கூடத்தில் விரித்திருந்த
கோரைப் பாயில் வீற்றிருக்க;
'எப்படியிருப்பாளோ?
ஏதா யிருப்பாளோ?'
எனும் சம்சயத்தை
எண்ணத்தில் ஏற்றிருக்க;

நீள் விசும்பு
நீங்கி -
நாடகத்தரம்பையர்
நால்வரும் -

நிலம் வந்து -
நேர் நின்றாலும்...

அவர்தம்

அழகை -

நவ்வியனைய - நீள்விழிச்
செவ்வியினால் - நொடியில்
நிக்கிரகம் செயும் - ஐம்பொன்
விக்கிரகம் போலே...

வந்து -
வருங்கால மாமன் மாமியை...

நடுநெற்றி
நிலந் தோய
நான்கு முறை
நமஸ்கரித்தாள் -

தஞ்சமாம்பாள் - எனும்
தரை வந்த அம்பாள்!

கேசவ சோமயாஜிக்கும்
காந்திமதிக்கும்...

பெண்ணைப்
பார்த்தவுடனேயே - ஏதோ
பூர்வஜன்ம பந்தம் போல்
பிடித்துவிட்டது;

பேச்சுக்குப் பேச்சு -
பிலுபிலுவென்று...

மாமியார்
மாமனாரோடு
மல்லுக்கு நிற்காமல் - மட்டு
மரியாதையோடு நடக்கும் -

மாட்டுப்பெண் மாதிரி
மனத்திற்குப் பட்டது!

தண்ணீரில் அமராது
தரையில் அமர்ந்த
தாமரைப் பூவாம்
தஞ்சமாம்பாளிடம் தென்பட்ட...

லட்சணம்;
லலிதம்;
லஜ்ஜை;
லட்சுமி கடாட்சம்;

சுசி;
சுகுணம்;
சுபாவம்;

சுமுகம்; 68

இன்னபிற -
இயல்பெலாம்...

காந்திமதி கண்டு
களிப்பில் கண்கள் பனிக்க -

ஒரு
பாசுரம் பாடென்று - அவள்
பெண்ணைப் பணிக்க -

நற்றமிழை
நறவத்தில் முக்கி - முனம்
நாச்சியாரருளிய திருமொழியை
நாட்டைப் பண்ணில்...

'பெய்யு மாமுகில்
போல் வண்ணா!
மையல் ஏற்றி
மயக்க உன் முகம் -
மாயமந்திரம் தான்கொலோ?'

என -
எல்லோர் செவிகளுக்கும்...
தஞ்சமாம்பாள்
தேன்மூலாம் பூசினாள்;

எதிரில் -
எழுந்தருளியிருந்த...

இளங்கோ
இராமானுஜனிடம் -
இசைத்தமிழ் மூலம்
இரகசியம் பேசினாள்!

இரு வீட்டாரும் - மன்றல்
இயற்ற முடிவானபின்...

திதி பார்த்து - நடத்
தீர்மானித்தனர் -
திருமணப் பந்தக்கால்; அத்
தீர்மானத்தை - உடனே
திசையெங்கும் தெரிவித்தது -
திரிகின்ற பருவக்கால்!

**- வளரும்**


எங்க வீட்டுக்காரர் ஹெல்த் ஆபீஸரா இருக்கார்....


அதுக்காக பிளீச்சிங் பவுடர்லயா கோலம் போடறது?


என்னது... நான் போட்டிருக்கிற கோலத்தை வெச்சே எனக்கு ஜோஸியம் சொல்லுவீங்களா?
ஆமாம்.. கோலவாஸ்து இது!

## பூக்கோலப் போட்டி


‘பூக்கோலம்’-ங்கிறதை ‘பூகோளம்’-னு தப்பா புரிஞ்சுக்கிட்டாங்க போலிருக்கு..
100
101
102



கவிஞர் வாலி

10

## திருக்கல்யாணம்.

பூமி போல்
பொறை மிக்கவள் -
பூமி!

கமலம் போல்
கவின் மிக்கவள் -
கமலா!

இருவரும்
இராமானுஜனுக்குப் -
பின் பிறந்த
பெண் பிள்ளைகள்!

பூமியும் கமலாவும்
பூரித்துப் போயினர்;

தமையனுக்குத்
திருக்கல்யாணம் என்பதால்...

உற்சாகச் சாட்டை
உதறிவிட்ட சொடுக்கில்
அம்பரம் அணிகளோடு - ஆடும்
பம்பரம் ஆயினர்!

பூமி;
கமலா;
என
இருமகள் இருக்க - இன்னும்
ஒருமகள் வருகிறாள் - வீட்டு
மருமகள் ஆக; விளங்கும்
திருமகள் ஆக...

எனும் நியாயமான
ஏமாப்பில் -

காந்திமதியின் கண்ணெல்லாம்
கம்பி மத்தாப்பு;

அவ்
அன்னையின்...

உள்ளத்தின் -
உள்ளிருக்கும் உவகை - உள்ளே
'விர்'ரென - ஒரு
விஷ்ணுச் சக்கரம் விடுவதை -

கண்ணாடி போல்
காட்டியது -
முகத்தில் முளைத்த
முறுவலிப்பு!

கேசவ சோமயாஜியைப் பற்றிக் -

# ராமானுஜ காவியம்

கேட்பானேன்?

அவருக்கும்
ஆனந்தம் பிடிபடவில்லை;

கல்யாணக்
காரியங்களில்
காலும் ஓடாமல்
கையும் ஓடாமல்

அரக்கப் பரக்க
அவர்...
பறந்துகொண்டேயிருந்ததால் -
பூமியில்...

அவரது
அடி படவில்லை!

நல்ல இடத்து சம்பந்தம்
நேர்ந்துவிட்ட தென்று...

உள்ளூரில்

உட்கார்ந்திருக்கும்
அருள்மிகு
ஆதிகேசவப் பெருமாளுக்கு...

அறுபது படி
ஆடையன்னமும்;
ஆறு பவுனில்
அபய ஹஸ்தமும்;
சமர்ப்பித்ததோடு
சந்தனக்காப்பும் சாத்தினார்!

பிறகு
பிரதட்சிணம் வந்து...
நெடுஞ்சாண் கிடையாய் - நெஞ்சு
நிலந்தோய விழுந்து...

திருமழிசையாழ்வார்
திருவாய் மலர்ந்தருளிய
திருச்சந்த விருத்தம் பாடி
திருவடியை ஏத்தினார்!



விவாக -
வைபவத்தை முன்னிட்டு...
சோமயாஜியின்
ஜாகை முழுக்க -
வாளி வாளியாய்
வெளிச்சத்தைக் கொட்டி
மெழுகிவிட்டாற்போல் - ஒரு
மினுமினுப்பு!

சுவர்களுக்கெல்லாம் - புதிய
சுண்ணாம்புச் சட்டைகள்!

இங்கங் கெனாதபடி - எங்கும்
இழை கோலங்கள்...



அன்னப்பட்சி மாதிரி;
ஆடித்தேர் மாதிரி;
இன்னும்
என்னென்னவோ மாதிரி!

குறட்டிலிருந்து
கொல்லை வரை...

குதுகலம்
குபுகுபுவென்று
கொப்புளித்துக் கிடந்தது;
சொந்த வீடுபோல் - தென்றல்
சுவாதீனமாக நடந்தது!

ஒரு
சூலம் இல்லாத நாளில் -
சூறை உடைத்து...

விஷ்ணு வாகனம்
விசும்பில் வட்டமிடுகையில்...

பெண்வீட்டார் அனுப்பிவைத்த
பெரிய வில்வண்டிகளில்...

கல்யாண கோஷ்டி
கிளம்பியது;

நல்ல
நிமித்தம் என்று...

கூண்டு வண்டியின்
கூரைமேல்
குந்தியிருந்த
கௌளியும் விளம்பியது!

இராமானுஜன்;
இரண்டு இளையள்கள்;

கேசவர்;
காந்திமதி;

கமலநயன பட்டர்;
த்யுதிமதி;

வேட்டகத்து
உறவுகள்;

புக்ககத்து
பந்துக்கள்;

அத்தைமார்கள்;
அத்திம்பேர்கள்;
அத்தங்கார்கள்;
அம்மான் சேய்கள்;

ஓர்ப்படிகள்;
ஒன்றுவிட்டதுகள்;
கொண்டான்கள்;
கொடுத்தான்கள்;

இத்துணை
இஷ்ட பந்துமித்திர ரோடு...

மாதுலரும்
மகானுமான
திருமலை -
திருமலை நம்பி;

சிரேஷ்டரும்
சபரியின் அம்சமுமான
திருக்கச்சி -
திருக்கச்சி நம்பி;

பெரும்பூதூர்
பெருமாள் கோயிலைச் சேர்ந்த...

பட்டர்கள்;
பரிசாரகர்கள்;
அரையர்கள்;
அத்தியாபகர்கள்;

என -
ஏகப்பட்ட பேரோடு...

ஊரே வண்டிகளில்
ஊர்ந்தது;

ஒரு பகல் -
ஒரு ராத்திரி -
ஊர்ந்து
ஊர்ந்து
சம்பந்தி ஊர் போய்ச்

74

சேர்ந்தது!

தஞ்சமாம்பாள்
தகப்பனாருக்கு...

பிதிரார்ஜிதம்
பெரிசு; அவரது
பூர்வஜன்ம
பூஜா பலனாக - அது
பகவான் தந்த
பரிசு!

நிறைய
நிலம் நீச்சு; அதை
நினைத்துப் பார்த்து ஊரே விடும்
நீண்ட மூச்சு!

மா;
புளி;
என்று -
எல்லாமே...

மூப்பு எய்தாத
தோப்பு; அதில் -
ஏய்ப்பு இல்லாத
காய்ப்பு!

நாஞ்சிலுக்கும்
நடவுக்கும்...

வருஷம் பூராவும்
வேலை கொடுக்கும் வயல்; அதன்
பச்சைக்குப்
பழுது வராதபடி
பருவம் தவறாது
பெய்துகொண்டிருக்கும் புயல்!

தாழி தாழியாய்த்
தானியம்;
குதிர் குதிராய்க்
குறுவை!

என்னதான்
எப்படித்தான்
அழி அழியென்று
அழித்தாலும்...

ஒன்பது தலைமுறைக்கு
உட்கார்ந்து சாப்பிடும்படி
ஐஸ்வரியம்;
ஐவேஜு!

லட்சுமி கடாட்சம்
லபித்திருப்பதால்...

தஞ்சமாம்பாள்
தகப்பனார்
மகள் திருமணத்தை
மகோற்சவமாக நடத்தினார்;

அஞ்சாறு நாள்களுக்கு
அவரவர் வீடுகளில்
அடுப்பு மூட்டக் கூடாதென்று
ஆணையிட்டு...

ஊர்மக்களை
ஒட்டுமொத்தமாக
தாம்பூலத் தட்டைக் காட்டித்
தன்மனைக்குக் கடத்தினார்!

வீதியை
வளைத்துப் போட்டு...

விதவித வண்ணப் பூச்சுடைய
விதானத்தோடு
வலக்கோடிக்கு இடக்கோடி
விஸ்தாரமாய் ஒரு பந்தல்;

பந்தலின்
பிரமாண்டமான முகப்பில்...

ஜரிகை சுற்றி
ஜோடிக்கப் பெற்ற
அழகிய
அசைந்தாடிகள்;

தார்கள்
தொங்கத் தொங்க
வளர்த்தியான
வாழைமரங்கள்;

மாவிலைகளாலும்
மலர்களாலும்
தொடுத்துக் கட்டிய
தோரணங்கள்;

நடுநாயகமாக
நாலடி உயரத்திற்கு
நெட்டிகளால்
நேர்த்தியாக நெய்யப்பெற்ற...

வட்டத் திகிரி;
வலம்புரி;
வலம் இடம் கொண்ட
வைணவச் சின்னம்!

மணப்பந்தல்
மய்யத்தில்...
மணவினை முடிப்பதற்கான
மணமேடை; அந்த
மணமேடை அணிந்திருந்தது
மலராடை!

பார்த்துப் பார்த்து -
பார்த்துப் பார்த்து...

அந்த மேடையை
அழகு படுத்தியிருந்ததால்;
அழகு மலர்களையே ஆடையாய்
அஃது உடுத்தியிருந்ததால்...

அடடா!
அங்கு -

கிளி கொஞ்சியது; தீபங்களின்
ஒளி கொஞ்சியது; தீபச்சுடரை -

விளக்குக் கொடியில்
விளைந்து விரிந்த
வெளிச்சப் பூவாயெண்ணி
வளி கொஞ்சியது; வளிநெஞ்சில்
களி கொஞ்சியது;

ஆரம் -
ஆரமாய்...

தூண்களை ஒட்டித் தொங்கிய
துய்ய மலர்களில் - தேன்
துளி கொஞ்சியது; துளியின்மேல்
அளி கொஞ்சியது!

ஜானவாசத்தின்போதே
ஜாஸ்தியாகிவிட்ட
ஜனசமுத்திரம்
ஜேஜே என்று இமிழ...

அந்த
ஆனந்த இமிழ்தலில் - ஓர்
அவசநிலை எய்தி
அவ்வூரே அமிழ...

வெந்தழல் வளர்த்து
வேதியர் வேள்வி வேட்க;

பல்லியம் எழுப்புமோசை
பத்துத் திக்கும் கேட்க;

சுற்றி நின்ற
சொந்தபந்தம்
ஒண்ட இடமில்லாமல்
ஒருவரையொருவர் நூக்க;

மணமக்களின்
மாதா பிதாக்களின்
மனப் பூங்காவில்
மகிழ்ச்சி மலர்கள் பூக்க;

வேயர் புகழ்
வில்லிபுத்தூர்க்கோன் தனயை...

ஆயர் புகழ்
அண்ணல் மாட்டு
அவாவுற்று
அற்றை நாளில்...

அக்காரத் தமிழில்
அருளிச் செய்த
ஆறாம் திருமொழியோடு
ஆரம்ப மானது...

திருப்பூட்டு அணிவிக்கும்

திருக்கல்யாண மகோற்சவம்;
கண்படைத்தோர்க் கெல்லாம்
காணக் கிடைத்த மகோன்னதம்!

மாக்கோலம் இட்ட
மணைகளில்...

வடுவும் வதுவும்
வீற்றிருந்தனர்;
ஏரார்ந்த தாமங்கள்
ஏற்றிருந்தனர்!

அஞ்சனம் அப்பிய இருகண்;
அவற்றின் நடுவில் திருமண்;

அரையினில்
அரக்குக் கரை போட்ட
பட்டால் ஆன
பஞ்சக்கச்சம்;

பிடரியில்
பிரகாசமாய்
புது நெய்
பூசிய பிச்சம்;

புதுக் கடுக்கன்;
புதுக் கணையாழி;
புது உத்தரீயம்;
புது உபவீதம்;

என -
எழுந்தருளியிருந்தான்
இராமானுஜப் பெருந்தகை; யான்
இயம்ப வொணா அருந்தகை!

சிரசு முதல்
சேவடி பரியந்தம்
சொர்ணாபரணங்கள்
சொலிப்பை வார்க்க;

ஆடை திருத்துதல் போல்
அருகிருக்கும் தீர்த்தனை
ஓடை மலர்க்கண்
ஓரப் பார்வை பார்க்க;

கூடைப் பூவும்
கூறைப் புடைவையுமாய்

குந்திக் கிடந்த திருமேனி
குப்பென்று வேர்க்க;

நதியலை நெருடிய
நாணல் போல் நாணல் கொண்டு
அமர்ந்திருந்தாள்
அழகொழுகும் -

தஞ்சமாம்பாள் எனும்
தளிர்; நுதலில்
குங்குமம் ஏந்தியிருந்த
குளிர்!

சோழி யுருட்டியும்
சுவடி புரட்டியும்
சோதிடர் குறித்த
சுபமுகூர்த்தத்தில்...

வானவரும் ஏனவரும்
வாழ்த்திசை பாட;
ஆன்றோரும் சான்றோரும்
அட்சதைகள் போட;

கெட்டிமேளம்
கொட்ட; பழமறை
கோஷங்கள்
ககனத்தை முட்ட;

தந்தை மடியிருந்த
தஞ்சமாம்பாளின்
திருக் கழுத்தில்
திருமாங்கல்யம் பூட்டினான்...

காந்திமதியம்மையின்
கன்று;

இராமானுஜன் என
இசைக்கப் பெறும்
குற்றங் குறையில்லாக்
குணக் குன்று!

மூன்றுவடப் பூணூல்
ஆறுவடப் பூணூல் ஆனது;
மாணியெனும் சொல் - அவனளவில்
மதிப்பற்றுப் போனது!

**- வளரும்**

எல்லோர்க்கும் நல்லானாய்... ■ கவிஞர் வாலி

78

வெறும் –
வேதாந்தி மட்டுமல்ல;
கேசவ சோமயாஜி – நல்ல
கிருகத்தரும் கூட!

அகமுடையாளுக்கு
அவ்வப்போது –
கைக்காரியத்தில் உதவுவார்
கூடமாட!

தாரம் – ஓராடையில்
தனித்திருக்கும் நாள்களில்...

தானே
தளிகை பண்ணுவார்;

திருமடைப் பள்ளியில்
திருவடி வைத்ததும்...

தமயந்தி புருஷனாகவும்
திரௌபதி புருஷனாகவும்
தன்னை எண்ணுவார்!

சப்புக் கொட்டிச்
சாப்பிடும்படி யிருக்கும்...

கறியமுது;
சாற்றமுது; திருக்
கன்னலமுது!

'அடடா!
அவர் –
வத்தக் குழம்பு
வைத்தால் – அந்த



ஒத்தக் குழம்பு முன்
உக்கி போடணும் –
மத்தக் குழம்பு!'

என்று
எதிரகத்துப் பெண்டிரிடம்...

# ராமானுஜ காவியம் 11

பெருங்காய வாசனை
போய்ச் சொல்லும்;
வெட்கம் - அந்த
வஞ்சியரைக் கொல்லும்!

பெருமாள் கிருபையில் -
திருமேனி
பாங்காயிருக்கின்ற வரையில்...

யாதொன்றிற்கும்
யாதொரு தயவையும்
யாரிடமும் யாசிக்காமல்
யதா சக்தி -

தன் வேலைகளைத்
தானே செய்ய வேண்டும் என்பது...

சோமயாஜியின்
சங்கற்பம்;
அமைவதுண்டு
அவரது
சங்கற்பத்திற்கேற்ப - சில
சந்தர்ப்பம்!

வாடிக்கையாக
வரும் கோனார் - வரமுடியாதபடி
சற்று
சுகவீனம் ஆனார்...

என்றிருந்தால் - அவரே
எடுப்பார் செம்பை;

மாட்டின்
மடியலம்பி -



நெய் தடவி
நீவி நீவி -

காம்பில் கைவைத்துக்
கறப்பார்; கறந்தபின்
கழற்றிவிடுவார்
கன்றுக்குட்டியின் தும்பை!

அஃதேபோல்
அழுக்குகள் சேர்ந்துபோய்...

ஈரங்கொல்லி துணியெடுக்க
ஈரிரு வாரம் வராவிடில் - ஒரு
நேரங்கொல்லி போல் - அவர்
நின்றிருக்க மாட்டார்;

நிஜமாகவே
நடந்தது...

தானே - மூட்டைத்
துணியையும் துவைத்துக்
கொல்லைப் புறத்துக்
கொடிகளில் காயப் போட்டார்!

எல்லா வேலைகளையும் - தானே
இழுத்துப் போட்டுக்கொண்டு
மாய்ந்து மாய்ந்து செய்வார்;
மசமசவென நிற்போரை வைவார்!

சோம்பலுக்கும் -
சோமயாஜிக்கும் சன்மப் பகை;
பரபரப்பில் -
பிள்ளையார் எறும்பு வகை!





யார் -
யக்ஞோபவீதம் கேட்டாலும்...

தானே -
தக்களியில் நூல் நூற்றுத்
திரித்துத் -
தயார் செய்து தருவார்;

ஏவியும் கூவியும்
எப்போதும் பணிகொள்ள -
வேண
வித்யார்த்திகள் இருந்தும்...

சம்ஸ்காரங்களுக்கான
சமித்து; தர்ப்பை...

தானே -
தீர்த்தக்கரைக்குப் போய்
சிரமப்பட்டு
சேமித்து வருவார்!

பெரும்பூதூர்வாழ் - சகல
பிரஜைகளும் பேசுவர்...

'கேசவசூரி - ஒரு
காருண்யம் மிக்க பரோபகாரி!'
என்று;
ஏனெனில் - அவர்
வைதிகம் லௌகிகம்
ஒன்றாய்ச் சேர்ந்த ஒன்று!

அவர் வகுத்துக்கொண்ட
அர்த்தப்படி...
வாழ்வு எனும்
வார்த்தைக்குப் பொருள் -

வாழும்போதும்
வாழ்வது;
வாழ்ந்து முடிந்த பின்பும்
வாழ்வது!

கருமவிபாகத்தால்
கருப்பாசயம் எனும்...

க்ஷேத்திரத்தை எய்திய - ஒரு
க்ஷேத்திரஞ்ஞன் - தனது
க்ஷேமம் கருதி - ஒரு
க்ஷணம்கூட வீணாக்காது...

முயன்று
முன்நின்று
பெறவேண்டிய
புருஷார்த்தம் ஆன -

அறம் பொருள்
இன்பம் வீடு - எனும்
உறுதிப்பொருள்கள் பற்றிய
உயரிய ஞானம்...

சர்வஞ்ஞரும்
சர்வக்ருதுவும்
சதுர்வேதியுமான
சோமயாஜிக்கு -

இல்லாமல் இருக்குமா என்ன?
இருந்தது; இருந்தும்...

பிரபஞ்சமே - ஒரு
பிரமை என்றும்;
பிரபஞ்ச வாழ்வு
பிரமைக்குள் பிரமை என்றும்;

தாயை;
சேயை; வெறும் -
மாயை;
சாயை;

என்றெல்லாம்
எகனைமொகனையோடு -
எள்ளி
எற்றாமல்...

அவர்
ஆத்மார்த்தமாய் -

மனைவியை நேசித்தார்;
மகன் மகளை நேசித்தார்;
மொத்த -

82



மன்பதையை;
புல்லை; பூண்டை;
புள்ளை; பெற்றத்தை நேசித்தார்!

ஆருயிர்க்கெல்லாம்
அன்பு செய்வதுதான்...

பழமறையின்
பிழிவு -
எனும்
எளிய வலிய தத்துவத்தை -

ராமாயணத்தில் வாசித்தார்
ராமச்சந்திரனை யோசித்தார்!

கழுகுக்குக்
கொள்ளி போட்டான்; அணில் -
குஞ்சுக்குக்
கோடு போட்டான்;

குகனை;
குரக்கரசனை;
குலத்தால் அவுணனை;

சகோதரர் என்றான்
சக்கரவர்த்தித் திருமகன்!

மனிதம் -
விலங்கு -
அசுரம் -
ஆகிய மூன்றையும்...

தன்னின் - இன்னொரு
தானாகப் பார்த்த ஒருமகன்!

காகுத்தனைக் கற்ற பின்பு -
கேசவ சோமயாஜிக்கு...

தேள்கூடக்
கேள்தான்; தருவின் -
கிளைகூடக்
கிளைதான்!

குவலயத்துள்
குடும்பம் கண்டார்;

குடும்பத்துள்
குவலயம் கண்டார்!

ராமானுஜனுக்குப் பிறகு - இரு
ராஜ ஹம்சங்கள் மாதிரி -

பிறந்த பெண்பிள்ளைகள்
பூமி மீதும் கமலா மீதும் -
கேசவருக்குக்
கொள்ளைப் பிரியம்;

'அசாத்திய விஷமம்!' என்று
அந்தச் சிறுமியரை...

காந்திமதி
கண்டித்தால்கூட -
அவர் மனம்
அவர்களுக்காகப் பரியும்!

பாவாடை சட்டை
போட்டுத் திரியும் - அந்த
செங்கமல முகைகளுக்கு
செவ்வாய்; வெள்ளியில்...

அப்பியங்கனம் -
அவர்தான் செய்து வைப்பார்;

அதன்பின்
அகிற்புகை காட்டி -
அளகத்தை
அறவே உலர்த்தி...

தலைவாரிப் பின்னி - அதில்
தோட்டப்பூ கொய்து வைப்பார்!

'பொம்மனாட்டிகள் காரியத்தை -
புருஷாள் செய்வாளோ?' என்று...

புடைவைத் தலைப்பால் - வாயைப்
பொத்திக்கொண்டு...

காந்திமதி
கமுக்கமாகச் சிரிப்பாள் -
ஒருக்களித்த கதவின்
ஓரத்தில் நின்று!

தன்னைப் பார்த்துத்
தனது -
நாயகி பிலிற்றும்
நமுட்டுச் சிரிப்பை -
கேசவர் -
கண்டும் காணாதிருப்பார்;

பின்னாளில்
புக்ககச் சிறைக்குள் -
போய் அடையவேண்டிய
பெண் கிள்ளைகளை...

இந்நாளில்
இங்கிருக்கையில் -
இறக்கை யடித்து
இயல்பாகப் பறக்கவிட்டுக் -

கொஞ்சும் விஷயத்தில் - அவர்
கிஞ்சித்தும் நாணாதிருப்பார்!

'பெண்ணின் வருத்தம் அறியாத
பெருமான்!' என்று -
கண்ணனையே
குற்றம் சாட்டினாள் கோதை;

அன்று முதல் இன்றுவரை -
ஆர் அறிந்தார் பெண்ணின் வாதை?'

என்று -
எண்ணம் நைவார் கேசவ சூரி;

ஊரார் பெண்ணையும் - தன்
உதிரத் துதித்த பெண்ணாய்
உகக்கும் உளமுடைய
உன்னத வாத்சல்ய வாரி!

அக்கிரகாரத்தில்
ஆருடைய -
கண்ணீருக்கும் - அவரது
கைதான் கைக்குட்டை;

ஆறுதலும்
தேறுதலும் சொல்லி
ஆற்றுப் படுத்தி...
அல்லற்படும் நெஞ்சுக்கு
அணிவிப்பார் ஞானச் சட்டை!

ஒரு சமயம்
ஒரு சந்தியா காலத்தில்...

பிள்ளையாண்டிருந்த
பக்கத்து வீட்டு -
பிராமணரின் பெண்
பிரசவித்தாள்;

பிரசவித்த
பத்தாவது நிமிஷம் -
பரலோகத்தில்
பிரவேசித்தாள்!

பெண்ணின் தகப்பனார்
புரண்டு புரண்டு அழ...

அதிலும் - துக்கம்
ஆறாமல் - அவர்
கொல்லைப்புறம் ஓடினார்
கிணற்றில் விழ!

கேசவ சோமயாஜி
கூடவே ஓடி -
அவரை - ஓர்
அறை அறைந்து நிறுத்தி -

'படிமிசை
பிறப்பெய்தும் எவ்வுயிரும் -
பிறகு சவம் ஆகத்தான்
பிரசவம் ஆகிறது;

பிரசவம் எனும்
பதத்திற்குள்ளேயே -
சவம் எனும்
சொல்லும் இருப்பதை...

மனுஷ புத்தி -
மறந்து போகிறது!

ஓய்!
ஒன்று சொல்வேன், கேளும்!

பிறப்பிக்கும் தாயும் -
இறப்பிக்கும் நோயும் -

எவர் எது
என்பதெல்லாம் -
எம்பெருமான்
ஏற்கெனவே எழுதிவைத்தபடி;

ஆரமுத கண்ணீரும் - அதை
அழிக்க ஆகாது;
ஆகும் என்று - ஓர்
அற்ப ஆசை உமக்கிருந்தால் -
ஆட்சேபணை யில்லை;
அழுது பாரும் ஏழெட்டுப் படி!'

என்று
எடுத்துச் சொல்லி...

தற்கொலையிலிருந்து - அவரைத்
தடுத்து நிறுத்தினார்;

அவரை விட்டு
அகன்றிருந்த அறிவை -
அவருள்ளிருந்தே
அகழ்ந்து எடுத்து...

எங்கு முன்பிருந்ததோ -
அங்கு நிறுத்தினார்!

ஆசூரி கேசவ சோமயாஜி - எனும்
அற்புதமான மனிதர்...

எல்லோர்க்கும் நல்லானாய்;
எக்கியங்களில் வல்லானாய்;
இருக்கு முதலிய
இறைமறைகள் கற்றும் -
செருக்கு முதலிய
செயிர்ப்புகளைக் கல்லானாய்;

எளிவந்த தன்மையோடு - பிறர்
ஏத்த நின்ற புனிதர்...

வீட்டிலும்
வெளியிலும் -
வெவ்வேறு சமயங்களில்
வெவ்வேறு மாதிரி -

பன்முகப்
பண்புகளோடு -
பலரிடமும்
பழகிக் கிடந்த...

அந்தநாள் நிகழ்வுகளை -
இந்தநாள் நினைவுகூர்ந்து...

'அய்யோ! அய்யோ!' என்று
அரற்றியவாறு -
தலையிலடித்துக்கொண்டு
துக்கித்தது ஊர்;

திடீரென்று - அவர்
திருநாடு அலங்கரித்ததில் -
விறைத்துப்போய்
விக்கித்தது வீடு!

தலைமாட்டில் - ஒற்றைத்
திருவிளக்கு எரிய...

கால்
கட்டை விரல்களை - ஒரு
சிறு துணி
சேர்த்துக் கட்டியிருக்க...

வாசல் ரேழியில் -
வெற்றுத் தரையில்...

தெருவை நோக்கித் -
திருவடிகள் நீட்டி...

கண்மூடிப் படுத்திருந்தது -
கேசவ சோமயாஜியின் திருமேனி;

'உறங்குவது போலும்
சாக்காடு!' எனும்
வள்ளுவத்தை...

ஊர்க்கும் உறவுக்கும் -
உணர்த்திய அந்த ஒருமேனி!

- வளரும்

# ஆறு மாதம்

■ ஜெனமேஜெயன்

"**எ**ன்னங்க... இன்னியோட உங்க அப்பா நம்ம வீட்டுக்கு வந்து ஆறு மாசம் ஆகப்போகுது.." என்று நிர்மலா ஆரம்பித்த போதே அவள் என்ன சொல்ல வருகிறாள் என்று ரகுராமனுக்குப் புரிந்தது. பேப்பரை மூடிவைத்து விட்டு அவளையே பார்த்தான்.

"அடுத்த ஆறு மாதம் அவர் ஊட்டியில் உங்க தம்பி வீட்ல போய் தங்கணும்..." என்றாள் நிர்மலா.

"அப்பாவுக்கு எங்கே இருக்க இஷ்டமோ, அங்கே இருக்கட்டுமே நிம்மி.."

"அதெப்படிங்க? பிள்ளைங்க ரெண்டு பேருக்கும்தானே பொறுப்பு இருக்கணும்?"

"இத பார் நிம்மி.. பெத்து, வளர்த்து, படிக்கவைத்து ஆளாக்கிய அப்பாவை.."

- ரகுராமன் முடிக்கும் முன் நிர்மலா குறுக்கிட்டாள். "உங்க தம்பியையும்தானே வளர்த்துப் படிக்க வைத்தார்? உங்களை இன்ஜினீயராக்கினார். உங்க தம்பியை டாக்டராக்கினார்.."

"சரி... ஆனா, அப்பாவுக்கு ஒரு மனசு இருக்கு. அவருக்குன்னு ஒரு விருப்பம் இருக்கு. அதை நாம் மதிக்கணும்."

"அதை நான் மறுக்கலே... ஆனா, ஆறு மாதம் நம் வீட்டில் இருந்தால் ஆறு மாதம் தம்பி வீட்டில் இருக்கட்டும்னு நான் சொல்றதுல என்ன தப்பு?"

ரகுராமனின் மனசு வலித்தது. மௌனமாக இருந்தான்.

அறை வாசலில் நிழலாடியது. அப்பா தான். குழந்தை மகேஷைத் தூக்கியபடி நின்றிருந்தார்.

"ரகு, மறந்தே போனேன் பார். நாளை மறுநாள் சித்ராவுக்குப் பிறந்த நாள். நான் நாளைக்கே ஊட்டிக்குப் போகலாம்னு இருக்கேன். கோவை எக்ஸ்பிரஸில் ரிசர்வ் பண்ணிடறியா?"

ரகுராமனுக்குப் புரிந்தது. நிர்மலா தன்னிடம் பேசியதெல்லாம் ஹாலிலிருந்த அப்பாவுக்குக் கேட்டிருக்க வேண்டும். தர்மசங்கடத்தைத் தவிர்க்கவேண்டி; தானாகவே ஊட்டிக்குப் போக விரும்புவதாகக் கூறுகிறார். எத்தனை நல்ல மனசு.

'ஸாரிப்பா' என்று மனதுக்குள்ளும் "சரிப்பா" என்று வெளியிலும் சொன்னான் ரகுராமன்.

நிர்மலாவின் முகத்தில் ஏக திருப்தி.

**ம**றுநாள் காலையில் கோவை எக்ஸ்பிரஸில் அப்பாவை வழியனுப்ப சென்ட்ரல் ஸ்டேஷனுக்குப் போன ரகுராமன், பகல் ஒரு மணி ஆகியும் திரும்பவில்லை. நிர்மலாவுக்கு மனதைப் பிசைந்தது. தெரிந்தவர்களுக்கெல்லாம் போன் பண்ணிக் கேட்டு ஏமாற்றமடைந்தாள். எங்கே போயிருப்பார்?

மாலை நாலு மணிக்குத் தான் ரகுராமன் வந்தான்.

86

# ராமானுஜ காவியம்

✦ கவிஞர் வாலி

## காந்திமதியின் கலக்கம்

ஒரு
வியாதி
வெக்கை என்று -

பத்து நாள்
பாயும் படுக்கையுமாயிருந்து
போயிருந்தால் கூட...

துக்கம் - இந்தளவு
தொண்டையை அடைக்காது;
தூக்கிவாரிப் போட்டு - நெஞ்சைத்
துகள்துகளாக உடைக்காது!

இப்படி
ஏதோ
தலைபோகிற அவசரத்தில்
தலை போனதுதான்...

காந்திமதி கண்ணில்
கருவேல முள்ளைத் தைத்தது;

கண்ணீர்
புண்ணீராய் வடிய...

'பொட்'டெனப்
பொட்டில் அடித்துப்
பொறி கலங்க வைத்த
போகூழ் நினைந்து -

பிச்சேறிப்
பிரலாபிக்க வைத்தது!

12



ஆக்கை அளித்த
அத்தனாகவும்;
அறிவு கொளுத்திய
ஆசானாகவும்;

இருந்த பெருந்தகையை
இழந்த பிற்பாடு -
இராமானுஜன்
இராமானுஜனாக இல்லை;

தன்வயம் இழந்தபின்
தேற்றுதல் எங்ஙனம் -
தஞ்சமாம்பாள் எனும்
தன்னுடைய இல்லை?

'மருமகள் கழுத்தில்
மாங்கல்யம் ஏறியதும் -
மாமியார் கழுத்தின்
மாங்கல்யம் இறங்கியதே!'

என்று -
ஏசும் ஊர்
என்று...

மறுகி -
மருண்டாள் - காந்திமதியின்
மருகி!

களைகண் இன்றி

கேசவர் குடும்பம் - கண்ணீர்
அளைகண் ஆன
அவலத்தை...

திருமலை நம்பியும்
திருக்கச்சி நம்பியும்
தத்துவார்த்தங்கள் சொலித்
தீர்த்தனர்;

இழந்த மகிழ்ச்சியை
இழுத்து வந்து - அவர்கள்
இதழ்களிலும்
இல்லத்திலும் சேர்த்தனர்!

நொந்துபோன உள்ளங்களின்
நோவுகள் நீங்கினாலும் -
நந்துபோல ஊர்ந்தன





நாளும் பொழுதும்!

மறக்க முயன்றாலும்
மறக்க முடியாதபடி -
சோமயாஜியின்
சித்திரத்தை...

நிற்பது போலும்
நடப்பது போலும்
நினைவுத் தூரிகை - எல்லோர்
நெஞ்சங்களிலும் எழுதும்!

காந்திமதி
'கிருஷ்ணா! ராமா!' என்று -
பாய்விரித்துப் படுத்தும்...
பழைய ஞாபகம் படுத்தும்!

கற்பிலும்
பொற்பிலும்
அருந்ததி அன்னாள் - ஒருநாள்
அன்பு மகனிடம் சொன்னாள்!

"ராமானுஜா!
ரணம் வந்து...

பச்சிலை வைத்துக் கட்டினால்
பொருக்குத் தட்டும்;

புது ரத்தம் ஊறி
புண்...

முக்காலே
மூணு வீசம் -
ஆறிவிட்டதாக நினைக்கையில்
அஜாக்கிரதையினாலே...

ஆறின இடத்திலேயே
அடிபட்டு -

பொருக்குப் பிய்ந்து -
புண்ணீர் கொட்டும்!

அப்படித்தான் - உன்
அப்பா ஞாபகம்...

பொருக்குத் தட்டின புண்ணைப் -
பொத்துவிட்ட மாதிரி -
வந்து -
வந்து -

ரணமான நெஞ்சிலிருந்து
ரத்தம் கொட்டுகிறது;

அழுது -
அழுது -

வற்றிப்போன கண்ணீர்
'விடேன் தொடேன்' என்று -
கொஞ்சநஞ்சம் மிச்சமிருந்து
கண்களில் சொட்டுகிறது!

இடுப்புக் குழந்தையை
இருநூறு தடவை
இறக்கிவிட்டாலும்...

புடவைத் தலைப்பைப்
பிடித்துக்கொண்டு
பின்னாலேயே வந்து...

அடைமழையாய்
அழுகையைக் கொட்டி -
அழிச்சாட்டியமும்
ஆகாத்தியமும் பண்ணும்;

தாயார் - மறுபடி
தூக்கிவைத்த பிற்பாடுதான் -
கலம் கலமாய்க் கொட்டிய
கண்ணீரை நிறுத்தும் கண்ணும்!

ராமானுஜா!
ராப்படுத்தால் பகல்படுத்தால்...

பாழும் மனம் -
பாறையாய் கனக்கிறதே என்று -

உன் அப்பாவுடன்
வாழ்ந்த காலத்தை -
இதயத்திலிருந்து
இறக்கிவைக்க இறக்கிவைக்க...

அடம்பிடித்து
அழுத குழந்தை மாதிரி - அது
தொடர்ந்து வந்து - என்னைத்
தொணப்பி எடுக்கிறது;

இருக்கட்டுமே - என்று
இதயத்தில் ஏற்றிவைத்தால் -
என்ன சொல்லுவேன்? மனம் -
எடை தாங்காமல் கடுக்கிறது!

ஒருநாளா?
இருநாளா?

வள்ளிசாக
வருஷம் இருபதுக்கும் மேலே
வாழ்ந்திருப்பேன் அவரோடு; அவ்
வாழ்வும் போனது அவரோடு!

நான் -
பெண்ணாய்ப் பிறந்து
பெற்ற பேற்றை என்னென்பேன்;

அங்கை பற்றி
அக்கினி சுற்றி
அம்மி மிதித்து
அருந்ததி பார்த்து

ஆருக்கு வாழ்க்கைப்பட்டேனோ -
அவர்...

உரைகல்லுக்கு
உட்படாத -
அரிய
அஞ்சாம் பொன்னென்பேன்!

புக்ககம்

புகுந்த புதிதில் - நான்
புடவை கட்டிய - ஒரு
புராதனச் சுவர்; என்
வெள்ளை
உள்ளமோ -

எண்ணறிவு
எழுத்தறிவு
எனும் விதைகள்
என்னென்று அறியா உவர்!

அகமுடையானோ - ஓர்
ஆரண வித்து;

அனேக தருணங்களில் - நான்
அவர்முன் நின்றதுண்டு -
அசமந்தமாய் - எனது
அறியாமையை ஆவிர்ப்பவித்து!

கல்விச் செல்வம்
கடுகளவும்...

இல்லாது வந்தவளுக்கு
இடையறாது கற்பித்தாரே -
அல்லாது...

துர்வாசராட்டம்
துப்பவில்லை சாபத்தை;

பிராணன்
பிரிகின்ற வரைக்கும் - அந்த
பிராமணர் முகத்தில் - நான்
பார்த்ததில்லை கோபத்தை!

எள்ளுதற்குரிய
எனது -
தற்குறித்தனத்தைத்
தரைமட்டமாக்கி...

பொய்கையையும்;
பூதத்தையும்;
பேயையும்;

மாறனையும்;

மதுரகவியையும்;
மழிசையையும்;

கலியனையும்;
குலசேகரனையும்;
விஷ்ணுசித்தனையும்;
விப்பிர நாராயணனையும்;

பாணனையும்;
பாவை நோற்றாளையும்;

நித்த நித்தம்
நெட்டுருப் பண்ணவைத்து -

நாலாயிரத்தையும் - என்
நாக்கில் அடுக்கினார்;
பண்ணோடு பாடிப் பாடிப்
பழகு என்று முடுக்கினார்!

மணாளனோ சொற்களஞ்சியம்;
மனையோ நெற்களஞ்சியம்;

நகை நட்டோடு
நாளும் பொழுதும் -
நகர்வலம் வந்த
நானோ ஒரு பொற்களஞ்சியம்!

எனினும்
எனக்கு இருந்தது - ஒரு
மழலையின் இரைச்சல் - செவி
மடுக்காத குறைச்சல்!

'மனைவி - பிறவி
மலடோ?' என -
மற்றப் புருஷர்கள்போல்
மலினமாய் மனத்துள்...

கேள்வி வளர்க்காது - கோயிலில்
வேள்வி வளர்த்து - என்னைத்
தாயாக்கிய -
தயாநிதி உன் தோப்பனார்;

பல்வினை யாகிய - என்
தொல்வினை மட்டும் -

வல்வினையா யில்லாது -
நல்வினையா யிருந்திருந்தால்...

அப்பேர்ப்பட்ட மகானை - நான்
அந்தகனிடம் தோற்பனா?

நூறாண்டு சுமங்கலியாய் வாழ -
நூறு நோன்புகளை...

நோற்றேன்;
நோற்ற நோன்புகள் போதவில்லை -
தோற்றேன்!

ம்!...
அநியாய -
அஞ்ஞானத்தில்...

பெண்புத்தி இப்படியெலாம்
பினாத்தும் -

வட்டப் பொட்டும்
வைத்த புஷ்பமும்
விட்டுப் போனால்; ஒரு
விதந்து ஆனால்!

கண்ணா! ராமானுஜா! என் -
கண்களுக்கு...

குறட்டில் -
கொல்லையில் -
கூடத்தில் -
குளியல் அறையில்...

உன் அப்பா
உலவுகிற மாதிரி தெரிகிறது;

கண்களைக்
கசக்கிக்கொண்டு
மறுபடி பார்த்தால் - அது
மன பிரமையென்று புரிகிறது!

எது
எப்படியானாலும் -
இந்த வீட்டில்
இனியும் இருந்தால்...

நான் -
நானாக இருக்க மாட்டேன்;

நேற்றுக்கூட -
நெய்தோசையாக நாலு வார்த்து -

தட்டில் எடுத்து வந்து
தஞ்சமாம்பாளிடம் -

'எங்கேடீ! உன் மாமனார்?'
என்று கேட்டேன்!

சின்னப் பொண்ணு; என் -
சித்தப் பிரமையைப் பார்த்து...

'ஓ'வென்று அழுது
ஊரைக் கூட்டி விட்டாள்;

சொல்லவும் முடியாமல்
மெல்லவும் முடியாமல்
பாவம்! அவள்
படாத பாடு பட்டாள்!

அப்பா! ராமானுஜா! உன் -
அப்பாவின்...

வருஷாப்தீகம் முடிந்ததும்
வீட்டை விற்றுவிட்டு -
காஞ்சீபுரம் போய்க்
குடித்தனம் நடத்துவோம்;

வரதராஜப் பெருமாளின்
வண்ணத் திருவடிகளில் -
வாஞ்சை வைத்து
வாழ்நாளைக் கடத்துவோம்!

அத்திவரதனும் - அவனோடு
அந்தரங்கமாய் உரையாடும்
கச்சி நம்பியும் - நமக்குக்
காப்பு;

பாகவதர் அருளும்
பகவான் அருளும் இருந்தால் -

பட்டமரத்தில் - நாம்
பார்க்கலாம் பூப்பு!"

இனிய தாய்
இன்னணம் -
நிகழ்த்திய
நீண்ட உரை கேட்டு...

இராமானுஜனின்
இதயம் வலித்தது;

அதே நேரத்தில்
அம்மாவின் குரல் -
அத்திவரதனின் ஆக்ஞை போல்
அவனுள் ஒலித்தது!

தேசுடைய
தேவராஜப் பெருமாளே -
தாய் வழியாக - தாயின்
வாய் வழியாக...

தன்னைத்
திருப்பெரும்பூதூரை விட்டு...

காஞ்சியில்
குடியேறி - அவனது அருள்மிகு
மூஞ்சியில்
முழிக்குமாறு...

பணிக்கிறான் என்றும்;
பகவான் அவனோடு - தன்னைப்
பிணிக்கிறான் என்றும்;
தனது துன்ப விலங்குகளைத்
துணிக்கிறான் என்றும்;
தனக்குற்ற வெப்பங்களைத்
தணிக்கிறான் என்றும்;
தீனன் தன்மேல் - திருவருளைத்
திணிக்கிறான் என்றும்;
காரண காரியங்களை - அவன்
கணிக்கிறான் என்றும்;
நுகரும் இரு வினைகளை - அவன்
நுணிக்கிறான் என்றும்;

குணங்களின் விசேஷங்களைக்
குணிக்கிறான் என்றும்;

இளையாழ்வானாகிய
இராமானுஜன் ஓர்ந்தான்;

ஓர்ந்தபோதும் - இடையில்
ஓதாமல் நின்று போன...

வேதாத்தியயனத்தை - மீட்டும்
விட்ட இடத்திலிருந்து -

எங்கே
எவர் மூலம்
எங்ஙனம் தொடர்வது - எனும்
எண்ணம் மேலிடச் சோர்ந்தான்!

அப்பாவாக இருந்த
அப்பாவின் இழப்பை விட -
ஆசாரியனாக இருந்த
அப்பாவின் இழப்புதான்...

அவனை
அதிகம் பாதித்தது;

ஏனெனில் - அவன்
என்ன கற்றானோ...

அவையெலாம்
அவனுக்கு -
அவன் தந்தை
ஆசானாயிருந்து போதித்தது!

ஆசாரியன் திருவடியை - அந்த
ஆசாரியன் அடைந்தபின் - இனி
ஆசாரியன் என்று - ஆரை
ஆசிரயிப்பது எனும்...

கேள்வி - அவனுள்
கிளைத்தது; அந்தக்
கேள்விக்கு விடை
காஞ்சிபுரத்தில் கிடைத்தது!

**- வளரும்**

94

◆ கவிஞர் வாலி

# ராமானுஜ காவியம்

13

**காஞ்சிமா நகரம்.**

பவுத்தம்;
சமணம்;
சைவம்;
வைணவம்;

என –
எழுந்த...

வெவ்வேறு
வாய்க்கால்கள் வழி –
வைய வயலுக்கு
வாலறிவு வெள்ளத்தைப் –

பாய்ச்சிய
பகவர் –
பலரும் போந்தருளிய
பூமி யென்பதால்...

ஆன்மிகம்
அறியும்;
அம்புவி
அறியும்;

தொண்டை மண்டலத்தின்
தொண்டை!

காலம்
கடந்து நிற்கும்
கருத்துக்களைப் பேசிய –
காஞ்சிமா நகரம்...

தொண்டை மண்டலத்தின்
தொண்டை;

காலம்
கடந்து நிற்கும்
கருத்துக்களைப் படைத்த –
காஞ்சிமா நகரம்...

தொண்டை மண்டலத்தின்
மண்டை!



கச்சியென்றும்; அத்தி
கிரி யென்றும்;

திவ்வியத்
திருத் தலங்களின்...

உச்சி யென்றும்; அத்தி
ஊர் என்றும்,

நாமங்கள் பலவாய்க் கொண்ட
நன்னகர்;

பழ நூல்கள்
பகருகின்ற -
பிராசீனமான

பெருமைகளை அருமைகளை...

தொலைக்காமல் வைத்திருக்கும்
தொன்னகர்!

பாலியும் -
பிராகிருதமும் -
ஆரியமும் -
அருந்தமிழும் -

அறிந்த மண்; அறிவு
செறிந்த மண்;

அவ்வப்போது
அமைகின்ற -



96

அரசுகள்
அமல்படுத்தும்...

பாஷையைப் -
பழக்க வழக்கத்தைப் -
பின்பற்றிவிட்டுப் -
பின்னாளில் -

ஏயது எது?
ஏயம் எது?
எனப் பரிசீலித்து...

ஏயதை ஏற்றுத் -
தீயதை எறிந்த மண்!

வடமொழியில் காஞ்சி;
வண்டமிழில் கச்சி;

கின்னரரும்
கிம்புருடரும்
இயக்கரும்
இன்ன பிறரும்...

ககனம் விட்டுக்
கீழிறங்கி வந்துளர்
கீர்த்திமிகு - இந்தக்
கச்சியை நச்சி!

அந்தம் சந்தம்
ஆகிய இரண்டிற்கும் -
அந்தம் இல்லாத
அருந் தமிழால்...

அந்தம் ஆதி அற்றானை
அந்தத்தை ஆதியாய்க் கொண்ட
அந்தாதியால் அருச்சித்த...



தண்பாவை தாமரையாளைத்
தன் மார்பில் தாங்குவோனை –
நூறு
வெண்பாவைக் கொண்டு வழுத்திய...

பொய்கைப் பிரான் – இவ்வூர்ப்
பொய்கையில்தான் பூத்தான்;

'முதலாழ்வார்' எனப்படும்
மூவரில் – இந்தப்
பொய்கைப் பிரான்தான்
பூதம் பேய்க்கு மூத்தான்!

இதே ஊரில்தான் –
இன்னோர் ஆழ்வார் விஷயமாய் –
அற்றை நாளில் –
அதிசய மொன்று நிகழ்ந்தது;

அஃதை –
ஆற்றிய...

'சொன்ன வண்ணம்
செய்த பெருமா'ளின்
சௌலப்பியம் கண்டு – ஆழ்வார்
சிந்தை மிகவும் நெகிழ்ந்தது!

படுத்திருந்த
பாம்புப் பாயலைப்
பந்தாகச் சுருட்டிக் கொண்டு
பெருமாள் புறப்பட்டார்...

அரசன்
ஆணையை ஏற்று –
திருக்கச்சி நீங்கிய –
திருமழிசை ஆழ்வார் கூடவே;

ஓரிரவு –
'ஓரிரவிருக்கை' எனும்
ஊரில் இருந்து விட்டு –

மன்னன் வந்து – ஆழ்வாரிடம்
மன்னிப்புக் கேட்டபின்...

பழைய இடத்திலேயே
பாம்புப் பாயலில்
படுத்துக் கிடக்க –

திருக்கச்சி திரும்பினார்
திருமழிசை ஆழ்வார் கூடவே!

ஸ்ரீ காஞ்சி – என
ஸ்ரீ வைஷ்ணவர்கள் சாதிக்கும்...

இசை மிகு
இந்த –
மண்ணகரம் – மற்றொரு
விண்ணகரம்!

பறவை மீது
பறப்பவன்; வெள்ளைப்
பரவை மீது
படுப்பவன்;

இறவை; பிறப்பை –
இல்லா தொழிக்கும் – பேரறிவாம்
நறவை பக்தர்க்கு
நாளும் கொடுப்பவன்;

கொண்டிருக்கிறான்
கோலாகலமாய் – திருக்
கோயில் இங்கு;

வாங்கி நிற்கிறான்
வண்ணக் கரங்களில்
வட்டத் திகிரி; சங்கு;

எட்டெழுத் தண்ணலின்
எழிலுக்கு ஏற்றத்திற்கு –
ஏது ஒரு கங்கு?

அவற்றை
ஆரேனும்
கூறுவே னென்று
கூறப் புகுந்தால்...

குன்றின் அளவில் – ஒரு
குன்றிமணி அளவே இருக்கும் –
கூறியவர் கூறிய

கூற்றின் பங்கு!

பேரருளாளன் - எனப்
பிறங்குகின்ற...

பெருமாள் பக்கலில்
பெருந்தேவித் தாயார்; அந்தத்
தாயார் போல் தண்ணளியை - பெற்ற
தாயார் கூட ஈயார்!

தாயார்
திருவடியில்
தோய்ந்திருப்போர்
தொல்வினையில் காயார்;

சிந்தாகுலத்தில்
சிக்குண்டு
சிந்தையும் சரீரமும்
சிறுகச் சிறுகத் தேயார்;

நொடித்துப் போய்
நொடித்துப் போய்
நொடிக்கு நொடி
நொடிக்கு நொடி மாயார்;

வேட்கை கொண்டு
வெகுளி கொண்டு
விருப்பு வெறுப்பு ஓலைகளால்
வாழ்வுப் பந்தலை வேயார்!

இன்னணம் -
இந்த ஊரில்...

திருக் கோயிலில் -
திருவோலகத்தில் -
சேவை
சாதித்துக் கொண்டிருக்கும்...

தேவியும்
தேவராஜரும் - எத்தகு
பாவியும்
பிரபத்தி செய்தால் -

அற்றம் நீக்கி - அவன்
குற்றம் நீக்கி - அவனைப்
பெருவீடு சேர்ப்பர் - என்பது
பிரசித்தம்; சரண்
அடைந்தால் - எப்பேர்ப்பட்ட
அழுக்கு மனங்களையும் -
பெருமாளும் தாயாரும்
பண்ணுவர் பரிசுத்தம்!

'வரதா! வரதா!' என்று
விளித்தாலே -
'வரந்தா! வரந்தா!' என்று
வேண்டுவதாய் எண்ணிக் கொண்டு...

வரந்தரும்
வரதன் அவன்; அங்ஙனம்

வரந்தருவதையே
விரதமாகக் கொண்டு -
விளங்குகின்ற
விரதன் அவன்!

திருக்கச்சி
திருக்கோயில்களில் - திருமால்
தங்கச்சி
திருக்கோயிலும்...

தொழுவார் தொல்வினை
தொலைக்க வல்லது; எருதுக் -
கொடியிருக்கும் பெம்மான்
கொஞ்சும் கோலமயில் - காமாட்சி
குடியிருக்கும் இல்லது!

நாமாட்சி மிக்க
நற்றமிழ்ப் புலவோரின் -
பாமாட்சி மிக்க
பக்திப் பனுவல்களில் -
மாமாட்சி மிக்க
மாதரசாய் நிற்பவள் - அக்
காமாட்சி; காக்குமவள்
கண்மாட்சி கூறும் பெண்மாட்சி!

அடடா!

அம்போருகம் அனைய...

அவளது
அழகிய அட்சங்கள் -
அகற்றும்
அடியாரின் அச்சங்கள்;
அவ்வணம்
அகற்றி
அவர்களைக் காண வைக்கும்
ஆனந்தத்தின் உச்சங்கள்!

அனைவர்க்கும் - அவள்
அனை அனைய அனை;

வெவ்வினை - எனும்
விடாய் தீர்க்கும் சுனை;

நடந்து நடந்து
நலிந்தவர்க்கு -
நல்லது தென்படும்
நன்னம்பிக்கை முனை!

காமாட்சியன்னையின் -
கருப்பக்கிரகம்...

சங்கரன் தொழுது நின்ற
சன்னிதி;
சரண் புகுந்தால் - அது
சகலருக்கும் நல்கும்
நன்னிலை - எனும்
நன்னிதி!

இவை போல்
இன்னும் எத்துணையோ
கியாதிகள் பெற்ற
காஞ்சியம் பதியில்...

திருக்கச்சி நம்பியின்
துணை கொண்டு -

கிரயம் பேசி - புது
கிரகம் ஒன்று வாங்கி -
கிழமை திதி பார்த்துக்
கிரகப்பிரவேசம் செய்து -

தனது
தாயோடும்
தாரத்தோடும்
தங்கைகளோடும்...

குடிபுகுந்தான் - வைணவ
குலம் தழைக்க வந்த -
இராமானுஜ முனி; வைணவர்கள் -
இதயக் கனி!

பிடித்தமான வீடாய்ப்
பிடித்தாகி விட்டது;

அடுத்து -
ஆசிரியப் பிரான்;
அவரும் - நல்லபடியாய்
அமைந்து விட்டால்...

வருங்காலம்
வெளிச்ச மயமாக
இருக்குமென
இராமானுஜனுக்குப் பட்டது!

அழகிய காஞ்சியை
அடுத்து இருந்தது...

'திருப்புட்குழி' எனும்
திருநாமம் கொண்ட - ஒரு
வைணவத் தலம்; அங்கு -
வசித்தாலே வாய்க்கும் நலம்!

உலவும் வான்முகிலை
உராயும் விமானத்தோடு -
ஊர் நடுவே
உயர்ந்து நின்ற கோயிலுள்ளே...

கிழ்த்திசை பார்த்துக்
கொலுவிருந்தான் - காலைக்கதிர்
வாழ்த்திசை வார்த்து
வழுத்தி வணங்குகின்ற -

100

விஜயராகவன் என்னும்
வள்ளல் பெருமான்;
பெருமானின்
பக்கத்தில் -

மரகதவல்லி நாச்சி - எனும்
மணிப் பெயர் கொண்ட ஒருமான்!

அருள் வலம்
அமைய வேண்டி - பிராகாரத்தில்
உருள் வலம்
வருவோரின்...

வெப்பூழ் போக்கும்
விஜயராகவன் கோயிலின் -
கொப்பூழ் போலே - திருக்
குளம் உண்டு ஒன்று; அதை -
ஜகம் புகழும் -
ஜடாயு தீர்த்தம் என்று!

பட்டாபிராமன்
பத்தினியைப் -
பர்ணசாலையோடு
பெயர்த்தெடுத்துப் போகையில்...

இராவணனோடு பொருதி
இறந்து போன -

கழுகரசனுக்குக்
காகுத்தன் - முனம்
தர்ப்பணம் செய்த
திருக்குளம் இது என்பர் -

பழ நூல்கள்
பயின்று
பிரவசனம் புரியும்
பௌராணிக அன்பர்!

திருப்புட்குழி
திருக்கோயிலில் இருக்கும்...

மரகதவல்லி நாச்சியார்க்கு
மற்றொரு நாமம் உண்டு -

'வறுத்த பயிறு
முளைக்க வைத்த நாயகி' என்று!

பிள்ளைப் பேறிலாத
பெண்டிர்...

வறுத்து நனைத்த பயிறை
வயிற்றில் கட்டிக் கொண்டு -
உறங்க வேண்டும் கோயிலில்
உள்ளிருக்கும் வாயிலில்;

விளைய வேண்டும்
வறுத்த பயிறு; அங்ஙனம் -
விளைந்தால் - கரு
வைத்திடும் வயிறு!

ஐயமில்லாத
ஐதிகத்தொடும்; ஒரு
வசை வராத
வைதிகத் தொடும்;

வைணவத் தலமாக -
வைபோக நிலமாக -
ஆன்மிக வாதிகளுக்கு -
ஆனை பலமாக...

பிறங்கிய ஊரை - மேலும்
பிரகாசம் செய்தார் - யாதவப்
பிரகாசர் என்னும் வேதியர்;
பழமறை போதிக்கும் சாதியர்!

'அவரை
ஆசாரியனாக அடைந்தால்
அறியலாம்
ஆன்ம ஞான ஆழம்!'

இன்னணம்
இதயத்துள்
இறுதி செய்தான்
இராமானுஜ வேழம்!

- **வளரும்**

102

## யாதவப் பிரகாசர்

அவரை -
அறவே -
பிடிக்காதவன் கூட - அவரைப்
படிக்காதவன் என்று பேசான்;

தொண்டை மண்டலம் பூராவும் -
துவசம் கட்டிக்கொண்டு...

சல்லடை போட்டுச்
சலித்துப் பார்த்தாலும் கூட -

சலித்துச் சலித்துச்
சலித்துப் போகுமே தவிர -

அகப்பட வாய்ப்பில்லை -
அவ்வளவு விழுக்காடு -
ஆரணங்களில் -
ஆழங்காற்பட்ட ஓர் ஆசான்!

யாரும் அறிவர் -
யாதவப் பிரகாசரை...
ஒரு
வேத வித்தாக;
வேத விருட்சமாக;
வேத வேழமாக;
வேத வேந்தாக!

# ராமானுஜ காவியம்

கவிஞர் வாலி

14



அறிவிருக்கும் -
ஆகாசம் போல் அகண்டு; அவர் -
துவராடை புனைந்து
திருநீறு பூசி -
தாளிரண்டு கொண்டு
தரை நடக்கும் ஆரிய நிகண்டு!

ஓர் உயரிய பிறவி;
ஒற்றைக் கோல் தாங்கும் துறவி!

அனேக சதசுகளில் - அவர்
அக்கிராசனம் வகித்தவர்;
அத்துவைதத்தை விட்டு
அன்னியபரனாய்
ஆரிருப்பினும் - அவரை
அக்கினி மாதிரி தகித்தவர்!

சாத்திரம்;
சூத்திரம்;
சருவமும் கற்றவர்; கூடவே



கருவமும் கற்றவர்!

தயிர்கடைந்த நவநீதமாய் -
திரண்ட ஞானம்; அதற்கு
திருஷ்டி பரிகாரமாய்
தருக்கு எனும் ஊனம்!

முயலுக்கு
மூன்றே கால் என்றால்
மூன்றே கால்தான்; கூட -
ஒரு காலும் உண்டென்றால் - அதை
ஒருகாலும் ஒப்பார்;

வாதத்திலும் - பிடி
வாதத்திலும் எப்படியோ -
வேதத்திலும் அப்படி; எந்த
வேதியும் அவருக்கு ஒப்பார்!

விசேஷமானது -
வியாச சூத்திரத்திற்கு...

யாதவப் பிரகாசர்
யாத்த உரை;
யாண்டும் பேசப்பெறும் - அதில்
யாரும் காணவொண்ணார் புரை!

பிரகாசர் இல்லம் -
பிறங்கியது குருகுலமாக;
விதை நெல்லொத்த
வித்தியார்த்திகளை -
வித்தகக் கதிர்களாக
விளைவிக்கும் ஒருநிலமாக!

பிரக்கியாதி மிக்க - யாதவப்
பிரகாசர் திருமுன்...

இராமானுஜன் என்னும்
இளஞ்சிங்கம் -
இடுப்பில் துண்டைக் கட்டி
இருகரம் தலைக்குமேல் தூக்கி...

திருமுடி தொடங்கி
திருவடி பரியந்தம் -
தரை தோய
தண்டம் சமர்ப்பித்து...

ஒரு
வித்தியார்த்தியாயேற்று - தனை
வாழ்விக்க வேண்டுமென்று
வினயமுடன் விண்ணப்பிக்க...

பிரசன்ன வதனத்தோடு
பிரகாசர் பேசினார்;
அகம் தைதையென
அகந்தை கொண்டாட -

வித்தியா கர்வத்தோடு
வார்த்தைகளை வீசினார்!

'இன்னோர்
இலக்குவன் போல் - இனிய
இலட்சணங்கள் பொருந்திய
இராமானுஜனே!

வாலிபத்தின்
வலிவும் பொலிவும் -
விளங்க நிற்கும்
வேயொத்த புஜனே!

என்
திருவடி நிழலின்கீழ்



தங்கி யிருந்து -

வேதாந்தம் வாசிக்க - நீ
வந்தது வியப்பல்ல; என்
வித்துவத்துவம்
விசேஷமானது என்பதை - நீயும்
ஓர்ந்திருப்பாய்
ஊர் உலகு சொல்ல!

என்னிடத்தில் பயின்று - நான்
ஏற்றிவைத்த விளக்குகளாய்
எரிந்து கொண்டிருப்போர்
எண்ணற்றோர்;

எழுதாக்கிளவியை
என்னிடம் கற்குமுன் - அந்த
எண்ணற்றோர் எல்லோரும்
கண்ணற்றோர்!

ஆம்! அவர்களது
அகக்கண்களில்
அறிவு வெளிச்சம்
அப்பியவன் நான்;

தற்குறிகளுக்கும் - என்
தொண்டைத் தண்ணீர் வற்ற
சுருதிப் பொருள்களைச்
செப்பியவன் நான்;

என்முன் -
இரந்து நின்ற...

பாமரங்களின்
பிச்சைப் பாத்திரங்களில்...
நான்
நாளும் பொழுதும்
வழங்கிய
வித்தியா தானத்தால்...

அந்த
அஞ்ஞானிகளில்
அனேகர் - இன்று
அத்தியாபகர்களாக -

ஊரில்
உலா வருதல் கண்டு -
உடல் ஒரு சுற்று - கூடுதலாய்
உப்பியவன் நான்!

அறிவு - எனும்
அருஞ் சோறு..

இல்லாதார்க்கு
இல்லை என்னாது -
இட்டிருக்கிறேன் ஐயம்;
இதில் சிறிதுமில்லை ஐயம்!

ஓர்
அகல் விளக்கிலிருந்து
ஆயிரம் அகல் விளக்குகளை
ஏற்றலாம்;
ஏற்றிய பின்னும்...

தாய் விளக்கு
தன்னுடைய -
திண்மை
திலமளவும் தாழாது -

எங்ஙனம் உளதோ?
அங்ஙனம் நான்!

ஆயிரம் பேருக்கு
அறிவு கொளுத்திய பின்னும் -
நலியாது நையாது - முழு
நானாகவே இருப்பேன் நான்!

மொண்டு மொண்டு
மொண்டு மொண்டு...
கொண்டல்கள்
கொண்டு போனாலும்
குறையாது உவரி; நதிவரவால்
குளிர்நீர் இருக்கும் உபரி!

இராமானுஜா!
இந்த யாதவப் பிரகாசன்...

106

உப்பும் -
துப்பும் -
அப்பும் -

கொடுத்த பின்னும்
குறையாதிருக்கும்
சீத சாகரம் போல் - ஒரு
வேத சாகரம்!

வரையாது
வழங்கும்
அட்சய பாத்திரம் போல் - ஓர்
அட்சரப் பாத்திரம்!

வித்தியார்த்திகளுக்கு
விநியோகித்த பின்னும் -

என்னிடம்
எஞ்சியிருக்கும்...

வேதம் பற்றிய
வேண ஞானம் இன்னும்!

உன்
பூர்வ ஜன்ம சுகிர்தம் - நீ
பாடம் கேட்க இங்கு வந்தது;

வேறு உலைகளில்
வேகாத அரிசியெல்லாம் - என்
சாலைக்கு வந்துதான்
சாதமாய் வெந்தது!

நீ - என்
நிழலில் இருந்து -
கல்லாத மறையெல்லாம்
கற்றுத் தெளி; உன்னை -
முன்னேற்றவே - உன்
முன்னிருக்கும் - இந்த
முன்னூற் கடலில் - நீ
முத்துக் குளி!

ஆனால் ஒன்று;
அதை நீ அறிதல் நன்று;

எனக்கு
எப்பொழுதும் -
எட்டிக்காய் போன்றது
எதிர்வாதம் என்ற ஒன்று!

ராமானுஜா! நமக்குள்
ரசாபாசம் வராமல் -
ரம்மியமாக நட; என்
ரசனையை அனுசரித்துக் கிட!

பதவுரையோ;
பொழிப்புரையோ;
விரிவுரையோ;
வேறு எவ்வகை உரையோ;

ஓர்
உபநிஷத
வாக்கியத்திற்கு நான் சொன்னால்...

அது எப்படி?
இது எப்படி?
என்றெல்லாம் -
என்னிடம்...

எவ்வாது செய்ய - நீ
எண்ணினாலும் - எனக்கது
ஒவ்வாது!

நான் -
கற்பிக்கப் பிறந்தவன்;
கற்கப் பிறந்தவனல்ல!

கவனத்தில் - இதைக்
குறித்து வை;
கஷ்டமா யிருந்தால் -
குருகுலம் விட்டு வெளியே போய் வை!'

இவ்வாறு யாதவப் பிரகாசர் -
இயம்பியது கேட்டு...

'தேவரீர் சித்தம்!' என்று
தெண்டனிட்டான் ராமானுஜன் -

தனது தேகம்

தரை தோய; ஆசிரியப்பிரானின் -
திருவுள்ளத்தில்
தேன் பாய!

ஞாலம் ஏத்தும்
ஞானத் -
தருவாகப் பிறங்கும் - ஒரு
தபோதனர் - தனக்குக்
குருவாகக் கிடைத்ததெண்ணிக்
குளிர்ந்தான் உளம்;
ஊற்றெடுத்த
உவகைக் கண்ணீரால் -
நிரம்பிக் கிடந்தது - அவன்
நேத்திரக் குளம்!

மற்ற
மாணவர்களைப் போல் -
குருகுலத்தையே
குடியிருப்பாய்க் கொள்ளாமல்...

தினம் தினம்
திருக்கச்சியிலிருந்து -
திருப்புட்குழிக்குத்
திருவடி நோக நடந்து வந்து...

ஆசாரியன்
அடிக்கீழ் அமர்ந்து -
ஆரணங்களின்
அரும்பொருளைக் கற்கலானான்...

இராமானுஜன் எனும் -
இளைய சூரியன்;
நெஞ்சால் நடத்தையால் -
நெறிபிறழா நேரியன்!

தங்கைகள்
திருமணம் முடிந்து -
புக்ககங்கள்
போன பிற்பாடு...

தாயாரோடு மட்டும்
தனித்திருந்த -
இராமானுஜனுக்கு
இனிய துணையாய்...

காஞ்சிக்கு வந்து சேர்ந்தான்
கோவிந்தன் என்பான்;
இவன் - தான்
இடையறாது நேசிக்கும்...

அருள்மிகு
அண்ணன் ராமானுஜனின் -
அன்பையே
ஆகாரமாகத் தின்பான்!

குரோதன வருஷத்தில் -
குளிர்ச்சியான தை மாதத்தில் -
பௌர்ணமியும் சேர்ந்த -
புனர்வசு நட்சத்திரத்தில்...

காந்திமதியம்மையின்
காதல் மிகு -

தங்கை
த்யுதிமதிக்கும்; அவளது
கணவர்
கமல நயன பட்டருக்கும்...

பிள்ளையாகப்
பிறந்தவன்தான் - பண்புகளைக்
கொள்ளையாகக்
கொண்டிருக்கும் கோவிந்த நம்பி;
உறவு முறையில் - ராமானுஜனுக்கு
ஒன்றுவிட்ட தம்பி!

இராமானுஜனை விட
எட்டாண்டுகள் இளையவன்;

இதழ்களில்
இளநகையை - சதா
இழையவிட்டபடி
இருக்கின்ற இனியவன்!

தாய் மாமன் - பெரிய
திருமலை நம்பிதான்...

காந்திமதியின்
கன்றுக்கு -

இராமானுஜன் எனும்
இனிய நாமத்தை இட்டாற்போல் -

த்யுதிமதியின்
தனயனுக்கும் -
கோவிந்தன் எனும்
கோதறு நாமத்தை இட்டார்;

இட்ட கையோடு -
இவனது ஜாதகம் -
எத்தகையது -
என்பதையும்...

பனை ஏடு எடுத்துப்
பதித்து விட்டார்!

'பின்னாளில் - இந்தப்
பிள்ளையாண்டான்...

சகல
சாஸ்திரங்களையும் -
பழுதறக் கற்றவனாகவும்;
பவ்வியம் உற்றவனாகவும்;

ஆசாரியன்
அனுக்கிரகத்தால் -
ஆன்ம ஞானத்தை
அடைந்தவனாகவும்;

முனை முறியாத - தன்
முயற்சியினால் -
முக்திக் கூடையை
முடைந்தவனாகவும்;

ஓதுகை என்னும்
ஒரு மத்தால் -
கடலனைய வேதத்தைக்
கடைந்தவனாகவும்;

ஒரு காலத்தில் - தன்
ஊழ் வினையால் - தனது
வைணவ வடிவம்
உடைந்தவனாகவும்;

இலங்கக் கூடும்; இடர் -
இராமானுஜனுக்கு வரின் - இவன்
கலங்கக் கூடும்!'

இவ்வாறு கோவிந்தனைப் பற்றி -
இயம்பினார் பெரிய நம்பி;
திருப்பதிப் பெருமாளுக்குத் -
தொண்டு செய்யும் அரிய நம்பி!

காஞ்சிக்கு வந்த -
கோவிந்தன்...

தமையனோடு சேர்ந்து -
தானும் -

பிரகாசர்
பாடசாலையில் -
வேதம் வாசிக்கும்
வித்தியார்த்தி ஆனான்;

திருக்கச்சியிலிருந்து
திருப்புட்குழிக்கு...

இணை பிரியாது
இராமானுஜன் கூடவே -
இராமானுஜனின்
இன்னோர் உடம்பாகப் போனான்!

இந்த கோவிந்தன் மட்டும் -
இல்லை யென்றால்...
வைணவம்
வெகுகாலம் -
இயற்றிய நோன்பால்
இத்தரை இறங்கிய...

இராமானுஜ வள்ளல் - நமக்கு
இல்லையென்று ஆகியிருப்பான்;
யாதவப் பிரகாசரின் கையால் -
யமன் உலகு ஏகியிருப்பான்!

– வளரும்

# ராமானுஜ காவியம்

## மாமியார் மெச்சிய மருமகள்

**கா**ஞ்சிபுரத்தில் -
கால்வைத்த அன்றே...

ஒன்பது கஜப் புடவைக்குள்
ஒளிந்திருந்த பூங்காற்றை -

அதாவது
அன்பிற்குரிய -

தனது மருமகள்
தஞ்சமாம்பாளை...

கிட்டத்தில்
கூப்பிட்டு -
காந்திமதி - வீட்டுக்
கொத்துச்சாவியைக் கொடுத்தாள்;
குடும்பத் தேரைக்
குற்றம் குறையின்றி -
நடத்தும் பொறுப்பை
நாட்டுப்பெண்பால் விடுத்தாள்!

17.2.02

'மருமகளே! என் -
மூன்றாம் மகளே!

இனி -
எனது -

மகனுக்கும்
மனைக்கும் -
ஏன்
எனக்கும் கூட -

நீயே காப்பு; மெல்ல எனை
நெருங்குகிறது மூப்பு;
நாளுக்கு நாள் அவிழ்கிறது
நரம்புகளின் யாப்பு!

நான் -
வேண அளவு பூத்துக் காய்த்து -
ஓய்ந்துபோன தோப்பு;
நீ

★ கவிஞர் வாலி

இப்போதுதான்
இலைவிட்டிருக்கும்
இளஞ்செடி; இனிமேல்தான் -
இருக்கிறது பூப்பு!

ஆதலால்
ஆடி ஓடி அதை இதைச் செய்ய -
ஆகும் உன்னால்;

எதைப் பண்ணிப் போட்டாலும் -
சம்மதம்; அந்தச்
சாப்பாடு எனக்கு சேமம்தான்;
இனிமேல்
இந்த -
நாக்குக்கு ருசி -




ஆகாது என்னால்!

ஆளோடி முதல்
அடுப்பங்கரை வரை - இந்த
அகத்திற்கான
அதிகாரத்தை...

நீ வசி; நல்லபடியாய்
நிர்வகி!

எனக்கு நீ

நாராயணா என்கிற நாமம்தான்!

ராமானுஜனுக்கு மட்டும் -
ராத்திரிக்கும் பகலுக்கும்...
சுடச்சுட -
சுசி ருசியாக -

அவன்
திருவுள்ளப்படி
தளிகை பண்ணிப் போடு;
வெண்டை சுண்டை
வடகம் வற்றலோடு;

கவளம்
கவளமாக...

சாப்பிடுகிற வயதில்
சாப்பிட்டால்தான் - உடம்பில்
மூப்பிடுகிற வயதிலும்
முதுகு நிற்கும் தெம்போடு!

பகல் பூராவும்
பாடசாலையிலே...

ஆசாரியனுடைய
ஆக்ஞைப்படி -

நாபிக்கமலத்திலேயிருந்து
நாதம் எழும்பும்படி....

அத்தியயனம் பண்ணி -
அத்தியயனம் பண்ணி -

ராத்திரி வரும்போது - தொண்டை
ரணமாகி யிருக்கும்;

பனங்கற்கண்டு -
பச்சைக் கற்பூரம் -
வால் மிளகு -
விரலி மஞ்சள் -

நாலையும்
நன்றாகப் பொடித்து - நீ
வஸ்திர காயம் பண்ணி
வைத்துக் கொண்டு...

செம்புப் பாலை
செம்பாதிப் பாலாய் -
சுடச்சுட

சுண்டக் காய்ச்சி...

நான் சொன்ன பொடியை - அதில்
நாலு சிட்டிகை போட்டு - அதை

ராமானுஜனுக்கு
ராத்திரி ராத்திரி கொடுத்தால் -
குரல்வளைப்புண் - காலையில்
குணமாகி யிருக்கும்!

அவனுக்கு - நீ
அகமுடையாளாகவும்;
அதே நேரத்தில் - இன்னோர்
அம்மாவாகவும்...



இரு உறவாய் -
இரு!

புருஷனுடைய
போக்கு -

சரியென்று பட்டாலும்;
சரியென்று படாவிட்டாலும்...

அப்போதைக்கு
அதுசரி - என
அட்டியின்றி
அனுசரி;

அதுபற்றி
அவனோடு -
விச்சிராந்தியாயிருக்கையில்
விவகரி!

கறுத்த காகங்களும் -
கறுத்த மேகங்களும் -
அவ்வப்போது பறப்பதாலும் -
அவ்வப்போது மிதப்பதாலும் -

ஆகாயம் - ஒரு நாளும்
அழுக்காவ தில்லை;

முணுக்கென வரும் -
முன்கோபங்களும் -
மளமள வெனவரும் -
மனஸ் தாபங்களும் -

அவ்வப்போது நேர்வதாலும்;
அவ்வப்போது சேர்வதாலும்;

இல்லறம் - ஒரு நாளும்
இழுக்காவ தில்லை!

ஒரு -
வைதிக குடும்பத்திற்குரிய...

ஆசார -
அனுஷ்டானங்களில்;

விழுப்பு மடி -
விஷயங்களில்;

சாஸ்திர -
சம்பிரதாயங்களில்;

சிரத்தையாக நட; மறக்காதே -
சாப்பிட்ட இடத்தில் சாணி இட;
விஷ ஜந்துக்கள் வரும் -
வீட்டுக்குள் தீட்டுப் பட!

எல்லாம் உனக்குத் தெரியும் -
என்பது எனக்குத் தெரியும்;

ஆனாலும் -
அடிக்கடி...

தூண்டிவிட்டால்தான் - எந்தத்
திருவிளக்கும் சீராக எரியும்!'

மாமியார் பேச்சுக்கு -
மறுபேச்சுப் பேசாமல்...

தஞ்சமாம்பாள்
தலையை ஆட்டினாள்;

அன்று முதல்
அவளே -
அல்லும் பகலும்
அலுக்காது சலிக்காது...

குடும்பத் தேரைக்
குடைசாயாது ஓட்டினாள்;
குறைவைக்காது - கொழுநன்
குதுகலத்தைக் கூட்டினாள்!

வைகலும் -
வைகறையில்...

வாரணம்
விழிக்குமுன் விழித்து -
வாளியில் நீர் சேந்தி
வாசல் தெளித்து -

எறும்புகள் சாப்பிட
ஏதுவாக -
அரிசி மாவில்
அழகழகாகக் கோலம் போட்டு -

பிறகு -
புழைக்கடை வாவியில்...

புருஷனின்
பத்தாறையும் கௌபீனத்தையும் -
அழுக்குப் போக
அடித்துத் துவைத்து -

ஒட்டப் பிழிந்து - உலர
ஓணான் ஓடும் வேலிமேல் போட்டு -
தான்
தலைக்குக் குளித்து - தலை
துவட்டிய - பூந்
துவாலையைக் கூந்தலில் சுற்றி -

குழந்தை நிலா நெற்றியில்
குங்குமம் வைத்து - கூடவே
சின்ன ஈர்க்கால்
ஸ்ரீ சூர்ணம் எழுதி -

சாளக்கிராமம் இருக்கும்
சந்நிதிக்கு முன்னால் -
நெய்விளக் கேற்றி
நாலு தடவை சேவித்து -

ஓர்
உத்தரணி -
துளசித் தீர்த்தத்தைத்
தனக்குத் தானே -

அங்கையில் ஊற்றி
அருந்தி விட்டு -

சிக்குப் பலகையை
சுத்தி செய்து - அதை
இழை கோலத்தின்மேல்
இருத்தி விட்டு -

அதன்பின்
அஷ்டாட்சரம் சொல்லியவாறே -
அடுப்பு மூட்டி
அரிசி களைந்து போட்டு -

ஒலைத் தடுக்கில்
உட்கார்ந்தபடி -

காய்கறி நறுக்கி
கீரை ஆய்ந்து -
தண்ணீரில் வேகவைத்துத்
தாளித்துக் கொட்டி -

மளமளவென்று -
மணக்க மணக்க...

தளிகையை முடித்து
தலைவாழை இலை போட்டு -

கொழுநனுக்கும்
கொழுந்தன் கோவிந்தனுக்கும்...

பரிமாறிப்
பசியாற்றிப் -
பாடசாலைக்குப்
பணிவன்போடு அனுப்பிவிட்டு...

தஞ்சமாம்பாள்
தனது புடவைத் தலைப்பால் -
ஒழுகுகின்ற நெற்றி வேர்வையை
ஒற்றி ஒற்றி எடுத்தவாறு -

காந்திமதியை
கவனிக்கப் போவாள்;

காலமுக்கி
கையமுக்கி -
கஞ்சி போட்டுக்
கொடுத்து...

மாமியார் மெச்சும்
மருமகள் ஆவாள்!

அனேகமாக -
அன்றாடம்...

ராச்சாப்பாட்டுக்குப் பிறகு -
ராமானுஜனும் தஞ்சமாம்பாளும் -

மொட்டை மாடியிலோ; நடு -
முற்றத்திலோ; நிலாக்
கீற்றுகள் - தென்னங்
கீற்றுகள் வழியே
கீழிறங்கி விளையாடும்
கிணற் றோரத்திலோ;

ஒருவர் பக்கம்
ஒருவர் அமர்ந்து -
பிரியமாகப்
பேசுவது உண்டு;

இருவரும்
இளவயதினர் என்பதாலும்...
இல்லறம் புகுந்து - திங்கள்
இருபதே ஆயின என்பதாலும்...

அவர்களது
அளவளாவலில் -
வாஞ்சைத் தென்றல்
வீசுவது உண்டு!

மன்றல் முடித்த
மறு மாதமே...

தந்தை -
திருநாடு அலங்கரிக்க;

வருஷாப்தீகம் வரை - அந்த
வருத்தம் அவியாதிருக்க;

கண்ணைக் கட்டிக்
காட்டில் விட்டாற்போல் -

பாதை தெரியாமலும்
பயணம் புரியாமலும் - ஒரு
வாதை வசப்பட்டு - வீடே
விக்கித்து நிற்க;

'குடும்ப வண்டியை - நீ
கோலெடுத்து - இனி
ஓச்சுக! ஓச்சுக!' என்று
ஒட்டுமொத்த உறவும்...

நிர்த்தாட்சண்யமாய்
நிர்ப்பந்திக்க;

புதிதாய்ப்

பரிணயம் புரிந்த
பதினாறு வயதுப் பையன் - தன்
பத்தினி யோடு...

அமளியில்
ஆனந்திக்க வழியின்றி - வீடே
அமளியில்
ஆடிக் கிடக்க;

இராமானுஜன் - தன்
இல்லாளான...

தஞ்சமாம்பாளைத்
தழுவுவது ஏது? நாணத்தில் -
தஞ்சமாம்பாளும்
நழுவுவது ஏது?

காஞ்சிபுரத்திற்குக் -
குடிபெயர்ந்த பிற்பாடுதான்...

கணவன் மனைவிக்குக்
கிடைத்தது -
கொஞ்ச நேரம்; அதுவும் -
கொஞ்ச நேரம்!

சின்னச் சின்ன -
சந்தோஷங்களாக...

தஞ்சமாம்பாள்
திருநீற்றமுதை -
தளிர் வெற்றிலையில்
தடவிக் கொடுக்க -

இளையாழ்வான்
இராமானுஜனின்...

தாம்பூலம் தரித்த
திருவாய் - சிவப்பில்
தாமரைப் பூவைத்
தலைகுனிய வைக்க -

118

அந்த
அரக்குச் சிவப்பு...

அகமுடையாள்மேல்
அகமுடையானுக் கிருக்கும் -
அதீதமான அன்பை
அப்பட்டமாய் அறிவிக்க -

தனக்கு நிகர்
தானே எனும்...

தருக்கு ஒன்று
தக்கணமே -
தலைக்கு ஏறித்
தஞ்சமாம்பாளை ஆட்டுவிக்க...

திருக்கச்சியிலிருந்து
திருப்புட்குழிக்கும் -
திருப்புட்குழியிலிருந்து
திருக்கச்சிக்கும் -

நாள்தோறும்
நடக்கும்...

தலைவனின்
திருவடிகளைத் -
தஞ்சமாம்பாள்
தயிலம் தடவி நீவிவிட -

தலைவியின்
திருப்பணியில் -
தலைவனின்
திருவுள்ளம் நெகிழ்ந்துவிட -

இனி நடக்க
இருப்பதை...

உற்றுப் பார்த்தல் - அவ்வளவு
உசிதமல்ல என்று - அதற்கொரு
முற்றுப்புள்ளி வைத்து - நிலா
முகில் திரைக்குள் செல்ல...

நாமும் - அங்கு
நடந்தவற்றைக் கூறல் -
நயத்தகு
நாகரீகம் அல்ல!

வழக்கமாக
விளக்கு வைத்தபின் -
இல்லம் வந்து சேரும்
இராமானுஜன் -

ஒரு நாள்
ஓரிரு நாழிகைகள்...

சந்தியா காலத்திற்கு
சற்று முன்னதாகவே -
ஜாகை திரும்பி
ஜலம் கொண்டு காலலம்பி...

விழிகளில்
வியாகுலத்துடன் -
ஆசனத்தில்
அமர்ந்தது கண்டு...

தஞ்சமாம்பாள்
தனக்குள் -
சஞ்சலமுற்று - கணவன்
சற்று ஆசுவாசமடைந்தபின்...

'என்ன கவலை?'
என்று வினவினாள்;

'யாதவப் பிரகாசரோடு - ஒரு
யுத்தம்!' என்று -
சுருக்கமாகச்
சொல்லி...

பின்பு
பெருந்தகை ராமானுஜன் -
நடந்தவற்றை
நாயகியிடம் விளக்கினான்!

- **வளரும்**

# ராமானுஜ காவியம்

## 16

**கருத்து மோதல்.**

திருப்புட்குழியில் - ஒரு
திருமாளிகை; அந்தத்
திருமாளிகையின் -
திருவாசலில்...

அகவை
அதிகமாகி
அதனால் ஏற்பட்ட
அசக்தி காரணமாக -

வேர்களால் நிற்காமல்
விழுதுகளால் நிற்கின்ற - ஒரு
வட விருட்சம்; அந்த
வட விருட்சத்தின் நீழலில்
வியாக்கிராசனத்தின் மீதொரு -
வேத விருட்சம்!

யாக்கை எடுத்து வந்த
யஜுர்;
சன்னியாசம் ஏற்றுக்கொண்ட
சாமம்; துவர் -
ஆடை தரித்திருக்கும்
அதர்வணம்;
ஏகதண்டம் ஏந்தி நிற்கும்
இருக்கு;

என்றெல்லாம்
எண்டிசைப் பண்டிதரால்
ஏத்தப் பெறுபவர்; சொன்மாலை
சாத்தப் பெறுபவர்;

சேய்போ லிருக்கும்
சீடர்க்கு - ஞானப் பாலூட்டும்
யாய்போ லிருக்கும்
யாதவப் பிரகாசர்தான்...

அங்ஙனம்
ஆல மரத்தின்கீழ்
வீற்றிருந்தார்; ஒற்றைக்கோல் -
ஏற்றிருந்தார்!

வெளிச்ச
வெள்ளத்தோடு
வைகறை வந்து - மையிருட்டாம்
வையக் கறையை அலம்ப;

மண் விழித்த
மறுகணமே - துயில் நீங்கிக்
கண் விழித்த
கரிச்சான்கள்...

சில்லென்றிருந்த - ஈரச்
சிறகுலர்த்திச் சிலம்ப;
புலரியைக் கண்ட
பூரிப்பில்...



கால் இல்லாத
கால்வாய் ஓட; கால்வாய்மேல் -
கால் இல்லாத
கால் வந்து ஆட;

தினகரன்
திருமுகம் பார்த்து...

தண்டுக்கால் கொண்டு
தாமரை கூத்துப் புரிய;
வண்டுக்கால் ஆறும் - அதன்
வண்ணமடலில் ஆழப் பதிய;

அந்த
அழகிய காலைப் பொழுதில்...

வடபத்திரங்களை
விலக்கிக் கொண்டு -
வானி லிருந்து
வையம் இழிந்த வெய்யில் -

வேத வித்து யாதவரை
வணங்கி நின்றது;

அதன்பின் -
ஆங்காங்கு...

புற்களின்மேல்
பூத்திருந்த - ஓரிரு
பனிப் பூக்களைப்
பறிக்கச் சென்றது!

இளஞ்சூரியனின்
இதமான சூட்டில்...



இராமானுஜன்;
இளவல் கோவிந்தன்;
இன்னும் உள்ள
இதர வித்தியார்த்திகள்...

ஆசாரியனைச் சுற்றி
அரைவட்டமாய் அமர்ந்து -
அவர்
அருள அருள -

எழுத்தாணி கொண்டு
எழுத லாயினர் -
பழமறை பாஷ்யங்களைப்
பனை ஓலை ஏட்டில்!

அடிநாள் தொட்டு
ஆசிரியப் பிரான் - ஓர்
அப்பழுக்கற்ற
அத்துவைதி;

இறைவனும் ஆன்மாவும்
இரண்டல்ல என்பதே -
அத்துவைதம்
அருளும் செய்தி!

உபநிஷதங்களில்
உள்ள வாசகங்கள் -
யாதொன்றிற்கும்

● கவிஞர் வாலி

யாதவப் பிரகாசர்...

அவர்
அனுஷ்டித்து வரும்
அத்துவைதத் தத்துவத்தை
அனுசரித்தே -

வித்தியாசமாக
வியாக்கியானம் செய்வார்;

பரவையனைய
பண்டிதத்தாலும் -
சந்தி பிரிக்கும்
சமத்காரத்தாலும் -

மந்திரச் சொற்களுக்கு



மாற்றிப் பொருள் பெய்வார்!

அன்னணம்
அவ்வப்போது
ஆசாரியன்
அபத்தமாக உரைப்பதுண்டு;

இராமானுஜனின் அறிவுக்கு
இசைவில்லாத அவ்வுரை –
ஊசிமிளகாயாய் அவனது
உள்நாக்கில் உறைப்பதுண்டு!

ஆயினும்
அவசரப்பட்டு...

வாயிலிருந்து – வெளியே
வார்த்தைகள் குதித்துவிடாமல்
உதடெனும் கதவுகளை –
ஊமைச் சாவியால் பூட்டுவான்;

சகல
சாஸ்திரங்களையும்...

விரல் நுனியிலும்
குரல் நுனியிலும்
வைத்திருக்கும் – மகா
விற்பன்னரான ஆசாரியனுக்கு –

வழக்கம்போல்



விசுவாசத்தைக் காட்டுவான்!

இளரத்த மாயினும்
இராமானுஜன் – தனது
உயரிய பண்புகளை –
உடனே உதறி விடமாட்டான்!

அவன் நெறி
அருள் நெறி;
அவனுக்கு
ஆகாதது...

இவ்வுலகில்
இன்னோர் உயிர்
இன்னலுறுங்கால்
இதயத்தில் -
இரக்க மென்பது
இம்மியளவும்
இல்லா திருக்கின்ற
இருள் நெறி!

வேதாந்தக் கொள்கைகளை
விடாது பின்பற்றினாலும்...

ஆருக்கும்
அடிப்படையில் -
அன்பு வேண்டும்;
அருள் வேண்டும்;

உய்யாது கிடப்போர்க்கு -
உய்வகையைக் காட்டித் -
தொய்யாது பணி செய்யும் -
தொண்டு மனம் வேண்டும்;

இறைவனிடம் - தம்மை
இழந்து நிற்கும்...

அடியாரின்
அடிக்கமலத்தில் போய்
உட்காரும்
வண்டுமனம் வேண்டும்!

இதுதான்
இராமானுஜனின் இலக்கு;
ஏழை பாழை
எறும்பு ஈ
என - அவனுக்கு
எவருமில்லை விலக்கு!

சாத்திரங்களிலும்;
சூத்திரங்களிலும்;

உள்ள பொருள் ஒன்றாகவும் -
உரைக்கும் பொருள் வேறாகவும் -
பாடம்
பயிற்றுவிக்கின்ற...

குருவின்
குதர்க்கம் கண்டு - கொஞ்சம்
தகிப்பான்; பின்பு
சகிப்பான்!

பாடசாலையில்
புகுந்த புதிதிலேயே...

ஆசாரியனால்
அறிவுறுத்தப்பட்டது
அபிப்பிராய பேதம் - தனக்கு
ஆகாது என்று;

ஆதலால்
அனேக அனர்த்தங்களை...

விழுங்கவும் முடியாமல்
உமிழவும் முடியாமல்
இராமானுஜன் தவித்தான்
இரண்டுங்கெட்டானாய் நின்று!

ஆயினும் - இந்த
அசௌகரியமான நிலை
அவனுக்கு -
அதிக நாள் நீடிக்கவிலை!

ஒருநாள் -
வகுப்பு நடக்கையில்...

'ஸத்யம் ஞானம்
அனந்தம் ப்ரம்ம' என -
தைத்திரீய உபநிஷதம்
தாங்குமொரு வாக்கியத்தை -

எழுந்து நின்று
ஏடெடுத்து
வாசித்தான் - ஒரு
வித்தியார்த்தி;

யாதவர் - அதற்கு

126

யாது பொருளென
உரைத்தார் - அதன்
உள்ளீடை வெளிப்படுத்தி!

'மூளியான கொம்புடனோ;
முழுக் கொம்புடனோ;
முற்றும் - கொம்பே
முளைக்காமலோ;

பார்வைக்குத் தென்படினும்
பசுமாடு ஒன்றேதான் -
என்பது
என்னணம் ஏற்கப்படுமோ...

அன்னணம் -
அனந்தம் சத்யம் ஞானம் -
ஆகிய -
அடைமொழிகள் மூன்றும் -

பிரம்மம் ஒன்றையே
பூரணமாய்ச் சுட்டும்; வேறு
மாறுபாடுகள் எதற்கும்
முடிவினைக் கட்டும்!

ஸத்யமும் ப்ரம்மம்;
அனந்தமும் ப்ரம்மம்;
ஞானமும் ப்ரம்மம்!'

இவ்வாறு யாதவர்
இயம்பியதை...

இராமானுஜன்
ஏற்கவில்லை;
இலேசாக வளைத்தான்
எதிர்ப்பு வில்லை!

'ஆசிரியப் பிரானே!
அடியேனுக்கு...

தேவரீர் அருளிய கருத்து
தவறென்று படுகிறது;

எதிர்வாதம் செய்வது
ஏயதல்ல எனினும் -
ஏன் பேசாதிருக்கிறாய் என்று
என்னை என் மனம் சுடுகிறது!

அனந்தம்; ஸத்யம்; ஞானம்
ஆகியவை...

பிரம்மத்தின்
பண்புகள் ஆகும்; அந்தப் -
பண்புகளே எப்படி
பிரம்மமாகிப் போகும்?

மற்ற யாவற்றிலிருந்தும்
மாறுபட்டு...

நித்யமாயும் தனித்தும்
நிற்பது எது?
பிரம்மம் எனப்
பிறங்குவது அது!'

இராமானுஜனின்
இந்த விளக்கத்தை...

பிரகாசர்
புறக்கணித்தார்; எனினும்
இராமானுஜன்
இலேசுப்பட்டவனல்ல - என
புந்திக்குள் - அவனைப்
புதிதாகக் கணித்தார்!

'ஹூம்' என்று - ஓர்
ஹூங்காரம் செய்துவிட்டு...

அத்துடன்
அன்றைய -
வகுப்பைக் கலைத்து
விருட்டென எழுந்தார்;
எதிர்ப்பட்ட எவர்மீதும்
எரிந்து விழுந்தார்!

முதற் கோணல் -
முழுக் கோணல் என்றாக...

மூன்று நான்கு
மாதங்கள் ஆயின;
குரு சிஷ்யனுக்கிடையே
குருத்துவிட்டிருந்த -
முரண்பாடுகள்
மெல்ல மெல்ல முற்றிப்போயின!

வெளியிலிருந்து
வந்து போனாலும் சரி...
குருகுலத்திலேயே
குடியிருப்போர் ஆனாலும் சரி...

ஆசாரியனுக்கு
அன்றாடம் -
அனைத்துச் சீடர்களும்
ஆற்றுவர் பணிவிடை;

பணிவிடை புரிகையிலேயே -
பாடமும் பயிற்றப்பட்டு...

வித்தியார்த்திகள்
வினவுகின்ற -
வினாக்களுக்கு
வாத்தியார் வழங்குவார் விடை!

ஒருநாள்
ஓரிரு சீடர்களும் -
கோவிந்தனும்
குற்றேவல்கள் புரிய...

முற்றத்தில் - ஒரு
முக்காலியின் மீது
அமர்ந்திருந்த
ஆசிரியப் பிரானுக்கு...

ஏழெட்டு முட்டைகள்
எண்ணெயை எடுத்து -
உச்சந்தலையில் விட்டு

உஷ்ணம் பறக்கும்படி -

இராமானுஜன்
இரு கைகளாலும் தேய்க்கையில்...

ஒரு
சிஷ்யன் எழுந்து
சாந்தோக்கிய உபநிஷதத்தில்
சொல்லப்பட்ட - ஒரு
சொற்றொடருக்கு -

'யாது பொருள்?' என
யாதவரிடம் கேட்க...

'சூரிய மண்டலத்தில்
சுடர்விட்டு நிற்கும் -
புருஷோத்தமனின்
புண்டரீகம் அனைய விழிகள்...

குரங்கின்
குதம் போல் -
சிவந்து
சொலித்திருந்தன!'

என்று - யாதவர்
எடுத்து விளக்க...

இராமானுஜன்
இதயம் வெந்து -
விழி
வழியே...

கண்ணீர் சிந்த - அது
குருவின் தொடைமேல்
வெந்நீர் என
விழுந்து சுட்டது;

அந்த
அனலைத் தாங்கவொணாது -
ஆசாரியன் விழி
அண்ணாந்து அவனைச் சுட்டது!

– வளரும்

# ராமானுஜ காவியம்



## மீண்டும் – ஒரு மோதல்!

17

'ரணம்;
ரோகம்;
ரௌத்திரம்!

மூன்றில் ஏதேனும் ஒன்றுதான் –
முகாந்தரமா யிருக்கும்...

ஒருவனது
விழிகள் வேகவும்;
விழிவழி அவனுக்கும் –
உப்புநீர் வெப்புநீ ராகவும்!

சொல்! ராமானுஜா!
சொல்! கண்ணீர் –
சொட்டுவது என்ன? எனக்கது –
சுட்டுவது என்ன?'

வியப்பு பாதியும்
வெகுளி பாதியுமாய்
வினவினார் குரு;
விநயமுடன்
விளக்கினான் – உயரிய
விழுமங்களின் உரு!

"ஸ்வாமி! அடியேனை
க்ஷமிக்க வேண்டும்; தேவரீரோடு –
மோத நேருகிறது
மீண்டும் மீண்டும்!

'கப்யாஸம் புண்டரீகம்' எனில் –
கதிரவனால் புன்னகைக்கும்
கவின் மிகுந்த – செங்
கமலம் எனப் பொருள்படும்;

◆ கவிஞர் வாலி

அத்தகு
அரக்கு நிறக் -

கமலம் அனையது
கரியமால் அழகுவிழி - என
உவகை பொங்க
உபநிஷதம் உவமித்திடும்!

'கப்யாஸம்' என்பதைக்
கபி ஆஸம் எனப்பிரித்து
குரங்கின் குதம் - என
குருநாதர் கூறியதை அடுத்து...

துக்கம்
தாளாமல் -
உகுத்தேன் கண்ணீர்;
உண்மையில் அது என் புண்ணீர்!

'கம்' என்றால் -
குளிர் நீர்;

'பிபதி' என்றால் -
பருகுதல்!

குளிர்நீரைக்
குடிப்பதால் -
'கபி' என்று
கதிரவனைக் கூறிடப் போகும்;

'ஆஸம்' எனில்
அஃது -
அரும்பொன்று

அலர்ந்து சிரித்தல் ஆகும்!

பொன்னிறமாய்ப்
பொலியும் - சூரியநாராயணனின்
செந்நிறமாகிய
செய்ய கண்களுக்கு...

உவமையாக
உரைக்கலாமா -
கொம்பேறிக் குதிக்கும்



குரங்கின் ஆசனவாயை?

துளசித்
தீர்த்தத்தால் –
தூய்மைப் படுத்துங்கள்
தேவரீர் போசனவாயை!"

இவ்வாறு –
இராமானுஜன்...

உபநிஷத வாக்கியத்தின்
உள்ளே உட்கார்ந்திருக்கும் –
நியாயமான அர்த்தத்தை
நிட்டூரமாய் அறைந்தவுடன்...

முனிந்தார் யாதவர்;
முனிவை அடக்கமுடி யாதவர்!

'இனி –
இந்த யாதவப்பிரகாசன்...

உபநிஷதத்திற்கு
உனைக்கேட்டுத்தான் –
உரைக்க வேண்டுமோ
உரை? உனது –
உள்ளக் கிடக்கை அதுவெனில் –
ஒளிக்காமல் உரை!

உரையென்று – நான்
உரைத்த உரையினை – நேரிய
உரையன்று – என நீ
உரைக்கும்படி உள்ளதோ புரை?

நித்தியப்படி – இங்கு
நடப்பது யாதெனில்...

ஒன்று – நான்
உரைத்தல்; நான்
உரைத்ததை எடுத்து – உன்
உள்ளம் என்னும்
உரைகல்லில் – நீ
உரைத்தல்; அன்னணம்
உரைத்துப் பார்த்து – அசல்
உலோகமல்ல என உரைத்தல்!

ஆனவரை முயன்றாலும் – நீயெனை
அசைக்க முடியாது; நானொரு –
ஞானவரை!

இராமானுஜா! நீ –
இளங்கன்று;
இளங்கன்று அறியாது – பயம்
இன்னதென்று!

நான் –
மீன்; எனக்கு
நீ கற்றுத்தருவதோ
நீச்சு? ஏன் –

ஏற்க விழைகிறாய் – உலகோரின்
ஏச்சு?

குருநாதரைக்
குறை சொல்கிறோமே – எனக்
கொஞ்சமும் இல்லையோ –
கூச்சு?

அவ்வியமானவன் – என
அறியப்பட்ட பின்னும் – ஏன்
பவ்வியமானவன் – எனும்
பூச்சு?

இங்கு உனக்கு
இடமில்லை; இது
மழைக்கு ஒதுங்கும்
மடமில்லை!

பாடசாலையை விட்டுப் –
போய்விடு;

சகல
சாஸ்திரார்த்தங்களையும் –
சர்வ லகுவாய்
சாதிக்க வல்ல...

பிராக்கியனுக்கு – ஒரு
பிரகஸ்பதி எதற்கு? யாவும் –
ஓதி உணர்ந்தவன்; வீட்டில் –
ஓய்வெடு!'

132

வேள்வித் தீபோல்
விழிகள் சிவக்க
வேதவித்து - இன்னணம்
விரட்டியதும்...

வேறு
வழியின்றி -
விசனத்தோடு -
வீடுவந்து சேர்ந்தான் -

விரத மிருந்து
வைணவ தேயம் - வாங்கிவந்த
இராமானுஜன் எனும்
இளைய சீயம்!

தஞ்சமாம்பாள் -
தலைவனைத் தேற்றினாள்;
தெய்வம் நமக்குத் -
துணையெனச் சாற்றினாள்!

“வரதராஜன் நிழலில்
வாழ்கிறோம்;
அவன் நினைவில் அனவரதம்
ஆழ்கிறோம்!

தேவராஜன்
திருவுள்ளப்படிதான்...

நல்லது கெட்டது
நடக்கிறது; நம்
கைகளிலா வாழ்வுதாழ்வு
கிடக்கிறது?

அறிவு புகட்ட - ஓர்
ஆசாரியனை...

பெருமாள்தான்
பிடித்துக் கொடுத்தார்;

பிடித்துக்கொடுத்த
பெருமாளே...

பிரகஸ்பதிக்கும் - சிஷ்யப்
பிள்ளையாண்டானுக்கும் உள்ள -
பந்தத்தைப்
பிரித்தும் எடுத்தார்!

எண்ணெய் உள்ளவரை
எரிகிறது பந்தம்; அதேபோல்
இட்டவிதி உள்ளவரை
இருக்கிறது பந்தம்!

‘நதிவழி நாவாய் - போலே
விதிவழி போவாய்!’
என்று -
ஏற்கெனவேயே...

உண்டு
ஒரு வசனம்; இதை
உணர்ந்தார்க்கு
உண்டோ விசனம்?

உங்களுக்குத் தெரியாதா -
உலக இயல்?

நம்மோடு பிறந்து -
நம்மோடு பிறங்கும் -
நம் அவயவங்களே -
நமக்கு அயல்!

நடப்பது -
நம் கால்;

ஆனால் -
அது...
நடப்பது - அவன்
நிர்ணயித்த வழியில்;

நோக்குவது -
நம் கண்;
ஆனால் -
அது...
நோக்குவது - அவன்
நிச்சயித்த காட்சியை;

தொடுவது -
நம் கை;

ஆனால் -

அது...

தொடுவது - அவன்
தீர்மானித்த பொருளை;

தின்பது -
நம் வாய்;

ஆனால் -
அது...

தின்பது - அவன்
திட்டமிட்ட உணவை;

விரும்புவது -
நம் உளம்;

ஆனால் -
அது...

விரும்புவது - அவன்
வகுத்துவைத்த உறவை;

வாழ்வது -
நம் உயிர்;

ஆனால் -
அது...
வாழ்வது - அவன்
வரையறுத்த நாள்வரை!

இப்படி - நம்மொடு
இணைந்து இருக்கின்ற...

அனைத்தும்
அவன் வசம்;
இதில் -
என்ன வேண்டிக் கிடக்கிறது -
பாசம்; நேசம்;
பரவசம்?

யாதவப் பிரகாசரோடு
யுத்தம் நடத்தியாச்சு;
எதிர்வாதம் செய்து
எதிராளியைக் கிடத்தியாச்சு!

ஆனால் ஒன்று; உங்க -

ஆசாரிய ஸ்வாமி...

தற்சமயம் -
தடியினால் அடிபட்ட பாம்பு;

உங்களையே
ஒழித்துக்கட்டும் அளவு -
உள்ளத்தில் அவருக்கு
உருவெடுக்கலாம் ஒரு வீம்பு!

ஒரே -
ஒரு தடவைதான்...

உங்களோடு வந்து
உங்கள் வாத்தியார் ஸ்வாமியை -
சேவித்திருக்கிறேன்; தாதையாய் -
பாவித்திருக்கிறேன்!

ஆயினும்
அவர் முகத்தில் - ஒரு
கொடூரம் கண்டேன்; மதிப்பைக்
குறைத்துக் கொண்டேன்!

ஆனாலும்
அவரைப் பற்றி -
அவ்வளவாக
அச்சமில்லை;

பெருமாளைத்தவிர
பிரபஞ்சத்தில் -
ஒருத்தனும்
உச்சமில்லை!

ஆபத்து என்று
அழைத்தால்...

வைனதேயன் மேலேறி
வந்து - நமக்குற்ற
ஆபத்தை
ஆழிகொண்டு -
அரிவான்
அரி;
அவனது -
அளப்பரிய கருணைக்கு...

விடங்கர்
வாய்மீண்ட -
கரியே
கரி!'

மனைவி மொழிந்த
மணிவாசகங்களால் -
மனப்புண் ஆறினான்
மணாளன்;
காந்திமதி ஈன்றெடுத்த
குணாளன்!

எனினும் - இதில்
என்ன வேடிக்கை என்றால்...

எதிர்வாதம் செய்யும்
எவனையும் -
ஏனோதானோ வென்று
எண்ணிவிடாமல்...

யானைபோல்
யாதவப் பிரகாசர் -
கறுவைத்துக்
கருவறுப்பார் என்று...

சர்வ
சாதாரணமாக -
தஞ்சமாம்பாள்
தெரிவித்தது...

உண்மையாகும் சூழ்நிலை -
உருவானது;

திருப்புட்குழி
திருமாளிகையில் -
பழமறை பயிற்றும்
பாடசாலையில் -

சீடர்கள் -
சூழ்ந்து நிற்க...

நாவலம் மிக்க - ஒரு
நல்லாசானின் சிந்தனையில்
கேவலம் மிக்க - ஒரு
கீழான எண்ணம் கருவானது!

அணுக்கத் தொண்டனாய்;
ஆயுட்காலத் தொழும்பனாய்;
அடிப்பொடியாய்;
ஆராரெல்லாம்...

இதுகாறும்
இருந்துவந்து - தனக்குப்

பூவாரமும்
புகழாரமும் சூட்டினார்களோ...

கர்த்தபத்தைக் -
குதிரை என்றால்;
மர்க்கடத்தை -
மஞ்ஞை என்றால்;

ஓணானை -
ஒட்டை என்றால்;
ஒன்பானை -
ஒன்று என்றால்;

மறுதலிக்காமல் - எவரெலாம்
மண்டையை ஆட்டினார்களோ...

அவர்களையெல்லாம்
அவையாய்க் கூட்டி;
ஆட்காட்டி விரலை -
அப்படி இப்படி ஆட்டி;

மூக்கு நுனியில்
முனிவு ஏற;
நாக்கு நுனியில்
நச்சரவு சீற;

இராமானுஜன் - தன்னை
இழிவுபடுத்தியது பற்றி...

பேச ஆரம்பித்தார் - யாதவப்
பிரகாசர்; தானே தன்னைப்
பீத்திக்கொள்ளும் தன்மையைப்
பிரியா நேசர்!

— வளரும்



''எங்க மெகா சீரியலோட க்ளைமாக்ஸை நீங்கதான் டாக்டர் நல்லபடியா முடிச்சுத் தரணும்...''

''அதுக்கு ஏன் டாக்டரான என்கிட்ட வந்தீங்க..?''

''நிறையப் பேரோட 'கதை'யைக் கச்சிதமா முடிச்சவராமே நீங்க... அதான்!''

- புதுகை ஜின்ஸாலி

''அந்த டாக்டர் ஆபரேஷனுக்கு முன்னாலேயே 'ஃபீஸைக் கொடு'னு கேட்டு என் உயிரை எடுத்துட்டார்...''

''அவசரப்படறாரே!''

- எஸ். ராமன்



''வரவர, டி.வி-யில விளம்பரம் ரொம்ப அதிகமாயிடுச்சு. ஒரு விளம்பரம் போட்டு முடிஞ்சதுமே 'இந்த விளம்பரத்தை உங்களுக்கு வழங்குபவர்கள்'னு சொல்லி இன்னொரு விளம்பரம் போட ஆரம்பிச்சுட்டாங்க..!''

- கே. பழனிசாமி



கவிஞர் வாலி

# ராமானுஜ காவியம் 18

## ஒரு நட்பு நாடகம்!

'என்னிடம் கற்போரே!
என்னிழலில் நிற்போரே!
இராமானுஜன் நிகழ்த்தலாமா -
என்னுடன் சொற்போரே?

உங்களை
உத்தேசித்து - நான்
ஓதுகின்ற
ஓர் உரையை...

ஒப்புக்குச் சொன்னாலும்;
ஒப்புமையோடு சொன்னாலும்;
ஒப்பேற்றச் சொன்னாலும்;
ஒப்புநோக்காது - அப்படியே
ஒப்புக்கொண்டு - அதனை
ஒப்பிக்கும் கிள்ளைகளே!

ஒப்பந்தமோ - ஓர்
ஒப்பமோ இன்றி - உங்களை
ஒப்புரவோடு - என்னிடம்
ஒப்புவித்த பிள்ளைகளே!

என்னுடன் வசிக்கிறீர்கள்;
என்னிடம் வாசிக்கிறீர்கள்;
என்னை விசுவாசிக்கிறீர்கள்;
எனவே வசிகரிக்கிறீர்கள்!

உங்கள் குருபக்திதான்
உச்சம்; உங்கள்மேல் -
ஒருவரும் கூறவொண்ணாது
ஒச்சம்; நீங்கள்தான் -
எதிர்காலத்தில் எனது
எச்சம்; எனக்கில்லை -
அத்துவைதம் பற்றியோர்
அச்சம்!

இந்த
இராமானுஜன் -
எவ்வகையில் உங்களைவிட
ஏற்றம் பெற்றவன்? இந்தப் -

பாடசாலையின்
பிரசாதத்தை
உண்டு உண்டு - உடல்
ஊற்றம் பெற்றவன்!

வளர்க்கிறான் என்னிடம் -
வம்பு; என்னதான் -
வளர்ச்சி
வாய்த்தாலும்...

வாழைப்பூ
வழங்கக்கூடுமோ -
தாழைப்பூ
தருகின்ற வம்பு?

என் -
வாலறிவு வருகிறது -
உலக உலா; அதன் எடையை -
இன்னதென்று எடுத்துரைக்க -
இவனா துலா?

136

என்போல் இவனென்ன -
எதியா? இம்பரில் -
நல்லறிவைப் பாய்ச்சும் - ஞான
நதியா? இல்லையேல் -

புத்தியெனும்
[illegible]ரையிலா
மத்தெடுத்து
மார்த்தனம் செய்வார்க்குதவ...

இராமானுஜனை -
இப்படியே
இயங்க விடுதல்...

அறிவுடைமை
ஆகாது; இவன் -
எனக்கு



தத்துவ வெண்ணெயைத்
தன்னுள்ளே -
தாங்கி நிற்கின்ற
ததியா?

பூமிக்கு வந்த -
பிரகஸ்பதியா? சரஸ்வதியா?

இந்த

எதிர்க்கடை விரித்து -
என்னை
எள்ளுவா னாயின்...

பிறகு - என்
பிரேதம் வேகாது!

தன் கொள்கையை - இவன்

தம்பட்டம் அடித்தால்
என் கொள்கையை – நாளை
எவன் சீந்துவான்?

துறக்கம் தரும் – எனது
தூய தேனை விட்டுக்
கிறக்கம் தரும் – அவனது
கள்ளையல்லவா மாந்துவான்?

தேன் மருந்துப் பண்டம்;
கள் விருந்துப் பண்டம்;
நான் –
கூவி விற்க நேரும்; அவன் –
கூவாமலே கூட்டம் சேரும்!

மயக்கத்தை வருவிப்பவனை
மன்பதை விழையும்; உற்ற –
மயக்கத்தை விடுவிப்பவனை
மன்பதை விலக்கும்!

இராமானுஜனை –
இங்குளோர் அறிவீர்!

நான் –
நேற்று வைத்த
நாற்று; அந்த
நாற்றுதான் இன்றெனக்குக் –
கூற்று!

நம்
தத்துவம் தப்பாது – இவன்
தலையெடுத்தால்; நம்
தத்துவம் தாழாது – இவன்
தலையெடுத்தால்!

இன்னமும்
இராமானுஜனை
விட்டுவைப்பது உசிதமல்ல;
வாங்க வேண்டும் உயிரை மெல்ல!'

இப்படி
ஏகப்பட்ட பிராசங்களோடு...

பிரகாசர் – தன்
பிரலாபத்தையும்
பெருங்கோபத்தையும்
பிரகடனப் படுத்தினார்;

சிஷ்யர்களை
சிந்திக்க விடாமல்
சிற்றறிவு ஆடையை – அவர்கள்
சிந்தைக்கு உடுத்தினார்!

பெருந்துறவு –
பேதுறவு கொண்டது கண்டு...

'தனிநபரை விடவும் –
தத்துவம்தான் முக்கியம்;

தனிநபரைத்
தவிர்த்தல் தவறல்ல; நாம் –
தவிர்க்கக் கூடாதது
தத்துவத்தின் சக்கியம்!'

என்று –
ஏகோபித்த குரலில்...

மாணவர் கூட்டம்
முழங்கியது; ஓர் –
உயிர்க் கொலைக்கு



138

ஒப்புதல் வழங்கியது!

இராமானுஜனின்
இல்லத்திற்குச் சென்று...

ஆற அமர
அவனது -
திருவுள்ளம்
திருப்தியாகும்படிப் பேசி -
திருப்புட்குழிக்குத்
திரும்ப அழைத்து வருவது;

கல்மிஷம் இன்றி - அவனொடு
கலந்து இயல்பாகப் பழகி -
நடந்ததை மறந்ததாய் - அவனை
நம்பவைத்து -

சில நாள்கள் -
சென்ற பின்...

காசியாத்திரைக்கு - அவனையும்
கூட்டிச் சென்று - அலை புரளும்
கங்கைத் தண்ணீருக்கு - அவனைக்
காலை உணவாய்த் தருவது!

இப்படியொரு தீர்மானம் -
இயற்றப்பட்டு...

அது
அவசரம் அவசரமாக -
அடுத்த நாளே
அமுலுக்கு வந்தது;

எதிர்வந்து நின்ற
இராமானுஜனைக் கண்டதும்...

சீடர்கள் நடத்திய



சாகஸ நாடகம் - சிறு
சம்சயத்திற்கும் இடமின்றி
சபையேறியது -

பிரகாசருக்குப்
பேருவகை தந்தது!

ஆனால் -
அதே நேரத்தில்...

வித்தியார்த்திகள்
வேடமிட்டு நடத்திய -
வஞ்சக நாடகத்தையும்
விஞ்சி நின்றது -

குரு நடத்திய
கூத்து;

ஏகதண்டி சன்னியாசியார் -
எழுந்து...

இராமானுஜனை
இறுகப் புல்லி -
இதழ்களில் வெல்லமும்
இதயத்தில் வேம்பும் வைத்து...

கழிவிரக்கத்தோடு பேசினார் -
கண்களில் கண்ணீர் பூத்து!

'ராமானுஜா! ரொம்பவும் -
ரோசக்காரனடா நீ!

அப்படியிருப்பது -
அதிசய மில்லை...

மன்னன் முனிய - ஊர்விட்டு
மழிசை முனிவர் சென்றதுபோல் -
மானமுடைய மாந்தர் -
மண்டிக் கிடக்கின்ற -

தேசுடைய - தொண்டை
தேசக்காரனடா நீ!

ராஜா! என் -
ராமானுஜா!

நான்தான்
நாலு வார்த்தை -
கோபத்தில்
கொட்டினால் என்ன?

அணுக்கமான சீடனை
ஆசாரியன் -
அதீதமான
ஆத்திரத்தால் ஏற்பட்ட....

தினவு தீர - கொஞ்சம்
திட்டினால் என்ன?

தாய் -
திட்டுகிறாள் சேயை; அந்தத்
திட்டுதலில்
தினையளவாவது தெரியுமா -
தீச்சொல்லின் சாயை?

ஆசாரியன் யார்? உன் -
அனை அனைய அனை!

அவன் வைதால்
அது வசவல்ல;
ஆசி என - உனக்கு
அறிவுறுத்தவிலையா உன் அனை?

ஒரு -
வியாக்யொனம் பற்றிய -
விவாதமா - நமக்குள்
விரோதத்தை -
விதைப்பது?

அரைக்காசு பெறாத -
அபிப்பிராய பேதமா -
அரைநொடியில்
ஆழமான அன்பைச் சிதைப்பது?

நீ -
நிமலனடி சேர்ந்துவிட்ட -

கேசவ சோமயாஜியின் -
கீர்த்தி;

பூசைக்குரிய
பூர்விகமான -
புனிதங்களின்
பூர்த்தி;

உன்
நல்வாக்கில்
நடத்தையில்
நூறு சதவிகிதம்
நேர்த்தி;

அய்யா!
அடியேன் உனக்கு -
ஆசாரியன்தான்;
ஆயினும்...

உன்னோடு
ஒப்பிட்டால் - ராமானுஜா!
உண்மையைச் சொல்; இந்த
உன்மத்தன் எதோடு சேர்த்தி?

பாடசாலையை - நீ
பிரிந்த நாள் முதல்...

நான்
நோய்வாய்ப் பட்டேன்;
ஒத்தாசைக்கு வந்த
ஒருவரோடும் ஒட்டேன்;

சந்தி
செய்வதைக்கூட -
சில
சமயங்களில் விட்டேன்;

என்
சிறுமையைச்
சிந்தித்து -
சீச்சீயென்று - என்னை
சொற்களால் நானே சுட்டேன்!

உணவு
உட்செல்ல - என்
வாய் -
வழிவிட மறுத்தது;

உறவாடிக் கொண்டிருந்த -
உறக்கமோ...

சயன அறையில் -
சட்டென்று - எனது
சன்மப் பகையாகி - என்
சன்ன விழிகளை வெறுத்தது!

எங்கே - உன்னை
என்னருகே பார்க்காமல்...

சிவலோகம்
சேர்ந்து விடுவேனோ - எனும்
சிந்தாகுலம் - எனைச்
சாப்பிட்டது;

கூற்றுவன்
குரல்கூட -
கூட்டிப் போக வந்ததாய்க்
கூறி எனைக் கூப்பிட்டது!

நல்லவேளை
நீ வந்தாய்;

பாதி வழி
போன உயிரை -
மீதி வழி போகுமுன்
மீட்டுத் தந்தாய்!

இராமானுஜா!
என்னை மன்னி;
இருக்கும் உன்பேர் -
இவ்வுலகில் மன்னி!'

யாக்கையின் தள்ளாமையோடு
யாதவப் பிரகாசர்...

இவ்வாறு

இருவிழியில் நீர் மல்க -
இறைஞ்சியதும்
இதயம் இளகிப் போன -

ராமானுஜனுக்கு -
ரோமகூபம் ஏற்பட்டது;

மறைகளை
மெத்தப் பயின்ற - ஒரு
மகான் - தன்னிடம்
மன்னிப்புக் கோரியதை எண்ணி...

வெருவிய தேகம் -
வேர்த்து விட்டது!

ஆசாரியன் திருவடிகளில்
அக்கணமே -
தடாலென விழுந்தான்;
தண்டனிட்டு எழுந்தான்!

'ஸ்வாமி! என் -
ஸ்வபாவம்...

எப்பொருள்
எவர்வாய் கேட்பினும்
அப்பொருளை மெய்ப்பொருளா - என
ஆய்ந்து ஏற்பது ஆகும்;

அத்தகு
ஆய்வு -
மூத்தோர்க்கும் எனக்கும் -
முகமுறிவில் முடிந்து போகும்!

அறிவுக்குப் பொருந்தாத
அர்த்தத்தை -

ஆசாரியனை
ஆனந்தப் படுத்த வேண்டி -
அப்படியே ஏற்பதை - என்
அகம் சொல்லும் 'பாவம்' என்று;

அகம் சொல்லும் பாவத்தை
அடியேன் பண்ணாதிருந்தால் -
சகம் சொல்லும் - எனக்கு
சரியான 'அகம்பாவம்' என்று!

என் செய்வேன் -
யான்?
இருதலைக் கொள்ளி -
எறும்பு தான்!'

இவ்வாறு சொன்ன
இராமானுஜனின் -
உச்சந் தலைமேல் - தன்
உள்ளங்கையை வைத்து -

ஆசிரியப் பிரான்
ஆசி வழங்கினார்;

ஆரம்பத்தில்
அவன் பால் - எங்ஙனம்
அன்பு பாராட்டி வந்தாரோ -
அது போலவே...

வெளிப்பார்வைக்கு
விகற்பமின்றி விளங்கினார்!

சகஜமாகவும்
சௌஜன்னியமாகவும் -
சில நாள்கள்
சென்ற பிறகு...

குரு காசியாத்திரைக்குக்
குறித்தார் தேதி;

தன் -
தமையன் ராமானுஜனைத்
தீர்த்துக் கட்டவே - இந்தத்
தீர்த்த யாத்திரை என்பது...

இளவல் கோவிந்தன் -
ஏற்கெனவே அறிந்த சேதி!

– வளரும்

# ராமானுஜ காவியம்



## கோவிந்தன் குழம்பினான். 19

காஞ்சிபுரமே -
கண்ணயர்ந்து கிடந்தது;
நகர்ந்து நகர்ந்து - நேரம்
நடுச்சாமத்தைக் கடந்தது!

பொழுது
புலர்ந்தால் - அதுதான்
காசியாத்திரைக்குக்
கிளம்பும் தினம்;

யாதவப் பிரகாசரை
யோசித்தபடி இருந்தது -
குறட்டில் படுத்திருந்த
கோவிந்தன் மனம்!

அண்ணன் படிக்கும்
அதே பாடசாலையில் -
தானும் படிக்கவேண்டியே
தம்பியும் சேர்ந்தான்;

அங்ஙனம் -
அவன்...
சேர்ந்த புதிதில் - யாதவர்
செப்பிய புத்திமதிகளை
இளவல் கோவிந்தன்
இப்போது நினைவுகூர்ந்தான்!

'கோவிந்தா!
கோதறு கல்வியை...

கல்லாதவன் - ஒரு
கல்; ஆதலால்
காலையும் மாலையும்
கல்!

உன் -
உள்ளே புதைந்திருக்கும்...

கல்லாமை எனும்
கல்; அஃதைக்
கல்வியெனும் கடப்பாரையால்
கல்!

கவிஞர் **வாலி**

கசடறக் -
கசடறக் -

கல்விமேல் கல்வி
கற்கக் கற்க - நீ
கல்லாக் கல்லாய் - நிற்கக்
கல்!

வித்தியாகர்வம் - ஒரு
வழுக்கல்; அவ்
வழு வராது கல்; உன்மேல்
விழாது ஊர்வசை என்னும் கல்!



ஆணவம் - ஓர்
அந்தகாரம்;

அகல் என்றால் - அது
அகலாது; ஏற்று அடக்கமெனும் -
அகல்; அகலாதிருந்த அது
அகன்றுவிடும் அப்போது!

அடக்கம்தான்
ஆன்றோர்க்குப் புகல்;
அது
அமரருள் உய்க்கும்;
ஆதலால் - அதை
அனைவர்க்கும் புகல்!

அடிக்கடி
அகங்காரம் வரும் - உன்னை
அரவணைக்க; அங்ஙனம்
அது வரும்போதெல்லாம்...

அதை
அசட்டை செய்ய வேண்டும் - உன்
அதரங்களில்
அமர்ந்திருக்கும் நகல்;
அப்போதுதான் - நீயிந்த
ஆசாரியனின் நகல்!'

இப்படியெல்லாம் -
இதோபதேசங்கள் செய்தவர்...

சொல்லுக்கும் - தன்
செயலுக்கும் - ஒரு
ஸ்நானப்ராப்திகூட இலையென -
ஸ்பஷ்டமாய் நிரூபிக்கிறாரே...

என -
எண்ணலானான்...
கோவிந்தன் - தன்
குருநாதரைப் பற்றி;
முகம் சிவந்து -
முனிவு முற்றி!

ஏயதாயினும்;



ஏயமாயினும்;
எதிர்க் கருத்தை –
எவனேனும் எடுத்து வைத்தால்...

சகிப்பவன் – அவன் சார்ந்த
சமயத்திற்குப் பீடு; சகியாது –
தகிப்பவன் – அவன் சார்ந்த
சமயத்திற்குக் கேடு!

தனது
தத்துவங்களை –
ஊரோ
ஒருசிலரோ...

வாழ்த்தும் –
வேளையாகட்டும்; வசைபாடித்
தாழ்த்தும் –
தருணமாகட்டும்; அஃது...

எச்சமயம் ஆயினும்
எள்ளளவும் ஆடாது –
எச்சமயம் அமைதியாய்
ஏற்றபணி ஆற்றுகிறதோ –
அச்சமயம் அம்புவியை
ஆளுமாயின் – அன்றாடம்
அச்சமயம் என்றிருக்கும்
அவலநிலை எங்கிருக்கும்?

சகம் – ஒரு
சன்னியாசியிடம்...

காணலாம் நிறை;
காணலாம் மறை;
காணலாம் குறை;

காணலாம் கறை;

ஆயினும் -
அப் பற்றிலி...
இரண்டையும்
இயல்பாக எடுத்துக் கொண்டு
காட்டவேண்டும் பொறை;
காட்டினால்தான் இறை!

இற்றார் பற்றென
இருப்போர்க்கான -
இந்த
இலக்கணம் கூட அறியாமல்...

சங்கரர் வழிவந்த
சன்னியாசி யொருவர் -எம
கிங்கரர் வடிவாகிக்
கரந்திட நினைப்பதோ உயிர்?

எதிர்க்கருத்தை
எடுத்துவைத்தான்
என்பதற்காகவா -
என்னுடைய தமையன்...

இராமானுஜன் மேல்
இவ்வளவு அடங்காத செயிர்?

பூரணாசி அருளவேண்டிய
புனிதரே பூரியராகி - சீடனை
வாரணாசி அழைத்துப் போய்
வானதியில் அழுத்துவதா?

யமனை நிகர்த்த - இந்த
யாதவப் பிரகாசரை - இனியும்
ஆசாரியனாய் ஏற்று - அவரது
அடிமலரை வழுத்துவதா?

இத்தகு எண்ணங்கள்
எழுந்து எழுந்து...

கோவிந்தனைக்
கண் மூடவொட்டாமல் செய்தன;
அடிக்கடி
அறுந்துபோய்க் கொண்டிருந்த -
உறக்கமெனும்
வலையை...

மேலிமையும் கீழிமையும் -
மீண்டும் மீண்டும் நெய்தன!

அலைபாயாமல்
அமைதியாக -
இருப்பது போல்
இருந்து விட்டு...

பழையபடி
பழையபடி
பாழும் மனம் - யாதவப்
பிரகாசர் நினைவில் ஊறியது;
மறுபடியும் - வேதாளம்
முருங்கைமரம் ஏறியது!

யதிகளுக்கெல்லாம் யதி - என
யாதவப் பிரகாசரை...

மதிக்கிறது;
துதிக்கிறது; நற்
கதியடைய - அவர் நாமத்தை
கதிக்கிறது;

தொண்டை மண்டலமும் -
அண்டை மண்டலமும்!

'ஆகாசம் ஏறிய
ஆசார்யாள் தான் -
திருப்புட்குழியில்
திரும்ப இறங்கினார்!'

என -
எண்ணி...

148

பரந்த
பரததேசத்தைக் -

காலடி நோவக்
காலடியால் அளந்த -
காலடி முனிவனின்
காலடி ஈதென்று -

பாத பூஜை
புரிந்து...

அத்வைதிகள்
ஆராதிக்கும் - ஓர்
அரிய ஞானி; ஆராலும்
அறிய ஆகாத பெரிய ஞானி;

யாங்கணும் பேர்விளங்கும் -
யாதவப் பிரகாசர் என்னும்...

பேரறிவுப் பரவை;
பெருங்கருணைப் பவ்வம்;

'மகான்!
மத மாச்சரியங்களில் -
புகான்!'

என -
எல்லோரும் ஏற்றிருக்கும்...

அன்பு ஆழி;
அருள் வாரி;

குபு குபுவெனக்
குமிழியிட்டடிக்கும்
குரோதத்தினால் - ஒருயிரைக்
குடிக்கத் துடிக்குமளவு...

வளர்க்கலாமா வெறி?
விலக்கலாமா நெறி?

என்ன நேர்ந்தாலும்
ஏது நேர்ந்தாலும்
ஆத்திரத்தில்
அவசரத்தில்...

கரி உண்ணுமா
கறி?
ஆன் உண்ணுமா
ஊன்?

உண்ணும் எனில்..
உண்ணுமாறு
உந்துமோ -
உள்ளிருக்கும் மதம்?

உள்ளிருக்கும் மதத்தை
உந்தவும் ஊக்கவுமா -
உலகிருக்கும் மகான்கள்
உண்டு பண்ணினார் மதம்?

இதம் செய்யவா?
பதம் செய்யவா?
அதம் செய்யவா?
வதம் செய்யவா?
மதம் செய்தார் - எதைச் செய்ய
மதம் செய்தார்?

மானுடத்தை;
மன்பதையை;
ரட்சிக்கவா?
பட்சிக்கவா?

யாதவர் போன்ற
மாதவர் எல்லாம் - தன்னை
மறுதலிப்போருக்கு - ஏன்
மறலியாகின்றார்?

வீணையை ஏந்தும்
வெண்டாமரையாள் -
வீணையை விட்டுவிட்டு
வீச்சரிவாள் ஏந்தினாற்போல்...

கைவல்லியம் கைவரப்பெற்ற
கல்விமானெல்லாம் - தம்
கூற்றைப் போற்றார்க்கு - ஏன்
கூற்றாகிப் போகின்றார்?

காரணம் யாதெனக் -
காணப் போயின்...

தங்கள்
தத்துவம் பரவாது
தடுப்பாரை - அவர்களால்
தாங்கிக்கொள்ள இயலவில்லை;

இயற்கையிடம்
இருக்கின்ற - அந்த
அருங்குணத்தை - அவர்கள்
அறிந்துகொள்ள முயலவில்லை!

மனிதன் - தாழை
மடல்களைக் கொண்டு...

குடை செய்கிறானே; அதைக்கொண்டு -
தடை செய்கிறானே; என முனிந்து -
கொட்டாதிருக்கிறதா மழை?
காயாதிருக்கிறதா வெயில்?

எவர் -
எவ்வகையில்...

தடுத்தாலும்
தலைதூக்கி நிற்கும் -
சத்துவம் உள்ள
தத்துவம்; இந்த -
அரிய உண்மையை
அவர்களுக்கு
விளக்கவில்லை - அவர்களது
வித்துவத்துவம்!

வியப்பு -
விரக்தி -
வெகுளி -
வேதனை -

என -
ஏகப்பட்ட உணர்வுகள்...
உள்ளத்தை
ஊறுகாய்ப் பானையை
உலுக்குவது போல்
உலுக்க...

ராமானுஜன் தம்பி -
ராத்தூக்கம் கெட்டான்;

மதம்;
மன்பதை;
மதவாதிகளின்
மமதை;

முதலியவை பற்றிய
முதிர்ந்த சிந்தனைகள் - தன்
மூளைக்குள் என்னனம்
முளைத்தன என்று...

கோவிந்தன்
கோழம்பம் கொண்டு -
கொட்டாவி மேல்
கொட்டாவியாய் விட்டான்!

ஆசிரியப் பிரான்
ஆன...

பிரகாசர் மேல் - அவனுக்கு
பிரமாண்டமான கோபம்;
அதன் கூடவே
அவர்மேல் இருந்தது
அவனுக்கு - இனம்
அறியாத ஒரு பச்சாத்தாபம்!

ஆஹா!
ஆண்டாண்டு தவம் செய்தாலும்

அவரைப் போல் தகைமைசால் – ஓர்
ஆசாரியனை அண்டிக் கற்கும்...

வேறு – இனி
பெறுவதற்கு ஆவதோ?

வேறு
வாத்தியார்கள் –
ஊருலகத்தில்
இருந்தாலும்...

பருவ மழையைப்
புறக்கணித்துவிட்டு –
பனி மழையைக் கொண்டு
பயிர் செய்யப் போவதோ?

கூட்டிக்
கழித்துப் பார்த்தால் –
யாதவப் பிரகாசர்
யாதவப் பிரகாசர்தான்; அக் –
கல்விச் சூரியனைக்
கிரகணமாய்க் கவ்வுவது –
'தான்' 'தான்' 'தான்' எனும்
தான்தோன்றித் தனம்தான்!

மற்றப்படி – அந்த
மகான்...

தான்
தழுவி நிற்கும் –
அத்வைதத்தை
அடிப்படையாய்க் கொண்டு...

வியாக்கியானங்களை
விரிவாகச் செய்கிறார்; தன்
அறிவுத் தறியில் –
அதற்கான...

உண்மைகளையும்
உவமைகளையும்
ஊடும் பாவுமாகக் கொண்டு –
உத்தாரண உடையை நெய்கிறார்!

ஒருவன் – தான்
ஓர்ந்த கொள்கைப்படி
ஒழுகுவதில் என்ன தப்பு?
ஒழுகாதிருந்தால்தான் தப்பு!
ஆனால் –
ஆசாரியன் செய்த பிழை...

தன்
தத்துவங்களுக்கு-
இசையாத
இராமானுஜனை...

ஒதுக்க நினைக்காமல்
ஒழிக்க நினைத்ததுதான்;
கால் நடையாய்க்
காசிக்குக் கூட்டிப்போய் –
கங்கை நீரில் – அவனைக்
கழிக்க நினைத்ததுதான்!

யோசனைமேல்
யோசனை பண்ணினான்; பண்ணி –
கோவிந்தன்
கீழ்க்கண்டவாறு எண்ணினான்!

'ஆசாரியனுக்கு – அவரது
அத்வைதம் முக்கியம்;
ஆனால் எனக்கு – என்
அண்ணன்தான் முக்கியம்!'

காலம் சிரித்தது –
கோவிந்தன் பின்னால் நின்று;

'இந்த கோவிந்தனே
இனிவரும் நாளில் – ஓர்
அத்துவைதியாய்
ஆகப் போகிறான்!' என்று!

– வளரும்

# ராமானுஜ காவியம்

## தஞ்சமாம்பாளின் தவிப்பு

20

**க**ங்குலும்
கரையவில்லை; எனவே -
காகமும்
கரையவில்லை!

ஆயினும்
அனேகமாக -
புலரும் பொழுது
பக்கம் வந்துவிட்டதால்...

அவ்வளவு
அடர்த்தியென்று அல்லை -
கூறும்படி
கும்மிருட்டா யில்லை!

நீர்த்துப்போன
நிசியின் நிறத்திற்கு -
உவமை
உரைக்கப் போனால்...

காகத்தின்
கழுத்துப் போல் -
சற்று
சாம்பல்;

வர இருக்கும்
விடியலை ஓர்ந்து...

அப்பவே
ஆரம்பம்
ஆகிவிட்டது -
ஆம்பல் கூம்பல்!

பெருமாள் கோவில்
பஞ்சாங்கப்படி...

இரவி - ஏழு
புரவி ஏறிவர -
இன்னும் செல்ல வேண்டும்
இருபது நாழி;

எனினும்
எதிர்வீட்டுக் கூரைமேல் -
கூவத் தயாராகக்
குந்தியிருந்தது கோழி!

பிரிந்தும்
பிரியாமலும் -
இரண்டுங்கெட்டானாய்
இருள் இருக்கையில்...

கொட்டிலில்
கட்டியிருந்த -
பசுமாட்டுக்குப்
பிண்ணாக்கு வைத்துவிட்டு...

துணிகளைத்
துவைக்கும் கல்மேல் -

**ஓவியர் கோபுலு திடீரென்று உடல்நிலை பாதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வருகிறார். விரைவிலேயே அவர் பூரண நலம்பெற வாழ்த்துகிறோம்.**

**'ராமானுஜ காவியம்' தொடருக்கு இந்த இதழிலிருந்து ஓவியர் மாருதி படங்கள் வரைகிறார்.**

- ஆசிரியர்

154

## கவிஞர் வாலி

தஞ்சமாம்பாள் உட்கார்ந்து
தலைபோகின்ற ஓர் யோசனையில் -

ஆழ்ந்திருந்தாள்;
அவலம் சூழ்ந்திருந்தாள்!

கணவன் - காசிக்குக்
கிளம்ப இருக்கிறான்...

பொழுது -
புலர்ந்ததும்;
புழைக்கடைப்
பூமரத்துப்
பல்லவம் மேலமர்ந்த
பனித்துளி உலர்ந்ததும்!

கல்யாணத்தின்போது - ஒரு
காசியாத்திரை...

குடை;
குறடு;
குறுந்தடி சகிதமாக!

கல்யாணமான பின்பு - ஒரு
காசியாத்திரை...

குரு;
கோவிந்தன்;
கூடப்படிப்போர் சகிதமாக!

இந்த -
இரண்டு காசியாத்திரைகளில்...

போவது போல் -
போய்த் திரும்புவது முன்னது;
போவது போல் அல்ல; நிஜமாகவே -
போய்த் திரும்புவது பின்னது!

நிஜமான காசியாத்திரையை -
நினைக்கையில்...





தஞ்சமாம்பாளுக்கு
'திக்'கென்றது;
இனம்புரியா அச்சம் - அவளை
இரையாகத் தின்றது!

வாரணாசி போய் -
வீடு திரும்ப...

புருஷனுக்குப் பிடிக்கலாம்
பத்துத் திங்கள்; அதுவரை...

முள்மேல் படுத்துக் - கண்
மூடாதல்லவா இருக்க நேரும் -

மூவாறு வயது முற்றுப் பெறாத
முத்துத் திங்கள்!

பயத்தின் ஊடே - அவள்
பார்வை...

கொட்டிலில்
கழுநீரைக் -
குடித்துக் கொண்டிருந்த
கறவை மேல் சென்றது;
பழைய நினைவு ஒன்று - கண்முன்
பளிச்சென வந்து நின்றது!

பெரும்பூதூர்
பெரிய வீட்டில் -
கல்யாணமான புதிதில்
கொல்லைப் புறத்தில்...

வடகத்தை -
வெய்யிலில் உலர்த்தியவாறே -

முதல்
மூவரில் -
மூன்றாம் ஆழ்வார் அருளிய
மூன்றாம் திருவந்தாதியை...

தமிழ்த்தேன் ஒழுக ஒழுக

தஞ்சமாம்பாள் - தனது
இனிய குரலில்
இசைத்துக் கொண்டிருக்க...

அவளுக்குத் தெரியாமல்
அவள் பின்னால் நின்று
இராமானுஜன் - அதைத்தன்
இரு செவியால் உண்டிருக்க...

‘தாழ்சடையும் நீள் முடியும்
ஒண்மழுவும் சக்கரமும் -
சூழ் அரவும் பொன்நாணும்
தோன்றுமால் - சூழும்
திரண்டருவி பாயும்
திருமலைமேல் எந்தைக்கு -
இரண்டுருவும் ஒன்றாய்
இசைந்து!’ என்று...

பெண்பாவை -
பாடி முடித்தாள்
வெண்பாவை!

இராமானுஜன்



இருகை கொட்டிவிட்டு -

'தஞ்சம்! உனக்குத்
தமிழ்ப் பாசுரத்தை -
உச்சரிப்பு சுத்தமாக
ஓத வருகிறதே!' என்று -

மெச்சிப் பேசினான்; ஒரு -
மென்னகையை வீசினான்!

தஞ்சமாம்பாள்
திருமுகத்தில் - ஒரு
பொய்க் கோபம்
பூத்துவர...

'நான் -
பசுந்தமிழில்
பாண்டித்தியம் பெற்ற -
பெருமகனார் ஒருவர்
பெற்றெடுத்த பெண்;
முத்தமிழ் - எனக்கு
மூன்றாம் கண்!

வண்டமிழில் - எனக்கு
வார்த்தை விளையாட்டு வரும்;
அருந்தமிழில் - என்
ஆளுமை -
உங்களுக்கே
வியப்பைத் தரும்!

அதோ! பாருங்கள்!
அந்தப் பட்டியில்...

இளைப்பாறுகிறது -
இரண்டாம் உயிரெழுத்து;
அதன்மேல்
அங்குமிங்கும்
நடந்து கொண்டிருக்கிறது -
நான்காம் உயிரெழுத்து!

புரிந்திருக்குமே - நான்
போட்ட புதிர்? இதற்கு நான் -
வைத்திருக்கும் பெயர்...
வார்த்தைச் சதிர்!'

என்று -

இராமானுஜனை - ஒரு
கர்வம்பொங்கப் பார்த்தாள்;
கள்ளச்சிரிப்பை வார்த்தாள்!

ராமானுஜன் - தமிழ்
ரசம் ஒழுகும்...

பாரியாளின்
பேச்சை ரசித்தான்;

அறிவார்ந்த
அந்தப்
பெண்மையைப்
பார்வையால் புசித்தான்!

'தஞ்சம்!
தெரியாதா எனக்கு -
உன் புதிரும்;
வார்த்தைச் சதிரும்?

படுத்திருக்கும்
பசுமாட்டின் மேல் -
ஏறி நடக்கிறது
ஈ! இதைத்தான்
நீட்டி முழக்கிப் பேசுகிறாய் -
நீ!'

இப்படி -
இராமானுஜன் சொன்னதும்...

'ஒன்று கண்டு கொண்டேன்;
உங்களுக்கு...

தண்ணீர் பட்டபாடு -
தமிழ்; நான்
குரை கடலோடு போட்டி போட்ட -
குமிழ்!'
என்று
ஏக பவ்வியமாக -
தஞ்சம் பேசினாள்; திருமேனி
கொஞ்சம் கூசினாள்!

அன்று -
பெரும்பூதூர் வீட்டுப்
புழைக்கடையில் நடந்ததை...

இன்று -

158

காஞ்சிபுர வீட்டுக்
கொல்லையில் அமர்ந்து...

சிந்தித்துப் பார்த்த
சேயிழையின் -
அங் கண்ணிலிருந்து
துமித்தது நீர்த் திவலை;

துலாம்பரமாய்த்
தெரிந்தது - அதில்
காசிக்குப் போகும்
கணவன் பற்றிய கவலை!

தலைவனைப் பிரிந்த
தனிமை -
தலைவியைத்
தழல்போல் தகித்தாலும் -

அதைவிட அனலை
அள்ளிக் கொட்டும் விஷயம்...

நாயகன் மேற்கொண்டிருக்கும்
நீண்ட பயணம் -
நல்லபடியாக
நடந்து முடிந்து -

அவன்
ஆபத்து எதுவுமின்றி -
இல்லம் திரும்ப வேண்டுமே
என்பதுதான்;

தஞ்சமாம்பாளால்
தாங்கிக்கொள்ள முடியவில்லை
தன்னை - அந்த அவலம்
தின்பதுதான்!

பக்கம் வந்து நின்றான்
பர்த்தா; நாளை -

வலிவும் பொலிவும் மிக்க
விசிஷ்டாத்வைதம் எனும் -
வைணவத் தத்துவத்தை
வடிவமைக்கப்போகும் கர்த்தா!

'தஞ்சம்!
தெரியும் எனக்கு...

நான் -
திரும்பி வரும்வரை - நீ
தரைமீன் என்று;
கண்ணீர் - உன்
தண்ணீர் ஆக - அதில்

போராடிக் கொண்டிருப்பாய்
போகும் உயிரைப் பிடித்து நின்று!

எனினும் -
என்ன செய்வது?

ஆசாரியனின்
ஆக்ஞையை -
அலட்சியப்படுத்தினால்
அப்புறம் எப்படி உய்வது?

ஏற்கெனவேயே
எனக்கும் அவர்க்கும் -
ஏழாம் பொருத்தம்; நான் -
வாரணாசிக்கு
வரமாட்டேன் என்றால் -
வளரும் வருத்தம்!'

என்று -
இராமானுஜன் விளக்கினான்;
எனினும் தஞ்சமாம்பாள் - அதை
ஏற்காது விலக்கினாள்!

தன்பக்கத்து -
தரும நியாயங்களை...

வலக்கை பற்றி - தான்
வாழ்க்கைப் பட்டவன்முன் -

விரித்தாள் மனையாள்;
வைதேகி அனையாள்!

'ஒருவன்
வெளிச்சத்தில் நடக்கையில்...
அவனது நிழல் - அவன்
அடியொற்றி வரும்;

அவனே
அந்தகாரத்தில் நடக்கையில்...
அவனது நிழல் - அவனை
அறவே பிரிந்து விடும்!

மனைவி –
மட்டும்தான்...

மையிருட்டிலும்
மணவாளனைத் தொடர்ந்து வரும் –
அவனது நிழல்; ஏனெனில் –
அவளுக்கு அவன்தான் நிழல்!

நதி – தான்
நடந்து போகும் இடமெல்லாம்
கூடவே – கரையைக்
கூட்டிச் செல்கிறது;

காற்று – தான்
கடந்துபோகும் இடமெல்லாம்
கூடவே – கந்தத்தைக்
கூட்டிச் செல்கிறது;

மழை – தான்
மிதந்து போகும் இடமெல்லாம்
கூடவே – தண்ணீரைக்
கூட்டிச் செல்கிறது;

வினை – தான்
விரைந்து போகும் இடமெல்லாம்
கூடவே – விளைவைக்
கூட்டிச் செல்கிறது!

அவ்வளவு ஏன்? உங்கள்
அண்ணன் – அவர் மனைவியை
அடவி சென்றபோதும் – உடன்
அழைத்துப் போகவில்லையா?

அதனால்
அவள் உயிர் –
பரிதவிக்காமல்
பிழைத்துப் போகவில்லையா?

காசிக்குப் போனாலும் – வாழ்வின்
கடைசிக்குப் போனாலும் –
கூடவருவேன் நான்; நானும் –
கிரௌஞ்சப் பட்சி தான்!'

இவ்வாறு இயம்பிய
இல்லாளை; தனக்கு
இன்னொருத்தி இணையென்று
இல்லாளை;

இதமான வார்த்தைகள் சொல்லி –
இராமானுஜன் தேற்றினான்;

அவளது
அகத்துள் –
அப்பிக் கிடந்த
அச்சத்தை ஆற்றினான்!

'தஞ்சம்! தெரியாதா உன்
நெஞ்சம்?
கொண்டவனோடு அனுசரி
கொஞ்சம்!

தாசரதி அடவி வந்தது
தசரதன் விதி; ஜனகராஜன்
தனயை அடவி வந்தது
தசக்கிரீவன் விதி!

உனக்கும் எனக்கும் அந்த
உவமைகள் பொருந்தாது;

ஆகவே –
அம்மாவுக்குத் துணையாய் இரு –
அதையும் இதையும் எண்ணி –
அநாவசியமாய் வருந்தாது!

வழித்துணைக்கு
வரதராஜன் உண்டு;

இடையில் ஏதேனும்
இடர் வரின் – அதைச்
சுக்கு நூறாக்குவான்
சுடராழி கொண்டு!'

தாரத்திடம்;
தாயிடம்;
திருவாலவட்டத் தொண்டர் –
திருக்கச்சி நம்பியிடம்;

விடைபெற்று –
வாரணாசி புறப்பட்டான் –
யாதவர் பின்னோடு – வைணவம்
யாண்டும் வாசிக்கும் ஞானஏடு!

– **வளரும்**

# வயிறு வலிக்கப் போகிறது... உஷார்!

160

"எக்ஸ்ரே எடுக்க சீட்டு கொடுத்தேனே... ஏன் எடுக்கலை..?"

"சீட்டையெல்லாம் எக்ஸ்ரே எடுக்க முடியாதாம், ஜெராக்ஸ்தான் எடுக்க முடியுமாம் டாக்டர்!"



''இந்த ஆபரேஷன்ல உங்க மாமியாரைக் கடவுள்தான் காப்பாத்தினாரு!''

''அநாவசியமா கடவுள்மேல ஏன் டாக்டர் பழியைப் போடறீங்க..?''

''சிரிக்காதீங்க டாக்டர்... இவர் பஃபூன் இல்லை... மூக்கு வீங்கி இருக்குனு உங்களிடம் ட்ரீட்மெண்ட் எடுக்க வந்த பேஷண்ட்!''

– எம். இன்டர்நெட்

சாரதி டேச்சு





## விந்தியமலைச் சாரலிலே...

# ராமானுஜ

## 21

ஏறத்தாழ
எண்பது கால்கள்...

காஞ்சியை விட்டு
காசியை நோக்கி நகர்ந்தன;
செம்மண்
சாலையில் -
செம்மாந்து
செல்கையில்...

பூமியிலிருந்து
புறப்பட்ட
தூசிகள் யாவையும் - எண்பது
நாசிகள் நுகர்ந்தன!

நடக்க நடக்க
நீண்டது கானம்;
வழித்துணையாய்க் - கூடவே
வந்தது வானம்!

யாய் யானை போல் -
யாதவப் பிரகாசர் முன்செல...

கூட நடக்கும் -
குஞ்சரக் கன்றுகள் போல்
சீடர் நடந்தனர் -

மூட்டை முடிச்சுகளை
முடிகளில் தாங்கி;
மேலும் கீழும்
மூச்சுகள் வாங்கி!

வெப்பைத் துப்பியது
வெய்யில்; உடலிலிருந்த -
உப்பைத் துப்பியது
வியர்வை;

அவ்வப்போது -
அடித்தது
அனல்காற்று ஆயினும் - அஃது
அகற்றியது அயர்வை!

இராமானுஜனும்
இதர வித்தியார்த்திகளும் -
இளம் வயதினராய்
இருந்ததால்...

பெரிதாக மெய்வருத்தம்
பார்க்கவில்லை;
நெடுந்தூரம்
நடந்தபோதும் - அவர்கள்
நெஞ்சுரம்
நீர்க்கவில்லை!

பிரகாசருக்கு
பாரி சரீரம் ஆனதால்...

சதைகளின்
சுமைக்கு ஆற்றாது -
நீர்சுரந்து
நின்றன சேவடிகள்;

அத்தகு -
அசந்தர்ப்பங்களில்...

உட்கார -
உண்ண -
உறங்க -
உதவின சாவடிகள்!

ஒரு காலத்தில்
ஒன்னாதிருந்த -
ஒன்னலரை

● கவிஞர் வாலி



# காவியம்

ஒறுக்க...

சத்திரம் ஏந்தி
சமர் செய்த சிற்றரசுகள் -
சத்திரம் எழுப்பி
சாலைகளில் வைத்திருந்தனர்;

'யாதும் ஊரே;
யாவரும் கேளிர்!' என
யாங்கணும் திரிந்த
யாத்திரிகர்கள்;

தெள்ளியராகிய
தேசாந்தரிகள்;
ஒள்ளியராகிய
உஞ்சவிருத்திகள்;
என
ஏராளமானோர்...

வள்ளியராகிய
வேந்துகளமைத்த - அச்
சத்திரங்களைச்
சந்ததம் மொய்த்திருந்தனர்!

சத்திரத்தில்
சமைத்துச் சாப்பிட்ட பின்
பாதசாரிகள் - சற்றுப்
படுத்து உறங்க...

நெடிய மரங்கள்
நிழற்றின; மரக் -
கிளைகளில் கூடுகட்டிக்
கிளைகளோடு குடியிருந்த -
கின்னரப் பட்சிகள்
கீச்சுக் கீச்சென...

மெல்லிய தாலாட்டாய் -
மிழற்றின!

இப்படியே
இடையிடையே தென்பட்ட -
சத்திரம்
சாவடிகளில்...

காசியாத்திரை கோஷ்டி
களைப்பாறியது;

வானக் குளத்தில்
வாய் வெடித்து முகையவிழ்ந்த -
இந்து எனும்
இராப்பூ;
இருட்டு வண்ணமே -
இராப் பூ;

பிலிற்றிய
பால்வெளிச்சத்தில்...

உத்தரீயத்தை
உதறி விரித்து - அதன்மேல்
எண்சாண் உடம்பைக் கிடத்தி
இளைப்பாறியது!

இன்னணம் -
இரவும் பகலுமாய்;
பகலும் இரவுமாய்;
பயணம் செய்து -

விந்தியமலைச் சாரலுக்கு
வந்து சேர்ந்தனர்...

யாத்திரை நாயகர்
யாதவப் பிரகாசரும்;

பிரகாசரை ராமானுஜனைப் போல் -
பின்பற்றி வந்த பிறதாசரும்!

காவளம் அமைந்த
கவின்மிகு இடமென்று - அங்கு
தாவளம் அமைத்துத்
தங்கலாம் என்று எண்ணினர்;

பல்வேறு
பழ மரங்களின்
பன்னகங்களைக் கொண்டு - ஒரு
பன்னகசாலையைப் பண்ணினர்!

விந்திய மலைச்சாரலின்
வியத்தகு வனப்பை...

இராமானுஜன் - தன்
இரண்டு விழிவாயால் உண்டான்;



164

இருடீகேசனை எண்ணி -
இருக்கை இடையறாது ஓதும்
இருடிகளின்...

இருக்கை என்றிருக்கும் -
இயற்கை எழிலுக்குப் பின்
இறைக்கை இருக்கக் கண்டான்!



அரூபம் என்றிருக்கும்
ஆண்டவனின் - திவ்விய
சொரூபம் என்னவென்று...

சுட்டியது - அந்தச்
சூழல்; அளப்பரிய
ஆனந்தம் விளைப்பது - அதில்
ஆழல்!

நதி;
நிலம்;
மலை;
மானம்;

என -
எல்லாவற்றிலும்
நாரணன் தெரிந்தான்; யாவுமாய் -
நாரணனே விரிந்தான்!

குன்று ஏந்திய
கொண்டல் காட்டியது -
குன்று ஏந்திய
கோவலன் வண்ணம்;

தண்டு ஏந்திய
தாமரை காட்டியது -
தண்டு ஏந்திய
தாமோதரன் வதனம்;

வேணு ஏந்திய
வேழம் காட்டியது -
வேணு ஏந்திய
வாசுவின் நடையை;

பீலி ஏந்திய
பிணிமுகம் காட்டியது -
பீலி ஏந்திய
பீதாம்பரன் நேர்த்தியை!

வாயிதழ் -
வடிக்குந் தேனை...

வெளவல் புரியவரும்
வண்டோடு புல்லுகின்ற -
மௌவல் மலர்களெல்லாம்
மாயவன் முறுவல் காட்டும்;

வான் தடவும் -
வடமரத்தின்...

பத்திரம் ஒவ்வொன்றும்
பாரெலாம் உண்ட பெம்மான் - ஒரு
சித்திரம் போலே தன்மேல்
சயனிக்கும் பொலிவு காட்டும்;

எங்கணும் -
எம்பிக் குதிக்கும்...

புல்வாய் இனமெலாம் - பொய்ப்
புல்வாயை இராகவன் - தனது
வில்வாய் நாராசத்தால்
விழுத்திய நாளைக் காட்டும்;

நீரினில் -
நீந்திக் கிடக்கும்...

நால்வாய் இனமெலாம் - முனம்
நால்வாயை இடங்கரின் - நீண்ட
தோல்வாய் இறுகப் பற்ற - அதைத்
துண்டித்த இறையைக் காட்டும்;

ஒற்றை வேழத்தை -
உகிரால் வகிர...

கோளரி எழும்புகையில்
கனகனை ஏந்திக் கிழிக்க - ஓர்
ஆளரி எனக் கிளர்ந்த
அச்சுதன் ஏற்றங் காட்டும்;

தருக் கிளைகள் -
தாங்குங் கனிகளை...

தோடுகள் அகற்றி உண்ணத்
தாவிடும் அணில்கள் எல்லாம் -
கோடுகள் முதுகில் போட்ட

காகுத்தன் மூர்த்தி காட்டும்!

இவ்வாறு -
இதயத்தை ஈர்க்கும்...

வனமும்;
வனவிலங்கும்;
வனமாலியின்
வனப்பையும் நினைப்பையும் -

கவனப்படுத்த...
ககனம் நோக்கி -

இராமானுஜன்
இருகரம் குவித்தான்; இதர -
உணர்வுகளை
ஒரு கணம் அவித்தான்!

கொ[illegible]ப்பூழில்
கம[illegible] -

பூத்தரித்தான் திருவடியைப் -
புந்தியில் வைத்துத் -
தோத்தரித்தான்;

வராகமாகி
வாள் எயிற்றால் -

புவியேந்தினான் திருப்புகழைப் -
புள்ளரசு ஒன்று பாட - அதைச்
செவியேந்தினான்!

மேலைத்திசை
மலையொன்று -
மாலைச் சூரியனை
மெல்ல மெல்ல மெல்ல;

வாவி
வனசங்கள் - இருள்
வருகிறதே - என
வாய் கூம்பத் தொடங்குகையில்...

முற்றிலும் மடல்கதவுகள்
மூடப்படுமுன் - மூசியிருந்த
வண்டுகள் உயிர்தப்ப - சிறை
விரித்து வெளிச் செல்ல;

படிப்படியாய்ப்
படிப்படியாய்ப் -
படிமீது
படிந்தது -

அந்திக் கருக்கல் - ஓர்
அசட்டு இருட்டாக;

இருளுமில்லாமல்
பகலுமில்லாமல் - பொழுது

இரண்டுங்கெட்டானாக
இருந்ததால்...

அஞ்சும்
அளவிற்கு -
அடவியே ஏற்கவில்லை
அதையொரு பொருட்டாக!

யதியாகிய
யாதவப் பிரகாசர்...

இராமானுஜனோடும்
இதர சீடர்களோடும் -

சமீபத்தில் இருந்த - ஒரு
சரோவரத்தில் இறங்கி
சந்தி செய்தார்;

அங்கைகளில் - நீரை
அள்ளியெடுத்து -
அருக்கியம் பெய்தார்!

கொஞ்சம்
கொஞ்சமாகக் -
காடுமேல்
கவிவதை விட்டு விட்டு...

காடு முழுக்கவும் - கங்குல்
கையகப் படுத்தியது;

கையோடு
கொண்டுவந்திருந்த
கறுப்பாடையை - அது
காட்டுக்கு உடுத்தியது!

காசியாத்திரைக்
குழுவினர்...

தாங்கள்
தங்கியிருந்த
தாவளங்களிலிருந்து - சற்று
தள்ளிப் போய்...

திருவமுது
தயாரிக்க...

நாலைந்து கற்களை
நாலாபுறமும்
அண்டக் கொடுத்து - ஓர்
அடுப்பாக்கி அனல் மூட்டினர்;

அங்கிங்கு
அலைந்து -
அள்ளிவந்த சுள்ளிகளை
அனல் வாய்க்கு ஊட்டினர்!

காட்டில்
கிடைக்கின்ற -
கந்த மூலங்களையும்;
காய்களையும்;

தாங்கள் எடுத்து வந்த
தானியங்களையும்;
தண்ணீர் நிறைந்த
தடாவில் போட்டு...

ஒன்றாக
வேகவைத்துக் கொண்டனர்; பின் -
கதம்பமாகக்
கலந்து...
உண்டை உண்டையாய் -
உள்ளங்கையில் வைத்துக்கொண்டு
உற்சாகமாக -
உரையாடியவாறே உண்டனர்!

நாள் முழுக்க -
நடந்து வந்த களைப்பில்...

உண்ட கையோடு - தாவளத்தின்
உள்சென்று படுத்தனர்; உடன் -
உறக்கத்தின் கைகளில் - தம்
உடல்களைக் கொடுத்தனர்!

வனம்
உறங்கியது;

காலை வரை
கண்விழித்துக்
காவல் புரியும் சேவகனாய்க்
கீற்றுமதி பிறங்கியது!

அடித்துப் போட்டாற்போல்
ஆசாரியனும் பிறரும் -
ஆழ்ந்த நித்திரையில்
அயர்ந்திருந்த பின்னிரவில்...

கோவிந்தன் - தன்
கூடப் படுத்திருந்த -

தமையன் ராமானுஜனைத்
தொட்டு எழுப்பி -
தாவளத்திலிருந்து - சற்றுத்
தொலைவான இடத்திற்கு...

அவசரம் அவசரமாக -
அழைத்து வந்தான்; அந்த -
அதிர்ச்சியான தகவலை -
அண்ணன் செவிக்குத் தந்தான்!

**- வளரும்**

168

**சொ**ர்ணலதா...

இவரது குரலைத் தவிர்த்துவிட்டு, நீங்கள் தமிழ்நாட்டில் வாழமுடியாது. சென்னைக்குள்ளே போனை எடுத்துத் தப்பான நம்பரை டயல் செய்து விட்டால், 'நீங்கள் டயல் செய்த எண்ணைச் சரிபார்க்கவும்' என்று அன்பொழுகச் சொல்வார்.

தமிழ்நாட்டில் எந்த ரயில்வே ஸ்டேஷனுக்குள் நுழைந்தாலும், 'பயணிகளின் கனிவான கவனத் திற்கு...' என்று ஆரம்பித்து இவர்

# இவருக்கு 'வாய்ஸ்' அதிகம்!


சொர்ணலதா

குரல் இழைந்தோடும். இவ்வளவு ஏன்..? லிஃப்ட்டைத் திறந்து உள்ளே போனால்கூட, 'ப்ளீஸ்... க்ளோஸ் த டோர்' என்று அன்புக்கட்டளை போடுவார்!

விளம்பரப் படங்களில் பின்னணிப் பாடல் பாட, பின்னணிக்குரல் கொடுக்க தனக்கு வாய்ப்புக் கொடுத்தவர் எஸ்.வி. ரமணன் என்று சொல்லும் சொர்ணலதா, தனது கலைச் சேவையின் வெள்ளிவிழா ஆண்டில் அடியெடுத்து வைக்கிறார்.

ஏ.வி.டி. பிரீமியம் டீக்கு ஹீரா பேசும் 'பாத்தீங்களா, பாத்தீங்களா', 'பவர் சோப் பற்றி மூணு வார்த்தை சொல்லணும்னா', 'ஹலோ வினிஷா... சமையலுக்கு என்ன வேணா வாங்கு. ஆனா, சமையல் எண்ணெய்னா...' என்று வரும் கோல்டு வின்னர் என சொர்ணலதாவின் ஹிட் லிஸ்ட் நீண்டுகொண்டே போகிறது!

**"எல்லாம் சரி... டெலிபோன், ரயில்வேக்கெல்லாம் எப்படிப் போனீங்க?"**

"அவங்களுக்கு மெட்டீரியல் தயாரிச்சுக் கொடுக்கும் நிறுவனம், என் குரலைப் பற்றிக் கேள்விப்பட்டு என்னை அணுகியது... அன்றிலிருந்து பதினைந்து வருஷமா சென்னைத் தொலைபேசியிலும் தமிழ்நாடு ரயில்நிலையங்களிலும் என் குரல்தான் ஒலிச்சுக்கிட்டிருக்கு!" என்று பெருமையாகச் சொன்ன சொர்ணலதா,

"அப்போதெல்லாம் 'பயணிகளின் பணிவான கவனத்திற்கு' என்றுதான் அறிவிப்பு வரும். ஒரு முறை ஏதோ ஒரு ரயில்வே ஸ்டேஷனில் இந்த அறிவிப்பைக் கேட்ட கலைஞர், 'பணிவான கவனத்திற்குப் பதிலா, கனிவான கவனத்திற்குனு சொன்னா நல்லாயிருக்குமே'னு சொல்ல, உடனே என்னைக் கூப்பிட்டு, மாற்றிப் பேசச் சொன்னாங்க...'' என்றார்.

– சி. முருகேஷ்பாபு
படம்: கே. கார்த்திகேயன்

# எரிச்சல்

## நடிகைக்கு...

"ஆன்ட்டி ஹீரோயின் - காரெக்டர்னு சொல்லி என்னை ஏமாத்திட்டாங்க."

"என்ன பண்ணிட்டாங்க..?"

"ஹீரோயினுக்கு ஆன்ட்டி-யா என்னை நடிக்கச் சொல்லிட்டாங்க..!"

– நிலா



## ஆசிரியருக்கு...



"வெக்கமா இல்லியா... உன் ஃப்ரெண்டோட கிராமர் பேப்பரைப் பார்த்து அப்படியே காப்பி பண்ணியிருக்கியே..?"

"எங்களைப் பார்த்து 'நட்புக்கு இலக்கணம்'னு நீங்கதானே சார் சொன்னீங்க!"

## அப்பாவுக்கு...

"என்னோட அஞ்சு பசங்களுமே எல்லா சப்ஜெக்ட்லயும் நூறு மார்க் வாங்கிடறாங்க!"

"அவ்வளவு புத்திசாலிகளா?"

"அட.. அஞ்சு பேரும் சேர்த்து மொத்தமா வாங்கற மார்க்கைச் சொன்னேன்!"

– பாஸ்கி



# ராமானுஜ காவியம்

● கவிஞர் வாலி

## தப்பிலான் தப்பினான்!

22

'அண்ணா!
அதைச் சொலக் கூசுகிறது என் -
உண்ணா!

காவியெடுத்துக்
கட்டிய குருவே - உன்
ஆவியெடுக்கும்
அந்தகன் ஆகிறான்;
ஆழநீர் கங்கைக்கு
ஆகாரமாய்க் கொடுக்கவே -
காசிக்கு உன்னைக்
கூட்டிப் போகிறான்!

எனக்கும்

ஏனையோர்க்கும்தான் -
இது காசியாத்திரை; உனக்கோ -
இது கடைசி யாத்திரை!

யாதவர் -
யாத்திருக்கும் திட்டம் இது;

அண்ணா!
அடியேன் கண்ணோட்டத்தில்...

விடக் கூடாது - இவ்
வன் கொலைத் திட்டம் -
வெற்றி பெற; விட்டால் -
வைணவத்திற்கு நட்டம் இது!



இந்த –
இழிசெயலை இயற்றுவதற்கு...

துணிந்தவன் – ஒரு
துக்கிரி யல்ல; தத்துவ –
தரிசனமில்லாத – ஒரு
தற்குறி யல்ல!

நீயும்
நானும்
நித்தம் தொழும்; திருவடியில் –
நெடுஞ்சாண் கிடையாய் விழும்...

ஆசாரியன்; ஆறங்கம் –
அறிந்த நல் ஆரியன்;
அத்தகு ஆரியனல்லவோ –
ஆனான் ஒரு பூரியன்!

ஒரு –

மகாமகாமகா மகான் செய்யும்
மகாமகா மகாத்தப்பு; அந்த –
மகாமகாத் தப்பிலிருந்து – அம்



மகானைத் தப்ப வைக்கவாவது...

தப்பு நிகழுமுன் - நீ
தப்பு!'

மளமளவென்று
மனப்பாடம் செய்ததை -
ஒப்பிப்பது போல்
ஒப்பித்துவிட்டு...

மையிருளில் கோவிந்தன்
மறைந்து போனான்;
ராமானுஜன் - ஒரு விநாடி
ரத்தம் உறைந்து போனான்!

தான்
தனியனாகி விட்டதை -

ஒரு சில நொடிகள் கழித்தே
ஓர்ந்தான்;
ஓர்ந்தவுடனேயே
ஓரெட்டெழுத்தை -
வழித் துணையாய்க் கொண்டு
வெருவு தீர்ந்தான்!

வாரணாசி சென்று - நலமாய்
வீடு திரும்புவான் என்று...

நம்பியிருக்கும்
நற்றாயையும் நாயகியையும் -
நினைவு கூர்ந்தான்;



கோவிந்தன் - தன்
கூடவராதிருந்து - ஒருவேளை
காசியில் - தான்
கொலையுண்டிருந்தால்...

அந்த -
அநியாய சோகம்...

தாயைத்
தாரத்தைத்
தகர்த்துத்
தவிடாக்கியிருக்குமே என்று -

தவித்துத் தவித்துத் - தேகம்
தளர்ந்து போய்ச் சோர்ந்தான்!

தொடங்கவோ
தொடரவோ -
திக்குதிசை தெரியாது
'திக்பிரமை' பிடித்தவன் போல்...

இருந்தவாறு
இருந்த இடத்திலேயே -
இருந்தான்
இராமானுஜப் பெருந்தகை;

இன்றளவும் - தன்
இதய வங்கியில் -
வைப்பு நிதியாய் - வைணவம்
வைத்திருக்கும் பெருந்தொகை!

காலம் ஆடுகின்ற -
கண்ணாமூச்சியை என்ன சொல்ல!
அடடா!
ஆரால் ஆகும் அதனை வெல்ல?

காரண
காரியங்களைக்
காலம் - தனது
கைக்குள் வைத்திருக்கிறது;
நினைத்ததை - அது
நிகழ்த்தும்; அங்ஙனம் அது -
நினைத்தது எப்போது
நிகழாது பொய்த்திருக்கிறது?

காலம் -
கணித்த கணிப்பின்படி -
விந்திய பர்வதத்தின் கீழே -
விறைக்க வைக்கும் குளிரில்...

ஒரு -
நாவல் மரத்தடியில்
நின்றிருந்தான் - ஞான
ஞாயிறு - அதிர்விலிருந்து
நினைவுகள் மீளாததாலே;
புளிய மரத்தடியில் - முனம்
போயமர்ந்த மாறனைப் போலே!

அவ் -
அரணியத்தில் -
அங்கங்கே -
அரவம் நிறை புற்றிருந்தது;

அர்த்த ராத்திரிக்கு மேல்
ஆகி விட்டதால் -
அரவம் ஊரும்
அரவம் கூட அற்றிருந்தது!

பகல்
பூராவும் -
காடு சுற்றிய
களைப்பில்...

அக்கடா என்று - மலை
அடிவாரத்தில் -
கால் நீட்டிக் கொண்டு -

காற்று படுத்து விட்டதால்...
சின்னஞ்
சிறிய -

இலையசையும் சப்தமோ; பழக்
குலையசையும் சப்தமோ; புனல்
அலையசையும் சப்தமோ; அங்கு
அணுவளவு கூட -

இரா இரா எனும்படி
இருந்தது அந்த இரா;
அமாவாசைத் திதி
ஆன மூன்றாம் நாள் வந்த இரா!

174

ஆகாயத்தில்
அறவே பிரகாசமற்ற –
சின்ன நிலா; மிகமிக –
சன்ன நிலா!

மேலைத் திசையில் மட்டும் –
மினுக் மினுக்கென –
சொலித்தபடி –
சப்தரிஷி மண்டலம்!

வனம் முழுக்க
விழுங்கி விட்டதாக –
மார்தட்டிக் கொண்டிருந்த
மையிருட்டின் முகத்தில்...

அவ்வப்போது – கரியை
அப்பிக் கொண்டிருந்தன –

வால் பகுதியில்
விளக்குகளை வைத்தபடி –

செடிக்குச் செடி
செடிக்குச் செடி –
சிறகடித்துப் பறந்த
சின்னச் சின்ன மின்மினிகள்!

பூமியை விழுங்கிய இருட்டால் –
பூச்சியை விழுங்க இயலவில்லை;

ஆக – ஓர்
அற்பப் பூச்சி –
அல்லை எதிர்த்து – நடத்தியது
மல்லை!

இத்தகைய
இருண்ட சூழலின் –
இடையில் சிக்கிய
இராமானுஜன்...

மெல்ல மெல்ல –
மெல்ல மெல்ல –
தெருமரல் நீங்கித் –
தெருள் பெற்றதும்...

சுற்றிலும் – தன்னைச்
சூழ்ந்திருந்த –

புற இருளைப்
புறந்தள்ளினான்; ஆசாரியனின் –
அக இருளை
அகத்தில் உள்ளினான்!

'வீடெல்லாம் – விளக்கு
வெளிச்சம் இறைக்கும்,
ஆனால் –
அவ் –
விளக்கடியில் – இருட்டு
விலகாது இருக்கும்!

அப்படித்தானோ –
அறிவு வெளிச்சம்
அருளும் – ஒரு சில
ஆசாரியர் வருக்கம்?

ஓர்
உபாத்தியாயன்...

வித்தியார்த்தியின் – மனஇருள்
விலக்கும் விளக்கு; அவனறிவு –
விகசிக்க வேண்டி – மறைப் பொருள்
விளக்கும் விளக்கு!

அவன் –
வான விளக்கு நிகர்த்த
ஞான விளக்கு;
அறிவு மயமாய் –
ஆன விளக்கு!

இருக்குமா அதனடியில்
இருட்டு? இருந்தால் அது –
மெய்விளக்கல்ல;
பொய் விளக்கு – என
பூமி பேசும் – அதன்
பொருட்டு!

யான் –
யாண்டும் தொழும் –
யாதவர் சான்றவர்; அந்த
ஆதவர் போன்றவர்!

ஆக – என்
ஆசிரியப் பிரான் – ஓர்



அகல் விளக்கு அல்ல;
பகல் விளக்கு!

பகல் விளக்கு
புகை கக்குமா?

தனது
தாள் பணியும் -
தடாகத்துத்
தாமரைகள் மேல்...

பகல் விளக்கு
பகை கக்குமா?

சனிப்பதும்
மரிப்பதுமாய்;
மரிப்பதும்
சனிப்பதுமாய்;

சதா -
சலிக்காமல்...

சன்மம் வளர்ப்பதா? என்று -
சீடனை வினவும் சதுரர் - தீய
கன்மம் வளர்ப்பதா? நாவில் -
தொன்மம் வளர்ப்பவர்
தொலையா நோயாய் - நெஞ்சில்
வன்மம் வளர்ப்பதா?

வேதம் - தன்னிடம்
வாசிக்கும் வித்தியார்த்தியை...

பரமபதம் - எனும்
பெறற்கரிய பெரும் -

பேற்றில் சேர்க்க வேண்டிய
பிருகஸ்பதி - புதைச்
சேற்றில் சேர்ப்பதா?

வைகுந்தம் - எனும்
வாய்த்தற்கரிய -

வீட்டில் சேர்க்க வேண்டிய
வித்தியாபதி - ஈமக்
காட்டில் சேர்ப்பதா?

எவரையும் வெகுளாமை;

எவரையும் வையாமை;
எவர் பொருளையும் வவ்வாமை;
ஏதம் புரிவாரோடு ஒவ்வாமை;

என்றெல்லாம் - நூல்கள்
எடுத்தோதும் நெறிகளை -
எண்ணத்திலும் நாவிலும் -
ஏந்தல்...
எவ்வுயிர்க்கும் -
எஞ்ஞான்றும்
ஏற்றம் தரும் என போதித்த -
ஏந்தல்...

கருத்து மோதல்
காரணமாய் - தன்
கருத்தில் கொள்ளலாமா
காந்தல்?

அறச்சாலை போல் -
அறிவுச்சாலை நடத்தும்...

மகானுக் கழகா - தன்னிடம்
மறை பயிலும் - ஒரு
மாணவன் உயிரை - தானொரு
மறலியா யிருந்து மாந்தல்?

ஒரு சாமான்யனிடம்
உருவாகலாம் க்ஷாத்திரம்; அது
ஒரு சன்னியாசியிடம்
உருவாகலாமா? அங்ஙனம் -
உருவானால் - அதன்பின் அவர்
குருவாகலாமா?

கோவிந்தன் -
கூறியதை...

ஏற்காமல்
எனது -
நெஞ்சம் இன்னமும்
நம்ப மறுக்கிறதே!

கல்விப்பால் புகட்டி - எனைக்
காக்க வேண்டிய குருவே -
கள்ளிப்பால் புகட்டி - எனைக்
கொல்ல நினைப்பதை...

176

எண்ணுங்கால் - அந்த
எண்ணமானது
அன்பிலாப் புழுவை
எரியும் வெய்யிலில் -
இட்டாற்போல் - என்
இதயத்தை வறுக்கிறதே!

ஆசிரியப் பிரான் -
அந்த அளவு...

வக்கிர சிந்தனை
வாய்த்தவ ராயின் - அவரது
வாக்கில் உட்காருவதில் -
வான்மறை எவ்வாறு களிக்கும்?

உலகு தொழும்
உபநிடதம் - அவரது
உமிழ் நீரில் - எங்ஙனம்
உவகை எழும்பக் குளிக்கும்?

ஒருவேளை -
உலக இயலை ஒட்டி....

பூவிருக்கும் இடத்தில்
பூநாகம் இருப்பது போல்; தேங் -
காயிருக்கும் இடத்தில்
கடுந்தேள் இருப்பது போல்;

படித்தவன்
புத்தியில் -
புலமையும் புன்மையும்
பக்கம் பக்கம் இருக்குமோ?

புலமையின்
புகழ் நீளத்தை - புந்திக்குள்
புகுந்திருக்கும்
புன்மை சுருக்குமோ?

ஆக
அம்புவிமேல் -
ஆராயிருப்பினும்...
அவரவர்க் குரிய -

ஆகூழ்
அறிவிலும்;
போ கூழ்
புந்தியிலும்;
அமர்ந்து
ஆள்கிறதோ என்னவோ?
ஆசாரியன் விஷயத்திலும் -
அப்படி நான் எண்ணவோ?

அசோதையல்ல;
அரக்கி பூதனை என்று -
கண்ணபிரான்
கண்டு பிடித்தான்;

தாய்ப்பாலாய்த் தந்த
பேய்ப் பாலை - வாய் வைத்து
உறிஞ்சி ஒரே மூச்சில் - அவள்
உயிர் குடித்தான்!

அந்த கோவிந்தன்தான் -
இந்த கோவிந்தனோ?

என்னை
எச்சரித்து - இங்கு
என்னுயிர் காக்க
எழுந்தருளி னானோ?

வன்மமும்
உயிர்க் கொலையும் -
வாழையடி வாழையாய்
வரக் காரணம்...

அகிலம் - இன்னமும்
அன்பைக் கற்கவில்லை;
ஆசானா யிருந்து
அன்னணம்.
அன்பைக் கற்பித்தாரும்
அவ்வழி நிற்கவில்லை!'

இராமானுஜன் சிந்தனை
இவ்வாறு ஓடுகையில்...

வானம் - மெல்ல
விடிந்தது; இருள்
வெள்ளம் - மெல்ல
வடிந்தது!

- வளரும்

# ராமானுஜ காவியம்

## எங்கே ராமானுஜன்?

வெட்ட வெளிப்
பொட்ட லெனும் -
புற்றிலிருந்து
புறப்பட்ட -

வெளிச்சக் கறையான்கள்
வெகு வேகமாக உண்ண உண்ண -

இற்றுவிழுமளவு
இருட்டு மரம் உளுத்தது;
உடன் -
ஊருலகு வெளுத்தது!

விந்திய மலை
விளிம்புகளில் -
சிறுகச் சிறுக
செக்கர் படிந்தாலும்...

ஒற்றையாழித் தேரோ;
ஓரேழு புரவியோ;
கீழ்த் திசையில் -
காணப்பட வில்லை;

கதிர் வருமுன்
கதிரின் கதிர் வந்து -
கபளீகரம் செய்துவிட்டது
காட்டின் அல்லை!

சர்ப்பம் -
சட்டை உரிப்பதுபோல்...

பையப்
பையப்
பூமி -
பனியை உரித்தது;
புலரியைப் -
புத்தாடையாய் தரித்தது!

காற்று -
காலை இளஞ்சூட்டை...

முதுகில் சுமந்தவாறு
முதுவனம் சுற்றியது;

சும்மா -
சுற்றிச் சுற்றி வராமல்...

புல்லிவட்டம் அவிழ்ந்த
புதிய பூக்களின் -
வதனங்களில் வீற்றிருந்த
வெட்க வியர்வையை ஒற்றியது!

சிலபல நாழி
சென்றபின் -
செம்பந்தாய் சூரியன் வந்து
சுடச்சுடப் பிலிற்றிய...

சுவாலையைப் - பூந்

கவிஞர் வாலி

# ஆசானுக்குத் தப்பியவன்
# ஆனைபுலிக்குத் தப்புவானா?
# தங்கைக்குத் தப்பியவன்
# காட்டாற்றுக்குத் தப்புவானா?

23

துவாலையைப் போல் கொண்டு –
தருக்கள் – ஈரத்
தலைகளைத் துவட்டிக் கொண்டன;

வாடையில்
விடிய விடிய –
வதைபட்டுக் கிடந்த வனமே
விருப்பப் பட்டு –

வெய்யோன் உமிழ்ந்த –
வெப்பத்தை வயிறார உண்டன!

பகல் ஏறுமுன் –
பயணத்தைத் தொடங்க வேண்டி...

காலைக்
கடன்களை முடித்த கையோடு –
காசியாத்திரைக் குழு
கணப்பொழுதையும் வீணாக்காது...

மும்முரமாக
முஸ்தீபுகளில் இறங்கியது –

மூட்டை முடிச்சோடு
முகாம்விட்டுப் புறப்பட;



பிரகாசரின் சீடர்கள் -
பம்பரமாய்ச் சுழன்று...

திருமண் பெட்டிகள்;
திருநீற்றுச் சம்புடங்கள்;
மடிகள்;
மடிசஞ்சிகள்;

குண்டுச் செம்புகள்;
குவளைப் பாத்திரங்கள்;
ஓம குண்டங்கள்;
ஔஷதங்கள்;

சின்ன மணைகள்;
சிக்குப் பலகைகள்;
சிக்கிமுக்கிக் கற்கள்;
சமையலுக்கான சாமான்கள்;

அண்டா; குண்டான்;
அடுக்கு; குண்டுச்சட்டி;
என
எல்லாவற்றையும் -
சேர்த்துக் கட்டிய
சாக்குப் பைகள்;

திதிகள் -
தர்ப்பணங்களுக்கான -
திலம்; அரிசி; சின்ன -
தீர்த்தக் கரண்டி;

தருப்பையில் -
தயாரான பவித்திரங்கள்;
புதுப் -
பூணூல்கள்;
மர ஆல்கள்;
மர முட்டைகள்;

ஆக -
அனைத்தையும்...

ஒருசேரப் போட்டுவைத்த
ஓலைப் பெட்டிகள்;
தரைமேல் போட்டு உட்காரத் -
தடுக்குகள்;

இப்படி -
இது எங்கே? அது எங்கே? என்று...

பார்த்துப்
பார்த்துப்
பங்கிடு செய்து கொண்டிருந்த
பரபரப்பில்...

ஆசாரியருக்கும் - அவரது
அத்தியந்த சீடர்களுக்கும்...
இரண்டொரு நாழிகை
இடையில் ஆகிப்போனது -
இராமானுஜன் - உடன்
இல்லாத விஷயம் புலப்பட!

அதுகூட -
ஆசாரியர் யாதவர்...

எல்லாத் தலைகளையும்
எண்ணுகையில் -



மொத்தத் தலைகளில்
ஒத்தத் தலை குறைய -

அந்த -
ஒத்தத் தலைக்கு -
உரியவன் ராமானுஜன் என்று -

தெரிந்தது; அவன்
தொலைந்த விஷயம் புரிந்தது!

கோவிந்தன் -
'கோ'வென்று கூவினான்;

தமையனைத்
தான் பிரிய நேர்ந்ததை எண்ணி -
தலையில் அடித்துக்கொண்டு
தரைக்கும் வானுக்கும் தாவினான்!

அவனை
ஆசுவாசப் படுத்துவது -
பிறருக்குப்
பெரும் பாடாகி விட்டது;

வியப்பு -
விரக்தி -
வெகுளி -
வெருவு -
இத்தகு உணர்வுகளில்
இதுதான் என்று -
இறுதியிட்டு
இனங்காண முடியாதபடி...

கலந்து
கட்டியாக - ஒரு
தவிப்பு - யாதவரைத்
தன்வசப் படுத்திச் சுட்டது!

'கங்கைக்குக்

182

காவுகொடுக்க வேண்டியவனைக் -
காடு
காவு கொண்டதோ?' என்று...

யாதவர்
யோசித்தார் ஒரு விநாடி;
எனினும்
எதையும் வெளிக்காட்டாது -
அவர் தனது சீடர்க்கு - ஓர்
ஆணையிட்டார் மறுவிநாடி!

'மகா மகத்தில்
மகவைத் துலைத்த
மாதா மாதிரி
மசமசவென நிற்பதை விடுத்து -
இறங்குங்கள்
இராமானுஜன் தேடலில் அடுத்து!

அவன் நமக்கு முன்
அதிகாலையில் எழுந்து -
அந்தண்டை இந்தண்டை உள்ள
அடர்த்தியான புதர்ப்பக்கம் -

அற்ப சங்கியைக்கோ;
அல்லது -
பகு சங்கியைக்கோ;
போயிருப்பான்...

தங்கியிருக்கும்
தாவளத்திற்குத்
திரும்பும் வழி
தெரியாமல் -

அலமரல் வந்தவனாய்
ஆயிருப்பான்!

திக்குக்கு ஒருவராய் போய்த்
தேடுங்கள்;
ஒரு யோசனை தூரமாவது
ஓடுங்கள்!'

ஆசாரியரின்
ஆக்ஞையை ஏற்று...

எல்லாச் சீடர்களும்
எழுந்து ஓட -

கோவிந்தன் மட்டும்
குலுங்கி அழுதபடி
குந்திக் கிடந்தான் - ஒரு
குருந்தத்தின் அடியில்...

மகிழ்ச்சியும்;
மருட்சியும்;
மாறி மாறி -
மணி விழிகளில் ஆட!

தமையன் -
தப்பிவிட்டதில் மகிழ்ச்சி;

தப்பித்தவன்
திருக்காஞ்சிக்குத் -
தீர்மானமாகத்
திரும்புவானா என. மருட்சி!

'ஆசானுக்குத் தப்பியவன்
ஆனைபுலிக்குத் தப்புவானா?
கங்கைக்குத் தப்பியவன்
காட்டாற்றுக்குத் தப்புவானா?

நாட்டு விலங்கிடம் சிக்காது
நான் காத்தேன்; அவனைக் -
காட்டு விலங்கிடம் சிக்காது
கடவுள்தான் காக்க வேண்டும்!'

கோவிந்தன் இப்படிக்
குழம்பிக் கிடக்க...

பாதி பொய்யாயும் -
பாதி மெய்யாயும் -
பிரலாபித்தபடியும் -
பிரார்த்தித்தபடியும் -

குறுக்கும் நெடுக்குமாகக்
குருநாதர் நடக்க..

தேடச் சென்ற
தொண்டரடிப் பொடிகள் -
தொய்ந்து நைந்து
திரும்பி வந்தனர் -

வெறுங் கையோடும்;
வேர்த்த மெய்யோடும்!

"ஆசிரியப் பிரானே!
அங்கிங் கெனாதபடி...

குட திசை;
குண திசை;
வட திசை;
தென் திசை;

என –
எங்கணும்...

ஒரு யோசனையல்ல;
இரு யோசனைகள் –

அலைந்தோம்;
அலைந்தோம்;
அலைந்து அலைந்து –
உலைந்தோம்!

வழியில் தென்பட்ட
வேடரைக் கேட்டோம்;
அம்மணமா யிருந்த
ஆதிவாசிகளைக் கேட்டோம்;

மரம்;
மட்டை;
புல்;
பூண்டு;

எல்லாவற்றிடமும் –
ஏகோபித்த குரலில்...

'எங்கே ராமானுஜன்?
எங்கே ராமானுஜன்?'
என்று – எட்டூர்
எட்டும்படி கேட்டோம்;

இனி –
இவ்வணம்...

கூவக்
குரலில்லை;
கொட்டக்
கண்ணீரில்லை;

'விதி
வலியது!'
என
இந்த –
விவகாரத்திற்கு – ஒரு
முற்றுப்புள்ளி போட்டோம்!

எம்பிரானே!
எங்கள் ஏந்தலே!

எமது புத்திக்கு –
எட்டிய அளவில்...

இராமானுஜனை
இரையாக –
சிங்கம் புலி
சாப்பிட் டிருக்கலாம்;

காலக்
கணக் கொழிந்ததென – அவனைக்
கூற்றுவனும்
கூப்பிட் டிருக்கலாம்!"

சீடர்கள் இன்னணம்
செப்பியதும்...

கோவிந்தன்
குமுறி –
'அய்யோ! அய்யோ!' என்று
அழுதான் ஒரு பாட்டம்;
வனத்தில்
வளைய வரும் –
புனல்களைப்
புறங் கண்டது...

அவனது
அழகிய –
கன்னங்கள் வழி இறங்கிய
கண்ணீரின் ஓட்டம்!

தனக்குத் தானே –
தலையில் குட்டிக் கொண்டான்;

எதிரில்
இருந்த –
தருவொன்றில்
தலையை முட்டிக் கொண்டான்!

வனம் முற்றும்
வெறித்து நோக்கினான்;

பின் – சில விநாடி

பேசா திருந்து
விழிநீரை - விரல்களால்
வழித்துப் போக்கினான்!

அரற்ற
ஆரம்பித்தான்
ஆகாயத்தைப் பார்த்து;
ஆன பல மெல்லாம் சேர்த்து!

"அண்ணா!
அண்ணா!

பெரியம்மாவுக்கு -
பதிலென்ன சொல்வேன்?

என்பால் - இந்த
எளியேன் பால்...

அனவரதமும்
அனையொத்த -
அன்பு காட்டிய
அருளரசி - என்
மன்னியின்
முன் -
தமியேன் எங்ஙனம்
தலை நிமிர்ந்து செல்வேன்?

'கணவனைக்
காக்க -
வக்கில்லையேல் - ஏனடா
வழித்துணையாய்ச் சென்றாய்?

வன -
விலங்கு - என்
வேந்தனைத் தின்ன - நீ
வேடிக்கை பார்த்தா நின்றாய்?

என் -
நாயகன் தம்பியே!
நீ யெனக்கு...

மஞ்சனா?
மறலியா?

மாதா நிகர்த்த
மன்னியின் -
மஞ்சள் குங்குமத்தை;

மல்லிகைப் பூச்சரத்தை;
மாங்கல்யத்தை;
மெட்டியை;

கொய்யவோ - நீ
கொழுந்தன் ஆனாய்? என்
கொழுநனின்
கூடப் போனாய்?'

இப்படியெல்லாம் - மன்னி
இடித்துரைத்தால் - அண்ணா!

ஏழை -
எப்படித் தாங்குவேன்?
எரிதழல் மேல் -
எப்படித் தூங்குவேன்?"

இன்னணம் - அங்கு
இருந்தோர்
இதயமெலாம் - பாகாய்
இளகும் வண்ணம்...

கோவிந்தன்
கதறி முடித்ததும் -

யாய்போல்
யாதவப் பிரகாசர் -
அவனைத் தேற்றினார்; ஓர்
அருளுரை ஆற்றினார்!

அவ்
அருளுரை...

இறப்பு பிறப்பு பற்றிய
இன்னொரு கீதையா யிருந்தது;

அதே நேரத்தில்
அது...

தமையன் குறித்துத்
தவித்துத்
தண்ணீராய்ப் போன
தம்பி கோவிந்தனை...
தன் வழிக்கு - அவர்
திருப்பும் பாதையாயிருந்தது!

**- வளரும்**



"கோவிந்தா! ஏன் –
கோழம்பம்? என் –
வித்தியார்த்தி இப்படி
விசித்தால் – எனக்கு
வேண்டாதார் செய்வரன்றோ
வேழம்பம்!

'உனக்கு
உலக வாழ்வு திகட்டவில்லை;
அதிலிருந்து
அறவே மீள –
அத்தியாவசியமான
ஆன்ம அறிவை...

நாளும் போதும் –
நானுனக்குப் புகட்டவில்லை!'

என்றல்லவோ –
எனைப் பேசும் ஊர்;

மண்ணும் சகதியும்
மண்டிக் கிடக்கும் –
மாணாக்கர் தமது
மனக் கேணிகளில்...

வாத்தியாராகிய நான் –
வாரவில்லையா தூர்?

உன்னையும் என்
உள்ளத்திற்கு –
ஓர் அணுக்கமான சீடன் – என
ஓர்;

ஆசாரியன் அருளுரை

# ராமானுஜ காவியம்

கவிஞர் வாலி



உனக்கு நான்
ஊட்டாத ஞானப்பாலா?
நீயே –
நினைவுகூர்!

சரியாக – நான்
சாணை பிடிக்கவில்லையோ?
ஏன் உன் அறிவில்
ஏறவில்லை கூர்?
ஏறியிருந்தால் – உனை
என் செயும் – நீ
சந்திக்க நேரும்
சோகாப்பு; சோர்?

என்னிடம் –
ஏடு படிக்கும்...

மாணாக்கர் எல்லாருமே
முத்தினம்; எனினும் –
ராமானுஜனோ – விலையில்லா
ரத்தினம்!

இருப்பினும்
இற்றை நாளில் –
இராமானுஜன்
இல்லை என்பதில்...

என்னைவிட – அவனை
எண்ணி எண்ணி –
அழுகிறாயே விக்கி; நீதான் –
அதிகமான துக்கி!

அவனோடு – எனக்கு
அடிக்கடி யிருந்தது –
யுத்த சம்பந்தம்; உனக்கோ –

188

ரத்த சம்பந்தம்!

ஆகுமா
அம்புவியில் -
ரத்த சம்பந்தம் போல் -
மத்த சம்பந்தம்?

நானறிவேன்;
நீ...

அடங்கி ஒடுங்கி நிற்பாய்
அவன் முன்;
அதற்குக் காரணம் - உனக்கு
அவன் முன்!

அவன் உன்னை



அன்பு கொண்டு -
ஆண்ட மன்!
ஆயினும் என்?

மன்னுக்கு ஒருமாதிரியும் -
மன்பதைக்கு ஒருமாதிரியுமா -
மரணம் வருகிறது?
அது -
ஆராயிருப்பினும்...
முன்கூட்டியே -
முடிவான தேதிக்கு -
முக்கியத்துவம் தருகிறது!

எமன் இருக்கிறானே -
எமன்...

அந்த விஷயத்தில்
அவன் அந்தகன்;
ஆதலால்தான் - பெயராலும்
அவன் அந்தகன்!

தருமி;
கருமி;

யோகி;
போகி;

பண்டிதன்;
பாமரன்;

தனவந்தன்;
தரித்திரன்;

ராமன்;
ராவணன்;

கண்ணன்;
கம்சன்;

என்றெல்லாம்
எடை பார்த்தா
எமன்
எறிகிறான் பாசத்தை?
மேற்சொன்ன பெயர்களில் -
மேடையேறிய பாத்திரங்கள்
கூத்து முடிந்தபின் -

கலைக்க வேண்டாமா வேசத்தை?

இராமானுஜனுக்கு
இவ்வளவுதான் எனும்படி
சின்னப் பாத்திரம்; எனவே -
சீக்கிரம் முடிந்தது கூத்து;

காரணத்தோடு நடந்த
காரியத்தின் பொருட்டு -
நீயேன் கலங்குகிறாய்
நீள்விழியில் கண்ணீர் பூத்து?

அவதார புருஷர்களாகி
அவனிக்கு வந்தவர்களே -
அரிதார புருஷர்களாகி
ஆடவேண்டியபடி ஆடிவிட்டு...

ஏறியிருக்கின்றனர் வானம்;
எம்மாத்திரம் நீயும் நானும்?

அது சிறியதோ;
அது பெரியதோ -
அவனவன் பாத்திரத்தை
அவனவன் -

கூத்துக்
கட்டியபின்...
நெறிமுறை தவறாது
நடித்து முடிப்பானாயின் -
நல்ல பெயரோடு
நிச்சயம் போய்ச் சேரலாம் வீடு;
நான் சொல்வது - முனம்
நாயன்மார் எழுதிவைத்த ஏடு!

கூத்தனைத் தொழும்
கூட்டத்தார்க்குத் தெரியாதா -
கூத்தைப் பற்றி;
ஆய்ந்து பார்
அவர்கள் -
கூறிப் போன
கூற்றைப் பற்றி!

ஆதிசங்கரர்
அருளிய...
பக்திப்

190

பனுவல்
பஜகோவிந்தம்; அது -
நிலம் இறங்கிய
நீலகண்டன் நாவில் பூத்த
நிஜ கோவிந்தம்!

பிறந்த எவனும் - புதிதாய்ப்
பிறந்தவனல்ல; அஃதேபோல்
இறந்த எவனும் - புதிதாய்
இறந்தவனல்ல!

பலமுறை பிறந்திருக்கிறான்;
பலமுறை இறந்திருக்கிறான்;
உலகாயதத்தில்
ஊறிப்போய்
உள்ளொளி அற்றதனால் - அந்த
உண்மையை மறந்திருக்கிறான்!

பிறவிதோறும் -
பிறவிதோறும் -

ஒருவனுக்கு
ஒன்றா இரண்டா -
உறவுகளும்; அவ்
உறவுகளின் இறவுகளும்?

இன்னணம் -
இருக்கையில்...

நிலையென்று ஆரத்தழுவி
நேசிப்பதும் - நிலை
இலையென்று ஆனபிற்பாடு
இரங்கற்பா வாசிப்பதும்...

சராசரிகளின்
செய்கை; அத்தகையோர்
உறுவதெங்ஙனம்
உய்கை?

அந்த அந்த உறவுகள் -
அந்த அந்த இறவுகள் -
அந்த அந்தப் பிறவியோடு சரி;

தொட்டகுறை -
விட்டகுறை -
என்றெல்லாம்
எழுதலாம் கவி;

எது -
எப்படியிருப்பினும்...

பூர்வஜன்ம உறவும் -
பூர்வஜன்ம இறவும் -
புரியாதவரை க்ஷேமமெனச் சிரி!

ஆண்டவன் மட்டும் -
'அய்யோ! பாவம்!' என்று...

அவற்றை
அறிவிப்பானாயின் -
அனர்த்தம் நேரும்;
ஆடிப்போகும் குடும்ப வேரும்!

பெண்டாட்டியாய் - இப்
பிறப்பில் இருப்பவள் -
பெற்ற தாயாய்ப் - போன
பிறப்பில் இருந்தவள்...
எனத் தெரியவந்தால் -
என்னாவான் ஒருவன்?
உடனே பள்ளியறைவிட்டு -
வெளியே வருவன்!

புருஷனாய் - இப்
பிறப்பில் இருப்பவன் -
பிதாவாய் - போன
பிறப்பில் இருந்தவன்...

எனத் தெரியவந்தால் -
என்னாவாள் ஒருத்தி?
வாழ்நாள் முழுதும் -
விலகிநிற்பாள் தனை வருத்தி!

மயக்கத்தையும் -
மறதியையும் -
வைத்தானே மனிதனுக்கு - அவனை
வாழ்த்து; அவன்
திருமுன்பாக - உனது தலையைத்
தாழ்த்து!

சுருக்கமாகச் -
சொல்லுகிறேன்...

இந்த -

இராமானுஜன் - உன்
அண்ணன் என்று அறிந்ததால்
அவன் மறைவுக்கு அழுகிறாய்;

இதே -
இராமானுஜன் -

போன பிறப்பில் - உன்னுயிரைப்
போர்வாளால் போக்கிய - ஒரு
மன்னன் என்று அறியவரின்
மறைவுக்கு அழுவாயா? மாட்டாய்!

ஆக -
அன்புச் சீடனே!
உன்னை அழவைப்பது
உறவு; அதைத்
தூர்க்க ஒரே வழி
துறவு!

மழித்தல் நீட்டல் இன்றியே
மனத்தளவு கொள்; ஞான
முதிர்ச்சியெனும் வாளெடுத்து
மும்மலத்தைக் கொல்!

இறப்பு பிறப்பு
இரண்டுமே பிணி;
இறப்பு பிறப்பு
இல்லா தொழிய -
இறப்பு பிறப்பு
இல்லானைப் பணி!

வா! போகலாம் காசி; போய் -
வாங்கலாம் விசுவநாதன் ஆசி!"

யாதவர் - சொன்ன
யாவையும்...

கோவிந்தன்
கருத்தில் வாங்கினான்;
வல்லான்
வகுத்தபடிதான் -
எல்லாம் நடக்கும்
எனக் குழப்பம் நீங்கினான்!

விந்திய மலைச்சாரலிடம் -
விடை பெற்றுக் கொண்டு...
கிளம்பினர்
காசியாத்திரைக் குழுவினர்;
இராமானுஜன்
இறந்ததாக எண்ணி -
அவன் நினைவை
அங்கேயே கை கழுவினர்!

ஓர் -
ஒற்றையடிப் பாதையில்...
போகுமிட மறியாது
போய்க்கொண்டிருந்தான் -
புகழ்சால் இராமானுஜ நம்பி;
புரக்கும் இறையவனை நம்பி!

வெது வெதுப்பான -
வெயில் பட்டு...

மூலை முடுக்கிலெலாம்
முளைத்திருந்த -
மூலிகைச் செடிகள்
மூரி முறித்தன;
மூரி முறிக்கையில் - ஈர
முத்துக்கள் தெறித்தன!

முற்பகலுக்குச் - சற்று
முன்னதாகத்தான்
மொத்தக் காடும் - கண்
முழித்தது;

கன்னா பின்னாவென்று
கரைந்தபடி பறந்த -
செம்போத்துகளின் சத்தம்
செவிப் பறையைக் கிழித்தது;

அடவி முழுதும் - சொல்லில்
அடங்கா அழகு கொழித்தது;
துறக்கம்
துறக்கம் என்று -
புராணங்களில் புகழப்படும்
புரந்தரன் புரியை...

வனம் - தனது
வனப்பால் பழித்தது;
ஆயினும் - ஓர்

192

அச்சம் பரவி
அச்சூழலின் சௌந்தரியத்தை
அழித்தது!

பிரமாண்டமான அருவியொன்று -
பேயிரைச்சலுடன்..

முகில்களின்
முகாமா யிருக்கும்
முதுமலையின்
முகட்டிலிருந்து -

தலைகுப்புறத்
தரையில் குதித்தது;
யாது காரணமோ?
யார் காரணமோ?
தண்ணீருக்கு அப்படியொரு -
தற்கொலை எண்ணம் உதித்தது!

மத்தவாரணங்களோடு சேராத -
மத்தவாரணம் ஒன்று...

வேழம் விரும்பும்
வேழம் விளையும் -
வனப்பகுதியொன்றில் புகுந்து
வெறித்தனமாய்ப் பிளிறியது;

அதைக் கேட்டு -
ஆற்றோரப் படுகையில்...

மடியில் வாய்வைத்த
மழலைக்குப் - பாலூட்டி நின்ற
பிடியொன்றின் முகம்
பீதிவயப்பட்டு வெளிறியது!

செங்கட்
சீயம் ஒன்று -
முழை நீங்கி - பிடர்
முடி சிலிர்த்து நின்று...

பையப்
பையப் -
பதுங்கிப்
பதுங்கிப்

பின்சென்று -
பின் பொசுக்கென்று...

நாலுகால் பாய்ச்சலில் - ஒரு
நவ்வியைக் கவ்விப் பிடிக்க -
கருணை மனு எழுதிக் -
கலைமான் கண்களால் படிக்க...

காட்டெருமைகளும்;
காட்டாடுகளும்;
காட்டுப் பன்றிகளும்;
கதி கலங்க -

திமு திமுவென்று
திசைக் கொன்றாய் ஓட -

கிளம்பிய தூசி
ககனத்தை மூட -

தூரமாய் - ஓர்
ஓரமாய் நின்று...

இவற்றைப் பார்த்த
இராமானுஜன் -
'எல்லோர்க்கும் உள்ளவன் -
எனக்கும் உண்டு!' என்று...

ஏழுமலை -
எம்பிரானை எண்ணியபடி -

ஒரு
மரத்தடியில் -
மூர்ச்சித்து விழுந்தான்;

கல்முள் குத்தி -
காலெலாம் குருதி -
கொட்டக் கொட்ட -
கொட்டக் கொட்ட...

செயலற்று
சிறு போழ்து -
விழுந்து கிடந்தவன் - பின்பு
விழித்து எழுந்தான்!

நேரில் - இருவர்
நிற்கக் கண்டான்;
வியப்பெய்தி - அவர்களை
விழிகளால் உண்டான்!

**- வளரும்**

## வேடர் தம்பதி

ஒரு
கருவரையும்;
கலைமானும் போல் - நேரில் நின்ற
இருவரையும்...

இராமானுஜன் -
இமை கொட்டாது பார்த்தான்;

வில்லேந்தி நின்ற - அவ்
வில்லியையும்; அவ்
வில்லியை நெருங்கி நின்ற
வல்லியையும்;

அவிர்ந்த - அவ்
ஆயிழை தோற்றம்
அன்பு ஊட்டியது!

அவன் - இருட்டு;
அவள் - இரணியம்;

கங்குலும்
கனகமும் -
கல்யாணம்
கட்டியது
கண்டு...

# ராமானுஜ

கண்டு - தன்பால்
கழிவிரக்கம் கொண்டு -

காக்க வந்தவரோ? உயிர்
போக்க வந்தவரோ? எனும்
சமுசயத்தில் - அந்தச்
சீதளமான சூழ்நிலையிலும்...

தேகம் -
தெப்பலாய் வேர்த்தான்!

அவன் -
அவர்களைக் கண்டு -
அவ்வாறு குழம்பியதில் - ஓர்
அர்த்தம் உண்டு!

ஆடவன் தோற்றம்
அச்சம் மூட்டியது;
ஆடகம் போல்

வித்தியாசமான ஜோடி - என
வியந்தது அரணியம்!

வேடுவன் மீதும் -
வேடுவச்சி மீதும் -
வைத்த விழிகளை
வாங்க வொண்ணாது...

ரொம்ப நேரம் -
ராமானுஜன் தவித்தான்;

நேர் -
நிற்பது...

ரட்சகனா?
ராட்சசனா?
ராகவனா?
ராவணனா?

எனுங் கேள்விகளையே

ஏராளமாய்...

மேலும் மேலும் - தன்
மனத்துள்ளே குவித்தான்!

ஓங்கி
உலகளந்தான் போல் -
வேடுவன்
வேண உயரமாயினும் -

உயரத்திற்கேற்ற
உடல் வாகு;

தோளில் இருந்து
தொங்கும் இரு கரம் - முழந்
தாளில் இறங்கி - அதனைத்

தடவி இருக்கும் எனும்படி...

அவன் ஓர்
ஆஜானுபாகு!

இடமும் வலமும்
இரண்டு -
முசுக்கட்டைகளை
முகத்தில் ஒட்டினாற்போல்...

புசுபுசுவென்று -
புருவங்கள்;

கணகணவென்று
கனன்று கொண்டிருக்கும் - இரு
தணல்

## 25



துண்டுகள் போல்...

வெம்மை உமிழும்
செம்மை விழிகள்;

செய்ய முகத்தை
செம்பாதியாய்ப் பிரிக்கும் -
நேரிய
நாசி;

நாசியின்
நிழலில்...

செம்பருந்து ஒன்று
சிறை விரித்தாற்போல் -
சற்றே
செம்பட்டை ஏறி...

விறைத்த முனைகளோடு
வீற்றிருக்கும் வீசை;

விம்மி நின்ற
விரிமார்பில் -
வியாக்கிர நகங்களால் ஆன
வடம்;

இடுப்பில்
இறுக்கமாகக் கட்டிய -
உடும்புத் தோல் பட்டை; அதில்
உறையோடு ஒரு பிச்சுவா;

மரவுரியில்
மூலக் கச்சம்;

கால்களில்
காட்டுமரக் குறடு;

சிரசில்
சின்னச் சின்னப் -
பிரம்புகளால்
பின்னிய முடிச்சாத்து;

முடிச்சாத்தின் - ஒரு
முனையில் செந்நாரையின் இறகு!

அம்புப் புட்டில் -
அகன்ற முதுகில் தொங்க...

கைவில்லின்

கீழ்முனையை -
நிலத்தில் குத்தியவாறு
நின்றிருந்தான் வேடுவன்; அவன் -

நீண்ட தோளை - உரசியவாறு
நின்றிருந்தாள் வேடுவச்சி!

ஆராதிக்கத்தக்க
அழகியாய்த் தோற்றிய - அவ்
வேடுவச்சி - இள
வேயனைய தோளி;

வெளிச்ச
விழியிரண்டும் -
வெண்கதிர் செங்கதிர்
வந்தாடும் தூளி;



மாம்பழக் கதுப்புகள் போல் -
மொழுமொழு கன்னங்கள்;

வரிசையாய்
வைத்திருக்கும் -
முல்லை
மொக்குள்கள் போல் -

பால்வண்ணப்
பற்கள்;

முறுவல் உட்கார்ந்திருக்கும் -
முளரி மடலொத்த உதடுகள்;

ஆடிபோல்
ஆனனம்;

அந்தகாரத்தை
அவமானப்படுத்தும் -
ஆண்டாள் கொண்டையைக் கொண்ட
அளகம்;

வேடசேரி வாழ்
வஞ்சியர்க்கே உரிய -
ஆடைகள்;
அணிகள்!

நெருப்பில் நீராட்டினாற்போல்
நாயகன்;
நெருப்பாகவே



நாயகி;

அருகருகே -
அமாவாசையும் அம்புலியும்!

இப்போது -
இராமானுஜனுக்கு...

அவர்களைப் பற்றிய
அச்சம் அகன்றது;
ஆனால்...
அந்த -

திவ்விய தம்பதியின்
திருமுக விலாசங்கள் கண்டு -

'வேடன் -
வேடன் அல்ல;
வேடன் போல்
வேடம் போட்ட
வேடன்;

வேடுவச்சி -
வேடுவச்சி அல்ல;
வேடுவச்சி போல்
வேடம் போட்ட
வேறொருத்தி!'

எனவோர் - ஐயம்
எழுப்பி...

'உற்றுநோக்குக!' என்றவன் -
உள்மனம் புகன்றது!

இந்த தம்பதியை -
இன்னாரென்று தெரிந்துகொள்ள...

இராமானுஜனின்
இதயம் விழைய; அதே நேரம் -
இரேசக பூரகத்தில்
இளைப்பும் களைப்பும் இழைய;

முடியாமையால்
முனகினான்; எனினும் -

வார்த்தைகளை
வலியத் திரட்டி -
வேட்டுவ தம்பதியை
வினவினான்!

'நீங்கள் யார்?
நல்லார்போல் தெரிகிறீர்கள்!
வில்லும் கையுமாய் - ஏனிந்த
வனத்தினில் திரிகிறீர்கள்?'

வேடன் சிரித்தான்; பின் -
விடை விரித்தான்!

'இளைஞனே! நாங்கள்
இருவரும்...

வேடர் குலம்; வில்தான்
வேடர் பலம்!

எங்கள்
இனத்தார்க்கு -

கை
கால்
கண்
காது

இவைபோல் -
இந்த...

வில்லும்
ஓர் அங்கம்; இந்த
வில்லங்கம் இலையேல் - விளையும்
வில்லங்கம்!

வாழ்கிறோம்
விந்தியமலைச் சரிவில்; எம் -
வாய்க்குணவு
வருவித்துத் தரும் வரிவில்!

அது கிடக்கட்டும்;
ஆர் நீ? எவ் -
ஊர் நீ? எமைத் -
தேடி வந்த துணையாய்த்
தேர் நீ!

வனம்
வந்து –
திரும்பும் வழி தெரியாது
தயங்குகிறாயா?

மித
மிஞ்சிய –
மனச்சோர்வால்
மயங்குகிறாயா?

இளைஞனே!
இது –

கள்வர் நிறைந்த
காடு; அவர்கள்
விலங்கை விடவும்
விளைப்பர் கேடு!

அஃதன்றி – இவ்
அடவியில் –

குகைவாழ் – பழங்
குடியினரும் உண்டு; உன்னைக்
கண்டுவிட்டால் – தம்
குடற்பசியாறுவர் உண்டு!

அவர்களது
ஆகாரம் மனித மாமிசம்;
ஆதலால் தப்பு;
ஆகாது இனியும் தாமசம்!

எங்கு போகணும்? சொல்!
இட்டுச் செல்கிறோம்; உன்னை
உன் ஊரருகே –
விட்டுச் செல்கிறோம்!'

வார்த்தைகளிலும்
வண்ண விழிகளிலும்
வாஞ்சையெனும் நறவம்
வழிய வழிய...

வேடுவன் இன்னணம்
விரித்தது கேட்டு...

இராமானுஜன் –

இளைப்பு நீங்கி மகிழ்ந்தான்;

இத்தருணம் – தன்
இடர் களையப் போந்த
இறையருளை நினைந்து
இதயம் இளகி நெகிழ்ந்தான்!

'அய்யா!
அடியேனின் ஊர்...

தெற்கே – வெகு
தொலைவில் இருக்கும்
திருக்காஞ்சி – எனும்
திவ்வியத் தலம்;

வள்ளல்
வரதராஜனும் –
தண்ணளி மிக்க
தாயார் பெருந்தேவியும் –

கோலாகலமாகக்
கொலுவமர்ந்து –
காலாகாலமாய்க்
கோலோச்சும் –

புகழ்சால்
புண்ணிய நிலம்!'

இப்படி –
இராமானுஜன் கூறியதும்...

வேடுவன் –
வேடுவச்சியைப் பார்த்து –
இளநகை ஒன்றை வீசினான்; பின்
இராமானுஜனிடம் பேசினான்!

'நல்லது;
நாங்களும்...

காஞ்சி வழியேதான் – தென்
கோடிக்குப் போகிறோம்;
உடன் வா; உன்னை உனது
ஊரருகே விட்டுச் சென்று –
ஒருயிர்க்கு உறுகணில்
உதவியவர்களாய் ஆகிறோம்!'

வேடுவனும் -
வேடுவன் மனைவியும் முன்செல...

அவர்தம்
அடியொற்றி -
அண்ணல் இராமானுஜன்
அயர்வுகள் இலாது பின்செல...

போகப் போகப்
போய்க்கொண்டேயிருந்தது காடு;

உச்சந்தலையில்
உட்கார்ந்து -
உரோமங்களைப் பொசுக்கியது
உச்சிவெய்யில் உகுத்த சூடு!

காதங்கள் பல
கடந்த பின்பு -
மூவிரு கால்களும்
முட்டி வலிக்க நடந்த பின்பு -

குடதிசைக்
குன்றில் போய்க்
கதிர் விழ;
கங்குல் எழ;

மூவரும் - ஒரு
மரத்தடியில் -
இரவைக் கழித்தனர்;
இடையிடையே விழித்தனர்!

நடு -
நிசி; வானில்
சிசுப் பருவத்து
சசி!

'தாகமாயிருக்கிறது;
தண்ணீர் வேண்டும்!'
வேண்டினாள்
வேடனின் வல்லி;

'கிட்டத்தில் - ஒரு
கிணறு உண்டு;
எங்ஙனம் அதில்
எடுப்பது நீர் - இந்த
இருட்டில் - அதன்
இருப்பிடம் கண்டு?

பொறுத்திரு;
புலரட்டும் காலை; உனக்குத்
தண்ணீர் கொண்டு வருவதுதான் -
தலையாய வேலை!'

புரண்டு படுத்தான் -
புருஷனாகிய வில்லி!

இருவரின் உரையாடலை
இராமானுஜன் கேட்டு
விடிந்ததும் விடியாததுமாக
விரைந்து ஓடி...

கிணற்று நீரை - உள்ளங்
கைகளில் ஏந்தி - மும்முறை
கொண்டுவந்து - அவர்க்குக்
கொடுத்தான்;

நான்காம் முறை
நீரெடுத்து வருகையில்...

வேடுவன்
வேடுவச்சியைக் காணாது
வியப்புற்று - நாலாபுறமும்
விழிகளைத் தொடுத்தான்!

கைவில்லை ஏந்திய
கணவனையும்; நுதலில்
மைவில்லை ஏந்திய
மனைவியையும்;

கண்டான் இல்லை; கருணைக்குக்
கண்டான் எல்லை!

வானில் - செங்கதிர்
விரிந்தது;
தொலைவில் புண்யகோடி விமானம்
தெரிந்தது!

- வளரும்



# ராமானுஜ காவியம்

26

## உள்ளங்கை கொணர்ந்த நாயனார்.

வேடுவன்;
வேடுவச்சி விடாய் தீர்க்க...

இரு கைகளால் -
இராமானுஜன்...

எந்தக் கிணற்று நீரை
ஏந்தி வந்தானோ -
அந்தக் கிணற்று நீரை
அவ்வூர்ப் பெண்டிர் வந்து -

ராட்டினத்தில் சேந்துவதை
ராமானுஜன் கண்டான்;
அவர்களின் -
அணிமையில் சென்று...

'இவ்வூர் -
எவ்வூர்?' என்றான்!

அவனை -
அப்
பெண்டிர் - வியப்பொடு
பார்த்தனர்; பிறகு - அவன்
வினாவிற்கு -
விடையை வார்த்தனர்!

'புண்ய கோடி விமானத்தைப்
பார்த்துமா புரியவில்லை? ஓ!
அயலூரோ நீங்கள்?
அதனால்தான் தெரியவில்லை!

✧ கவிஞர் வாலி

ஓவியம்: மாருதி

பெருந்தேவியோடு – வரதராஜப்
பெருமாள் வீற்றிருக்கும் –
காஞ்சீபுரமய்யா;
காஞ்சீபுரம்!'

ராமானுஜனுக்கு ஏற்பட்டது –
ரோமாஞ்சனம்;

புளிஞர் குலத்துப்
புருஷன் மனைவியாய் வந்தது –
பெருமாளும் தாயாரும் – எனப்
புரிந்து கொண்டதும்...

அவர்களது – அந்த
அளப்பரிய கருணைக்கு –

நன்றிகாட்ட – தன்
நெஞ்சுக்குள் நிகழ்த்தினான் –



நீர்மல்கும் கண்களால்
நீராஞ்சனம்!

பிறகு –
பரவசம் பீரிட...

தேவராஜப் பெருமாள்
திருக்கோயில் இருக்கும் –
திக்கை நோக்கி
தெண்டம் சமர்ப்பித்தான்;

ஒருகணம் – உணர்வுகளை
ஒருமுகப்படுத்தி...

பிராட்டி பெருமாளன்றி
பிற நினைவுகள் – உட்
புகாவணம் – புந்தியின்
புறக்கதவு சாத்திவைத்தான்!

'சேடன் மேலுறங்கும்
செம்பொருளே! என்பொருட்டு –
வேடன் வடிவெடுத்து
வந்தனையோ?

வெய்ய வனத்திடையே
வழித்துணையாய் – உடன்வந்து
நொய்ய திருவடிகள்
நொந்தனையோ?

கங்கை நீரளைந்த
கருமுகிலே! நான் கொணர்ந்த –
அங்கை நீர்விரும்பி
அருந்தினையோ?

சாலை மாணவனாய்ச்
சாக நின்றேன்; நான் பிழைக்க
வேலை மெனக்கெட்டு
வருந்தினையோ?'

சாலைக் கிணற்றின்
சமீபமாக நின்றபடி...

இவ்வாறெலாம்
இராமானுஜன் –

கண்ணீர் மல்க
கச்சிவரதனைத் துதித்தான்;

பிறகு -
பெற்ற தாய்; தாரம் - நினைவுவர
விரைந்து சென்று - தன்
வீட்டு வாசலை மிதித்தான்!

தாய் காந்திமதிக்கும்;
தாரம் தஞ்சமாம்பாளுக்கும்;
வாய் வார்த்தை -
வரவில்லை...

இளையாழ்வான் -
இராமானுஜன் -
வாசல் ரேழியில் - திடுதிப்பென
வந்து நின்ற நாழியில்!

வியப்பு அடங்கி - அவர்கள்
வாய்திறந்து பேசுமுன்...

என்ன நடந்தது?
ஏது நடந்தது?
தான் - எதனால்
திரும்ப நேர்ந்தது?



அத்துவானக் காட்டில்
அதோகதியாய் நிற்கையில் -
அத்திவரதன் அருளால்
அபாயமின்றி வந்து சேர்ந்தது...

அனைத்தையும்
ஆதியோடந்தமாக -
அன்னைக்கும்
அகமுடையாளுக்கும்...

ஒன்றுவிடாமல்
உரைத்தான் -
இராமானுஜன் எனும்
இனிய உளத்தான்!

தஞ்சமாம்பாள்
தாலிச் சரட்டை எடுத்து -
விழிகளில் ஒற்றிக்கொண்டு
வரதனுக்கு நன்றி சொன்னாள்;

'கருமத்தை அனுசரித்து -
காரியங்கள் ஆகின்றன!'
என்று - தனக்குள்
எண்ணிக் கொண்டு...

உத்தம புத்திரனின்
உயிர்ப் பறவையை
உண்ண நினைந்த; அதற்கான -
உபாயத்தில் முனைந்த;

யாதவரைப் பற்றி
யாதொன்றுமே -
பேசாது நின்றாள் காந்திமதி;
பொறையில் அவள் பூமி அன்னாள்!

நேரம் - சிறிது
நகர்ந்த பின்பு...

காந்திமதி - தன்
கன்றின் தலையைக் கோதினாள்;
அடுத்து - அவன்
ஆற்றவேண்டியதை - ஓர்
அறிவுரையாய்
அவன் செவியில் ஓதினாள்!

'ராமானுஜா! என் -
ராஜகுமாரா!
ஆசூரி குலத்தில் -
அவதரித்த தீரா!

நடந்தவற்றை - திருக்கச்சி
நம்பியிடம் சொல்;
எவ்வழி அவர் காட்டுகிறாரோ
அவ்வழியில் செல்!

அவர் -
ஆதி நாளில்...
சீதாராமனுக்குக் - கனிதந்த
சபரியின் அம்சம்; அவரால் -
படிமிசை தழைக்கும்
பாகவத வம்சம்!'

மாதா சொல்லைத் தட்டாத பிள்ளை -
மறுநாளே...
திருக்கச்சி நம்பியைத்
திருக்கோயிலில் சந்தித்து
விளக்கினான் - முழு
விருத்தாந்தத்தையும்;

வரதராஜனும் - அவன்
வலமார்பில் வாழும் தாயாரும் -
வேடன் வேடச்சியாய் வந்து
விளைவித்த சித்தையும்!

செய்திகள் கேட்டு - நம்பி
சிலிர்த்துப் போனார்;

இராமானுஜனை -
இறப்பிலிருந்து மீட்ட...

வரதனின் திருவடியை
வாயால் மனத்தால் தொழுது - சில
விநாடிகள் - தனது
வசமிழந்தவர் ஆனார்!

206

எல்லாம் வல்லவனின்
எளிவந்த தன்மையை;
சொல்லால் சுட்டவொணாச்
சௌலப்பியத்தை;

கிருபையை;
கடாட்சத்தை;
தயையை;
தண்ணளியை;

நெக்குருக
நினைந்து நின்றார்;
நெடியமேனி -
நனைந்து நின்றார்!

சற்றுப் பொறுத்து
சகஜ நிலைக்குத் திரும்பி...

தன் கருத்தைத்
தெரிவித்தார் - தினப்படி
தேவராஜனுக்கு விசிறி - வீசும்
தேவராஜனின் விசிறி!

'இராமானுஜா!
இனி நீ...

தினம் -
தினம் -
தேவராஜப் பெருமாளின் -
திருமஞ்சனப் பணியைச் செய்;

அவனுக்கு -
அங்கை நீர்
அள்ளிவந்து தந்தாயே -
அந்த...

சாலைக் கிணற்றிலிருந்து
சலமெடுத்து வந்து - அதில்
தாயார் பெருமாளைத்
திவ்யமாய்த் தீர்த்தமாட வை!'

திருக்கச்சி நம்பியின்
திருவுளப்படி -
தீர்த்தக் கைங்கரியத்தை
தினப்படி செய்யலானான்...

இராமானுஜன் - எனும்
இளைய பெருமாள்; அவனது -
முழுக்காட்டலில் - மேனி
முழுக்கக் குளிர்ந்து - முகம்
முழுக்க முறுவலாகி நின்றான்
மூத்த பெருமாள்!

விந்திய மலைச் சாரலை
விட்டுப் புறப்பட்ட...

யதி
யாதவப் பிரகாசரின் -
யாத்திரை கோஷ்டி
யதா சக்தி...

கடிது நடந்து
காசிநகர் போய்ச் சேர்ந்தது;
கருதுவார்க் கருளும்
கண்ணுதற் கடவுள்
காசி விசுவநாதனையும்; அன்னை -
காசி விசாலாட்சியையும்;

கண்ட மாத்திரம் -
கால் நடந்த வலி தீர்ந்தது!

பிரகாசரும் - அவரது
பிரிய சீடர்களும் - ஒரு
பட்சம் - அப்
பெருநகரில் தங்கி...

காலை மாலை
கங்கையில் -
குடைந்தாடிக்
கழுவினர் வினைகளை;
வானதி முறிக்க வல்லது - முன்
வினைகளின் முனைகளை!

தீர்த்தத்தின் -
தீரத்தில்...

யாதவர்
யாகங்களை வேட்ட; சிற்சில -
சீடர்கள்
சிராத்தங்கள் செய்து -
பித்ருக்களுக்குப்
பிண்டங்கள் வைத்து -
'கா கா' வெனக்
காகங்களைக் கூட்ட;

இவையலால் -
இதர -
நித்யகர்மானுஷ்டானங்களை
நியமம் தவறாது நிகழ்த்த;

அந்த கோஷ்டியே -
ஆர்வமா யிருந்தது...

வாரணாசியில்
உள்ள வரை -
பொழுது ஒவ்வொன்றையும்
பொருள் கொண்டதாய் நகர்த்த!

சந்தி செய்தபின் -
சாயரட்சையில்...

அனைவரும்
ஆலயம் சென்று -
அனல் மெழுகாய்
அகம் கரைய நின்று -

அரவை; அரைக்கால்
அம்புலியை; ஆகாயகங்கையின் -
வரவை; விரிசடையில்
விரும்பி ஏற்ற விமலனை...

ஆலத்தை வாங்கி
அமுதென அருந்தி - தொண்டையில்
நீலத்தை வாங்கி
நின்றிருக்கும் நிமலனை...

ஏகத்தில் பெண் ஆண்
இருக்க வேண்டி - பிங்கலைக்கு
தேகத்தில் பாதியைத்
தத்தம் செய்த பரமனை...

புல்லியர் நகரங்களைப்
பொசுக்கி நீறாக்கிடவே - இமய
வில்லியாய்ப் பிறங்கிய
வியத்தகு பராந்தகனை..

தொழுதனர்;
தொல்வினை தொலைய வேண்டி -
அழுதனர்!

ஒருநாள்
ஓர் அற்புதம் நேர்ந்தது;

பிராதக்காலத்தில்
பிரகாசரோடும் -
பிறரோடும்
பாகீரதியின் பிரவாகத்தில் -

கோவிந்தன் -
குடைந்தாடுகையில்...

அவனது
அங்கையில் - ஓர்
அழகிய லிங்கம்
அதுவாக வந்து சேர்ந்தது!

உள்ளங்கை வந்து
உட்கார்ந்த லிங்கத்தை -
கோவிந்தன் - தனது
குருவிடம் காட்ட...

அத்துவைதியாகிய
ஆசாரியர் ஆனந்தித்து -

உடனே கோவிந்தனுக்கு -
'உள்ளங்கை கொணர்ந்த
நாயனார்!' என்றொரு -
நாமத்தைச் சூட்ட...

'ஹர ஹர சங்கர!
ஜய ஜய சங்கர!'
என -

208

ஏனையோர் கோஷிக்க...

யாதவப் பிரகாசர் - தனது
யாக்கையோடு யாக்கையாய் -
கோவிந்தனைக்
கூட்டினார்; அதன்பின் -
அத்துவைத அமுதத்தை
அவனுக்கு ஊட்டினார்!

'கோவிந்தா! நீ
கொடுத்து வைத்தவன்;
தொல்வினைகளை
நல்வினைகளின் -
தோரணமாய்த்
தொடுத்து வைத்தவன்!

கங்கை அமர்ந்த
கற்றைச் சடையோன் - உனது
அங்கை அமர்ந்த
அற்புதம் என்னென்பேன்?
அடியேனுக்கு
அமைந்த
அனைத்துச் சீடர்களிலும் - நீ
ஆடகப் பொன்னென்பேன்!

அம்பலம் ஏறி -
ஆடும் தெய்வம் -
அருள்கூர்ந்து - உன்னை
ஆக்கியது சைவம்!'

கோவிந்தன் - அக்
கணத்திலிருந்து - ஒரு
வீரசைவன் ஆனான்;
வைணவம் விலகிப் போனான்!

எட்டெழுத்தை
ஏந்திய நாக்கு -
அஞ்செழுத்தை
அமர்த்திக் கொண்டது;

துளசி மணிமாலை
தொங்கக் கண்ட கழுத்து -
உருத்திராட்சம்
ஊஞ்சலாடக் கண்டது!

திருமண்ணைத்
தாங்கிய நுதல் -
திருநீற்றைத்
தாங்கியது;

புராரி நினைவு
புத்தியில் புகுந்ததால் -
முராரி நினைவு
முற்றும் நீங்கியது!

காசியை விட்டுக் -
காஞ்சிக்குத் திரும்புகையில்...

ஓரிரவில் -
ஓரிடத்தில் -
பயணிகள் - சிரம
பரிகாரம் செய்திருக்கையில்...

கோவிந்தன் கனவில்
கொன்றை வேந்தன் வந்து -
கோல முகத்தில் - குளிர்நகை
கொஞ்சக் கொஞ்சக் காட்சி தந்து...

தன்னைத்
திருக்காளத்தியில் -
பிரதிஷ்டை பண்ணப்
பணித்தான்;

முக்கண்ணன் ஆணையை
முடிமேல் ஏற்று...

ஆசாரியரின்
அனுமதியோடு...
கோவிந்தன் - திருக்
காளத்தியில் குடியேறி -
காஞ்சியின் தொடர்பைக்
கட்டோடு துணித்தான்!

- வளரும்



''பெண் பார்க்கப் போனியே... என்ன ஆச்சு?''

''அந்த வயித்தெரிச்சலை ஏன் கேக்கறே? பிரஷர் குக்கர் – ரைஸ் குக்கர் ரெண்டுக்கும் என்ன வித்தியாசம்னு கேட்டாங்க. பதில் தெரியாததால ரிஜெக்ட் பண்ணிட்டாங்க!''

- எம்.ஆர். மூர்த்தி

# இது பெண்கள் ராஜ்ஜியம்!



"கடன் கேட்க வரும்போது எதுக்கு உங்க மனைவியையும் கூட்டிட்டு வர்றீங்க?"

"கஷ்டத்தோட வந்தா நீங்க உதவி செய்வீங்கன்னு எல்லாரும் சொன்னாங்க!"

- வி. சாரதி டேச்சு

# பகல் காட்சி... இரவுக் காட்சி...

## எஸ். ஷங்கரநாராயணன்



அவன் பெயர் அத்தனை முக்கியம் அல்ல. அது உங்கள் பெயரோ என் பெயரோகூட இருக்கலாம். முக்கியமான விஷயம் அவன் குழந்தைக்கு உடம்பு சரியில்லை என்பதே.

வெளியே சீதோஷ்ண நிலை கொஞ்சம் முகம் மாறினாலும் பேபிக்குட்டிக்கு உடலைப் போட்டு அடித்து விடுகிறது. டாக்டர் ஒவ்வொரு முறை போகும்போதும் மருந்துகளும் டானிக்கும் எழுதித் தருகிறார். அவர் ஆறு நாட்களுக்கு மருந்து எழுதித் தந்தால் நான்கு நாட்களுக்கோ, மூன்று நாட்களுக்கோ அப்போதைய நிதி வசதியைப் பொறுத்து வாங்கிக்கொள்ள நேர்ந்துவிடுகிறது. அதோடு பேபியின் உடல் தேற ஆரம்பித்துவிட்டால் மருந்தை நிறுத்திவிடுகிறதுதான். டானிக் பற்றிய நினைவே இல்லை, அடுத்த முறை அது உடம்பு அவஸ்தைப்படும் வரை...

எப்படியும் தினசரி அவன் வீடு திரும்ப இரவு இரண்டு மணியாகி விடும். ஒரு லொடலொடத்த சைக்கிள் வைத்திருக்கிறான் அவன். ஏறி உட்கார்ந்தால் சொடக்கு விழுகிறாற் போல விநோதமான சத்தங்கள் அதில் இருந்து வருகின்றன. மணி மாத்திரம் ஒலிப்பதேயில்லை. துருப்பிடித்து சிக்கிக்கொண்டு சளிக்கட்டுடன் பேபி இருமுவதைப்போல அது முனகும். ‘ஐயோ, என்னை விட்டுவிடேன்’ என அது முறையிடுகிறாற் போலிருக்கும். தேசலான செருப்புகள். மடிப்பு நிற்காத கசங்கிய சட்டை. இரவுத் தெருநாய்களின் சின்ன எதிர்ப்பு. அவனைத் திருடனாக, எதிரியாக அவை பாவிக்கின்றன என்பதல்ல. தங்கள் தூக்கத்தை அவன் கெடுப்பதை அவை விரும்பவில்லை. அவ்வளவு தான். சிறு சலிப்பு... கதவைத் திறக்கிற மனைவியின் சலிப்பு மாதிரி...

பாதிநாள் அவளுக்கே முடியவில்லை. குழந்தை வெளியே வெளியே விளை யாடப் போய்விடுகிறது. மண் அளைந்து என்னவோ தனக்குள் விளையாட்டு. அதன் உலகம் அவன் அறியாதது. மண்ணும் கல்லுமே அதன் கற்பனை ஊற்றுக்குக் கிடைத்த விளையாட்டுப் பொருட்கள்.

அம்பிகா டாக்கீஸில் அவனுக்கு ஆபரேட்டர் வேலை. காலையிலிருந்து இரவு வரை ஓயாத வேலை. தியேட்டர் முதலாளி காசு விஷயத்தில் கெட்டி. ஒரே ஆளிடம் எத்தனை வேலை வாங்க முடியுமோ அத்தனையும் வாங்கி விடுவார். பெயருக்கு ஆபரேட்டர் வேலை என்றாலும் தேவைப்பட்டால் டிக்கெட் கொடுப்பது போன்ற உபரி வேலைகளும் அவன் செய்யவேண்டி வரும். அவரை நம்பி வாழ்கிற நெருக்கடி யில் அவனுக்கும் வேறு போக்கிடம் இல்லாதிருந்தது. குழந்தைக்கு உடம்புக்கு வந்தால் லீவு போட்டு விட்டுப் போக முடியாத வேலை... வருடம் முந்நூற்று அறுபத்தைந்து நாளும் வேலை. அதிலும் ஊரில் பொதுவிடுமுறை என்றால் நிச்சயம் லீவை எதிர்பார்க்க முடியாது. அந்த நாட்களில் ஸ்பெஷல் காட்சி என்று பிட் சேர்த்த மலையாளப் படம் அதிகப்படியான வேலையாக இருக்கும்.

குழந்தையை டாக்டரிடம் கூட்டிப் போக அவரிடமே முன்பணம் கேட்க வேண்டியிருந்தது... ஒவ்வொரு முறை யும் எத்தனை பிரயத்தனமாகி விடுகிறது... நினைக்கவே அலுப்பாக



214

இருந்தது அவனுக்கு. வெறுப்பாக இருந்தது.

காலை ஏதோ சாப்பிட்டுவிட்டு வருவான். பசி ரொம்பத் தாளவில்லை என்றால் காண்ட்ராக்ட் கடைக்காரனிடம் ஒரு டீ புன்னகைத்து வாங்கிக் குடிப்பான். ஒரு நாளைக்கு ஒரு முறைதான் அவன் புன்னகைக்க முடியும்.

அம்பிகா டாக்கீஸ் பட்டணத்தில் நாகரிக மோஸ்தர் பகுதியிலோ, புழுதித்தரை ஓர கிராமத்திலோ இல்லாமல் நகர எல்லையை உள்வாங்கிய பகுதியில் அமைந்திருந்தது. புதுப்படம் ரிலீஸாகி, குப்புற விழ நேர்ந்தால் தொடர்காட்சியாகத் திரையிடப்பட்டால் அதிகம். மற்றபடி பழைய தமிழ்ப்படங்கள் புத்தம் புதிய காபி என்று போட்டு, படம் ஓடும் போது மழை விழும் படங்கள். பிட் இணைத்த படங்கள் எனில் ஜனங்கள் பாஷை எல்லாம் புரியாமலேயே ரசித்துப் பார்த்தார்கள். வரவேற்றார்கள். பாஷை எதற்கு? செக்ஸ் உலக மகா பாஷை அல்லவா? ரெய்டு என்று போலீஸ்காரர்கள் வருகிறது உண்டுதான்.

ஒரு நாளைக்கு எப்படியும் நாலு காட்சிகள் இருந்தன. சில சமயங்களில்

> **இத்தனை வருஷம்**
> **உங்களோட குடும்பம் நடத்தி**
> **என்ன சுகம் கண்டேன்... இந்த**
> **வெயிலுக்குப் போட்டுக்க ஒரு**
> **செருப்பு உண்டா, கூலிங்கிளாஸ்**
> **தான் உண்டா... உம்...**
> – தமிழ்

முற்பகல் காட்சிக்கு என ஒரு படமும், மற்ற மூன்று காட்சிகளுக்கு வேறு படமும் போட்டார்கள்.

வேண்டா வெறுப்பாக, வேறு வழியில்லாதது போல முதலாளி அங்கே வேலை பார்க்கிற அத்தனை பேருக்குமாக எடுப்புச் சாப்பாடு ஏற்பாடு செய்திருந்தார். பெரிய இரு அலுமினிய கேரியர்களில் சைக்கிளில் இருபுறமுமாகக் கட்டி தியேட்டரில் இடைவேளையில் முறுக்கு விற்கிற பையன் வாங்கி வருவான். ஆத்திர அவசர வேலை என்று அவனை வெளி வேலைக்கு அனுப்பிவிட நேர்ந்தால் அவன் வரும்வரை சாப்பாடு பிந்திவிடும். சில நாட்களில் சாப்பாடு வாங்க ஆளில்லாமல் திகைத்துப் போனதும் உண்டு. நாலுமணி வாக்கில் அல்லது எப்பவாவது அதற்குமுன் முதலாளி வந்தால் ஆளுக்கு பத்து ரூபாய் தருவார் சாப்பாட்டுக்கு என்று. மற்ற ஆட்கள் வெளியே ஓட்டல்போய் வர, அவன் மாத்திரம் டிபன் வாங்கி வரச் சொல்லிவிட்டு தியேட்டரில் படம் ஓட்டிக்கொண்டிருப்பான். இடைவேளை விடுகையிலோ, புது ரீல் மாற்றிவிட்டோ நடுவே சாப்பிட வேண்டும்.

சில சமயம் இடைவேளையில் அவன் தியேட்டருக்குள் முறுக்கு விற்க நேர்ந்ததும் உண்டு. அநேகமாக ஜனங்கள் முன்ஸீட்டில் கால்தூக்கிப் போட்டு சினிமா வில்லன்கள் போல அமர்ந்திருப்பார்கள். படம் ஆரம்பிக்கு முன் ஃபேன் ஓட்டி, இரண்டாவது ரீல் ஓடுகையில் அணைத்துவிட வேண்டும் என்பது முதலாளியின் சேமிப்பு உத்தி. ஆகவே அநேக ஆண்கள் இடைவேளயில் சட்டையைக் கழற்றித் தோளில் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருப்பார்கள்.

பகல் காட்சி, மதியக் காட்சி, இரவுக் காட்சி என்று மூன்று காட்சிகள் ஓட்டி ஓட்டி, பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் அநேகப் படங்களின் வசனங்கள் அவனுக்கு மனப்பாடமாகிவிட்டிருந்தன.




படம் ஓடிக்கொண்டிருக்கையில் திடீர் திடீரென்று ஊய் ஊய் என விசில் தூள் பறக்கும். அது, நாயகன் வில்லனைப் போட்டுத் துவட்டி எடுக்கிற காட்சியாக இருக்கலாம். அல்லது யாராவது இளம் பெண் தண்ணீர் எடுக்கப் போய் வில்ல னால் கற்பழிக்கப்படுகையில் கதாநாய கன் குதிரையில் பாய்ந்து வரக்கூடும். காட்சிகள் போரடித்தால் யாராவது ஊடே சொந்த வசனம் ஆரம்பிப்பது உண்டு. ஒரு தெருநாய் குரைத்தால் சற்றுத் தள்ளி அடுத்த தெருவில் இருந்து இன்னொரு நாய் குரைக் கிறதைப் போல, அந்தப் பக்கமிருந்து ஒருவன் ஆரம்பிப்பான். சிலருக்கு நாட்டுப்பற்று முற்றிப்போய், 'மகாத்மா காந்திக்கு ஜே' என்று முழக்கமிடுவார்கள். எதிர்பாராமல் ஃபிலிம் அறுந்தோ வேறு இயந்திரக் கோளாறு காரணத்தாலோ திரையில் காட்சி விழாது. வசனம் மாத்திரம் கேட்கும். அப்போது ஜனங்கள் 'ஏய் ஏய்' என்று கத்துவார்கள்.

எல்லாம் அவனுக்குப் பழகியிருந் தன. எப்போது ஜனங்கள் அழுவார் கள், எப்போது சிரிப்பார்கள் என்று அவனுக்குத் தெரியும்.

மலையாளப் படம் ஓடிக்கொண் டிருக்கையில் முண்டு கட்டிய கதாநாயகி, நாயகனுடன் பேசிக் கொண்டிருப்பாள். ("கிஸ் அடி! கிஸ் அடி!") ரொம்ப அவசியம் போல அவள் அப்போது ஏதாவது தானியத் தைப் புடைத்துக் கொண்டிருப்பாள். திடுதிப்பென்று ஒரு வெளிநாட்டுக் காரனும் காரியும் நிர்வாண நிலை யில் கட்டிப்பிடிக்க ஆரம்பித்துவிடு வார்கள். அப்போது மாத்திரம் தியேட்டர் மகாஅமைதியாகப் பார்த்துக் கொண்டிருக்கும். அந்தக் காட்சி திடுதிப்பென்று முடிய, திரும்பவும் மலையாளப் படத்தில் அவள் அவனைப் பார்த்துப் பேச ஆரம்பிப்பான்.

எல்லாமே சிறிய வட்டத்திலேயே சுற்றிச் சுற்றி வருவதாக அவனுக்குத் தோன்றியது. இதைத் திரும்பத் திரும்பப் பார்ப்பதில் ஜனங்களுக்கு என்ன சுவாரஸ்யமோ என ஆயாசப் பட்டான். படம் முடிகிற தருணத்தில் பெல் அடிப்பான் அவன். அதைக் கேட்டதும் ஒரு அலையைப் போல

216

ஜனங்கள் எழுந்து கொள்வார்கள். முறுக்கு விற்கிற பையன் வாசல் திரைகளை விலக்குவதும் கதவைத் திறந்து விடுவதுமாக இருப்பான். அடுத்த காட்சிக்கு டிக்கெட் வாங்கக் காத்திருக்கிற ஜனங்கள் என்னவோ சொர்க்கவாசல் திறந்தாற்போல அந்தக் கடைசிக் காட்சியைப் பார்க்க வாசலில் இருந்து ஆவலுடன் எட்டிப் பார்ப்பார்கள். அப்போது வயலின்கள் உச்சக்கட்ட உக்கிரத்துடன் ஒலிக்கும். வணக்கம் என்ற டைட்டில் கார்டு அவர்களை நோக்கி சர்ரென்று ஓடி வரும்.

ஜனங்கள் உள்ளே ஹோவென்று சிரிப்புடன் ஆர்ப்பரிக்கும்போது அவன் அநேகமாக உடம்பு சரியில்லாத தன் மனைவியையோ, சாப்பாட்டுக்குக் காசு தராமல் குடும்பத்தை விட்டு விட்டு வந்ததையோ நினைத்து மருகிக் கொண்டிருப்பான்.

பேபிக்குட்டிக்கு உடம்பு ரொம்ப முடியவில்லை. சதா ஈரமண்ணில் ஜட்டியில்லாமல் உட்கார்ந்து, புழுதியில் விளையாடி விளையாடியே அதற்கு உடம்பு படுத்திக்கொண்டிருக்கிறது. எப்படியும் முதலாளியிடம் கெஞ்சி காசு வாங்கித் தருவதாக மனைவியிடம் உத்திரவாதம் அளித்து விட்டு வந்திருக்கிறான் அவன். இன்னும் முதலாளி வரவில்லை. எப்போது வருவார் என்றும் தெரியவில்லை. வந்தாலும் காசு கிடைக்குமா தெரியவில்லை.

வாழ்க்கை சுவாரஸ்யமின்றி இப்படிப் போய்க்கொண்டிருப்பது தாள முடியாதிருந்தது. திடுதிப்பென்று குழந்தைக்கு ஏதாவது உடம்புக்கு வந்து பதற்றமாக பரபரப்பாக இருந்தது... காலைக்காட்சி, பகல்காட்சி, இரவுக் காட்சி என்பது போல... திரும்பத் திரும்ப ஒரே மாதிரியான அலுப்பு சலிப்பான காட்சிகள் மாறி மாறி வந்து கொண்டிருந்தன.

வீட்டிலிருந்து செய்தி வந்துவிட்டது. பேபிக்குட்டிக்கு மூச்சிரைப்பு அதிகமாகிவிட்டதாகவும் உடனே வரும்படியும் அவன் மனைவி ஆளனுப்பியிருந்தாள். பதறிப் போயிற்று. முதலாளி இன்னும் வரவில்லை. என்ன செய்ய என்று திகைப்பாக இருக்கிறது.

இனியும் காத்திருப்பதில் அர்த்தமில்லை என்று பட்டது. படத்தை தொடர்ந்து ஓட்டச் சொல்லி புதியவன் ஒருவனிடம் அவன் பொறுப்பைத் தந்துவிட்டு படபடப்புடன் வாசலுக்கு வந்தான். ஆத்திர அத்தியாவசியம் என்று ரீல் ஓட்ட அவனுக்குச் சொல்லித் தந்திருந்தான். பாடாவதி சைக்கிளில் அவன் கிளம்பியபோது வேகத்தைக் குறைத்துக்கொள்ளச் சொல்லி லொரட் லொரட் அதிர்வுடன் சைக்கிள் ஆட்சேபித்தது. ஊய்யென்று டாக்கீஸின் உள்ளே சந்தோஷ அலை. அது முருகன் படம் என்பதால், அநேகமாக இந்நேரம் குழந்தையைக் கடிக்க பாம்பு வர, எங்கிருந்தோ ஒரு மயில் வந்து அந்தப் பாம்பைத் தூக்கிப் போகிற கட்டமாக இருக்கலாம்.

படபடப்பாக இருந்தது. வெளியே மதிய வெயில் உக்கிரமாக இருந்தது. தெரு திரும்பும்போது நாயொன்று அவனைப் பார்த்துக் குரைக்க ஆரம்பித்தது, "ஏன் இவ்வளவு லேட்?" என்பதைப் போல. திடீரென்று அவன் காதில் உச்சகட்ட வயலின் ஒலிகள். தான் உருவம் சிறுக்க சிறுக்க தூரப் போவதாயும், தன்மேல், 'கதை, திரைக்கதை, வசனம், டைரக்ஷன்' என்று மஞ்சள் வர்ண எழுத்துக்கள் விழுவதாயும் உணர்ந்தான் அவன். ●

## மீண்டும் குருகுலம்

கன்றுகள்
கூட வர - ஓர்
யானை நகரம் புகுந்தாற்போல்
யதி யாதவப் பிரகாசர்...

கால் வைத்தார்
காஞ்சியில்; உடனே -
மூஞ்சியது ஓர் அதிர்ச்சி
மூஞ்சியில்!

சாலைக் கிணற்றில் - நீர்
சேந்திக் கொண்டிருந்தான் -
சாவின் விளிம்புவரை
சந்தித்து மீண்ட...

கடுகளவும் - முகம்
கன்றா சிம்மக் கன்று!

அவனை
அள்ளியெடுத்து - ஆசாரியன்
ஆரத் தழுவி - அவனை
ஆனந்த பாஷ்பத்தால் கழுவி...

பரிவுகாட்டி; நேர்ந்த
பிரிவு காட்டி;

பேசினார் - பேசமுடிந்த
பொய் முழுக்க;
தனது சாரீரம் -
தழுதழுக்க!

'அடேய், ராமானுஜா!

# 27 ராமானுஜ

இராமானுஜன் எனும்
இனியன்;
தகவில் -
தணிவில் -
தனக்கோர் உவமையில்லாத்
தனியன்!

குரு
கூவினார் -
'ராமானுஜா!
ராமானுஜா!' என்று;

அடுத்த கணமே -
அரக்கப்பரக்க...

தோளில் இருந்த
தோண்டியை இறக்கிவைத்து - குரு
தாளில் விழுந்து
தண்டனிட் டெழுந்தான் -

அர்த்த ராத்திரியில்...

அசதியும் அலுப்பும்
அதிகமாகி - ஓர்
அவசநிலையில் - நாங்கள்
அனைவரும் நீண்டு கிடக்கையில்...

ஆளரவம் அற்ற
அடர்த்தியான அரணியத்தில்
ஆரும் அறியாமல் - நீ
அந்தர்த்தானம் ஆனதேனடா?

அத்தியந்த சீடனை;
அபூர்வ சிரோமணியை;
அசட்டையாய்த் தொலைத்துவிட்ட
அபகீர்த்தி...

அகவை அதிகமான
ஆசாரியனை அகோராத்திரம் -

218

அன்னபான மின்றி
அரைநொடிப் படுக்கையுமின்றி -

அலமரச் செய்யுமே என - நீ
அறிந்திடாமல் போனதேனடா?

ஆசாபாசத்திற்கு
அப்பாற்பட்டவன் ஆயினும்...

அறிவு புகட்டும்
ஆசானையே - ஓர்
அனை அனையவன் என்று - நீ
அவலம்பித்து நின்றதால் -

அதிகாலையில் - உன் சேதி
அறிய வந்ததும்...



# காவியம்

அருங்கன் றிழந்த
ஆ போல் ஆனேன்; உன்
அகமுடையாளுக்கும்
அன்னைக்கும் - என்னணம்
ஆறுதல் புகல்வதென
அரண்டு போனேன்!

ஆரண்யத்தில்
ஆற்றங்கரையில் - நாம்
அமைத்திருந்த முகாமை அடைய
அவ்வழியா? இவ்வழியா? என்று -

அசுரரும் அஞ்சும் -
அந்த...

அந்தகாரத்தில்
அநாதரவாக - நீ
அகப்பட்டுக் கொண்டு
அலைபாய்ந்த கெட்ட வேளையில் -

அரியவனே! என்
அன்பிற்கு உரியவனே! உன்னை...

அரவு கடித்ததோ?
அலகை அடித்ததோ?
அரி அறைந்து - உன்
ஆக்கை ரத்தம் குடித்ததோ?

அல்லது - அவ்
அல்லதில்...

ஆனை மிதித்ததோ? ஆதிவாசி வில் -
அம்பு பதித்ததோ? உனக்கு -
அற்ப ஆயுளென்று - அந்த
அறக்கடவுள் விதித்ததோ?

**கவிஞர் வாலி**

ஆக – இப்படியெலாம்
அனேக யோசனைகளில்
ஆழ்ந்து ஆழ்ந்து
அனல்வாய்ப் புழுவாய் ஆனேன்;
ஆய்ந்து ஆய்ந்து – ஆயவும்
அசக்தனாகிப் போனேன்!

அட!
ஆசாரம் அற்றவன்;
ஆணவம் உற்றவன்;
அற்ப சுகங்களுக்காக –
ஆன்மாவை விற்றவன்;

அப்படி –
ஆரோ கெட்டுப் போனவன் –
அங்கு கெட்டுப் போனான் எனில் –
அதற்காக நான் அழுவேனா?
அவலத்தில் விழுவேனா?

அத்தி பூத்தாற்போல் – நீ
அரிதாய்ப் பூத்த – ஓர்
அதிசய மானவன்; எனது
அற்புத மாணவன்!

ஆரணங்களில்
ஆழங்காற் பட்டவன்;

ஆணித்தரமான
அபிப்பிராய பேதங்களை
அச்சமின்றிப் பேசி – என்
அடிமனத்தைத் தொட்டவன்!

அப்பேர்ப்பட்ட உனக்கு
அகால மரணம் உற்றதெனில்
ஆகுமா என்னால் தாங்க?
அஃது விதியென்று தூங்க?

அது இருக்கட்டும்; நீ
ஆபத்திலிருந்து தப்பியதை
ஆதியோடந்தம் கூறு; உனைநான்
அடைந்தது என் பேறு!'

ஆசாரியர் யாதவர்
அடுக்கடுக்காகப் பொய்களை
அழகாகப் பேசினார்;
அன்புவலையை மெல்ல வீசினார்!

நவின்றான் – ஒரு
நவையற்ற நம்பி – தனக்கு



நேர்ந்ததையும்; தான்வந்து
சேர்ந்ததையும்!

'ஸ்வாமி!
ஸ்வாதீனமற்று...

வனத்தில் - நான்
விழுந்து கிடந்த பொழுது - ஓர்
வில்லியாய் - தனது
வலமார்பில் வாழும்
வல்லியொடு - தமியனுக்கு
வழிகாட்ட வந்து நின்றான்...

பழமறை
பாடிப் பரவும்
பரம்பொருள் என்கின்ற - ஒரு
பழுது இல்லாத முழுது!

திக்கற்றோர்க்கும்
வக்கற்றோர்க்கும்
தெய்வம் ஒன்று உண்டு - எனத்
தெளிந்தேன் அன்று கண்டு!'

இராமானுஜன் -
இயம்பியது கேட்டு...

பிரகாசர் -
பெரிதும் வியந்தார்;

'இவனிடம் ஒரு திவ்யசக்தி -
இருக்கிறது!' என பயந்தார்!

ஒருகணம் -
ஒன்றும் பேசாதிருந்துவிட்டு...



கோவிந்தன் உள்ளங்கைக்குள்
கொன்றை வேந்தன் குடிவந்த
கதையையும்; அவன் - திருக்
காளத்திவாசியாய் ஆனதையும்;

உவகை பொங்க
உரைத்தார் குரு;
'அவன் செயல்!' என்றான் -
அமைதியின் உரு!

பிறகு - யாதவப்
பிரகாசர்...

'வேதம்
வாசிக்க -
வழக்கம்போல் பாடசாலைக்கு
வா!' என்று சொல்லி...

தொடர்ந்தார் நடையை
திருப்புட்குழி நோக்கி; தன்
இனிய புன்னகையால் - மெல்ல
இராமானுஜனைத் தாக்கி!

ஆசிரியர் விடுத்த
அழைப்பை...

மதிப்பதா?
மறுதலிப்பதா? என -
மனக்குழப்பத்தில்
மாட்டிய ராமானுஜன்...

தாயிடமும்
திருக்கச்சி நம்பியிடமும்
தர்மசங்கடம் கூறினான்;
தக்க அறிவுரையைக் கோரினான்!

கச்சி நம்பி - தன்
கருத்தை விரித்தார்;

அழைப்பு விடுத்த
ஆசாரியரோடு -
ராமானுஜன்
ராசியாகி...

திரும்பவும்
திருப்புட்குழி சென்று - அங்கு
வித்தியார்த்தியாய்ச் சேர்ந்து
வாசிப்பதை அவர் வரித்தார்!

'தொண்டை மண்டலத்தில்
தொன்மறைகளை போதிக்க
தற்போதைக்கு - சகல
தகுதியும் வாய்ந்த சற்குரு...

யாதவப் பிரகாசரை விட்டால் -
யாரும் இல்லை;
வித்தியாகர்வம்
வாய்த்தவ ராயினும் - அவரது
வாலறிவுக்கு - ஆராலும்
வகுக்க வொணாது ஓர் எல்லை!

நல்ல ஆசான் - ஒரு
நச்சரவு -
என்றிருப்பினும்
ஏனந்த
நச்சரவு கூட - நாளும்
சச்சரவு?

நாகமா
நமக்கு முக்கியம்? அது -
கக்கும் - மாணிக்கக்
கல்தான் முக்கியம்!

பரவலாய்க் - கரும்
புள்ளிகளோ டிருக்கும்
பூனையா நமக்கு முக்கியம்?
புனுகுதான் முக்கியம்!

நீரும் பாலும் -
நிரவி யிருப்பினும்...
நீரை
நீக்கி -
பாலைப்
பருகும் -

அன்னமாய் இரு; எதற்கு -

222

ஆசாரியனோடு செரு?

விளக்குச் சுடரில்
விரல் வைத்தால் சுடும்;
விரல் வைக்காமல் - அதன்
வெளிச்சத்தில்
வித்தை பயின்றால் - அது
வாழ்வுக்குப் பயன்படும்!

திருவிளக்கு எப்படி?
குருவிளக்கும் அப்படி!

விரல்
வைத்தால் -
சுடர்
சுடுகிறதே என்று...

விளக்கை விட்டு
விலகிப் போனால்
கங்குல் - நம்மேல்
கவிந்து விடும்; நாம் -

அறிவொளி கொண்டு
ஆற்ற வேண்டிய -
அத்துணை காரியங்களும்
அறவே கெடும்!

பிரகாசர் - ஒரு
பிரகாசமான விளக்கு;
அதைக் கொண்டு - ஒருசில
அருமறைகள் விஷயமாய் - உன்
அறிவைச் சூழ்ந்து நிற்கும்
அந்த்காரத்தை விலக்கு!'

இன்னணம்
இராமானுஜனுக்கு
இதம் எதுவோ - அதை
இயம்பினார் திருக்கச்சி;
திருக்கச்சியின்
திருவுள்ளமே -
தனது உள்ளம் என்று
தாயும் சேர்ந்தாள் கச்சிகட்சி!

எதிர்மாறாய் -
எதுவும் பேசாது..

இருவர் சுட்டிய வழியையே
இராமானுஜனும் தேர்ந்தான்;
பழையபடி - திருப்புட்குழி
பாடசாலையில் சேர்ந்தான்!

பிரதி தினமும் - சூரியப்
பிரபை புறப்படுமுன் விழித்து...

உபவீதத்தை
வலது காதில் சுற்றிக்கொண்டு -
வழக்கமான
விசர்ச்சனங்களை முடித்து;

புழைக்கடைக் கேணியில்
புறஅழுக்கு போகக் குளித்து;
அங்ஙனம் - நீர்
ஆடுகையிலேயே
அஷ்டாட்சரத்தை
அகஅழுக்கும் போக ஜபித்து;

கொடிவஸ்திரத்தைக்
கோலால் எடுத்து -
மடி வஸ்திரமாய்
மேனியில் உடுத்தி;

அதன்பின் - பலாவால்
ஆன மணையின் மேல் -
குணதிசை நோக்கிக்
குந்தி;

ஒருத்திமகனாய்ப் பிறந்து
ஒருத்திமகனாய் வளர்ந்த
ஒருத்தன் மேல் - உளத்தை
ஒருமுகப் படுத்தி;

கேசவன்;
நாரணன்;
மாதவன்;
கோவிந்தன்;

விஷ்ணு;
மதுசூதனன்;
திரிவிக்கிரமன்;
வாமனன்;
ஸ்ரீதரன்;
ரிஷிகேசன்;
பத்மநாபன்;
தாமோதரன்;

என்று
எம்பெருமானின் -
நாமங்கள் கூறி இடுவதனால்
நாமங்கள் எனப் பெறும்...

துவாதச
திருமண்களையும் - திருமாலின்
துவாதச
திருநாமங்கள் சொல்லி...

நெடிய உடலில்
நெற்றி முதலிய இடங்களில்
ஸ்ரீசூர்ணத்துடன் தரித்து;
ஸ்ரீவைஷ்ணவனாய்த் திகழ்ந்து;

அடுத்து -
ஆலயத் தருகிருக்கும்...

சாலைக் கிணற்றில் - நீர்
சேந்தி -
குடம் குடமாய்க்
கொண்டு போய் -

கோயில்
கர்ப்பக்கிரகத்திலுள்ள -
அகலமான
அண்டாக்களில் நிரப்பி -

தாயார் பெருமாள்
திருமஞ்சனத்திற்கு -
சித்தம்
செய்துவிட்டு -

பிறகு
பிரபந்தம் சொல்லி -
வரதனை பெருந்தேவியை
விழுந்து சேவித்துவிட்டு -

கஜேந்திரதாசர் எனும்
கச்சிநம்பியிடம் - சற்று
உரையாடிய பின்
உத்தரவு வாங்கிக் கொண்டு...

திருப்புட்குழியில் - யாதவர்
திருமாளிகையில் உள்ள -
குருகுலம் போய்ச் சேருவான்
குறித்த நேரத்தில்...

இராமானுஜன் எனும்
இளஞ்சிங்கம்; தன் -
அடிவயிற்றிலிருந்து
அன்னை காந்திமதி -
அகழ்ந் தெடுத்த
ஆணித் தங்கம்!

விருட்சம்
வெறுமனே நின்றாலும்; அப்படி -
வெறுமனே நிற்க - எப்படி
வாயு விடுவதில்லையோ...

அதுபோல்
ஆசாரியனும் இராமானுஜனும் -
அந்நியோந்நியமாய்
ஆகிவிட்ட போதும் -

அவர்களை -
அப்படி விட்டு வைக்க...

விரும்பவில்லை
விதி; அது
யாத்த வலையில் - விழுந்தார்
யதி!

**- வளரும்**




# ராமானுஜ காவியம்

## அரசிளங்குமரி

**வே**ழம்; வரை; நிறைந்த
ஈழம் வரை - நீள்கடல்
ஆழம் கடந்து ஆண்டிருந்த
சோழம்..

காஞ்சியிலும் - தன்
கால்பதித்திருந்த காலம்;
அவ்வூரை - அது
ஆண்டது...
குற்றங்குறையின்றி - ஒரு
குறுநில மன்னவன் மூலம்!

சிங்காதனம் ஏறி
செங்கோல் ஏந்திய - அச்
சிற்றரசன் - ஒரு
வெற்றரசன் அல்ல;

ஊர்மக்களுக்கு - மிகமிக
உற்றரசன்; ஓலக்கம்
வரலாம் யாரும் - தமது
வருத்தங்கள் சொல்ல!

மனுக்கள் கொடுக்கும்
மனுக்களுக்கு - மற்றொரு
மனு வாவான்;
நல்ல தீர்ப்பை -
நாளும் நல்க...

சாதிவழி போகாமல்
ஆதிவழி என்றிருக்கும்
நீதிவழி போவான்!

திருமாளிகையில்
திருநா ளென்றால்;
வருடம் ஒருமுறை - விசேஷமாக

கவிஞர் வாலி

வருநா ளென்றால்;

பேதங்கள் –
பேணாது...
பலதரப்பட்டவர்க்கும்
பந்தி போஜனம்;
பட்ச பாதமற்ற
பரிபாலனம்!

ரத கஜ –
துரக பதாதியிருந்தும்...

கூடிய மட்டும்
குருதி கொட்டும் –
போரைத் தவிர்ப்பவன்; கெட்ட
பேரைத் தவிர்ப்பவன்!

ஆசு!
மதுரம்;
சித்திரம்;
வித்தாரம்;
எனும் –
ஈரிரண்டையும்...

நாதரித்து நின்ற புலவரை –
ஆதரித்து நின்ற புரவலன்;
அவனது
ஆட்சியில் –
எழுத்தெண்ணிப் படித்தோரில்
எவரும் இல்லை இரவலன்!

மாசனத்தின்
மனத்திலும் அமர்ந்தான் – சிம்
மாசனத்தின்
மேலமர்ந்த அரசன்; காஞ்சி
மண்ணை –
மணம்புரிந்த புருசன்!

அறவழி அலாது –
பிறவழி செலாது...

வாழ்ந்திருந்த – அவ்
வேந்து –



கலங்கினான் கண்;
காரணம் அவனது பெண்!

முடியை
முடியில் ஏற்ற -
முதல் நாள்
முதல்...

முறை தவறாத
முதல்வன்; அந்த
முதல்வனுக் கேற்ற
முதல்வி; அத்தகு -
முதல்வனுக்கும்
முதல்விக்கும்
முகிழ்த்தாள் - மோகனத்தில்
முதல் தரமான ஒரு புதல்வி!

அந்த -
அரசிளங்குமரி...

குழல் வளர்க்கும்
குளிர் நிலா;

குரல் திதிக்கும்
குறும் பலா;
மலர் சுமக்கும்
மணிப் புறா;
நிலம் நடக்கும்
நறு நறா!

ரகம் -
ரகமாய்...



தொடி அணியும் - தூதுவளைக்
கொடி;
தோடு அணியும் - தேவப்புள்
பேடு;
வாரை அணியும் - ஆதிரைத்
தாரை;
கூறை அணியும் - கோமளச்
சூறை!

ருதுவான
ரூபவதி;
லலிதமா யுலவு -
லாவண்ய நதி;
பிறிதொரு ரதி; ரதியின் -
பிரதி!

என்ன சொல்லி -
என்ன?

வார்த்தைக்குள் வராத
வனப்பு; அதற்குக் -
கண்ணெச்சில்
கழிக்கவே - செய்ய
கன்னத்தில் தென்படும்
கடுகளவு ஒரு சினப்பு!

மன்னன்
மகள்...

அழகில் மட்டுமல்ல;
அறிவிலும்...

மேதாவிலாசம்
மேம்பட நின்றாள்;
அழகும் -
அறிவும் -
அவ்வளவாக
அனுசரித்துப் போகாது - எனும்
வறட்டு
வேதாந்தத்தை -
வேரோடு
வீழ்த்தி வென்றாள்!

யாப்பமைதியோடு -
யாப்பாள் கவி;

புட்பரசம்
புகுந்தாற்போல் -
புளக மெடுத்துப்
புடைத்து நிற்கும்...

யாழெடுத்தால் -
யார்க்கும் செவி!

சித்திரம் தீட்டுவாள்; அதில்
சித்துகள் காட்டுவாள்;
ஆடற்கலைக்கு
அற்புதமான -
அடவுகளால்
அழகினை ஊட்டுவாள்!

உயிர்த்தோழியரோடு -
உப்பரிகையில்...

அம்மானை;
ஆடு புலி;
பல்லாங்குழி;
பரமபதம்;

அனைத்தும் ஆடுவாள்;
அவளே வாகை சூடுவாள்!

பண்டிதன்;
பாமரன்;
பணக்காரன்;
பராரி;

ஆராயிருப்பினும்
அன்பு செய்வாள்;
சமநோக்கோடு
சிநேகமழை பெய்வாள்!

அழகு;
அறிவு;
அன்பு;
பண்பு;
பொறை;
நிறை;
பணிவு;

228

பரிவு;

அனைத்தும் ஒருசேரப் பெற்ற -
அரசிளங்குமரிக்கு...

தகுந்த வரன் -
திகைய வேண்டுமே என்று -
தார்வேந்தனும் - அவனது
தர்மபத்தினியும் -

சகல
சிற்றரசுகளையும் -
சல்லடை போட்டுச்
சலித்துக் கொண்டிருக்கையில்...

அந்த
அரசகுடும்பத்தின் -
ஆணிவேர்
ஆட்டம் கண்டது;
உறுத்தும் -
ஊழால்...

பாரதியாய் இலங்கும்
பட்டத்து இளவரசியை -
'பிரம்ம ராக்ஷஸ்' ஒன்று -
பிடித்துக் கொண்டது!

ஐயோ!
ஐயகோ!

ஐம்பொறியோடு பிறந்த
ஐஸ்வரியத்தை;

ஐம்பாலாய்க் குழல்புனையும்
ஐம்பொன்னை;

ஐந்தவித்த
ஐயரெலாம் - 'இவளந்த
ஐந்தவிதான்!' எனச் சொன்ன -
ஐதிகத்தை;

ருதுவை காணும்
வயது கனிந்த -
வதுவை; வசந்த
ருதுவை;

அரண்மனையின்
ஆனந்தத்தை;
அரசுக்கும் அரசிக்கும்
அமலன் தந்த அருட்சொத்தை;
அரை நொடியில் - ஓர்
அலகை வந்து அபகரித்தது;
எவரும் தன்னை
எதுவும் செய்ய -
ஏலா தென்னும்
ஏமாப்புடன் சஞ்சரித்தது!

உலகை வெல்ல வல்ல
உயர்குணம் வாய்த்தவள் -
அலகை வயப்பட்டு
அருவருப்பாய்த் தோற்றினாள்;
ஈயத்தை உருக்கி -
ஈன்றோர் கண்ணில் ஊற்றினாள்!

உறக்கத்தில் - சிறிது
உடுக்கை விலகினாலும்
'விருட்'டென
விழித்துக் கொள்பவள்...

பிறந்த மேனியாய்த் - தன்னைப்
பச்சைத் தண்ணீர் கூடப்
பார்க்கக் கூடாதென்று - பழம்
புடைவையோடு குளிப்பவள்...

அத்தன் முன் -
அன்னை முன் -
சம்மணமாக அமரவும்
சங்கோஜமுறும் அரசகுமாரி -
அம்மணமாக அமர்ந்து
ஆபாசமாகப் பேசினாள்;
நா உதிர்க்கும்
நாணமற்ற வார்த்தைகளை -
நரகல்
நாற்றத்தோடு வீசினாள்!

அழகிய
அழியாக் கோலம் -
என

இருந்த -
ஏரார்
இளவரசி...
ஆனாள்
அலங்கோலம்!

'திபுதிபு'வென ஓடுவாள்;
தலை விரித்து ஆடுவாள்;
பல்லைக் கடித்துக்கொண்டு
பிலாக்கணம் பாடுவாள்;
சங்கிலியால் பிணைக்க
சமீபத்தில் வரும் -
சேவகர்களை
சகட்டுமேனிக்குச் சாடுவாள்!

அரண்மனையே
அதிர்ந்தது;
விளைந்த
வெருவலில் -
விட்டத்துக் காரை
உதிர்ந்தது!

மகராஜனும் -
மகராணியும் -

நூறு சுக்காக
நொறுங்கிப் போயினர்;
செக்குலக்கை போல்
சிந்தாகுலம் - தினம்
நொக்கு நொக்கென
நொக்கவும் நொய்யாய் ஆயினர்!

அரசன் - தனது
அமாத்தியரின் -
அவையைக் கூட்டினான்;
அநேக வினாக்களை நீட்டினான்!

'உறவுக்கும்
ஊருக்கும்
உதவியிருக்கிறேனே
ஊர்ப்பட்டது!

இங்ஙனம்.
இருக்கையில்...

ஏதுமறியா
என் மகளுக்கு
ஏனிந்த அவலம்
ஏற்பட்டது?

அறம் புரிவார்
அல்லற் படுவாராயின் -
ஆரே இனி
அறம் புரிவார்? ஆர்க்கும் -
நலம் புரிவார்
நாசமாய்ப் போவாராயின் -
நானிலத்தின் கண் - ஆரினி
நலம் புரிவார்?

தருமம் -
தலையைக் -
காக்குமா?
நீக்குமா?

ஒழுக்கம் -
உவகையைச் -
சேர்க்குமா?
பேர்க்குமா?

நன்னூல்களை
நன்கு வாசித்தவன்...

நல்வழி -
நடப்பானா?
அல்வழி -
ஆதரிப்பானா?

வாய்மையைக் கடைப்பிடித்தால் -
வரவேண்டும் வீதி;

வாஞ்சைமிகு மனைவி - ஆவாள்
வேறு வீட்டில் தாதி;
உரகம் அணைக்கும் - பிள்ளை
உயிர்விளக்கை ஊதி;

காடு காப்பான் தந்தை - சிதைக்
கனலைக் கம்பால் கோதி!

இந்த நாள் வரை
இதுதானே -

230

அரிச்சந்திரன் கதை
அறிவிக்கும் நீதி?'

கொற்றவன்
குழப்பத்தில் இருப்பதைப் -
புரிந்துகொண்டு
பேசினர்...

மந்திரிகள்; ராஜ
தந்திரிகள்!
காலம் செய்த
கோலம் என்றனர்; மானுட -
வாழ்வினை நிர்ணயிக்கும்
ஊழ்வினை என்றனர்; இது -
காலமும் அல்ல; பழங்
கருமமும் அல்ல; பலியாய்ச்
சேவல் கொடுத்து - யாரோ செய்த
ஏவல் என்றனர்!

"நிர்மலமான - ஒரு
நீர் நிலையில்...

சில்லெறிந்து - அதை
சிதறச் செய்யும்
சில்லுண்டித்தனம் -
சிறார்க் குரியது;

காலமும் - அந்தக்
காரியம் செய்யுமாயின் - அக்
கற்றுக்குட்டிகளை விடக்
காலம் எவ்வகையில் பெரியது?

பொலிவு மிக்க - ஒரு
பொதும்பரில்...

திடுமெனப் புகுந்து - அதைத்
தரைமட்ட மாக்கும்
கெடுமதி - சூறைக்
காற்றுக் குரியது;

காலமும் - அந்தக்
காரியம் செய்யுமாயின் - அக்
காற்றைக் காட்டிலும்
காலம் எவ்வகையில் பெரியது?

சேவல் அறுத்து - எவனோ
செலுத்துகின்ற...
ஏவல் தெய்வங்களுக்கு
ஏற்றமெனில் - கோயில் கொண்ட
காவல் தெய்வங்களுக்கு - ஆறு
கால பூஜைகள் ஏன்?

சூனியத்திற்கு - அவ்வளவு
சக்தியிருக்குமாயின்
சூனியத்துள் இருந்து -
சுழற்றுகிறானே அண்டங்களை...

அந்த -
ஆண்டவன் பொருளற்றவனா?
கதியற்றோரைக் -
காத்திடும் அருளற்றவனா?

'ஊழ்!
ஊழ்!' என்கிறீர்களே...

'ஊழின் பெருவலி யாவுள?
மற்றொன்று -
சூழினும் தான்முந் துறும்!'

என -
எடுத்துரைத்தவனே...
'தெய்வத்தான் ஆகாது எனினும் -
முயற்சிதன் -
மெய்வருத்தக் கூலி தரும்!'

என்றும் -
எடுத்தோதினானே!

பொய்க்குமா வள்ளுவம்? அதைப்
புந்தியில் உள்ளுவம்!"

மன்னன் இன்னணம்
மொழிந்ததும்...

ஓர் அமைச்சன் எழுந்து -
ஒருவரைப் பற்றிக் கூறினான்;
உடனே அரசன் -
உள்ளக் கொதிப்பு ஆறினான்!

**– வளரும்**

232

கவிஞர் வாலி

# ராமானுஜ காவியம்

29

## நித்ய சூரி

'வேந்தே! தாங்கள்
விரக்தியில் பேசுகிறீர்கள்;
புராணக் கதைக்குப்
புதிய முலாம் பூசுகிறீர்கள்!

அரிச்சந்திரன் கதை
அறிவிக்கும் நீதி...

தீயில் இட்டுத்
தொள்ளாயிரம் முறை வாட்டினாலும்
தங்கம் தகரமாகாது - எனும்
தங்கமான சேதி!

அரிச்சந்திரன் - காலம்
அரிக்காத சந்திரனாய்...

உலகத்தார்
உதடுகளில் -
உட்கார்ந்திருக்க
ஒரே காரணம் -

இறுதிவரை - அவன் காத்த
உறுதி!

சூறையிலும் -
சுழலிலும் -

வாழ்க்கைப் படகை
வற்றாத நம்பிக்கையுடன் -
கடத்திக்
கரை சேர்ப்பவன்தான்...

மேன்மைமிக்க
மீகான்; மனமொடிந்து
மீளாது மடிபவன் - நல்ல
மீகான் ஆகான்!

காலம் செய்யும் -
கோலம்;



ஊழ் விளைக்கும் -
ஊறு;
சூனியம் செய்யும் -
சூது;
ஏவலால் விளையும் -
ஏதம்;

அனைத்தையும் -
அடித்து நொறுக்க...

உண்டு
ஒரு சுத்தி;
அதுதான்
அலைபாயாத புத்தி!

மன்னிக்க வேண்டும் -
மன்னா!
இரைந்து பேசுவதாலோ - அறம்
இலையென ஏசுவதாலோ - வினாக்கள்
இருநூறு வீசுவதாலோ - விலகாது
இன்னா!

நின்று -
நிதானமாக யோசித்தால்...
எந்தத் துயரத்தையும்
எத்தி - எறிய
உள்ளத்தில் உதிக்கும் - ஓர்
உத்தி!

வேந்தே! உங்கள்
வேதனை எனக்குப் புரியும்;

வலக்கண் ஒத்த மகளுக்கு
அலக்கண் ஒன்று மூண்டால்...
இப்படித்தான்
இருப்புக் கொள்ளாது -
தந்தை எவனுக்கும்
சிந்தை திரியும்!

ஆதலால்
அரசர் பொருட்டு -
அடியேன்
ஆற அமர யோசித்ததில்...

வேண நெய் -
வழங்கும் வெண்ணெய்
அங்கையில் இருக்க - நாம்
அன்னசுத்திக்காக அலைவதை...

எனக்கு
என் அறிவு சுட்டியது;
உடனே
ஒரு
பெரியவரின் நினைவு - என்
பொறியில் தட்டியது!

அரசே!
அவர் ஓர் யதி; துவர்
ஆடை புனைந்த -
ஆரண நதி!

யதியின் திருநாமம்
யாதவப் பிரகாசர்;
யானை உரித்தவனை
யாண்டும் பணிநேசர்!

அவரது
அபய ஹஸ்தம் -
அநேகர் வியாதியை
ஆக்கியிருக்கிறது சொஸ்தம்!

ஏறு ஏறு
ஏகம்பனை எண்ணி -
எழுதுவார் யந்திரம்;
எழுப்புவார் மந்திரம்!

உதடுகள்
உச்சாடனம் பண்ணப் பண்ண -
உயிர்ப்
பிச்சாடனம் பெற வேண்டி...

அலகைகள்
அவர் காலில் விழும்; விட்டுப் -
போவதாய்ச் சொல்லிப்

234

புலம்பி அழும்!

அலமந்து நிற்கும் - இவ்
அரண்மனையில்...

பட்டால் போதும் - யாதவப்
பிரகாசரின் பொற்பாதம்;
பட்டுப் போகும் - பாடாய்ப்
படுத்திடும் உற்பாதம்!

வேந்தே! அந்த
வேத சிம்மம் வந்து நின்றால்...

பிரம்மராக்ஷஸ்
பிடரியில் கால்பட ஓடும்;
பிரவீணராய்ப் பிறங்கும்
பிரகாசரால் மட்டுமே - நமது
பட்டத் திளவரசியை
பத்திரமாய் மீட்கக் கூடும்!

ஆணையிடுங்கள்;
அழைத்து வருகிறேன்...

திருப்புட்குழி வாழும்
துறவரசை; அத்துவைதத்
தத்துவத்தை ஆளும்
தனியரசை!'

அரிய யோசனையை
அமைச்சன் செப்பினான்;

பாலையில்
பயணிக்கையில் -
பொட்டுத் தண்ணீர்
பருகக் கிடைத்தாற்போல..

அந்த யோசனைக்கு -
அரசு ஒப்பினான்!
திருப்புட்குழியில் - தன்
திருமாளிகை வாசலில்...

நூற்றெட்டு - உபநிடத
நூல்களுள் ஒன்றான...

ஈசாவாசியம்
ஈயும் விழுமங்களை -
இராமானுஜனுக்கும்
இதர மாணவர்க்கும்...

பிரகாசர் -
போதித்துக் கொண்டிருக்கையில்...

முழவோசை;
முத்துச்சிவிகை;
முதலிய
முதல் மரியாதைகளோடும் -

பராக் சொல்லுவோர்;
பதாகை சுமப்போர்; எனப் -
பல்வகை - ராஜ
படர்களோடும் -

அமைச்சன் வந்து -
ஆசாரியனை வணங்கி நின்றான்;
எதி -
ஏறிட்டுப் பார்க்க...

புரவலன்
புதல்வியை -
பிரம்ம ராக்ஷஸ்
பிடித்திருப்தையும் -

பிரகாசர்
பெருந்தகை வந்து -
பிணியைப்
போக்க வேண்டுமென்பதையும் -

விவரமாய்ச் சொல்லி - 'இது
வேந்தின் வேண்டுகோள்!' என்றான்!

பிரகாசர் - ஒரு மாதிரி
பாரி உடம்பை உலுக்கினார்;
அதன்பின் -
அமைச்சனிடம் பலுக்கினார்!

'பிரகாசன் - உன்னைப்
போகச் சொன்னான் என்று -

பிரம்ம ராக்ஷஸிடம் கூறுக;
பீடை விலகிப்போகும் இன்று!'

யாதவப் பிரகாசர்
யாது கூறினாரோ...

அதை
அப்படியே கூறினான் -
அமைச்சன்
அலகையிடம் சென்று;

'ஊரைவிட்டு -
ஓடிப் போகுமாறு -
யான் சொன்னதாய்
யாதவனிடம் சொல்!'

என -
ஏமாப்போடு கூறியது -
பிரம்ம ராக்ஷஸ்
பெரிதாக நகைத்து நின்று!

தகவல் -
தெரிந்ததும்...

யாதவர் - மத
யானைபோல் மதத்து...

இராமனுஜனும்
இதர சீடரும் புடைசூழ -
இளவரசி முன்போய் நின்றார்;
'இவன் யார் தெரியுமா?' என்றார்!

பிரம்ம ராக்ஷஸ் -
பிரகாசரைப் பார்த்து
பயங்கரமாய்ச் சிரித்தது;
பிறகு விரித்தது!

'அடேய்!
அதிகம் படித்தவனே!
அதிகம் படித்ததனால் -
அகந்தை பிடித்தவனே!

உனக்கு
உன் கதையும் தெரியாது;
எதிர்நிற்கும்
என் கதையும் தெரியாது!

சொல்கிறேன் இரண்டையும் -
செவிமடு;
அதன் பிறகாவது - உன்
அறிவை - உதவாத
அகந்தையைத் தவிர்த்து
அடக்கத்தின்பால் செலவிடு;
அடைந்திருக்கும்
ஆன்ம ஞானம் எனும் -
அரிய செல்வத்தை
ஆக்க வழிகளில் செலவிடு!



கர்வியே!
கடந்த ஜன்மத்தில்...

மதுராந்தகத்தின்
மாபெரும் ஏரிக்கரையில் -
மண்டிக் கிடந்த
மண் புற்றில் -

ஓர் -
உடும்பாய்

இருந்தவன் நீ;

அன்றாடம் -
அனல் ஓம்பும்...

அந்தணர் சிலர்
அந்த ஏரியில் தீர்த்தமாடி -
அமுது செய்தபின்
அவர்களது...

உச்சிஷ்டத்தை



உண்டதால்தான் – இப்போது
ஊர் மெச்சும்
ஓர் அருந்தவன் நீ!

பிரகாசனே!
போன பிறப்பில்...

நான் –
நல்ல –
பிராமண குலத்தில்
பிறந்தும் –

வேட்ட –
வேள்விகளில் –
வேதமந்திரங்களை –
வெகுவாக விடுத்தேன்;

மந்திரலோபம் – எனும்
மகாப் பாவத்தை...

பொறுப்பற்றுப் –
புரிந்ததனால் –
பிரம்ம ராக்ஷஸாகப்
பிறவி எடுத்தேன்!'

பிரகாசர் – சற்று
பயந்து போனார்;
ஆயினும்
அந்த –
அச்சத்தை
அதிகம் காட்டாமல்...

பிரம்ம ராக்ஷஸிடம்
பேச லானார்!

'இப்படியோ அப்படியோ
எப்படியோ ஆகட்டும் –
என்கதை;
உன்கதை;
பேசு – இந்தப்
பெண்கதை!

இந்த –

இளவரசியை...
விட்டுச் செல்ல – உனக்கு
வேண்டியது யாது? அதை –
வாங்கிக்கொண்டு விலகு;
வாழவேண்டியவள் இள மாது!'

பிரகாசர் – இவ்வாறு
பிரம்ம ராக்ஷஸை வினவ...

ஓரளவு – அதன்
உக்கிரம் தணிந்தது; தனது –
சாபவிமோசனத்தை விரும்பி
சற்றுப் பணிந்தது!

'யாதவனே!
யாது கொடுத்தாலும் –
யார் கூறினாலும்
யான் செல்வது அரிது;

உன் சீடருள் –
ஒரு...

நித்ய சூரி இருக்கிறார்; அவர் –
'நீங்குக!' என்றால் – உடனே
நீங்குவேன்; எனக்கு அவர் சொல் –
நான்மறையிலும் பெரிது!'

பிரம்ம ராக்ஷஸ் – இப்படிப்
பிரகடனப் படுத்தியதும்...

'ஆர் அது?' என்று
ஆர்வமொடு வினவினார் –
ஆசாரியர்;
ஆசாரம் அகலா ஆரியர்!

உடனே –
ஒருகணமும் தாமதியாது..

அலகையால்
ஆட்டிவைக்கப் பெறும் –
அரசிளங்குமரி
அடக்க ஒடுக்கமாக –

இராமானுஜன்
இருக்குமிடம் சென்று -

நிலம் தோய
நமஸ்கரித்து விட்டு -
நவின்றாள் 'நான் சொன்ன
நித்ய சூரி இவர்தான்!' என்று!

பிரகாசர் - முகப்
பிரகாசம் இழந்து நின்றார்;
'இராமானுஜா! நீயே -
இதைப் போகச் சொல்!' என்றார்!

இளையாழ்வான் - ஆசாரியன்
இணையடியை சிந்தித்துவிட்டு...

பிரம்ம ராக்ஷஸைப் பார்த்து -
'போய்விடு!' என்று கூற...

'இராமானுஜனே!
எனது -
தலைமீது - உன்
திருவடியை வை;
வைத்து - என்னை
உத்தாரணம் செய்!'

என்று பிரம்ம ராக்ஷஸ் -
இராமானுஜனைக் கோர..

அப்படியே செய்தான்
அருந்தகை;
'அகல்கிறேன்!' என்றது
அலகை!

'அகல்வதற்கு - ஓர்
அடையாளம் காட்டிப் போ!' என்று -
ராமானுஜன் சொன்னான்; ராமாயண-
ராமானுஜன் அன்னான்!

'அதோ! அந்த
அரசமரத்தில்தான்...
இதுகாறும் - நான்
இருந்து பழக்கம்;

இப்போது நான் சென்றதும் - அது
இருகூறாய்ப் பிளக்கும்!'

என்று சொல்லி -
எல்லோரையும் வணங்கி...

பிரம்ம ராக்ஷஸ்
புறப்பட்டது;
மறுவிநாடி - அரசமரம்
முறிந்து விட்டது!

மன்னன் - தனது
மனைவி மகளோடு
இராமானுஜனைத் தொழுதான்;
இன்பம் தாளாது அழுதான்!

திருப்புட்குழி -
திரும்பியதும்...

அவமானம் தாளாது
ஆசாரியர் யாதவர் சீறினார்;
நிட்டூரமாக -
நான்கு வார்த்தைகள் கூறினார்!

'இராமானுஜா!
இனி நீ...
தேடிக்கொள் - உனக்குத்
தக்க குருவை;
நம்பியிருக்காதே - உனக்கு
நிழல்தர விரும்பாத தருவை!'

யதி -
யாதவப் பிரகாசருக்கும்;
இளையாழ்வான் -
இராமானுஜனுக்கும்;

அமைந்த உறவு -
அன்றோடு அறுபட்டது;
வலியது எனப்படும் -
விதியானது ஆரைவிட்டது?

- வளரும்

240

# ராமானுஜ காவியம்

கவிஞர் **வாலி**

## பூலோக வைகுண்டம்

**தி**வ்விய –
தேசங்களில்...

திருவரங்கம்
தனி; அது –
நூற்றெட்டின்
நுனி!

ஆறு –
இரண்டாகி – சுற்றுகள்
ஏழுக்குள் இருக்கும்
எட்டை...

வலம்வரும்
தலம்; வைகுந்தம் –
நிலம் இறங்கிய
நிலம்!

இராவணன்
இளவல் ஆளும்...

தீவு பார்த்துத்
தேவு படுத்திருக்கும் –
தீவு!

'அரவுமேல் படுத்திருக்கும் –
இரவு!' எனப் பேசும்படி –
பெரிய பெருமாள் –



கரிய பெருமாள்;

ஆயினும்...
அருள் வெளிச்சத்தை - அவ்
இரவுதான் பிலிற்றி - எல்லோர்
இரவையும் விடிய வைக்கிறது!

திருவிருத்தமும் -
திருவாசிரியமும் - பெரிய
திருவந்தாதியும் -
திருவாய்மொழியும் -

பசுந்தமிழால் பாடியருளிய -
பராங்குசனை யல்லால்...
வகுளம்பூ விரும்பிச் சூடிய -
வகுளாபரணனை யல்லால்...

சடமெனும் வாயுவை முனிந்த -
சடகோபனை யல்லால்...
குருவாய் நின்று கடாட்சித்த -
குருகூர் நம்பியை யல்லால்...

பிறிதொரு தேவைப்
பாடியறியாத - காரி
மாறனின் அடியார்
மதுரகவியின் -

ஒருநா தவிர - மற்ற
ஓராறும் ஐந்தும் பாட - பையுடைய
இருநா மீது...

ஒருக்களித்துக் கிடக்கும்
ஓரெட் டெழுத்தானை; இராக்கதன் -
செருக்கழித்துக் கோறி - இலங்கை
சின்னவனுக் கீந்தானை;

தெற்கிலும் வடக்கிலும் -
தெண்ணீர்ப் பொன்னி...

தரங்கம் எழுப்பித்
தரையலம்பும் - திரு
அரங்கம் எனும் ஊரானை;
அரங்கநாதன் எனும் பேரானை;

காணக்
கண்ணிரண்டும் போதா; அவை -
உள்ள வனப்பை -

உள்ளபடி நமக்கு ஓதா!

சிரசு முதல்
சேவடி வரை - சிரங்கத்து
அரசு அழகை...

சேவித்து நிற்கும் -
சேவார்த்திகளின் விழிகள் -

விழுங்கு விழுங்கென்று
விழுங்கும்; அங்ஙனம்
விழுந்து விழுந்து

விழுங்கிய பின்னும் - முழுதும்
விழுங்கவொணா வேதனையை -
உள்ளே
விழுங்கிக்கொண்டு புழுங்கும்!

அவன்
அடங்க மாட்டான் -
விழித்து விழித்து நின்றாலும்
விழிக்குள்;

அவன்

242

அவனிடம் உண்டு -
அளப்பரிய சௌலப்பியம்;
அவனிடம் உண்டு -
அளப்பரிய சௌரியம்;
அவனிடம் உண்டு -
அளப்பரிய சௌசீல்யம்!



அடங்க மாட்டான் -
மொழிந்து மொழிந்து நின்றாலும்
மொழிக்குள்;

ஆனால்
அவன் விரும்பினால் -
அவனாக வந்து
அடங்குவான்...

மூவரான
முதலாழ்வார்களோடு - திருக்
கோவலூர் - இடை
கழிக்குள்!

அவனிடம் உண்டு -
அளப்பரிய சௌந்தரியம்;

எனினும் -
எதை
எங்கு வெளிப்படுத்த -
எண்ணுவனோ...

அதை -
அங்கு வெளிப்படுத்துவன்;
அது -
அவனது சௌகரியம்!

சிவப்புக் கம்பளம் -
சுயோதனன் விரிப்பான்;

அதை

அறவே தவிர்த்து –
விதுரன் குடிலில்
வசிப்பதை வரிப்பான்!

சிந்தையில் வாஞ்சையை
சேமித்து வைத்தவன் –
கந்தையில் கொணர்ந்த
கைப்பிடி அவலை...

ஆசை ஆசையாய்த் தின்பான்;
'அமுதம்! அமுதம்!' என்பான்!

'வருக! வருக' என
வருந்தி அழைப்பினும்...

மெய்யை நினையார்
மாளிகை விருந்தில் –
கையை நனையான்!

சார்வபௌமனா யிருந்து
சக்கரம் சுழற்றுவான்;
சிசுபால னொத்தவர்
சிரசினைக் கழற்றுவான்;

சாதாரணனா யிருந்து
சாரத்தியம் புரிவான்;
சாட்டையும் கையுமாய்
சமர்க்களத்தில் திரிவான்!

எக்கணம் –
எதைச் செய்வான்?

அறக்கருணையா?
மறக்கருணையா?
எவர் வினையை –
எதனால் கொய்வான்?

அவனே அறிவான்
அவன் திருவுளம்;
அவனியின் கண் இல்லை – அஃதை
அறிந்த ஒருவுளம்!

அவன் அறிவான் எப்பொருளும்;
அவனை அறியா எப்பொருளும்!

ஆற்றுவான்
அனேக மாயம்;
ஆரே கற்பிக்க வல்லார்
அவற்றிற்கு நியாயம்?

புதிர் அவன்! அவனுக்கு
எதிர் எவன்? அவனொரு –
பீஜமின்றி –
புறப்பட்ட பவன்!

ஆயினும் –
அவனுளம்...

பெற்ற தாயினும்
பெருவுளம்;
தண்ணளி மிக்கது; கேட்டதைத் –
தருவுளம்;

ஆனை மட்டுமல்ல;
'ஆதிமூலமே!' என – எவர்
விளித்தாலும் – உடன்
வருமுளம்!

உந்திப் பூவில் – விரிஞ்சன்
உட்கார்ந்திருக்க...

சீதக்கமலம்
செய்யாள் – அவனது
பாதக்கமலம்
பற்றியிருக்க...

சங்கு –
சக்கரதாரி
சயனித்திருப்பதே – பால்
சாகரம் எனும் ஈரவெள்ளம்;

ஈரவெள்ளத்து
ஈசனார்க்கு –
இல்லாதிருக்குமோ
இளகிடும் ஓர் ஈர உள்ளம்?

நித்ய விபூதியில் உள்ள
நாராயணனை –
ஈரத்தின் மேலிருக்கும்
ஈரம் எனலாம்;

லீலா விபூதியில் உள்ள
லோகநாதனை –
ஈரத்தின் இடையிலிருக்கும்
ஈரம் எனலாம்!

ஆம்!
அரங்கநாதன்...

ஈராறு நடுவிருக்கும்
ஈர ஆறு! அவனது –
எளிவந்த தன்மைக்கு
ஏது ஓர் ஈறு?

பரமபதத்தில்
படுக்க இடமில்லாமலா
பரமாத்மா – பாம்புப்
பாயலைச் சுருட்டிக்கொண்டு...

சீரங்கம்
சேர்ந்தனன்?

அல்ல;
அல்ல...

அவனது
ஆயிரம் திருநாமங்களில் –
ஏதேனும் ஒன்றை
ஏக சிந்தையுடன்...

மனனம் செய்து
மோட்சம் பெறாமல் – திரும்ப
ஜனனம் செய்யும்
ஜீவன்களை யெல்லாம் –

கடைத்தேற்றுதல் – தன்
கடன் எனத் தேர்ந்தனன்!

'வைகுந்தம் நோக்கி –
வையத்தார் வராவிடில் என்ன?
வையத்தாரை நோக்கி –
வைகுந்தம் வரும்; வாழ்வு தரும்!'

என –
எம்பிரான் எண்ணினான்;

திரிசடையின்
தந்தை –
வீடணனின்
வழி –

244

தரையிறங்கி –
திருவரங்கத்தை –
தனக்குரிய
திருத்தலமாய்ப் பண்ணினான்!

கால் நீட்டி – ககனத்தைக்
கிழித்தவன்தான் – அங்கு
கால் நீட்டிக் கிடக்கின்றான்;

கூருகிர்கள் –
கொண்ட...

கைவைத்து – கனகன் குடல்
கீண்டவன்தான் – தலைக்கொரு
கைவைத்துக் கிடக்கின்றான்;

பேரருளாளனாய்ப் –
பிறங்குகின்றான்;
உறங்குவதே போல் –
உறங்குகின்றான்!

கடல் நடுவே படுத்தவன் –
காவிரி நடுவே படுத்தானெனில்...

சேயின்
சேமம் கருதி – நோன்பிருக்கும்
தாயின்
தண்ணளியல்லவா அது;

முன்னைக் கெலாம்
முன்னை யாயும்;
பின்னைக் கெலாம்
பின்னை யாயும்;
அன்னைக் கெலாம்
அன்னை யாயும்;

பரந்து விரிந்து
பல்லுயிரையும் புரக்கும் –
பரமாத்மாவின்
பிரபாவமல்லவா அது!

'ரங்கராஜா! - எங்கள்
ரங்கராஜா!'

என்று
ஏழையோ பாழையோ
எவராயினும் சரி - அவன்
எதிர்நின்று விளிக்க...

'உங்க ராஜா! - நான்
உங்க ராஜா!'
என -
எழுந்தோடி வந்து...

உறுகண் போக்குகிறான் - அவர்
உள்ளங்கள் களிக்க;
கண்ணோரத்தில் - ஆனந்தக்
கண்ணீர் துளிக்க!

ரங்கராஜன் இப்படி!
ரங்கநாயகி எப்படி?

தாயார் -
தானிருக்கும்...

வீட்டு
வாசல் தாண்டி -
வெளியே
வைத்ததில்லை ஒரு தப்படி!

படி தாண்டாமலே
பார்க் கெல்லாம் -
படியளக்கும்
பத்தினி;

பிராட்டி
பார்வை பட்டாலே -
படிமிசை நில்லாது
பஞ்சம் பட்டினி!

நம்பினார்க்கு
நலஞ்சேர்ப்பதில் -
நாயகனை மிஞ்சியவள்
நாயகி;

நீல -
நயனங்கள் வழி...

பிரவாகமாய்ப்
பெருந்தயையைப் -
பீச்சி நின்றிருக்கும்
நாச்சி!

வினை
வெப்பத்தில் -
வெந்து
வதங்கி -

தன் -
திருவோலக்கத்திற்கு...

வருகை புரிவார்
விழிநீர் துடைக்கும் - அவளது
இருகை!

பிராகாரம் சுற்றிப்
பிரதட்சிணம் வந்து -
பிரார்த்தித்தால்
போதும் -

தொலையும்
தொலைதூரத்திற்கு...

புந்தியில் -
போகாது நெடுநாள்
குந்தியிருக்கும் - எவ்வகைக்
கோதும்!

மஞ்சள் காப்பு
மண மணக்க;
பட்டுப் பாவாடை
பள பளக்க;

மாணிக்கம் -
மரகதம் -
வைரம் -
வைடூரியம் -

ஆகியவற்றால்
ஆன...

பிழைகள் - நெல்
பொரியளவும் இல்லாத
இழைகள் -

அழகழகாய்
அழகழகாய் -
அங்கம் முச்சூடும்
அனல்பொறியாய் மினுமினுக்க;

மூலத்தானத்தில் - காஞ்சன
முளரிபோல் காட்சி தரும்...

தாயார்
திருமேனியை - வருணிக்கும்
வாயார்
வரகவிகளிலும் இல்லை;
எங்குபோய்த் தேடுவார் -
ஏற்றதொரு சொல்லை?

அயிராணியின்
அரசுபோல்
அட்சங்கள் - ஆயிரம்
அமைந்திருப்பினும்...

ரங்கநாச்சியாரின் -
ரமணீயமான தோற்றத்தை;
ஏற்றத்திற்கெல்லாம் - மேலான
ஏற்றமாயுள்ள ஏற்றத்தை;

கடுகிலும்
கடுகுகூட -
கண்டுகொள்ளல்
கடினம்;

பெரிய -
பிராட்டியார்...

பார்வைக்குள்
பிடிபடாத -
பிரமாண்டமான
படிமம்!

பெருமாளும் தாயாரும்
பிரத்தியட்ச தெய்வமாய்த் -
திருவோலக்கம் அமர்ந்து
தினம் தினம் அருளும்...

ஸ்ரீரங்கம் - அந்நாளில்

ஸ்ரீ வைஷ்ணவர்களின் -
தலைமைப் பீடமாய்த்
திகழ்ந்தது;

நாலாயிரம்;
நான்மறை ஓதுகை -
நித்தியப்படி
நிகழ்ந்தது!

பராங்குசர்
பாருக் கருளிய -
பிரபத்தி நெறி
பிரதானமாய்ப் பேணப்பட்டது;

'தீதில் நன்னெறி!' எனத்
தீந்தமிழில் -
குலசேகராழ்வார்
குறிப்பிட்ட...

அந்த
அற்புதமான
வாழ்க்கை நெறிக்கு - கிடைத்த
வரவேற்பு வேணப்பட்டது!

வைணவர்களின்
வணக்கத்திற்குரிய -
ஆசார்ய புருஷராய்
அமர்ந்திருந்தவர்...

ஒரு
மகாபுருஷர்; அவர்
முன்னாள் சிற்றரசர்!

யாதவப் பிரகாசரோடு - இனி
யாண்டும் தொடர்பில்லை என்று -
நம்பி ராமானுஜன்
நீங்கிவிட்ட சேதி...

அந்த -
சிரேஷ்டரின்
செவிகளுக்கு எட்டியது; அது -
செந்தேனை - அவரது
செவிகளுக்குள் கொட்டியது!

- வளரும்



"என் மனைவிக்குன்னு எதாவது புதுசு புதுசா வியாதி வருது..."

"நிஜமாவா..?"

"ஆமாம்! எல்லாருக்கும் உடம்புல சக்கரைனே இருக்கும்... ஆனா, அவளுக்கு வெல்லம் இருக்குதாம்!"

"இந்த நாலு நாளா அவரு ஃப்ரிஜ்ல பண்ணி வெச்சுட்டுப் போனதை சாப்பிட்டுட்டு இருந்தேன்!"

# முறை சிரிங்க!



"சாவுகூட நம்மைப் பிரிக்க முடியாதுங்க..."

"ஐயையோ! நான் அதை ஒண்ணைத்தான் நம்பிட்டிருந்தேன். இப்ப அதுவும் இல்லையா..?"



"யார் சொன்னது வேலை இல்லைன்னு... வீட்டு வேலையெல்லாம் யார் செய்யறாங்களாம்?"

# ராமானுஜ காவியம் 31

## யமுனைத் துறைவர்.

'கீழை அகத்து ஆழ்வான்!'
'மேலை அகத்து ஆழ்வான்!'

இவ் -
இருவரையும்...

பெருமக்கள் பன்னிருவர்
பாசுரம் மீட்ட - நாதமுனியின்
மருமக்கள் என்று -

குருபரம்பரை
குறிப்பிடும்; அதுதான் -
வைணவத்தின்
வரைபடம்!

பூதம் முதல் -
புளியமர மாறன் வரை -

பாவில் ஏற்றிவைத்த
பழமறையை - இவ்விருவரின்
நாவில் ஏற்றிவைத்து...

'நசையொடு உழலும்
நானிலத்தார் உய்ய - இவற்றை
இசையொடு ஓதுக!

பிறபந்தம்
போக்கவும்; நிலையான
பரபந்தம்
பூக்கவும்; நாலாயிரப்
பிரபந்தம்
பயன்படும்...

என
எல்லா இனத்தாரும் -
வாழ வேண்டி
வைணவச் சங்கெடுத்து ஊதுக!'

என்று -
அன்று...

நியமித்தருளிய நல்லாசான்
நாதமுனி; இந்த
நாதமுனி இலையேல்
நமக்கு எட்டுவதேது -
நாலாயிரம் எனும்
நற்றமிழ்க் கனி?

கீதமுனி என விளங்கிய
நாதமுனி -
ஈன்ற திருக்குமாரர்
ஈசுவர முனி;

ஈசுவர முனி
ஈன்ற திருக்குமாரர் -

யாமுனர் எனப்படும்
யமுனைத் துறைவர்;
இன்றளவும் வைஷ்ணவர்க்கு -
இன்னோர் இறைவர்!

---

கவிஞர் **வாலி**

250

யாமுனர் புகழை –
யான் பேசப் புகுந்தால்...

அது
அதிசயோக்தி என –
ஆரும் எண்ணலாம்;
அலட்சியம் பண்ணலாம்!

அந்த
அளவு –
ஞாலம் நம்ப மறுக்கும்
ஞானம்...

கசடற
கற்பிக்கப்பட்டிருந்தது –
யாமுனர்க்கு – அவரிருந்த
யாயின் கருவிலே;

ஆயகலை
அனைத்திற்கும் –
அதிதேவதையான
அயக்கிரீவர்...

அம்புவி இறங்கினா ரெனலாம் –
அவர் உருவிலே!

எது
எப்படி யிருப்பினும் –
உலகியலை
உத்தேசித்து...

மறைகளை;
மறைக்குள் மறைவாயிருக்கும்
நிறைகளை;

சாத்திரங்களை;
சாத்திரங்கள் சாற்றுகின்ற
சூத்திரங்களை;

வைணவத்தின்
வைபவங்களை;

பிரபந்தங்களின்
பிரபாவங்களை;

மறையவர்கோன் எனப்படும்
மகாபாஷ்ய பட்டரிடம்...

ஒரு
வித்தியார்த்தியாகி – யாமுனர்
வாசிக்க லானார்;



பிறவியிலேயே
பிராக்கியனாகப்
பிறங்குகின்ற
பிள்ளைக்கு...

புகட்டவோ
போதிக்கவோ - தன்வசம்
யாது உளது என - ஆசாரியர்
யோசிக்க லானார்!

கல்வி -
கால்மேல் கால்போட்டுக்கொண்டு -
யதா சௌகரியமோ
ததா சௌகரியம்...

விச்சிராந்தியாக
வீற்றிருந்தது - நல்ல
யாய்; அத்தன் பெற்றெடுத்த
யாமுனர் நாக்கில்;
வீரநாராயணபுரமே -
விரல் வைத்தது மூக்கில்!

ஆறிரண்டு அகவையில் -
அமோகமான பிரக்கியாதி;
வாதியாய் - யாமுனர்
வாதிட்டு நின்றால் - அந்த
வட்டாரத்தில் இல்லை - அவரை
வெல்லவல்ல பிரதிவாதி!

அந்த நாளில் -
அன்ன வயல்கள் நிறைந்த
அந்தப் பிரதேசத்தை - ஓர்
அரசன் ஆண்டுவந்தான்;

வடமொழியிலும் -
தென்மொழியிலும் -

புலமை சார்ந்த
புலவோர்க்குப்
புகலாயிருப்பவன் - எனும்
புகழைப் பூண்டுவந்தான்!

ஒருவர் மாட்டு
ஒப்பரும் மேதைமையிருந்தால் -
உடனே
உவந்து...
பரிசில் வழங்கும் -
குரிசில்!

அரசன் போலவே -
அரசி;
புலை வறுமை
புலவரை வாட்டாது - உதவுவாள்
உலை அரிசி!

அன்னணம் -
அறிவை ஆராதித்த ஆட்சியில்...

ராஜ புரோகிதனாகவும் -
ராஜ பண்டிதனாகவும் -
ராஜ சபையில் வீற்றிருந்தான்
ராஜனால் வணங்கப்பெற்ற...

வித்வஜன கோலாகலன் - எனும்



வித்துவான்; அவனது
வித்துவத்திற்கு உவமை
விரிந்த வான்!

அவனை –
அவ்வூரார்...
ஆக்கியாழ்வான் என்றும்
அழைப்பது உண்டு; ஊர்
எழுந்து நிற்கும் – அவன்
எதிர்வரக் கண்டு!

உடல் எடுத்து
உலவும் – நூற்
கடல் எனும்படி
கல்வியிருந்தும்...

'செருக்கும் தருக்கும் – புகழைச்
சுருக்கும்; கருக்கும்!' எனும் –
ஆன்றோர் சொல்லை –
ஆக்கியாழ்வான் ஏற்கவில்லை!

வித்தையால் – மண்டை
வீங்கிப் போய்க் கிடந்தான்;
வீதியில் நடக்கையில்
வானம் பார்த்து நடந்தான்!

இருக்கும் புலவர்க்கு – தானே
இறை என்றான்; அவர்கள்
இறுக்க வேண்டும் – தனக்கு
இறை என்றான்; அங்ஙனம்
இறை இறுக்காது போனால் –
சிறை என்றான்!

யாரிடம் –



யமுனைத் துறைவர்...

வேதம்
வாசித்து வருகிறாரோ - அந்த
வித்துவானுக்கும்
வந்தது ஓலை -

'கப்பம் - ஏன்
கட்டவில்லை?' என்று;

பாஷ்ய பட்டர்
பொறி கலங்கினார் -
கப்பம் கட்டக்
கைப்பொருள் இல்லாமல் நின்று!

விழி -
வழி -

அருவி சோர;
ஆசாரியர் மனம் -
வெருவி சோர;

அதுகண்டு -
ஆற்றமாட்டாமல்...

வெகுண்டார் யாமுனர்;
வாங்கினார் ஓலையை;

அதைக் கிழித்துப்போட்டு
அதிகப் படுத்தினார் -
ஆக்கியாழ்வானின்
அடிவயிற்றுச் சூலையை!

உயர - இனி
உயரமில்லை எனும்படி
உயர்ந்தது...

ராஜபண்டிதனின்
ரௌத்திரம்;
பாவம்! அவனுக்கு முன்னமேயே -
பௌத்திரம்!

மூலச்சூடு
மூளையைத் தாக்கியது; அது -
ஆக்கியாழ்வானை - இன்னும்
ஆக்கிரோஷமாய் ஆக்கியது!

'ஓலையைக் கிழித்தவன்
ஒரு சிறுவனா? நான்
சர்வஞ்ஞன்; என்முன் - அவன்
சல்லி பெறுவனா?

கவித்துவம்
கொண்டவனோ? என்போல் -
கல்விக் கடலின்
கரையைக் கண்டவனோ?

வினவி
வருக; வந்து எனக்கு - அவன்
தரும் விடையைத்
தருக!'

இங்ஙனம் -
இட்டான் ஊளை;
இட்டு -
ஏவினான் ஆளை!

பன்னிரண்டு வயது யாமுனர் -
பதில் விடுத்தார்; கவியொன்று -
தன்னிலை விளக்கமாய்த்
தக்கணமே தொடுத்தார்!

'கவித்துவம் பெரிதாய்க்
கொண்டவனோ - கல்விக்கடலின்
கரையினைக் கண்ணாரக்
கண்டவனோ...

அடியேன்
அல்ல;
ஆகாது என்னால் -
அப்படியெல்லாம் பொய் சொல்ல;

ஆயினும் -
ஆற்றல் உடைத்தவன்...

அரியினை நிகர்த்த தோர்
ஆண்டகை ஆகி - மதம்பிடித்த

கரியினை நிகர்த்தவன்
கருவத்தைக் கொல்ல!'

விடலைப் பையன்
விடுத்த ஓலைகண்டு -
வேந்தே
வியந்தான்;

'பாலியத்திலேயே - பெரும்
பாண்டித்தியம் பெற்ற
பையனா யிருப்பானோ?' என -
பயந்தான்!

அரசவைக்கு வரச்சொல்லி
அனுப்பினான் ஓலை; யாமுனர் -
அரசு ஓலையையும் கிழித்து
அனுப்பினார் மூலை!

வெதும்பினான்
வேந்து - தனது
விழியிரண்டில்
வெம்மையும் செம்மையும் போந்து!

அப்போது
அரசனிடம் -
அரசி சொன்னாள்; ஓர் -
அன்னை அன்னாள்!

'தலைவா!
தக்க மரியாதையோடு -
தண்டிகை அனுப்பித்
தருவிப்பதுதான் முறை;

வானம் - தன்னை
உரிய முறையில்
வரவேற்க வேண்டும் என்று -
விரும்புகிறது பிறை;

சிறுவன் - என்
செம்மலுக்கு
எழுதி அனுப்பிய ஓலையில் -
எனக்குத் தெரியவில்லை குறை!'
பல்லக்கு ஏறி

பவனி வந்தது -
பன்னிரண்டு வயது அறிவு; அடடா!
பார்வையில்தான் என்ன செறிவு!

'பாருங்கள் வேந்தே! அந்தப் -
பிள்ளையின் விலாசத்தை!' என்று -

அரசி -
அரசனிடம் சுட்டினாள்;
அதன்பின் பந்தயம் ஒன்று -
அரசனிடம் கட்டினாள்!

'உங்கள் ஆக்கியாழ்வான் - இந்த
உன்னதப் பிள்ளையை வென்றால்...

நான் -
பட்டத்தரசியல்ல; உமது
பணிப்பெண் ஆவேன்;
நீங்கள்
நடக்கும் இடமெல்லாம் - நான்
அடைப்பம் சுமந்து - உங்கள்
அடியொற்றிப் போவேன்!'

மன்னன்
மெலிதாய்ச் சிரித்தான்;
பந்தயத்தில் - தன்
பங்கு என்னவென விரித்தான்!

'ஆக்கியாழ்வானை - உனது
அறிவுக் கொழுந்து வென்றால்...

பாதி ராஜ்ஜியத்தை - அந்தப்
பிள்ளைக்குத் தருவேன்; தந்து -
மீதி ராஜ்ஜியத்தை - நான்
மன்னாயிருந்து ஆண்டு வருவேன்!'

அரசவையில் -
அனைவரும் அமர்ந்திருக்க..

ஆக்கியாழ்வானும்
ஆறிரண்டு வயது யாமுனரும் -
எதிரும் புதிரும்
எழுந்தருளி யிருக்க..

'ஆரம்பமாகட்டும்!' என்றான்
அரசு; மெல்லியதாய் -
முழங்கியது - ஒரு சின்ன
முரசு!

ராஜபண்டிதன் - யுவ
ராஜபண்டிதனைப் பார்த்து...

குறுநகையை
வீசினான்; பின்பு
குறும்பாகப்
பேசினான்!

'யமுனைத் துறைவரே!
யானொன்று சொல்கிறேன்; கேளும்!
நான் சொல்லும் முறையில் -
நீர் வென்றால் என்னை ஆளும்!

நீர் -
'உண்டு' என்பதை - நான்
'இல்லை' என்று மறுதலிப்பேன்;
நீர் -
'இல்லை' என்பதை - நான்
'உண்டு' என்று ரூதரிப்பேன்!'

ஒருபானைச் சோற்றுக்கு -
ஓர் அரிசி பதம் என்று...

சாத்திரங்கள்
சம்பந்தமாக - நெடுநேரம்
சர்ச்சைகள்
செய்வதை விட்டுவிட்டு...

உளது என்பதை
இலது என்றும்;
இலது என்பதை
உளது என்றும்;

நிரூபிப்பதன் மூலம் -
நீண்டு போகாமல் -
நிமிடத்தில் முடிந்துவிடும் -
நீயா? நானா? எனும் வாதம்...

என்று -
எண்ணி -

ஆக்கியாழ்வான்
அன்னணம் செப்பினான்; ஓர்
துச்சப் பார்வையை - யமுனைத்
துறைவர் மீது துப்பினான்!

தன்னோடு வாதிடுவதையே - தன்
தகுதிக்கு ஒவ்வாததாய்த்
தருக்கி நினைப்பதை - யாமுனர்
தெரிந்து கொண்டார்;

தானே -
தன்கையால் -
தெருமண்ணை எடுத்துத்
தலையில் போட்டுக் கொள்வதில்...

ஆழ்வான் - ஓர்
ஆனை அனை ஆளென -
அக்கணமே - அவர்
அறிந்து கொண்டார்!

'அரசவைப் புலவர்
அறிவித்தபடி நடக்க -
அடியேனுக்கு
ஆட்சேபணை இலை!' என்றார்; தன் -
ஆசாரியனின்
அடிமலர்களைத் - தனது
அகத்தில் இருத்தி
அரைநொடி வந்தித்து நின்றார்!

அதன்பின் - யாமுனர்
ஆக்கியாழ்வானிடம்...

மூன்றே வாக்கியங்கள் சொல்லி -
'மறுத்திடுக!' என -

அதிர்ந்தது
அவை; அப்படி
அவையை அதிர வைத்தன -
அவை!

-வளரும்

256

# ராமானுஜ காவியம்

32

## தூதுவளைக் கீரை.

'அரசவைப் புலவரே!
ஆக்கியாழ்வாரே!

அடியேன்
அறிவிக்கும்
மூன்று விஷயங்களை – நீர்
மறுக்க வேண்டும்;

மூன்றையும் மறுக்க – உம்மால்
முடியாது போயின்...

இனி
இச் சிறுவனுக்கு – நீர்
இறை
இறுக்க வேண்டும்!

ஒன்று...
உமது –
அன்னையார் ஒரு மலடியல்ல!

இரண்டு...
உமது –
அரசர்பிரான் ஒரு தார்மிகன்!

கவிஞர் வாலி



மூன்று...
உமது –
அரசியார் ஒரு பதிவிரதை!'

இங்ஙனம் யாமுனர் –
இயம்பியதும்...

ஆக்கியாழ்வான்;
அரசர்பிரான்;
அரசியார்; மற்றும் –
அவையோர்;

ஆகிய –
அனைவரும்...

அதிர்ச்சி –

அடைந்ததில் என்ன வியப்பு?
அங்ஙனம் –
அடையாதிருப்பரேல் வியப்பு!

ஆக்கியாழ்வான் – எனும்



ஆண்மகவு ஒன்றை -
அய்யிரு திங்கள் - தன்
அடிவயிற்றில் சுமந்து பெற்ற...

அன்னை ஒரு மலடியல்லதான்;
அஃதை எங்ஙனம் மறுப்பது?

அறவழிச் சிந்தனை
அமைந்தவன் - என
அனைவரும் - எஞ்ஞான்றும்
ஆராதிக்கும்...

அரசன் ஒரு தார்மிகன்தான்;
அஃதை எங்ஙனம் மறுப்பது?

ஆளனை யல்லால் - பிற
ஆடவரைத் - தனது
அகத்தில் - கனவிலும்
அமர்த்தியறியாத...

அரசி ஒரு பதிவிரதைதான்;
அஃதை எங்ஙனம் மறுப்பது?

வித்வஜன கோலாகலன் - என
விளங்கும்...

ராஜ பண்டிதன்;
ராஜ புரோகிதன்;
ராஜ கவிஞன்;
ராஜ கணிகன்;

ஆக்கியாழ்வான் -
ஆணவ முடிச்சு அவிழ்ந்தான்;
'தோற்றேன்!' எனத் -
தலை கவிழ்ந்தான்!

'நீர்
நவின்ற -
மூன்றையும் மறுக்க -
முடியுமோ உம்மால்?'

என -
யாமுனரை...

அரசனும்;
அரசியும் கேட்க -
'முடியும்!' என்றார் யாமுனர் -
முகத்தில் முறுவல் பூக்க!

"அரசர்பிரானே!
அரசமா தேவியே!

உலகியல்



வழக்கின்படி -
ஒரு மரமும் தோப்பல்ல;
ஒரு பிள்ளையும் பிள்ளையல்ல!

'பெற்ற ஒன்று -
பிழைத்திருக்குமோ?
பிழைத்திருந்து
பின்னாளில் - அது
உற்ற தாய்க்கென
உழைத்திருக்குமோ?'

என்று -
எந்தத் தாயும்...

மனக்கவலையிலேயே - சதா
மூழ்கிப் போவாள்; ஆதலால் -
மகவு பெற்றும் - அவள்
மலடியே யாவாள்!

ஒரே
ஒரு மகனாக -
ஆக்கியாழ்வாரைப் பெற்ற
அவரது அன்னையார்...

'மலடியல்ல!' என்று -
மொழிந்தேனே நான் - அந்த
முதல் வாக்கியம் - தவறென்று
மறுக்கப் படுகிறது!

மக்கள் செய்யும் பாவம் -
மன்னனைச் சேரும் என்பது -
மறைமொழி; மூத்தோர் சொன்ன -
நிறைமொழி!

'அரசன் ஒரு தார்மிகன்!' என -
அடியேன் சொன்னது...

தர்மசாஸ்திரப்படி
தவறான தாகும்;
குடிகளின் பாவங்களிலே -
கொற்றவனுக்கும் பங்கு போகும்!

எனவே -
என்னுடைய -
இரண்டாவது வாக்கியமும் -
இங்கு மறுக்கப்படுகிறது!

வேத வாக்கியப்படி
வைதிக முறையில்
விவாகம் புரிந்துகொண்ட - ஒரு
வனிதை யானவள்...

முதல் நாள் - சோமனின்
மனைவி யாகிறாள்;

இரண்டாம் நாள் - கந்தர்வனின்
இல்லா ளாகிறாள்;

மூன்றாம் நாள் - அக்கினியின்
முறைப்பெண் ணாகிறாள்;

நான்காம் -
நாளில் தான்...

திருக்கரம் பற்றித்
தீவலம் வந்த
நாயகனுக்கு - அவள்
நாயகி யாகிறாள்!

மணம்
முடித்த பின் -
முதல்
மூன்று நாள்கள்...

தேவதைகள் மூவரோடு
தொடர்பு உண்டாவதால் -
வேத நெறிப்படி
விவாகம் செய்துகொண்ட -

பாவையர்க் கெல்லாம் -
பாதிவ்ரத்யத்தில் குறையுண்டு;
நான் சொல்லும் கருத்துக்கு -
நற்சாட்சியாக மறையுண்டு!

அதன் -
அடிப்படையில் பார்த்தால்...

சாஸ்திரோக்தமான
சடங்குகளுடன் -
அரசனை மணம்புரிந்த
அரசியாரை...

'ஒரு பதிவிரதை!' என்று
உரைத்தேனே நான் - அந்த

260

மூன்றாவது வாக்கியமும்
மறுக்கப் படுகிறது!"

யாமுனர் விளக்கம் கேட்டு -
யாவரும் வியப்பெய்த...

பணிப்பெண்ணாகாது - தனைப்
பட்டமகிஷியாகவே இருத்திய
புத்திசாலிப் பிள்ளையைத் - தன்
பக்கலில் அழைத்து -

உற்சாகம் பொங்க - அரசி
உச்சி முகர்ந்தாள்;

'அய்யா! என்னை நீர்
ஆளவந்தீரோ?' என -
ஆனந்தக் கண்ணீர்
அரும்பிடப் பகர்ந்தாள்!

அரசிக்கு -
அளித்த வாக்குப்படி...

அரசனும்
அரை ராஜ்ஜியத்தை -
அறிவார்ந்த யாமுனருக்கு
அளித்தான்;

அவனும்
அவரை -
'ஆளவந்தாரே!' என
அன்பொழுக விளித்தான்!

அன்றுமுதல் யாமுனர்
ஆளவந்தார் ஆனார்;
அந்தணச் சிறுவனாய்
அத்தியயனம் செய்தவர் -
ஆளுகை புரியும்
அரசராகிப் போனார்!

தினம்
தினமாய் -

வாரம்
வாரமாய் -

திங்கள்
திங்களாய் -

வருஷம்
வருஷமாய் -

பொழுதுகளைக் - காலம்
புசித்தது; அங்ஙனம்
புசித்த பின்னும் - அதற்குப்
பசித்தது!

யாகங்களை வேட்ட
யாமுனர் - ஆளவந்தாரானபின்
போகங்களை வேட்டார்;
யாமுனர் என்ன?
யார்தான் -
பொன்னும் பொருளும் வந்தபின்
புத்திமாற மாட்டார்?

அரண்மனை;
அரியணை;

குடை;
குஞ்சரம்;

பல்லக்கு;
பதாகை;

கனகக்கட்டில்;
காவற்சோலை;

'பராக்' சொல்ல -
படிக்கம் சுமக்க -

ஆலவட்டம் வீச -
அரைத்த சந்தனம் பூச -

ஏகப்பட்ட
எடுபிடிகள்;
கட்டுக்காவல்
கெடுபிடிகள்;

சௌரியம் மிக்க
சைனியம்;
சாதுர்யம் மிக்க
சேனாபதி;

சௌக்கியம்;
சௌபாக்கியம்;
சோகாப்பு என்னென்றறியா

சௌகரியம்;

சௌமியம் -
சௌந்தரியம் -
சாலப் பொருந்திய
சகதர்மிணிகள்;

'சொட்டை நம்பி;
தெய்வத்துக்கரசு நம்பி;
பிள்ளையரசு நம்பி;
திருவரங்கப்பெருமாள்;'

என்று - சிங்க
ஏறு போன்ற...

உத்தம
புத்திரர்கள்
நால்வர்; நால்வரும் -
நான்மறை போல்வர்!

இப்படி -
இராஜ போகமாக...

ஆளவந்தார் வாழ்க்கை
அமைந்தது;

'இவ்வாறு -
இலௌகீக சுகங்களில் -
நாதமுனியின் பேரர்
நாளும் கிடக்கிறாரே!' என்று -

ஒரே
ஓர் உள்ளம் -
கவன்று
குமைந்தது!

அங்ஙனம் -
அரற்றிய...

மகானுபாவரின் திருநாமம்
மணக்கால் நம்பி; நாலாயிரப் -
பாசுரப் பூக்கள்
பிலிற்றுகின்ற - தமிழ்
மறைத்தேனை
மாந்தித் திரியும் தும்பி!

ஆளவந்தாரின்
அருமைப் பாட்டனாரின் -
சீடருக்குச்
சீடர் இவர்;
இவருக்கு உவமையாக
இல்லை ஒரு தவர்!

வைணவ -
உலகத்தின்...

பேரரசாய்ப்
பிறங்கவேண்டிய சீவன் - ஒரு
சிற்றரசாய்ச்
சிறுபூமியை ஆள்கிறதே...

என்று
ஏங்கினார் நம்பி;

ஆளவந்தாரை -
ஆற்றுப்படுத்தலாம் எனில்..

அரண்மனைவாசியை
அணுக முடியாது -
வாடி -
வதங்கினார் வெம்பி!

பிறகு - சற்றுப்
பிரயத்தனம் செய்து...

மாளிகை
மடைப்பள்ளியில்
பணிபுரியும் - ஒரு
பரிசாரகர் மூலம்...

அரசர்
ஆளவந்தார்
ஆசையாய்
அமுது செய்வது -

தூதுவளைக் கீரை - எனத்
தெரிந்து கொண்டு...

அதை
அன்றாடம் -

பறித்துவந்து
பரிசாரகரிடம் கொடுத்தார்;

262

அங்ஙனம் -
ஆறு மாதங்கள் செய்தும்...

ஆளவந்தாரை
அணுக வொண்ணாது -
நெஞ்சு வெந்து
நம்பிக்கையை விடுத்தார்!

கீரை
கொணர்வதை -
நம்பி
நிறுத்த; அது
வேண்டும் என - ஆளவந்தாரின்
உள்நா வற்புறுத்த;

'நான்கு
நாள்களாக -
ஏன் தூதுவளை
இல்லை?' என்று -

அடுக்களைப் பணியாளை - அவர்
அழைத்துக் கேட்க...

'வழக்கமாக - கீரையொடு
வருபவர் வரவில்லை!' என்று -
பரிசாரகன்
பதிலிறுத்தான் -
பார்வையில்
பயம் பூக்க!

'அவர் வந்தால் - என்னிடம்
அழைத்து வா!' என்றார் -
ஆளவந்தார்; வைணவத்தை
ஆளவந்தார்!

சில நாள்கள் -
சென்ற பின்...

மீண்டும் ஒருமுறை
முயலலாமே என - கீரையொடு
மணக்கால் நம்பி
மாளிகை வந்தார்;

தூதுவளை -
தூது சொல...

அரசர்
ஆளவந்தார் -
அவருக்கு
அன்பொடு தரிசனம் தந்தார்!

ஆரென்று - தன்னை
அறிமுகப்படுத்திக் கொண்டு...

மணக்கால் நம்பி
மெல்ல மெல்ல
ஆளவந்தாரை
ஆற்றுப்படுத்தினார்;

நாட்பட -
நாட்பட...

ஆளவந்தாரும்
அவரது உள்ளத்திற்கு -
ஆன்ம ஞானமெனும்
ஆடையை உடுத்தினார்!

துறவு பூண்டு -
திருவரங்கம் போந்தார்;

முக்கோல் பகவராகி
முன்னின்று பாடுபட்டு
தக்கோர் ஏத்தும் - வைணவ
தரிசனத்திற்கு...

வற்றாத -
வலிவும் பொலிவும் ஈந்தார்!

அகவை அதிகமான
ஆளவந்தார் - தனக்கு
அடுத்தது ஆரென
ஆய்ந்த நாளில்தான்...

யதி
யாதவப் பிரகாசரை விட்டு -
இராமானுஜன்
இறுதியாக விலகிவிட்ட சேதி...

செவிக்கு எட்டியது; அவரது -
செவிக்குள் தேனைக் கொட்டியது!

**- வளரும்**



"என்னதான்
பலமா
உதைச்சு
இருந்தாலும்
இப்படியா..?!"





"கேட்டதுக்கு
'ஹெல்மட்'னு
சொல்லிட்டுப்
போறான்
சார்!"

கவிஞர் **வாலி**

# ராமானுஜ காவியம்

**33**

**ஆளவந்தார் ஆள் அனுப்பினார்.**

"**அ**ம்மா!
ஆசாரியனுக்கும் எனக்கும்...

இருந்த உறவு -
இற்றுப் போனது;

புரவலன்
புத்திரிக்குப் -
பேய் விரட்டப்
போய்...

அரைகுறையாயிருந்த உறவும் -
அற்றுப் போனது!

நீயும்;
நம்பியும்;

'சேர்! சேர்!' என்று -
சேர்த்து வைத்தாலும்
சேருமா...
நீர்;
நெய்?

யார் நீர்?
யார் நெய்?
நீயே -
நிர்ணயம் செய்!

நெய் - நீட்டியது
கை; நீட்டிய கையை - ஏற்கும்
நீர்மையற்று நின்றிருந்தது
நீர்!

அவர்
அவராகவே இருக்க;
நான்
நானாகவே இருக்க;

எவரால்
ஏலும் -
இருவரின்
இடைவெளியைச் சுருக்க?

நான்
நூறும்புக நினையாது - எனை
நூற நினைத்தவர்;
குமிழ்த்துக்
கொப்புளிக்கும் கங்கையில் -
அமிழ்த்தி
அறவே கோற நினைத்தவர்!

தினம் தினம்
தெண்டம் சமர்ப்பிக்கையில்...
வாயளவில் -
வழங்கினார் பூரணாசி; ஆனால் -
கொல்வதற்கன்றோ - எனைக்
கூட்டிப்போனார் வாரணாசி!

உன்பிள்ளையின்
உயிருக்கு - ஓர்
உத்தரவாதம் இல்லை என்று
உணர்ந்தும்...

யாதவப் பிரகாசரை விட்டால்
யாரும் -

அவரளவு
ஆரணம் கற்ற - ஒரு
மகாவித்துவான் - தொண்டை
மண்டலத்தில் இல்லை யென்று...

அம்மா! நீயென்னை
அவரிடமே மீண்டும் -
வேதம் வாசிக்க விடுத்தாய்;
பூனை அல்ல - நமக்குப்



புனுகு முக்கியம் - என்று
புத்திமதியும் கொடுத்தாய்!

'வாராது இடர்;
வரதராஜன் துணை!' என -
உறுதி காப்பதில்
உனக்கு யாரம்மா இணை?

நீ -
நியமித்தபடி...

குருவுக்கு முன்னால்
கட்டிவைத்திருந்தேன் வாயை;
இருப்பினும் - எங்கள்
இருவரிடையே
விவகாரம் வளர்க்க
விதி அனுப்பிவைத்தது பேயை!

அலகையிடமிருந்து
அன்பு மகளை மீட்டதற்காக -
அரசன் என்னை
அள்வு கடந்து பாராட்டினான்;
அதே நேரத்தில்
அவனை யறியாது - என்
ஆசாரியப் பிரானை
அனல் நதியில் நீராட்டினான்!

என்புகழ் நீள்வதை - அவரால்
எங்ஙனம் ஏற்க இயலும்?

அனைவரும் அறிந்தது தானே -
அவரது குணத்தின் இயலும்!

தன்னைவிடத்
தன்னுடைய -

நிழல்
நீண்டிருந்தாலே - என்
ஆசாரியன்
அதை சகியாது...

நிழல்விழாத இடம்பார்த்து
நிற்பவர்;
மகோன்னதமான
மதிநலம் இருந்தும் -
மண்குவியல்களைக் கண்டு
மனம் வெதும்பும் வெற்பவர்!

அம்மா! இனி
ஆரிடம் நான் போய் நிற்பது?
ஆர்
அடிமலரை -
ஆச்ரயித்து
ஆரணங்களைக் கற்பது?"

இன்னணம் -

இராமானுஜன்...

தாய் காந்திமதியிடம்
தெரிவித்தான்; தன்னை
ஆசாரியன் விலக்கிவிட்டதை
அறிவித்தான்!

மகன்
மொழிந்தது கேட்டு...

முகத்தில் - சிறு
முறுவல் மொய்க்கப் பேசினாள்
காந்திமதி; பட்டறிவு
கனிந்த மதி!

"அப்பா! ராமானுஜா! நீ -
அறியாதது அல்ல -
உன் அம்மா - புதிதாய்
உனக்குச் சொல்ல!

உலகத்தில்
உறவுகள் -
குலவுவதற்கும்
விலகுவதற்கும் -

'சந்தர்ப்பம் அப்படி!' என்று
சொல்வது வெறும் சாக்கு; 'தெய்வ -
சங்கற்பம் அப்படி!' என்பதே -
சான்றோர்கள் சொல்லும் வாக்கு!

பெருமாள் சித்தப்படிதான்
பிரபஞ்சம் நடக்கிறது; நம்
களிப்பும் கண்ணீரும் - அவன்
கைக்குள் கிடக்கிறது!

'நடப்பதெல்லாம்
நாராயணன் செயல்!' என்று
உள்ளுவார் வாழ்வில்
வீசுமா புயல்?

யதி
யாதவப் பிரகாசரிடம் - நீ
வேதாந்தம்
வாசித்தது போதும்...

என்று
எண்ணினான் -
ஸ்ரீயின் பதி; அந்த -
ஸ்ரீரங்கப் பதி; அதற்கு
ஏதுவாக இயங்கியது -
ஏகதண்டியின் மதி!

அகலிகை மேல்
ஆசைப்பட்டான் மகவான்;
அவனை
அவள் மேல் -



அங்ஙனம்
ஆசைப்பட வைத்தான் பகவான்!

ஏன் வைத்தான்?
எதற்கு வைத்தான்?
என்றெல்லாம் பகவானை
எவர் கேட்பது?

காரணத்தோடு – எக்
காரியத்தையும்...

அவன்
ஆற்றுவதால் –
அப்படியே கைகூடும்
அவன் வேட்பது!



ஆரறிவார்
அவன் லீலைகளை?
அவற்றை
அறிய மாட்டாமல்
அறமே தவிக்கிறதே;
ஆய்ந்துபார் அறநூல் ஓலைகளை!

வேதத்திற்கே பிடிபடாதவன்;
வேறெதற்குப் பிடிபடுவான்?
பிடிபட விரும்பினால் - அவனே
பிடிபட்டு அடிபடுவான்!

யாதவன் லீலைக்கு
யசோதைதான் சாட்சி;
பாகவதம்
படிக்கையில் - நம்
பார்வையில் படும் - கண்ணன்
பிடிபடும் அடிபடும் காட்சி!

ராமானுஜா!
ரதம் ஓட்டுகையில் - அந்த

ராதா மணாளன் சொன்ன -
ரத்தினச் சுருக்கம் என்ன?

'எல்லா அறங்களையும் விடு;
என்னிடத்தில் உன்னைக் கொடு!
பாவங்கள் அனைத்தையும்
போக்குவேன்; உன்னைத் -
துயரக் கடலிலிருந்து
தூக்குவேன்!'

இந்த வாக்கியத்தை - நாம்
இருவருமே நம்பி...

நம்மை - தேவ
நாதனிடம் கொடுத்துவிட்டோம்;
அப்படிக் கொடுத்ததால் -
ஆனந்தமாகத்தானே உள்ளோம்!
என்ன குறைச்சல்?
எந்த வகையில் நாம் கெட்டோம்?

எல்லா பாரங்களையும்
எடுத்து -

தேவராஜப் பெருமாள்
தலையில் போட்டுவிட்டு...

கச்சிநம்பியிடம் சென்று - உன்
கல்வியைப் பூர்த்தி செய்; உந்தை
கேசவ சோமயாஜியின் -
கீர்த்திக்குக் கீர்த்தி செய்!"

மாதாவின்
மணிவாக்கை -
மறையெனக் கருதும்
மகன்...

நம்பியாரைச் சந்தித்து -
நடந்தவற்றைச் சொல்லி...

"நட்டாற்றில் விடப்பட்டு
நிற்கின்றேன்;
தாங்கள் அனுமதித்தால்
தங்கள்கீழ் அமர்ந்து -
நற்கதியை
நல்கும் - அக்
கல்வியைக்
கற்கின்றேன்!

பெருமாளோடு - தினம்
பேசுகிறீர்கள்;
தேவராஜன்
திருமேனியை
வேர்க்கவிடாது - சாமரம்
வீசுகிறீர்கள்;

சகல சாஸ்திர
சாரத்தையும் -
ஓதாது உணர்ந்த
ஒருவரா யிருந்தும்...

குறைவறப் பிரபத்திஞானம்
குவியப் பெற்றவர் என்று
குறிப்பிட்டாலே - கேட்கக்
கூசுகிறீர்கள்;

முப்பொழுதும்
மூவுலகளந்தான் - திருவடி

முளரிகள் மேல்
மூசுகிறீர்கள்!

தங்களைவிட - ஒரு
திருமாலடியாரை...

'பார்ப்பது -
பெரிதும் அரிது!' என - எனைப்
பெற்றவள் - தங்களைப்
போற்றினாள்; தங்களது -
சீடனாயிருந்து கற்குமாறு
சாற்றினாள்!"

என்று -
எண்சாண் உடம்பு நிலந்தோய...

தெண்டனிட்டான் -
திருக்கச்சி நம்பியை;

நாராயணன்
நாமத்தையே
நாளும் போதும் - தன்
நல்லுணவா யேற்கும் கும்பியை!

நம்பி - நெஞ்சு
நெகிழ்ந்து நின்றார்;
'தேவராஜப் பெருமாளுக்கு -
தினம் தினம் புரிந்துவரும் -
திருமஞ்சனப் பணியையே
தொடர்க!' என்றார்!

இது -
இங்ஙன மிருக்க...

ஸ்ரீரங்கத்தில் -
ஸ்ரீவைஷ்ணவ தரிசனமே -

ஸ்தூல சரீரத்தை
ஸ்வீகரித்துக் கொண்டு -
ஸ்தோத்தரிக்கத் தக்க
ஸ்வரூபமாய்...

எழுந்தருளினாற் போல் -
எழுந்தருளியிருக்கும் -

முக்கோல் சுமந்த
முனி;
முந்நூல் அணிந்த
முன்னூல்;

பொருளரசு -
பொய்யெனப் புறந்தள்ளிய
அருளரசு;

பல்லுயிர்
பிறப்பொழிக்க - இதம் சொன்ன
நல்லுயிர்;

ஆளவந்தார் எனும்
அந்தணர் வேந்து -

எப்பொழுதும் இராமானுஜனின்
எண்ணமா யிருந்தார்;

'இராமானுஜன் -
இங்கு வரவேண்டும்;
இராமானுஜன் -
இங்கு வரவேண்டும்!' என்று...

ரங்கநாதனிடமும் -
ரங்கநாயகியிடமும் -
விண்ணப்பித்த
வண்ணமா யிருந்தார்!

அனேக மாதங்களுக்கு முன்பு -
ஆளவந்தார்...

காஞ்சியில் ராமானுஜனைக்
கண்டிருக்கிறார்;
கண்டமாத்திரத்தில்
காதலாகி -

வழுவறு - ஞான
வாரியென ஓர்ந்து
விழி வாயால் - வேண மட்டும்
வாரிவாரி உண்டிருக்கிறார்!

விண்ணிலிருந்து - ஒரு
பெண்ணில் இறங்கி - பின்
பெண்ணிலிருந்து - இம்

மண்ணில் இறங்கிய...

மாதவம் - என்று
மயங்கியிருக்கிறார்;
பக்கம் அழைத்துப்
பரிவொடு அணைத்துப்
பேசத் தவித்தவர் - பிறகு
பேசத் தயங்கியிருக்கிறார்!

யதி -
யாதவப் பிரகாசரோடு -
வீதியில் ராமானுஜன்
வந்து கொண்டிருந்ததால்...

சந்திக்க - அது
சந்தர்ப்பம் அல்ல என்று -
ஆளவந்தார்
அவ்விடம் விட்டு அகன்றார்;

இந்த
இராமானுஜனை -
எப்படியாவது
என்றேனும் ஒருநாள்...

திருவரங்கத்திற்குத் - தான்
தருவிக்க வேண்டுமென்று -
திருக்கச்சி நம்பியின்
திருச்செவிகளில் புகன்றார்!

இப்போது -
இராமானுஜன்...

திருப்புட்குழியின்
தொடர்பு இன்றி -
தனித்திருக்கும்
தகவலை அறிந்ததும்...

ஆளவந்தார்
ஆனந்தப் பட்டார்;
தன் பிரார்த்தனைக்குத்
தாயாரும் பெருமாளும் -
காது கொடுத்ததை எண்ணிக்
கண்ணீர் விட்டார்!

ஆளவந்தாரின்
அருளார்ந்த திருமேனியை...

விருத்தாப்பியம்
விழுங்கியது போக -

ராஜ பிளவை - எனும்
ரோகமும் -
சிறுகச் சிறுகச்
சாப்பிட்டு வந்தது;

அது -
அவர் முனம் செய்த -
கர்மவினை
கூப்பிட்டு வந்தது!

இன்னணம்
இருவழிகளில் வந்து
இறவு - தன்னை
இறுக்குவதை எண்ணியே...

அந்தணர்
அரசாக - தனக்கு
அடுத்தபடியாய்
ஆண்டகை ராமானுஜனை -

அரியாசனத்தில் அமர்த்த
ஆளவந்தார் அவாவி நின்றார்;

பிரிய சீடர் -
பெரிய நம்பியிடம்...

'காஞ்சி சென்று - ராமானுஜனைக்
கூட்டி வருக!' என்றார்!

இளையாழ்வானோடு - பேச
இருப்பதை யெல்லாம்...

அருகிருந்த - தனது
அடியார்களிடம் -
ஆளவந்தார் விரித்தார்;
அரங்கநாதர் சிரித்தார்!

– வளரும்

272

34



# ராமானுஜ காவியம்

**ஆர்க்கும் பிரியமான அம்மா!**

'**தா**யார் பெருமாள்
திருமஞ்சனத்திற்கு...

நன்னீர்க்குடம்
நாளும் எடுத்துவா; மீண்டுமொரு -
பன்னீர்க்குடம்
புக நேராது!'

என்று -
என்று சொன்னாரோ நம்பி...

அன்று தொட்டு

அந்தக் கைங்கரியத்தை -
ஆசாரியரின்
ஆணையே போல் -

இராமானுஜன்
இடையறாது புரிந்துவந்தான்;

சாலைக் கிணற்றில் - தான்
சேந்திவரும் குளிர்நீரில்...

அஞ்சன நிறத்தனும்
அவனது நாயகியும்
மஞ்சன மாடுவதில் -
பெரிதும்
மகிழ்வதை -

■ கவிஞர் வாலி

உள்மனத்து -
உணர்வால் புரிந் துவந்தான்!

இருப்பினும் -
இராமானுஜனின் இதயத்தில்...

ஓர்
அமைதியின்மை
அரும்பி யிருந்தது;

ஆம்;
அவனுக்குக் -
கை
கூடவில்லை - அவன்
வெகுவாக
விரும்பி யிருந்தது!

அவனுக்கு
ஆசிரியப் பிரானாய் இருக்க -
அவன்
அடிபணிந்து வேண்டியும்...

திருக்கச்சி நம்பி - அதற்குத்
திருவுள்ளம் இசைந்தாரில்லை;
திரும்பத் திரும்பத்
தீர்த்தக் கைங்கரியம்தான் -
தீர்த்தனுக்குகந்த
திருப்பணி என்று...

வற்புறுத்தியது தவிர - அவர்



வேறெதற்கும் அசைந்தாரில்லை!

அவரது மௌனத்தை -
அர்த்தப்படுத்த முடியாது...

இராமானுஜன் - சற்றே
இடர்ப் பட்டான்;

ஆயினும்
அவனளவில் -
அவரையே
ஆசாரியனாய் ஆசிரயித்து...

திருக்கச்சி நம்பியின்
திவ்விய மூர்த்தத்தை -
நினைவால் செதுக்கி
நெஞ்சுக்குள் நட்டான்!

'நீர் வார்க்கும்;
நீர் வார்க்கும்!' என்று -
கார் பார்த்து - எஞ்ஞான்றும்
காத்திருக்கும்...

சின்னஞ்சிறு -
சாதகப் புள்ளானான்;
அளப்பரிய
ஆன்ம தாகம் -
அவியாது
அவதிக்கு உள்ளானான்!

'யாதவருக்கு அடுத்தது
யார் நிழலை அடுப்பது?'

என
எழுந்த -



வினாவிற்கு
விடை...

தாய் காந்திமதி
தந்தாள்:
'கச்சி நம்பி - திருவடி
நச்சி நிற்க!' என்று;
அன்னை -
அங்ஙனம் உரைத்தது நன்று!

கைவலிக்க விசிறி வீசும் -
கைங்கரியம் ஒன்றினாலேயே
கைவல்லியம் -
கைவரப் பெற்றவர்...

கச்சிநம்பி;
கச்சி நகரே மெச்சிநிற்கும் -
உச்சி நம்பி!

ஆனால் -
அந்தப் பெருந்தகையோ...

இராமானுஜனை - ஒரு சீடனின்
இடத்தில் வைத்துப் பார்க்க -
இஷ்டப் படவில்லை; கொம்பு -
இடந்தராது படருமோ முல்லை?

இராமானுஜனோ -
இளைத்தான் -
விவரம் புரியாது; அதற்கான -
வியாஜ்யம் தெரியாது!

உயிர் ஒன்றை
உய்விப்பது...

திருவருள்; அந்தத்
திருவருளைக் கூட்டிவைப்பது
குருவருள்!

கதிர் கண்டுதான் -
கமலம் மலரும்;

ஆயினும் -
அஃதைத் -

தாங்கிப் பிடிக்கத்
தண்ணீர் இல்லையேல்

தண்டு மெலிந்து - அந்தத்
தாமரை உலரும்!

கதிர் -
கடவுள் உரு;
தாமரை சீடன்;
தண்ணீர் குரு!

மழைநீர் - ஒரு
மடைவழி வந்தால்தான் -
பிழைக்கும் வயல்; இல்லையேல்
பயிர் அழுகும்;

ஆன்மானுபூதி - ஓர்
ஆசாரியன்வழி வந்தால்தான் -
உய்யும் வழியென - அதைப்பற்றி
உயிர் ஒழுகும்!

ஆசிரியப் பிரானின்
அருள் நோக்கால் மட்டுமே...

ஆருக்கும்
அகலும் -
ஆசாபாசங்களால் விளையும்
அவலம்; பித்து;

ஆதலால்தான்
ஆன்மலாபம் -
அடைய விரும்பும்
ஆரும் நிற்பர்...

ஆசாரியனின் அடிமலர்களை
அவலம்பித்து!

இந்த விஷயத்தில் -
இராமானுஜன்...

திருக்கச்சி நம்பியின்
திருவுள்ளம் நலம் செய்யும் -
திருநாளை எண்ணிக் கிடந்தான்;
தினமும் அவரை நாடி நடந்தான்!

இந்தக் கவலை
இப்படி யிருக்க -
இன்னொரு பெருங் கவலை
இராமானுஜனைப் பற்றியது;

திடீரென்று வந்து - அது அவன்
தோள்களில் தொற்றியது!

தலைவலி -
தடுமன் -
என்று
எதுவுமே யில்லாமல்...

தாய் காந்திமதி - ஒருநாள்
தேக வியோகம் ஆனாள்;
திருநாடு அலங்கரிக்கத் -
திடுமென்று போனாள்!

ஆயிரம் -
ஆன்மஞானம் இருக்கட்டுமே...

அன்னையின் இழப்புக்கு
அழாதார் உண்டோ?
வெப்பம் மிகுந்த கண்ணீரில் -
விழாதார் உண்டோ?

குழந்தையின்
கையிலிருக்கும் -

வடையை - ஒரு
வாயசம் விரைந்து வந்து
வவ்வுதல் போல் -
வவ்விப் போனான்...

காலன் -
காந்திமதியின் உயிரை - முன்
கூட்டியே தன்வருகை குறித்து -
கோடி காட்டாமல்;

இராமானுஜன்
இடிந்து போனான்
இத்தகு அதிர்ச்சியைத் - தன்
இதயம் தாள மாட்டாமல்!

தாயை நினைத்துத்
தேம்பினான்;
தேம்பித்
தேம்பி -
செய்ய திருமேனி
சாம்பினான்;

சந்தியா காலத்துச்
சரோருகம் போல் -
கூனிக் குறுகிக்
கூம்பினான்;

சொல்லொணாச்
சோகாப்பால் -
சோகை வந்தவன் போல்
சூம்பினான்!

நற்றாய் தன்பொருட்டு -
நாளும் பட்ட பாடெல்லாம்
நினைவு கூர்ந்தான்; பின்னோக்கி -
நினைவுத் தேரில் ஊர்ந்தான்!

பரவையில் ஆடி - அல்லிக்கேணி
பார்த்தசாரதி சந்நிதியில்...

தகவுமிக்க
தலைவனோடு வேள்வி செய்து - ஆண்
மகவு தன்னை
மடியினில் வாங்கியதையும்;

நீட்டிய கால்மேல் - சேயை
நீளப் படுக்கவைத்து - நீரில்
ஆட்டிய பின்னர் - நறு
அகிற்புகை காட்டியதையும்;

ஒக்கலில் தன்னை
ஒய்யாரமாய் உட்கார்த்திச் -
சொக்கவெள்ளி நிலாக்காட்டிச்
சோறு ஊட்டியதையும்;

கூடத்து விட்டத்தில் - தன்
கூறையால் தூளிகட்டி - சின்ன
மாடத்து விளக்கெரிய - ஆராட்டு
மணித்தமிழில் பாடியதையும்;

விண்ணேறு நிலவாக
வளரும் பிள்ளைக்கு - ஊராரின்
கண்ணேறு படுமென்று
கடுகு மிளகாய் சுற்றியதையும்;

அகவை -
ஆறேழில்...

நெய்தடவி
நெடுங்குடுமி நீவி -
கைதடவி ஈர்; பேன் எடுத்துக்
கைவிரலால் சொடுக்கியதையும்;

சனிக்கிழமை தோறும்
சக்கரத் தாழ்வாருக்குத் -
தனிக்கருணை காட்டித்
தன்மகனைக் காக்க வேண்டி...

எள்ளோரை சமர்ப்பித்து -
எட்டுதடவை சேவித்ததையும்;
மைந்து மிக்கவனாய்த் - தனது
மைந்தன் மிளிர வேண்டி - தினம்
ஐந்துபடி தண்டுலம் - கோயில்
ஐயங்காரிடம் தந்து...

தன்வந்திரிப் பெருமாளுக்கு -
ததியோதனம் படைத்ததையும்;

அத்துப்படி என்று
அன்புமகன் ஆரணங் கற்க -
பத்துப்படி கொள்ளு
பரிமுகப் பெருமாளுக்கு...

அன்றாடம் -
அமுது செய்வித்ததையும்;

பிறகு - தன்
பதினாறு வயதுப் பிள்ளைக்கு...

சலித்துச் சலித்து -
சலித்துச் சலித்து -
சாதகம் பார்த்து; சாதகத்தின் -
சாதக பாதகம் பார்த்து;

பொறப்பில் -
பொறையில் -
கற்பில் -
கனிவில் -

ஜனகன் மகள்
ஜானகியின் மறுபதிப்பாய் -
ஜகத்தினில்
ஜனித்தவள் இவளே என்று...

தஞ்சமாம்பாளைத் தேர்ந்து -
தனக்கு மணம் முடித்ததையும்;

பிறகு -
பொல்லாப் போகூழால் -

தனது பர்த்தா
திருநாடு அலங்கரிக்க;
தனது மாங்கல்யத்தை
தருமன் அபகரிக்க;

போதும்
பூதூர் வாழ்வென்று -
புகழ்சால் காஞ்சியில்
புதுஜாகை பிடித்ததையும்;

ஆர்க்கும் பிரியமானவளாய்
அம்மா ஆனதையும்; ஒரு
வார்த்தை சொல்லாது - விருட்டென
வைகுந்தம் போனதையும்;

எண்ணி எண்ணி -
எண்ணி எண்ணி...

இராமானுஜன் - விழி வழி
இரத்தம் உகுத்தான்;
அம்மாவின் பரிவையும் -
அம்மாவின் பிரிவையும் -
அசைபோட்டு அசைபோட்டு - தனது
அவலத்தை அவனே மிகுத்தான்!

எவர் -
எதை உகுத்தாலென்ன?
எவர் -
எதை மிகுத்தாலென்ன?
எவர் -
எவரது...
நினைவுகளை
நேயங்களை
நீண்ட -
நிகளம்போல் தொகுத்தாலென்ன?

வாழ்வார்க்கு -
வாழ்வு இவ்வளவு என்று
வல்லானன்றோ - ஒரு
வரையறையை வகுத்தான்; அவன் -

கணக்கைக்
கருத்தில் கொண்டு -
காலன்
காந்திமதி உயிரை இகுத்தான்!

தஞ்சமாம்பாளும் - ஏகமாய்
துக்கித்தாள்;

மாமியாரா யில்லாது
மாதாவாகவே யிருந்த -
காந்திமதியின் கரிசனையைக்
கருதிக் கருதி விக்கித்தாள்!

அம்மாவின் -
அபரக் கிரியைகளை...

இராமானுஜன்
இம்மியளவும் லோபமின்றி -
இறுதிவரை சிரத்தையாய்
இயற்றி முடித்தான்;

கண்ணன்
கீதையில் -
சாற்றிய வரிகளை
சரமஸ்லோகமாய்ப் படித்தான்!

தாயாரின் -
தேக வியோகத்தால் ஏற்பட்ட...

தீட்டு காரணமாக
தீர்த்தக் கைங்கரியத்தைத் -
தற்காலிகமாகத்
தவிர்த்தவன் -

திருக்கச்சி நம்பி
தங்கியிருக்கும் - அவரது
திருமடத்திற்கு
தினப்படி சென்று...

பெரும் பொழுதை - அவரோடு
போக்கினான்;

வீட்டு
விசாரங்களையும் -
வேறு
வெளி விவகாரங்களையும் -

அவரோடு
ஆத்மார்த்தமாக உரையாடும் -
அவ்
அரிய வேளைகளில்...

தன் நெஞ்சிலிருந்து - அவன்
துப்புரவாய் நீக்கினான்!

மனையில் தனித்திருக்கும்
மனைவி எண்ணம்கூட -
இராமானுசனுக்கு
இலவலேசமும் வரவில்லை;

சதா -
சர்வகாலமும்...

தன் புருஷன் -
திருக்கச்சி நம்பியோடு
தங்கியிருப்பதும்; அவரோடு
தர்க்கித் திருப்பதும்;

மனைவி தஞ்சமாம்பாளுக்கு -
மகிழ்ச்சியைத் தரவில்லை!

கட்டிய
கணவனுக்கு...

'வீடு பற்றிய
விசாரமில்லையே!' என்று -
தஞ்சமாம்பாள்
தகித்தாள்;
காந்திமதி
காலமான பின் -
வீட்டுத் தலைமையை - அவள்தான்
வகித்தாள்!

மெல்ல -
மெல்ல -

தனக்குள் இன்னொரு
தஞ்சமாம்பாள் இருப்பதை -
தன் பர்த்தாவிற்கு - அவள்
தெரிய வைத்தாள்;
போகப் போகத் - தன்குணத்தைப்
புரிய வைத்தாள்!

– வளரும்

# ராமானுஜ காவியம் 35

## தஞ்சமாம்பாளின் தாபம்

ஒவ்வோர் உயிரும்...
ஒவ்வோர் உயிரும்...

யாரோ
யாய் -
யோனியில் விளைந்து - யாண்டுமொரு
மேனியில் வெளிப்போந்து...

நூறு வகை இன்பம் -
நூறு வகை துன்பம் -

நுகர்வன
நுகர்ந்து;

பந்துக்க ளோடும் -
பரிசனத் தோடும் -

பகர்வன
பகர்ந்து;

நாட்பட நாட்பட -
நரை திரை நோக்கியே -

நகர்வன
நகர்ந்து;

தாதொடு தசைநாரும் -
தண்டு வடமதும் -

தகர்வன
தகர்ந்து;

கடைசியில்
காடு புகுந்து;

கூட்டிய ஊழ்ப்படி - மீட்டொரு
கூடு புகுந்து;

மறுபடி -
மேற்சொன்னபடி...

நுகர்வன -
நுகர்ந்து;
பகர்வன -
பகர்ந்து;
நகர்வன -
நகர்ந்து;
தகர்வன -
தகர்ந்து;

உலப்பிலாச் சுழற்சியில்
உழல்கிறது!

எந்நாள் -
என்னணம் - இக்
கரும வளையங்களினின்றும்
கழல்கிறது?

என - மன்பதை
ஏங்கிக் கிடக்கையில்...

'விஜயா!
வழுத்து என் கழல்; வழுத்தி -
வினை
வளையங்களிலிருந்து கழல்!'

■ *கவிஞர் வாலி*

என்று -
ஏர்மிகு திருவாய் மலர்ந்து...

கண்ணன் வழங்கினான்
கீதையை; உய்வழியாய்ப் -
பார்த்தனுக்கு மட்டுமல்ல;
பல்லுயிர்க்குமான பாதையை!

நாம் -
நன்றி நவில வேண்டியது...



ரண களத்தில் -
ரத மமர்ந்து -

கசை பிடித்து நின்ற -
கண்ணனுக்கா?
கண்ணனின் மைத்துனன் -
காண்டீபனுக்கா?

நீள்விசும்பு நீங்கி -
நிலம் வந்து
நிறைய எருவைகள் -
நிணந்தின்னக் காத்திருந்த...

குருச்சேத்திரத்தில்
குந்திமகன் கூறினான் - விழியில்
கண்ணீர் ஆறு
கசிந்த வாறு!

'கண்ணா!
கங்குல் வண்ணா!

பூவுலகு மட்டுமல்ல;
பூவுலகோடு சேர்ந்து -
மூவுலகு கிடைப்பதாயினும் -
மூதாதையரைக் கொல்லேன்;

இறக்கமே இல்லாது -
இன்பொடு வாழவல்ல -
துறக்கமே கிடைப்பதாயினும் -
தாயாதிகளைக் கொல்லேன்;

நாடு கிடைப்பதாயினும்;
நாட்டினிலும் நனிசிறந்த -
வீடு கிடைப்பதாயினும் -
வீடுமரைக் கொல்லேன்;

வனமாலியே! என் -
வாழ்வின் வேலியே!

வளைக்கும் சாபத்தில் -
வாளியைச் செருகி - இகலுடலம்
துளைக்கும் சூட்சுமம் சொன்ன -
துரோணரைக் கொல்லேன்!

வெற்றிப் பொட்டை - நான்
வாங்க வேண்டி - பெண்டிர்தம்
நெற்றிப் பொட்டை -, நான்
நீக்கமாட்டேன்;

அகழியெடுத்து - நான்
அரண்மனை கட்டியாள -
பகழியெடுத்து - நான்
பந்துக்களைப் போக்க மாட்டேன்!'

இன்னணம் கூறி - விஜயன்
இடக்கை ஏந்திய வில்லை...

நிலத்தில் -
நழுவ விட்டான்;
தேர்த்தட்டில் சாய்ந்து -
துக்கத்தின் வயப்பட்டான்!

அமர்க்களத்தில் நின்ற -
அருச்சுனனுக்கு;
தமர்பால் தண்ணளி காட்டிய -
தனஞ்சயனுக்கு;

இளகிய மனம்
இல்லாதிருந்திருந்தால்;
நெஞ்சம் - கருணைவழி
நில்லாதிருந்திருந்தால்;

பாஞ்சசன்னியத்தை -
பகவான் ஊதிய உடனேயே...

வில்லெடுத்து - அவன்
விளைத்திருக்கலாம் - பகைக்கு
உயிர் வாதை; விளைத்திருப்பின் -
உலகுக்கு ஏது பகவத்கீதை?

அருச்சுனனால் -
அல்லவோ...

உதிப்பதும் -
உதிர்வதுமாய்;
உதிர்வதும் -
உதிப்பதுமாய்;





அல்லாடிக் கிடக்கும் -
அனைத்து உயிர்களையும்...

காமம்;
குரோதம்;
மதம்;
மாச்சர்யம்;
மோகம்;
லோபம்;

என -
எஞ்ஞான்றும் படுத்தும்...

நோவாறு அழித்திடவல்ல
நன்மருந்தாய் - கீதையின்
மூவாறு அத்தியாயங்களை
மொழிந்தான் கரியவன்;

ஆதலால்
அருச்சுனன்தான் -
அச்சுதனைவிட
அதிகமாக...

நமது -
நன்றிக்கு உரியவன்!

தனஞ்சயன் போலவே -

தஞ்சமாம்பாளும்...

நாளும்
நமது -
நெஞ்சார்ந்த
நன்றிக்கு உரிய நல்லாள்;

ஆம்; அரிய வைணவம் -
அம்புவியில் ஆழ வேரோட...

இராமானுஜனாய் இருந்த
இராமானுஜனை - இசைமிகு
இராமானுஜ முனியாக்கியது
இராமானுஜனின் இல்லாள்!

தெரிந்தோ
தெரியாமலோ;
புரிந்தோ -
புரியாமலோ;

தஞ்சமாம்பாள் - இத்
தரணிக்குப் - பரம
உபகாரம் புரிந்த -
உத்தமி;

எதிராய் விளங்கியும்; ஒரு -
புதிராய் விளங்கியும்; ஓர் -
எதிராஜனாகத் தன் புருஷனை -
ஏற்றம் பெற வைத்த பத்தினி!

மணாளன்பால் தனக்கிருந்த
மனத்தாங்கல் பற்றி - தனது
மாமியின் மூச்சொடுங்கும் வரை -
மருமகள் மூச்சுவிடவில்லை;

'பேசு!
பேசு!' என்று...

உள்மனம்
உந்திய போதும் -
அவள்
அதுபற்றி பேச்சுவிடவில்லை!

இதர புருஷர்கள்
இருப்பதுபோல் - தன் புருஷன்
இயல்பாக
இருப்பதில்லை என்பதுதான்...

தஞ்சமாம்பாளின்
தாபம்; ஒரு -
வேதாந்திக்கு
வாழ்க்கைப் பட்டோமே என்று -
தனக்குத் தானே
தந்துகொண்டாள் சாபம்!

மாமியார் -
மறைவுக்குப் பின்...

புதையலை
பூதம் காப்பதுபோல் -

வேளா வேளைக்கு
வெந்ததைத் தின்றுவிட்டு
வீட்டைக் காப்பதே - அவளுக்கு
வேலையாகிப் போனது;

பெரும்பாலான -
பொழுது...

விட்டத்தை
வெறித்துப் பார்த்து -
உட்கார்ந்திருப்பதே
உத்தியோகமாய் ஆனது!

இராமானுஜனுக்கு இல்லை.
இந்த வீட்டுச் சிந்தனை;

அனவரதமும்
அவனுக்கிருந்ததெல்லாம் -
ஆன்மா அடைய வேண்டிய
அந்த வீட்டுச் சிந்தனை!

வாசித்தால் -
வேதம்;

பூசித்தால் -
பெருமாள்;

நேசித்தால் -
நம்பி;

யோசித்தால் -
யோகம்!

குக்குடம் -
கூவு முன்னமேயே...

குடத்தை எடுத்துக்கொண்டு

குடுகுடுவென்று -
சாலைக் கிணற்றுக்கு - நீர்
சேந்தப் போதல்;

பிறகு -
பிரகாரத்தைச் சுற்றிப்
பிரதட்சிணம் வந்தவாறே -
பிரபந்தங்களை ஓதல்;

பெருமாளை விட -
பிராட்டியை விட -
திருக்கச்சி நம்பிமீது -
தீராத காதல்;

மாணாக்கனாய்த் தன்னை - அந்த
மகான் ஏற்கவில்லையே என்று -
மறுகி மறுகி -
மனத்துள் நோதல்!

சாப்பாட்டு நேரம்;
சயனிக்கும் நேரம்;
இந்த -
இரண்டு நேரங்களில் -
இராமானுஜன் -
இருப்பான் அவன் ஜாகையில்;

மிச்சம் -
மீதியுள்ளபோதெல்லாம்...

திருக்கச்சி நம்பியின்
திருமடத்தில்
கழியும் - அவரோடு
கலந்துரையாடும் ஓகையில்!

கட்டிய புருஷன் - இப்படிக்
காலத்தை ஓட்டினால்...
வீட்டிலிருப்பவளுக்கு
வாழ்க்கை வேம்பாகாதா?

நலஞ்செய்வான்
நலஞ்செய்வான் - என
நம்பி வந்தவளுக்கு - அது
நாயகன் செய்யும் தீம்பாகாதா?

அன்னவிசாரம் வேண்டாம்;
சொன்னவிசாரம் வேண்டாம்;
அகமுடையாள் விசாரம் - ஓர்
அகமுடையானுக்கு வேண்டாமோ?

'வாழ்க்கைப் பட்டவள் -
வாழ்ந்தாலென்ன? செத்தாலென்ன?'
என்று -
எட்டிக்கூடப் பார்க்காமல்;
என்ன -
ஏது என்று கேட்காமல்;

வாய்த்த கணவன் -
விட்டேற்றியானால் வீடு வீடாமோ?

தஞ்சமாம்பாள் -
தன்மேல் -
தானே கழிவிரக்கம் கொண்டு -
துக்கப் பட்டாள்
கேள்வனிடம் - ஒருநாள்
கேட்டே விட்டாள்!

"திருக்கச்சி நம்பியின் -
திரு மடம்;
திருமஞ்சனத்திற்கான -
தீர்த்தக் குடம்;

உங்கள்
உள்ளத்தில் -
இவை
இரண்டுக்குத்தான் இடம்!

எனக்கில்லை;
ஏனெனில்...

உங்கள் கணக்கில் - நான்
உணர்ச்சியற்ற ஒரு ஜடம்;

வைத்தால் -
வைத்த இடத்தில்
வைத்தபடி இருக்கவேண்டிய -
வஸ்துவாய்...

பாரியையை - அவள்
பர்த்தா எண்ணினால் - அந்தப்
பாவப்பட்ட ஜன்மத்திற்கு
பாரினில் ஏது போக்கிடம்?

நான் கேட்கிறேன்;
நானும் நீங்களும்...



கடை -
கண்ணி;
கோயில் -
குளம் ;

கல்யாணம் -
கார்த்திகை ;

கதை -
கச்சேரி;
என்று -
எங்கேயாவது...

சராசரி தம்பதிபோல் -
சேர்ந்து சென்றதுண்டா?

வாசலில்
வந்து -
கச்சிவரதர்
கருடசேவை சாதிக்க...

சேவித்தபடி -
சேர்ந்து நின்றதுண்டா?

சேர்ந்து கோபப்பட்டதுண்டா?
சேர்ந்து தாபப்பட்டதுண்டா?
சேர்ந்து சிரித்ததுண்டா?
சேர்ந்து அழுததுண்டா?

அன்பும்
அறனும் விளைய -
செய்ய குடும்ப வயலை
சேர்ந்து உழுத துண்டா?

உங்களோடு
உடன் வர - என்னைவிட
உசத்தி
உங்கள் உத்தரீயத் துண்டா?

துண்டு செய்த தவம்கூட - இப்
பெண்டு செய்ய வில்லையா?

தோளோடு வராவிடினும் - உங்கள்
தாளோடு வருகிறதே - அந்தச்
சோடு செய்த தவம்கூட - இந்தப்
பேடு செய்யவில்லையா?

நானென்ன - உங்களிடம்
நகை நட்டு கேட்கிறேனா?

பணங்காசு கேட்கிறேனா?
பாத்திரம் பண்டம் கேட்கிறேனா?
புதுசு புதுசாகப் -
புடவை ரவிக்கை கேட்கிறேனா?

நான் நாளும்பொழுதும் -
நயந்து கேட்பதெல்லாம்...

உங்கள் கவனிப்பு;
உங்கள் கரிசனம்;
உங்கள் திருமேனியின்
உவட்டாத தரிசனம்!

அன்பு;
அன்பு;
அன்பு;
அன்பு!

அகமுடையாளிடம்
அகமுடையான் காட்டும் -
அன்பானது
அரைக்காசு அளவே ஆனாலும்...

பெண்டாட்டி
பூரித்துப் போவாள்;
பூரித்துப் -
பூரித்துப் -

'பூரண்மாய் வாழ்ந்தாச்சு;
போதும்!' என்ற திருப்தியில்...

புருஷனை முந்திக்கொண்டு -
பூவோடு பொட்டோடு போவாள்;
சுமங்கலிச் -
சாவென்று ஆவாள்!"

இந்த -
இடத்தில்...

தஞ்சமாம்பாளுக்குத் -
தொண்டை அடைத்தது;
அவளை -
ஆசுவாசப் படுத்த -
'சட்'டென ராமானுஜனுக்கு - ஒரு
சந்தர்ப்பம் கிடைத்தது!

- வளரும்

# ராமானுஜ காவியம்

## மனைவியைத் தேற்றினான் மணாளன்!

இளங்கதிர் அன்ன
இராமானுஜன் -
இளங்கால் அன்ன
இல்லக் கிழத்தியாம்...

தஞ்சமாம்பாளின்
தளிர்க்கைகளைப் பற்றினான்;

தனது
தடந்தோளில் -
தாழ்ந்து
தவழ்ந்திருந்த -

உத்தரீயத்தால் - அவள்விழி
உகுத்த கண்ணீரை ஒற்றினான்!

"தஞ்சம்! நீ -
தாங்கி நிற்கும் பேருக்கேற்ப...

உயரிய குணங்களெல்லாம்
உன்னிடம் தஞ்சம்; உனக்கு -
ஒரு வயதுக் குழந்தைக்கு
ஒப்பான நெஞ்சம்!

நீ -
குணவதி மட்டுமல்ல -
குறைவிலாத ரூபவதியும் கூட;

அம்மா -
அதனால்தான்
ஆசைப்பட்டாள் - நானுன்
அழகிய கழுத்தில் மாலை போட!

கஞ்சம் அமர்ந்த
கடவுள் - அணுவளவும்
கஞ்சம் அறியாது - கைவசமுள
கவினெலாம் கொட்டிப்படைத்த -

கவிஞர் வாலி







கஞ்சம் நீ;

நீரசமானது -
நாளும் போதும்
நல்க வேண்டியது - நல்
நறவம் அன்றோ? பிலிற்றலாமா -
நஞ்சம் நீ?

ஆராயாமல் -
அறிவற்ற பெண்டிர் பேசுவர்;

அன்பார்ந்த
ஆளன் மேல் - அவனது
அந்தரங்கம்
அறிய முயலாது...

அவசரப்பட்டு -



அக்கினிச் சொற்களை வீசுவர்!

நீ –
நற்குடிப் பெண்; உன்
நா
நுனியில் –
நர்த்தன மாடுகிறது
நாலாயிரப் பண்!

இருந்தமிழை
இசையொடு கற்ற – ஓர்
அருந்தவன் – உன்
அத்தன்;
கோதறு
கோதையாய் – உனை
வளர்த்துவிட்ட – இன்னொரு
விட்டுணுசித்தன்!

உனது
உள்ளோடும் –
உதிரத்திலேயே
ஊறியிருக்கும் அறிவு;

எந்தையும் உந்தையும்
எத்துணையோ உபதேசித்து –
ஏற்கெனவேயே உள்ள அறிவில்
ஏறியிருக்கும் செறிவு!

தந்தை வழி அறிவும்;
தாயின் வழி அன்பும்; ஆர்க்கும் –
சிந்தை வழி புகுந்து
செந்நீரில் பரவியிருக்கும்;

அத்தகு
அரிய அறிவை; அன்பை –
ஆயாது பேசும் பேச்சுக்கள்
அகலமாக விடாது சுருக்கும்!

நல்லது கெட்டது –
நாலையும்...

'ஆய்!' என்று – உனக்கு
அறிவு கொளுத்தவில்லையா – உன்
ஆய்?
வந்ததைப் பேசவா –
வாய்த்திருக்கிறது
வாய்?

உன் மேல் - என்
உள்ளத்தில் -
அன்பில்லை என்று
ஆர் சொன்னது?

மேலே
முள்ளிருக்கும்; ஆனால் -

உவட்டாச்சுவை உதவும் சுளை
உள்ளிருக்கும்;

புலப்படா என் அன்பும் - அப்
பலவு அன்னது!

யதி -
யாதவரிடம்...

நான் -
கற்ற கல்வி
முற்றுப் பெறவில்லை;
அங்ஙனம்
அரைக்கிணறு தாண்டிய
அவலம் - என்
அகம் விட்டு அறவில்லை!

திருக்கச்சி நம்பியைத்
தேர்ந்தேன் குருவாக; எனை
அழற்றும் -
அறுபகை வெப்பம் ஆற - குளிர்
நிழற்றும் -
நிகரிலா ஞானத் தருவாக!

என்ன காரணமோ?
எனக்கு ஆசாரியனாயிருக்க...

பரம -
பாகவதோத்தமரான -
திருக்கச்சி நம்பிகள்
தயக்கம் காட்டுகிறார்.
நல்ல பதில் சொல்லாமல்
நாள்களை ஓட்டுகிறார்;
ஆயினும்
அவர்தான் - என்
ஆன்ம வீணையில்
அஷ்டாட்சரம் மீட்டுகிறார்!

நானும் -
நம்பியாரை...

விடாது
வேண்டுகிறேன்;
பெரும் பொழுதை - அவரோடு
போக்கிப் போக்கி - அந்தத்
தூயவர் திருவுளம் இளகத்
தூண்டுகிறேன்!

பாதரட்சை போல் - அவர்
போகுமிடமெல்லாம் போகிறேன்;

அவர் மீதுள்ள
அவாப் பெருக்கால்...

நான் எனும்
நான் அழிந்து -
அனேக நேரங்களில்
அவராகவே ஆகிறேன்!

இனிய என்
இல்லத்தரசியே!
இத்துணையும் - நான்
இயற்றுவது...

என் பொருட்டு மட்டுமா?
உன் பொருட்டும் தான்;
என்னுயிரோடு
என்னுயிரைப் பின்னிய -
உன்னுயிரும்
உய்ய எண்ணுவோன் நான்!

ஓர்
உயிர் -
பிறப்பு எய்துவதே - எய்திய
பிறப்பைக் கொண்டு - இன்னொரு
பிறப்பு எய்திடாதிருக்கப்
பண்ணிடத்தான்; அஃதைப்
பண்ண உதவும் - ஒரு குருவை
நண்ணிடத்தான்; நண்ணி -
எஞ்ஞான்றும் அவர் திருவடி

எண்ணிடத்தான்; எண்ணி
ஒருமையொடு உளம் – அவர்பால்
ஒண்ணிடத்தான்!

இதனை விடுத்து –
இப் பிறப்பை...
ஊழ் எனும்
கூழ் எழுப்ப –
உதவும்
வயலாக்கலாமா?

ஆன்ம விடுதலைக்கு
ஆறாக இருக்கும் –
அறங்களை நமக்கு
அயலாக்கலாமா?

மனத்தை
மலிவான –
மகிழ்வுகளின் பால்
மயலாக்கலாமா?

நிந்தைக்குரிய
நீசத் தனங்களை
சிந்தை அவாவினால் – அவற்றைச்
செயலாக்கலாமா?

இளமை பாயில்;
முதுமை நோயில்;
இறுதி தீயில்;
இதற்கா தோன்றினோம் தாயில்?

வாழும் நாள்களில் விழலாமா –
வேட்கைகளின் வாயில்? வீழின் –
நம்பொருட்டுத் திறவாதா
நரகங்களின் வாயில்?

நரகு சேராது
நமைத் தடுக்கும் –
விரகு இது வென
விளக்கித் தானே...

கருணைமிக்க பெரியவர்கள் –
கட்டிவைத்தனர் கோயில்?

மண்ணகரத்தைத் தாண்டி
மற்றொரு வாழ்வு – தமக்கு
விண்ணகரத்தில் உளதென்று
விவேகிகள் உணர்வர்;
உணர்ந்து – அதற்கு
உதவும் குருவைப் புணர்வர்!

ஆசாரியர் –
அறிவுறுத்துகின்ற...

திருப்பாதையில் சென்று
திருநாடு சேர்ந்தால் – பிறகு
கருப்பாதையில் ஒருவர்
கால்வைக்க நேராது;

இல்லறத்தில்
இருந்தாலும் –
இருக்கலாமோ நானும் நீயும்
இதனை ஓராது?

வனத்தில் –
வாழ்ந்த...

மகரிஷிகளும் – தமது
மனையாள்களோடு வாழ்ந்தவாறே –
விட்டும் பட்டும்
விளங்கு விளாங்கனி போல் –

சீவன் முத்தராய்ச்
சிறந்து நின்றனர்; அவர்களை –
சீதையும் சீதாராமனுமே
சேவிக்கச் சென்றனர்!

உத்தம ஸ்திரீயான –
உனக்கும்...

இவையெலாம் தெரிந்தும் – என்னை
இம்சிக்கிறாய்;
சம்சாரி சந்யாசி ஆவானோ – என
சம்சயிக்கிறாய்!

தஞ்சம்! உன்னைப் பார்த்துத் –
தெரிந்து கொண்டேன் ஓர் உண்மை;
கற்றிருப்பினும்; கல்வியது –

அற்றிருப்பினும்; கணவனைக்
குற்றஞ்சாட்டுவதில் - ஒரே
கோட்டில் நிற்பதுதான் பெண்மை!

பொதுவாய்ப் பார்க்கின் -
பெண்டிர்...

புருஷன் உணர்வை - சரிவரப்
புரிந்து உதவுவதில்லை;
மாறாக
மரங்கொத்திப் பறவை போல் -
மணாளனின்
மனங்கொத்திப் பறவையாகி -

காயப்படுத்திக்
காயப்படுத்திக் -
காயப்படுத்துவதையும்
நியாயப்படுத்தி...

வாதாடுவதல்லால் - அதுபற்றி
வருந்தி உருகுவதில்லை!"

இப்படிப் பேசிவிட்டு -
இராமானுஜன்...

பெருமாள் கோயிலுக்குப்
போனான்;
அதிக கவலை மிக்கவனாய்
ஆனான்!

திருக்கச்சி நம்பி
திருக்குடலையிலிருந்து -
தூய புஷ்பங்களையும்
துளவத்தையும் எடுத்து...

அழகிய
ஆரமாகத் தொடுத்தபடி -
வெளி மண்டபத்தில்
வீற்றிருந்தார்;

நாவிலும்
நெஞ்சிலும் -
நாராயணன் நாமத்தை
நோற்றிருந்தார்!

இராமானுஜன்
இருகரம் தலைமேல் கூப்பி -
நம்பியை தெண்டனிட்டு
நிற்க...

வருங்கால
வைணவ வேந்தின் - திரு
வதனம்
வாடியிருப்பதை -

நம்பியார் பார்த்தார்; மெல்ல -
நல்லுபதேசத்தை வார்த்தார்!

"கேசவ சோமயாஜியின்
கீர்த்திமிகு பிள்ளாய்!
எனக்குத் தெரியும்; நீ -
ஏதோ வருத்தத்தில் உள்ளாய்!

வைணவ அடியார்க்கு
வருத்தம் வந்தால்...

அது
அவர்களுக்கு -
நாராயணனிடத்தில் உள்ள
நம்பிக்கைக் குறைவைக் காட்டும்;

பூரண நம்பிக்கை
பொலிய நின்றார்க்கு -
சிந்தைக்குள் புகுந்து - எந்தச்
சிந்தா குலம் வாட்டும்?

நீ -
உன்னை நம்பினால்
விசாரப் படு;
வரதனை நம்பினால்
விசனத்தை விடு!

வியாகுலத்திற்கும்
விழி நீருக்கும் -
வரதராஜன் திருமுன்
வேலையில்லை;

வந்து தொழுவாரை -
வாழ்விப்பதில்...

வரதனை
விஞ்சி
வேறொரு - வாத்சல்ய
வேலையில்லை!

நாரணன்
நாமங்களைக்
கூவிக் -
கூவிக்...

கூப்பிட்டாள் பாஞ்சாலி
கணக்கற்ற தடவை;

கைகளைக்
கோத்து -
மார்பை
மறைத்து நின்றவள்...

தன்னை நம்பியது
தவறென்று உணர்ந்து -
தனங்களை மறைத்து நின்ற
தளிர்க் கரங்களை நீக்கி -

விளித்தாள் கண்ணனை;
வந்தது புடவை!

தன் பலத்தைப் - புறந்
தள்ளி விட்டு...

ஆதி மூலத்தை
அழைத்தது ஆனை;

பரமபுருடன் -
பறவை ஏறிவந்து -
சக்கரம் எறிந்து -
சேதித்தான் முதலையின் ஊனை!

இராமானுஜா!
இறைவன்...

நாம் வைக்கும்
நம்பிக்கையில் விளைவான்;
நம்புவார் - மனம்
வெம்புவார் எனில் -

கூவாமலே வந்து - அவன்
குந்தகங்களைக் களைவான்!

'வாளா லறுத்துச் சுடினும் -
மருத்துவன் பால் -
மாளாத காதல் நோயாளன்போல்'
மாதவன் பால்...

நம்பிக் கிட - மனக்கவலை
நெருப்பாய்ச் சுட;
வரதனுக்கு - மனம்
வராது உன்னைக் கைவிட!

நான் -
நவின்றது...

குலசேகராழ்வார்
கூறிய சொல்;
உனக்கு
உறுகண்
உறும் போதெலாம் - இதையுன்
உளத்திற்குச் சொல்!"

இன்னணம்
இராமானுஜனுக்கு - நம்பி
இதங்களை
இயம்பி முடிக்கையில்...

அத்தி வரதன் திருமுன்
ஆரோ ஒருவர் நின்று -

ஆளவந்தார்
அருளிய -
'ஸ்தோத்ர ரத்ன'த்திலிருந்து
ஸ்லோகங்களைப் பாட -

இராமானுஜன் செவிக்குள் - அவ்
இன்னிசை தேனாக ஓட -

சந்நிதி நோக்கிச்
சென்றான்;
சென்றவன் - ஒரு
சித்திரம் போல் நின்றான்!

**- வளரும்**

பக்திப் பனுவல்கள்

ரங்கராஜன் ஊருக்கு - உடனே
ராமானுஜனை அழைத்துவர...

ஆளவந்தார்
ஆக்கினைப்படி -
அணியரங்கம் விட்டு
அத்தியூர் போந்த -

பெரிய நம்பிகள்தான் -
பெருமாள் சந்நிதிமுன் நின்று...

யாமுனர்
யாத்த -

'ஸ்தோத்ர ரத்ன' எனும்
ஸ்லோகங்கள் எட்டையும் -
ஸ்ருதி பிசகாமலும்
ஸ்வரஸ்தானம் பிறழாமலும் -

சிரத்தையாக -
சேவித்துக் கொண்டிருந்தார்;
சேவித்துக் கொண்டிருக்கும்
செய்யுள்களை...

பக்கலில் நின்றிருந்தான் -
அரிய நம்பி ராமானுஜன் - ஓர்
அவசநிலை எய்தி; அவனது -

செவிக்கும்
சிந்தைக்கும் தேன்வார்த்தது -
கவிக்குள்
கிடந்த நற் செய்தி!

அருந்தேவியாம்
பெருந்தேவியோடு -
வீற்றிருக்கும்
வரதன் விஷயமாக...

பாடப் பெற்ற - அப்
பனுவல்கள் யாவும்
பரமேட்டியின் -
பரம காருண்யம் பேசின;

பிரபத்தி செய்து
பிறப்பறுக்காதார் தமது -
பேதைமையை - அவை
பெரிதும் ஏசின;

# ராமானுஜ

37

தேவராஜப் பெருமாள்
திருச்செவி சாற்றி -
சிரக்கம்பம்
செய்வதாக -

பெரிய நம்பிகள் -
பாவித்துக் கொண்டிருந்தார்!

காதுகளால் - அந்தக்
கவிகளைச் சாப்பிட்டவாறு...

பெரியநம்பி -

விளங்காப் பொருளாய்
விளங்கும் பொருளை - நாம்
விளங்கிக் கொள்ளுமாறு
வெளிச்சம் வீசின;

ஓரளவுக்கு மேல் - அந்த
ஒருவனின் பிரபாவத்தை
ஓத வார்த்தை இல்லையே என்று -
ஓர்ந்து அக் கவிகள் கூசின!

பிரளய காலத்தில் - வட

■ கவிஞர் **வாலி**

பத்திரம்மேல் படுப்பவனை;
பொய்த் துயில் -
போக்கிப் பின்...

உண்ட
உலகங்களை -
உதரத்திலிருந்து மீண்டும்
உமிழ்ந்து வெளி எடுப்பவனை;

அட்டாட்சரம் அறிவாரின்
ஆயுள் துணையாய் அடுப்பவனை;

முண்டகப் பதங்கள்
மூசிக்கிடப்பார் தமது -
முன்னைப் பழவினைகள்
முற்றுங் களைந் தெடுப்பவனை;

வரிக்கு வரி
வரிக்கு வரி -
வாழ்த்தி
வந்தித்து...

எழுதப் பெற்ற -
எழுத்துகள் அவை;



# காவியம்

அவற்றிற்கு
அனுசரணையாய் - பெரியநம்பி
சாரீரம்
சேர்த்தது சுவை!

கேட்டுக்
கிறங்கிய - ராமானுஜனின்
காதுகளுக்குள் - ஒரே
கற்கண்டுக் குவை;

கடுகளவும் - அக்
கவிகளின் மாட்டு -
காணக் கிடைக்கவில்லை

கைப்பென்னும் நவை!

புசித்துப்
புசித்துப்
புடைத்த பின்னும் - அவன்
பூஞ்செவிகள் நின்றன பசித்து;

போய்த் திரும்பியது - நொடிப்
போழ்து அவன் மனம் - இப்
படியை விட்டு - அப்
பரமபதம் போய் வசித்து;

நின்ற இடத்திலேயே

நின்றான் - சுய
நினைவுகள்
நசித்து;
பிறகு -
பிரக்ஞை வர
போட்டான் அசை - அந்தப்
பாட்டு வரிகளை ரசித்து!

‘அடடா! என்ன
அர்த்த புஷ்டி! அதை -
விஞ்சுவதாய்
வீராப்புப் பேசி - வேறு
ஒரு கவிஞன் - அதற்கு எதிரே
உயர்த்தப் போமோ முஷ்டி...?

தைல -
தாரை போல்...

தங்கு
தடையின்றி -
வந்துகொண்டே இருக்கிறது
வாக்கு விருஷ்டி;

மொழி ஆளுமையும்; முனை
முறியா அறிவுக் கூர்ப்பதும்;
இயல்பாக - எவரிடம்
இருக்கிறதோ - அவரால்தான்
இன்னணம்
இயற்ற இயலும்...

கேட்போரைக் கவரும் - இத்தகு
காவிய சிருஷ்டி!’

இப்படி -
இராமானுஜன் எண்ணுகையில்...

பெரிய நம்பிகள்



பாட்டை முடித்தார்;
பெருமாளை -
பிராட்டியை -
நெடுஞ்சாண் கிடையாக - மேனி
நிலந்தோய சேவித்து -

பிறகு - பட்டர்
பரிவட்டம் கட்டி
சடாரி
சாதிக்க...

கைகுவித்துக்
கண்ணீர் வடித்தார்!

பவ்வியமாய் -
பெரியநம்பிகளை நெருங்கி...

இராமானுஜன் - அவரது
இணையடி மலர்கள் முன் -
சாஷ்டாங்கமாக விழுந்து -
சேவித்து எழுந்து...

அருளார்ந்த -



அந்த...

மகாபுருஷரை;
மகோன்னதமான புலவரை;

ஆயகலைகட்கு
அதிபதியாம்
அயக்கிரீவரை - தனது
அடிநா ஆசனத்தில்...

அமர்த்தி -
ஆராதிக்கும் அடியவரை;

பாட்டரசை;
பண்ணரசை;
ஏட்டரசை;
எண்ணரசை;
வீட்டரசை
விழைவார்க்கு - திரு
நாட்டரசை
நாளும் துதிக்க ஏதுவாக...

இத்தகு
இசைப் பாக்களை -

உண்டாக்கி
ஊரார்க்கு -
உபகரிக்கும்
உத்தமரை; ஒரு -
வரையிலா - ஞான
வித்தகரை;

இங்கு -
இருந்தபடியே...

மானசீகமாக
மனத்தால் துதிக்கிறேன்;
குருவடியாய்க்
கருதி - அன்னவரின்
திருவடியை - என்
தலைமேல் பதிக்கிறேன்!

பெரியவரே!
பெருமாள் பிராட்டியைப் பற்றி...

இதுகாறும்
இத்தகு இன்கவியால் -
இதயங்களை
இளக்கும் வண்ணம் - எவரும்...

செப்பா மேன்மையெலாம்
செப்பியது - தேவரீர் பாடிய
இப்பா!

ஒண்பா -
வெண்பா - என்றெல்லாம்
ஓராயிரம் பேர்
ஓதியிருப்பினும்...

இப்பா -
இணையாக வல்லது
எப்பா? எதிர்நிற்க ஒண்ணுமோ -
அப்பா?

செம்பொன்னுக்கு நேர் -

"என்ன... வியாபாரம் நல்லா நடக்குதா?"

சென்னிமலைக்கு அருகே இருக்கும் அறச்சலூர்! சாக்கடை ஓரத்தில் படுத்து, ஏதேதோ உளறியபடி இருந்த அருவருப்பான தோற்றமுடைய ஆள் இப்போது பரபரப்பு ஆசாமி! 'பாபாஜி.. பாபாஜி' என்று உணர்ச்சிவசப்பட்டபடியே அந்த ஆசாமியின் காலில் விழுந்து வணங்குகிறார்கள் பலர். எதையும் கண்டுகொள்ளாமல் வெறித்த பார்வை ஒன்றைப் பதிலாகத் தந்துவிட்டு தன்



302

செப்பா?
வைரக்கல்லுக்கு உவமை -
உப்பா?

ஸ்வாமி! தேவரீர் சேவித்த -
ஸ்லோகங்களை செவிமடுக்கையில்...

அந்த
அனுபவம் -

என்னை -
என்னவோ செய்தது,

என்னை -
எனக்கே தெரியாமல் கொய்தது;

சிந்தைக்குள் - ஒரு
சன்மார்க்க மழை பெய்தது;
சருவவினையும் சாக - ஒரு
சுடுசரத்தை என்னுள் எய்தது;

எஞ்ஞான்றும் -
எனது
எண்ணம் தரிக்க -
என் பொருட்டு...

ஆன்மானுபூதி - எனும்
அழகிய ஆடையை நெய்தது;
இந்நாள்வரை
இம்மியளவும்
உய்யா திருந்த - என்
உயிர் சற்றே உய்தது!'

என்று - தன் நிலையை
எடுத்துக் கூறி...

'ஸ்வாமி! இந்த
ஸ்லோகங்களை...

யாத்த மகானுபாவர்
யாரோ? அவர்
எழுந்தருளியிருப்பது -
எவ் வூரோ? என்ன திருப்பேரோ?

இக் கவிகளை -
இயற்றிய கவியை வினவினான் -
இராமானுஜ நம்பி; விடையை
இறுத்தார் இன்னிசை நம்பி!

'துதிப் பூக்களால் ஆன - இத்
தூய கவிதை ஆரத்தை...

தொடுத்தவர் - துவராடை
உடுத்தவர்; துயிலும் - திரு
அரங்கநாதப் பெருமாளுக்கு
அடுத்தவர்;

என்னுள் இருந்த என்னை -
என்னிலிருந்து எடுத்தவர்;
எடுத்து
என்னை -
எனக்குக் காட்டி
ஏற்றங்களைக் கொடுத்தவர்!

யாமுனர் என்றும்;

முனகலைத் தொடர்கிறார் அந்த ஆசாமி. ''பாபாஜி சாதாரண ஆளில்லை. அகத்திய முனிவரின் கடைசிப் பிறவி..!'' என்று கண்கள் விரியச் சொன்ன ஊர்க்காரர் ஒருவர், பாபாஜியின் கதையைச் சொன்னார். ''பாபாஜிக்கு சொந்த ஊர் எது, குடும்பம் இருக்கான்னு எதுவும் எங்களுக்குத் தெரியாது. அவர் இங்க வந்து பதினஞ்சு வருஷமாகுது. ரெண்டு, மூணு வருஷத்துக்கு முன்னாடிதான் அவர் சித்தர் காலத்தைச் சேர்ந்தவர்னு கண்டுபிடிச்சோம்(!) இந்தியும் இல்லாம, உருதுவும் இல்லாம ஒரு புது மொழி பேசறார்: அதை சிந்து மொழின்னு டி.வி-க்காரர் ஒருத்தர் சொன்னார். கல்லாபெட்டியை இவர் தொட்டா வியாபாரம் அமோகமா நடக்கும்னு நிறையப் பேர் கார்லெல்லாம் வந்து இவரைத் தங்கள் கடைக்கு கூட்டிட்டுப் போவாங்க'' என்றார்.

– ஆ. சக்திவேல்

யாமுனாசாரியர் என்றும்;

பூர்வாசிரமத்தில் -
புகழ்சால் தனவானாக;
புரை எதுவும் -
புந்தியில் இல்லா கனவானாக;

அறியப் பெற்ற
அடியேனுடைய
ஆசிரியப் பிரான் -
ஆளவந்தார் ஸ்வாமிகள் தான்...

வரதராஜன் துதியெனும் - இவ்
வண்ணக்கவியை வனைந்தவர்;

நாராயண
நாமமெனும் -
நன் மழையில்
நாளும் பொழுதும் நனைந்தவர்!'

எட்டுள்
இருப்பவனை - செய்யுள்கள்
எட்டுள்
இருத்தியவர் -

ஆளவந்தாரென - பெரிய நம்பி
அறிவித்ததும்...

'ஆஹா!' என
ஆனந்தித்து -
இராமானுஜன்
இருகரம் கூப்பி நின்றான் -

பக்திப் பெருக்கில் -
பனிமலர்ப் பார்வை பனிக்க;
பேசினான் பிறகு.
பேச்சில் பரவசம் தொனிக்க!

'ஆளவந்தார் ஸ்வாமிகளை
ஆரே அறியார்?
ஆளவந்தார் ஸ்வாமிகளை
அறியார் ஏதும் அறியார்!

நீணிலம் கண்டதில்லை அவரை
நிகர்த்த ஒரு நெறியார்;

ஆசைமேல்
ஆசை உள்ளவர் - என
அம்புவிமேல்
ஆரும் அவரைக் குறியார்;

ஆண்டு
அனுபவித்து -
அதன்பின்
அவித்த ஐம் பொறியார்;

தேசுடைய
திருமேனிக்கு - மேலும்
தேசு சேர்க்கும்
துவாதச புண்டரக் குறியார்!

ஆதியில் அவர் ஓர்
அரசு; இன்று
ஸ்ரீவைஷ்ணவர்களின்
சிரசு!

வைக்கோல் போன்றது
வேந்து ஏந்தும் -
கைக்கோல் என்று
கணித்து - கடைவழிக்கு
அக்கோல் உதவாதென
அறிந்து உதறிவிட்டு -
முக்கோல் உயர்த்திய
முனிவரல்லவா அவர்;

வைணவ சித்தாந்தத்திற்கு -

## சாப்பாட்டு ராமன்!

ஆடல், பாடல் நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு ரசிகர்களைக் கவர்ந்திழுக்கும் கலைஞர்களுக்கு ஆடி முடித்த பின்புதான் சாப்பாடு கிடைக்கும். ஆனால், மேடையிலேயே சாப்பாடு பரிமாறப்பட்டு அதை ருசித்துச் சாப்பிட்டபடியே பாடி ஆடுகிறார் கரூரைச் சேர்ந்த ராமஜெயம்! 'கல்யாண சமையல் சாதம்... காய்கறிகளும் பிரமாதம்...' என்று பாடி, ஆடுவதென்றால் உற்சாகம் இவருக்கு!

– உன்னிகிருஷ்ணன்

304

வாய்த்த காப்புச் சுவர்!

அத்தகு
ஆளவந்தார் ஸ்வாமி - முனம்
அரங்கம் விட்டு - இவ்
அத்தியூர் வந்த காலை...

தமியனுக்குக் கிட்டவில்லை
தரிசிக்கும் பேறு;
என் செய்ய?
என் ஊழ் அவ்வாறு!

எனினும் -
என்றேனும் ஒருநாள்
ஏற்படலாம் எனக்கு - அவரை
எதிரில் காணும் பாக்கியம்;

உண்மையில் - என்
உள்மனத்தில் - அப்படி
ஒலித்தபடி உளது -
ஓர் அசரீரி வாக்கியம்!

அது ஒருபுறம் இருக்கட்டும்;
ஆளவந்தார் ஸ்வாமிக்கு...

திருமேனி பாங்கில்லை - என்று
தெரியவந்தது; அது
தெரியவந்த நாள்முதல் - அத்
தகவல் வருத்தம் தந்தது!

ஸ்வாமிக்கு -



ஸ்வஸ்தமாகி விட்டதா?

கோயில் -
கொண்டிருக்கும்...

திவ்ய
தம்பதியின்
திருநோக்கு - ஸ்வாமி
திருமேனிமேல் பட்டதா?'

இன்னணம் - விசனமொடு
இராமானுஜன் வினவ...

விளக்கினார் பெரியநம்பி
விவரங்கள் சிலவற்றை -
சற்று கவலையொடு; கண்களின் -
சரிவில் நீர்த் திவலையொடு!

'ஸ்வாமி ஆளவந்தாரின் ஸ்திதி -
ஸ்வாரஸ்யமாக இல்லை;

ரங்கநாயகியும் -
ரங்கநாதனும் -
ரக்ஷித்தால்தான் தீரும் -
ராஜபிளவையின் தொல்லை!

க்ஷணந்தோறும்
க்ஷீரஸாகரனைத் தொழும் - ஸ்வாமி
க்ஷேம மடையாமல் - திருமேனி
க்ஷீணித்து வருவதால் தான்...

உம்மை அழைத்துப்போக - நான்
ஓடோடி வர நேர்ந்தது;
பெரிய
பிரயாசைப் படாது - உம்மைப்
பார்த்துவிட்டதால் - எனக்குப்
பாதிவேலை தீர்ந்தது!'

பெரிய நம்பியின்
பேச்சு பிடிபடாமல்...

இராமானுஜன் நின்றான் -
இருவிழிகள் விரித்தபடி;
கச்சிநம்பி வந்து நின்றார் -
கிட்டத்தில் சிரித்தபடி!

— வளரும்

### ஞானத் தந்தை

"**பி**ள்ளாய்! ராமானுஜா! இந்த -
பிராமணோத்தமர்தான்...

மகா -
பூர்ணர் என்று புகழப்பெறும்
பெரியநம்பி; எனையொத்த -
பாகவதர்க்கெலாம் - மிகமிகப்
பிரிய நம்பி!

நானும் - இந்த
நம்பியும்...

ஒருசாலை மாணாக்கர் - என்பதை
ஒருசிலர் அறிவர்; அந்த -
ஒரு சிலரும்
ஓரா -



# ராமானுஜ காவியம்

38

ஓர் உண்மை யாதெனில் - இந்த
ஒல்லுநர் என்னிலும் அறிவர்!

ஆசாரியர் -
ஆளவந்தார் ஸ்வாமிகளிடம்...

இருவரும் - அவரது
இணையடி நிழற்கீழமர்ந்து -
குருபரம்பரையைக்
குறைவறக் கேட்டோம்;

குருவடி யல்லால் - பிறிதொரு
திருவடி தொழவும் மாட்டோம்;

போட்டி -
போட்டுக் கொண்டு...

குருவிற்கான -
கைங்கரியத்தை வேட்டோம்;
கௌபீனம் முதலிய
காவி வஸ்திரங்களைத் -

கவிஞர் வாலி

துப்புரவாகத்
துவைத்துப் போட்டோம்!

இருவருக்கும் - அரங்கன்
இரண்டாம் பட்சமே;
ஆசாரியனைவிட - எங்களுக்கு
ஆருமில்லை உச்சமே;

தொல்லுலகில் - நாம்
தேடற்கரிய தனம்...

ஆசிரியப் பிரான்
அமுது செய்த எச்சமே;
அதன் விசேஷத்திற்குமுன் -
அமிர்தமாயினும் துச்சமே!

குரு -
கடாட்சத்தால்...

பிறவி
பாவனமாகும்;
வல்வினை
வலுவிழந்து போகும்;
ஆன்மாவை
ஆட்டிப்படைக்கும் -
அறுபகை
அடிபட்டுச் சாகும்!

சன்மம்
சாபல்லியம் அடையும்;
புந்தியைப்
பிணித்திருக்கும் -
ஆசாபாசமெனும் நிகளம்
அரைநொடியில் உடையும்!

இவற்றையெலாம் - எங்கள்
இருவருக்கும்...

அறிவுறுத்தியது
ஆளவந்தார் ஸ்வாமிகளை -
அண்டியிருந்த
அனுபவம்; அவரது -

பாதகமலங்களைப்
பற்றிய பின்னர் - இப்
பிறப்புக்கு ஏது
பரிபவம்?

நானும் - பெரிய
நம்பிகளும்...

ஸ்ரீரங்கத்தில்
ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளை -
சேர்ந்தே
சேவித்து வந்தோம்;

'எம்மை -





ஏது செய்யினும் செய்க!' என்று –
எங்களை அவர் கையில்
எடுத்துத் தந்தோம்!

நாங்கள் –
நிச்சிந்தையாக இருக்கிறோம்...

ஆசிரியப் பிரானான
ஆளவந்தார் ஸ்வாமிகளின் –
அடிமலர் வந்தித்தபடி –
அஃதையே சிந்தித்தபடி –

அன்று தொட்டு –
இன்று மட்டும்;
எவ் வினை –
எம்மை எட்டும்?



ராமானுஜா! அத்தகு -
ராஜ ரிஷி...

உன்
தாய்மாமன் -
திருமலை நம்பிக்கும்;
தமியேன் -
திருக்கச்சி நம்பிக்கும்;

பக்திப்
பனுவல்களைப்
பாடிய - இப்
பெரிய நம்பிக்கும்;

அறிவு கொளுத்தி
அருள் பாலித்த
ஞானத் தந்தை; வேதாந்த -
ஞானங்கள் கூடும் சந்தை!

அவர் - உன்னை
அழைத்து வரச் சொல்லி
ஆள் விடுத்திருக்கிறார்; நோயில்
அங்கே படுத்திருக்கிறார்!

ஏன்?
எதற்கு?
என்றெல்லாம்
எவரால் அறிய ஏலும்...

ஆசிரியப் பிரான்
ஆளவந்தார் திருவுள்ளத்தை?

வைணவத்தின்
வாழ்வே - தன்
வாழ்வெனக் கொண்டு
வாழ்ந்திடும் பெருவுள்ளத்தை?

அவரது
அந்தராத்மா -
அவாவுகிறது - உன்னை
அருகில் வைத்துப் பார்க்க;

அன்னணம் உன்னை
அருகில் பார்த்தால்
அது உதவலாம்
அவரது நோயினைத் தீர்க்க!

என் மனத்திற்கு -
என்ன படுகிறது என்றால்...

திருவரங்க விஜயம் - ஒரு
திருப்புமுனை யாகலாம்
உனக்கும்; வைணவம்
தனக்கும்!

அப்பா! ராமானுஜா!
அரங்கனின் ஊருக்கு...

புறப்படு -
பெரிய நம்பியோடு; உன்னை
அழைத்திருப்பது - துவர்
ஆடைகட்டிய ஞானவீடு!"

இன்னணம் கச்சிநம்பி
இயம்பியதும் -
இராமானுஜன் மகிழ்ந்தான்;
இதயம் நெகிழ்ந்தான்!

'ஆகா!
ஆளவந்தார் ஸ்வாமிகள்
ஆள்விடுத்து - என்னை
அழைப்பது என்றால்...

இஃது
எனது -
அன்னை அத்தன் செய்த தவம்;
அற்றது இன்றோடு என் அவம்!

ஆளவந்தாரை தரிசிக்க - திரு
அரங்கமா நகரத்திற்கு...

அடியேனை -
அழைத்துச் செலும் நம்பிக்கும்;
அன்பொழுக -
அனுப்பிவைக்கும் நம்பிக்கும்;

தலையலால் வேறு – கைம்மாறு
இலை!'

என்று –
ஏகமாய் உணர்ச்சிவசமாகி...

நேர் நிற்கும் –
நம்பிகள் இருவரையும் – மேனி
நிலந்தோய – சாஷ்டாங்கமாய்
நமஸ்கரித்தான் –

'பின்னாளில்
பெரும்புகழ் சூழ்வான்!' என –
இந்நாளிலேயே கோடிகாட்டும்
இளைய ஆழ்வான்!

திருவரங்கத்திற்கு – தான்
திடீரென்று செல்ல நேர்ந்ததை...

தனது
தாரம் –
தஞ்சமாம்பாளிடம்
தயை செய்து –

தெரிவித்து விடுமாறு – ராமானுஜன்
திருக்கச்சியை வேண்டினான்;

பிறகு
பெருமாளையும் பிராட்டியையும் –
பிரதட்சிணம் வந்து
பிரார்த்தித்துக் கொண்டு...

பெரிய நம்பியோடு
பயணத்தைத் தொடங்கி –
புகழ்சால் காஞ்சியின்
பிரதான எல்லையைத் தாண்டினான்!

'அடடா! ஸ்வாமி –
ஆளவந்தாரை சந்திப்பதில்...

இராமானுஜனுக்கு
இத்துணை அவசரமா?

இவன் என்ன –
இராமானுஜனா? இல்லை –

இங்கிருந்து – அரங்கன்
இருக்கும் ஊருக்கு – வில்லில்
இறுகிக் கட்டிய நாணை –
இழுத்து அனுப்பிய சரமா?'

என
எண்ணி எண்ணி –
வியந்தார் கச்சி;
வாலறிவின் உச்சி!

மொத்த வெய்யிலையும் –
குத்தகைக்கு எடுத்தாற் போல்...

மிச்சம்
மீதமின்றி – தங்கள்
உச்சந் தலைகளில்
உட்கார்த்திக் கொண்டு –

ஆளவந்தார் எனும்
அந்த –

ஒரே யோசனையோடு
ஒன்பது யோசனைகளைப் –
பகல் முச்சூடும்
பாதம் நோகக் கடந்து...

பொழுது சாய்ந்ததும் – ஒரு
பொதும்பரில் தங்கினர் –
பெரிய நம்பியும்; இளைய
பெருமாளும்; இருவரும் –

பசியாறினர் – கிடைத்த
பழங்களால் பெரும்பாலும்!

இரவு வந்ததும் – சுற்றி
இறைந்து கிடக்கும்..

சுள்ளிகளைச்
சேகரித்து –

சிக்கிமுக்கிக் கல்லால்
சிறுதழல் மூட்டி -

அதில் கந்த மூலங்களை
அவித்து உண்டனர்;
சிதிலமடைந்த - ஒரு
சின்ன மண்டபம் -
சற்று
சமீபத்தில் இருக்கக் கண்டு...

அங்குபோய் - தம்
அங்கவஸ்திரத்தை விரித்து -
அசதி தீர
அக்கடா என்று படுத்து -

அருள்மிகு
ஆசிரியப்பிரான் -
ஆளவந்தார் விஷயமாய்
அளவளாவிக் கொண்டனர்!

'யதி -
யாமுனாசாரியர்...

அடியேனை
அரங்கத்திற்கு -
அழைத்த காரணத்தை
அறியும் ஆவல் -

உள்ளத்தின் -
உள்ளே உள்ளது;
தேவரீர் அதனைத் -
தெரிவித்தால் நல்லது!'

என்று
எழுஞாயிறு அனையவன் -
பெரிய நம்பிகளிடம்
பிரார்த்திக்க...

அவர் -
ஆதியோடந்தமாய்
விவரிக்க லானார்; இடையிடையே -
வியர்த்துப் போனார்!

"ராமானுஜரே!
ராஜாவாயிருந்து ரிஷியானவர் -
ஆளவந்தார் ஸ்வாமி; இதனை -
அறியும் ஆழிசூழ் பூமி;

அவர்பால் இல்லை -
அழகிய சங்கம்; நேமி;
ஆயினும் - எங்களுக்கு
அவரே அந்தர்யாமி!

உய்வது அறியாது
உலப்பிலா அந்தகாரத்தில் -
செய்வது அறியாது
சித்தங் கலங்கும் நமக்கு...

குருநாதன்தான்
கைவிளக்கு; அந்தக் -
கைவிளக்கு காட்டுவதுதான்
மெய்விளக்கு!

மெய்விளக்கைக் காட்டும்
கைவிளக்கையே - நாம்
முதல்
மரியாதைக் குரியதாய்க்
கருதி - நமது
கிருதக்ஞையைக் காட்டுகிறோம்;
ஆசாரியனால்தானே - நாம்
ஆன்மானுபூதியை ஈட்டுகிறோம்;
ஆதலால்
அவரையே -

அந்தர்யாமியாய் - நம்
அகத்துள் வைத்து -

அவரது -
அரவிந்த
அடிமலரை நம் சிரசுக்கு -
அணியென்று நாம் சூட்டுகிறோம்;

ஆசாரியன்
அனுக்கிரகத்தால்தான் - நாம்
அஞ்சையும்

அவிக்க அனல் மூட்டுகிறோம்!

வீட்டரசை
வைணவர்க்கு -
வாங்கித் தருவது
விசிஷ்டாத்வைத சித்தாந்தம்;
வேறு எதைக்கொண்டு - நாம்
வாங்க இயலும் முத்தாந்தம்?

'சித்து;
அசித்து; இவை இரண்டுக்கும் -
வித்து -
விட்டுணு;
விட்டுணுதான்
விசுவமாயும் -
வேறுள்ள சித்து அசித்தாயும்
விரியும் அணு!'

நம்மவர் -
நம்பும் கொள்கை இது:

இறை பற்றிய
இந்தக் கொள்கையானது -
நமக்கு மட்டுமல்ல;
நாராயணனை முழுமுதலாய் -
நம்பும் -
நால்வருணத்தார்க்கும் பொது!

எவ்வுயிரும் -
செவ்வுயிராய் வாழ...

உதவும் வைணவத்தை
உத்தாரணம் செய்யும் - பரம
உபகாரியாக விளங்கும்
உத்கிருஷ்டர்...

ஆளவந்தார் ஸ்வாமிகள் - தேக
அசௌக்கியமுற் றிருப்பதால் -

தனக்குப் பின்
திருமாலடியாரைத்
தடம் புரளாது
தக்கபடி -

வழிநடத்திச் செல்லும்
வைராக்கிய சீலராக;
முக்கோல் சுமக்கும்
முனிபுங்கவராக;

உம்மைத் தேர்ந்தெடுத்து
உள்ளார்;

அந்த -
அரிய ஸ்தானத்திற்கு...
உண்மையில்
உம்மிலும் - எமக்கெலாம்
உவப்பானோர் - எவர்தாம்
உள்ளார்?''

பெரிய நம்பிகளின் -
பேச்சைக் கேட்டு...

இராமானுஜனுக்கு
இன்னது என்று -
இனங்காண
இயலாதபடி -

ஓர்
உணர்வு உண்டானது;
அவன் மனம்
அக்கணமே -
ஆளவந்தார் அடிமலரில்
அமரும் வண்டானது!

இரண்டு மூன்று நாள்களில் -
இருவரும்...

திருவரங்க எல்லையைத்
தொட்டனர்;
தொட்ட மாத்திரம் - ஒரு
தகவல் செவியில் விழ -
துணுக்குற்றுத் -
துடிதுடித்து விட்டனர்!

- வளரும்

# ராமானுஜ காவியம்

314

39

## மூன்று விரல்கள்

'ஆளவந்தார் ஸ்வாமி – திருநாடு
அலங்கரித்து விட்டார்!'

இந்தத் தகவல்தான்
இராமானுஜனையும் –
பெரிய நம்பியையும்
பெரிதாய்...

திடுக்கிட வைத்தது; நெஞ்சம்
நடுக்கிட வைத்தது!

நவநீதம்
நன்கு திரண்டு வருகையில் –
தாழி
தகர்ந்தாற்போல்...

ரங்கனாதன் ஊருக்கு
ராமானுஜனை அழைத்து வந்து –
ஆளவந்தார் முன்
ஆஜர்படுத்தும் அவாவில்...

நான்கு
நாள்கள்...

கல்லும் முள்ளும்
கடந்து வந்து;
நெடுமூச்சு வாங்க
நடந்து வந்து;

**கவிஞர் வாலி**



காவிரி ஊரின் எல்லையில் -
கால் வைக்கையில்...

இப்படி ஆகிவிட்டதே - என்று
இடிந்து போனார் பெரிய நம்பி;

அனையைப் பிரிந்த
ஆறு மாத சிசு போல் -
அழுது அரற்றினார்
அன்புடைமனம் பெரிதும் வெம்பி!

நான்முகன் - தன் தலையில்
நல்லெழுத்தாய் எழுதவிலையே -



316

என்று
ஏகப்பட்ட -

சுயபச்சாத்தாபம் கொண்டு
சோகாப்பின் வயப்பட்டான் -
தகவுமிக்க குணாளன்;
தஞ்சமாம்பாள் மணாளன்!

முதற்கோணல்
முற்றும் கோணல் எனும் -
பழமொழிக் கேற்ப - தன்
பழவினைப் பயனாய்...

ஆரம்பத்தில்
அமைந்த
ஆசாரிய சம்பந்தம் -
அரைகுறையாய் ஆனது போல்...

திருக்கச்சி நம்பிகளும்
தன் விஷயத்தில் -
திருவுள்ளம் வைக்காது
தவிர்த்துக்கொண்டே போனதுபோல்...

ஆளவந்தார் ஸ்வாமிகளை
ஆசிரியப் பிரானாய் ஏற்று -
அடிமலர்க் கீழ்
அமர்ந்து -

விட்ட குறை
தொட்ட குறை என்றிருக்கும் -
வித்தையை
விருத்தி செய்ய ஏலாது...

அவரும் இன்று -
ஆகாயம் ஏறினாரே என்று -

தன் -



துரதிர்ஷ்டத்தை எண்ணி -
துக்கித்தான் ராமானுஜன்
திருவிழிகளில்...

நீர் வழிய; கொஞ்சம் -
நினைவு அழிய!

ஊர் அழுதது; காவிரி -
நீர் அழுதது; கோயில் -
தேர் அழுதது; கோதைத் தமிழ்ச் -
சீர் அழுதது;

ஆளவந்தார் - திருநாடு
அலங்கரித்தது கேட்டு;
அனைத்திற்கும்
அளப்பரிய -
அத்துணை அன்பு
அவர் மாட்டு!

சாரி சாரியாக -
சாரி சாரியாக -

ஊர்
ஊர்ந்தது...

காவிரிக் கரையில் உள்ள
கரம்பன் கரை நோக்கி;
கவலையையும் கண்ணீரையும் -
கண்கள் இரண்டில் தூக்கி!

திருமஞ்சனம் செய்யப் பெற்ற
திருமேனி;
பட்டாடை அணிவிக்கப் பெற்ற
பெருமேனி;

துளபங்களாலும் -
தூய மலர்களாலும் -
தொடுக்கப் பெற்ற -
தாமங்கள்...

சூடிக்கொண்டு கிடந்த -
செய்ய குருமேனி;

நலிந்து மெலிந்து -
நிலங் கிடக்க...

ஆரணம் ஓத -
அழகிய சங்கம் ஊத -
அந்திம சடங்குகள்
ஆரம்பித்து நடக்க...

வைத்த விழி
வைத்தபடி -
நகரத்தார் கண்கள்
நிலைகுத்தி நிற்க -

ஜனசமுத்திரம் நடுவே -
ஜனன சமுத்திரம் கடந்த -
மகான் -
மல்லாந்திருப்பதைக் கண்டு...

பிரதான சீடர்
பெரிய நம்பியும்;
அண்ணல் இராமானுஜன் எனும் -
அரிய நம்பியும்;

திருமேனிகள்
தரை தோய -
தண்டம் சமர்ப்பித்தனர்;

திரும்பத் திரும்பத்
திரும்பத் திரும்ப...

தண்டம் சமர்ப்பித்து -
திருநாடு அலங்கரித்துவிட்ட -
துறவரசின் -
தூய திருவடிக் கமலங்களில் -

விழிகள் நான்கையும் -
வண்டுகளாக்கி மொய்த்தனர்!

ஆளவந்தாரின்
அருள்மிகு திருமேனியை -
ஆதிமுதல்
அந்தம் வரை...

இரு கண்களால்
இராமானுஜன் -

318

வருடிக்கொண்டே
வருகையில்...

வலக்கரம் தன்னில்
விரல்கள் மூன்று மட்டும் -
மடங்கிக் கிடக்க;
மற்றிரண்டு நீண்டிருக்க;

வியப்பொடு -
வினவினான்...
அண்மையில் இருந்த
அடியார்களை;
ஆளவந்தாரின் - திரு
அடிப் பொடியார்களை!

'அருளரசு
ஆளவந்தார் ஸ்வாமிகளின்...

வலது திருக்கரத்து -
விரல்கள் மூன்றும் -
முன்பே - இன்னணம்
முடங்கி யிருந்ததோ?'

'இல்லை;
இப்பொழுதுதான் இப்படி!

ஸ்வாமிகளின்
ஜீவ தசையில்...

நேராகவும்
சீராகவும் இருந்த -
இம் மூன்று விரல்களும்
இப்படி ஆனது எப்படி?'

என்று பெரிய நம்பிகளே -
எழுப்பினார் வினாவை;
ஆரே அறிய வல்லார் -
ஆளவந்தார் கண்ட கனாவை?

இளையாழ்வான் -
இராமானுஜன்...

சிறு போழ்து
சிந்தனை வயப்பட்டான்; பின்
தைரியமாய்த்
தன்கருத்தை வெளியிட்டான்!

'அந்தணப் பெருமக்களே!
அரங்கம் வாழ் திருமக்களே!

நீங்கள் -
நாளும் பொழுதும்...

பரமாசாரியரின்
பாதக்கமலங்கள் கீழிருந்து -
காலட்சேபம்
கேட்டவர்கள்;
ஆளவந்தாரையே
அரங்கநாதனையும் -
விஞ்சிய தேவாய்
வேட்டவர்கள்!

உற்ற ஆசானின்
உள்ளக் கிடக்கையை...

ஓரளவு - நீங்கள்
ஓர்ந்திருக்கக் கூடும்;
நீங்கள்தான்
நீழலா யிருந்தோர் - இந்த
நாயகனின்
நெஞ்சோடும் நினைவோடும்!

எனினும் -
என் கருத்துக்கு -
எட்டியதைக் கூறுகிறேன்;
எளியேன் கூறுவது -

ஏற்புடையதா யில்லையெனில்...
எனை மன்னிக்கக் கோருகிறேன்!

ஆளவந்தார் ஸ்வாமிகளின்
ஆழ் மனத்தில்...

முப்பெரும் நோக்கங்கள்
முற்றுப் பெறாமல் -
அப்படியே
அடங்கிப் போயிருக்க வேண்டும்;

அவற்றை - தம்

அடியார்க்குச் சுட்டவே - இம்
மூன்று விரல்களும்
மடங்கிப் போயிருக்க வேண்டும்!

இது -
எனது ஊகம்;

சிவன் பிரிகையில் - தவ
சீலர்களின் -
விரல்கள் பேச
வாய் காக்கும் மூகம்!'

இராமானுஜன் -
இன்னணம் தெரிவிக்க..

அங்கிருந்த - சில
அடியார்கள் -
அக்கருத்தை ஒப்பினர்; தாம் -
அறிந்தவற்றைச் செப்பினர்!

'நமது ஆசாரியருக்கு -
நான்மறையைத் தொகுத்த...

வேத -
வியாசரிடமும்; விஷ்ணு -
புராணத்தை யாத்த
பராசரரிடமும்;

பெரும்
பக்தி; அவ்விரு -
காவிய புருஷர்களிடமும் - தன்
கிருதஞ்ஞதையைக் காட்ட
சரீரத்தில் இல்லை -
ஸ்வாமிகளுக்குப் போதிய சக்தி!

சுகவீனம் பாதி;
பலவீனம் பாதி; இந்நிலையில் -
என்னணம் ஈடேறும் - அவர்
எண்ணிய சேதி?

அடுத்ததாக - ஓர்
ஆசை - அவரது
அகத்தின் கண் உண்டு; அஃதை -
அறிவோம் அவர் பேசக் கண்டு!

புளியமர நீழலில்
போயமர்ந்த...

சடகோபரின் -
சதுர்மறை நிகர்த்த -
திருவாய் மொழியை -
தேசமெங்கும் பரப்ப...

ஆளவந்தார் ஸ்வாமி - மிக
அவாவினார்; அதுபற்றி -
அடிக்கடி எங்களோடு -
அளவளாவினார்!

மூன்றாவதாக - அவருள்
முளைத்த ஆசை யாதெனில்...

பகவான் வியாசரின்
பிரம்ம சூத்திரத்திற்கு -
விசிஷ்டாத்துவைத -
விளக்கங்களோடு...

உரையொன்று
வரைய வேண்டும் - என்று
உரைப்பார் அடிக்கடி; உடல்
உதவவில்லை அவ் ஆசைப்படி!

இப்படி - அவர்
இதயத்துள் இருந்த...

மூன்று விருப்பங்களைத்தான்
மூன்று விரல்கள் சுட்டுவதாய் -
தோன்றுகிறது எமக்கு! வேறு
தோன்றுகிறதோ தமக்கு?'

என்று
எதிர்நிற்கும் -
பெரியவர்
பெரிய நம்பிகளை -
அந்த
அடியார்கள் கேட்க...

'அப்படித்தான்
அடியேனுக்கும் தோன்றுகிறது!'

என - அக்கருத்தை

ஏற்றுப் பேசினார்
பெரிய நம்பி - தனது
பார்வையில் கண்ணீர் பூக்க!

ஆசிரியப் பிரானான
ஆளவந்தார் ஸ்வாமிகளின் -
ஆழ்மனத்து
அவாக்கள் மூன்றையும்...

அவரது
அடியார்களும்;
பெரியவர்
பெரிய நம்பிகளும்;

சொல்லக் கேட்ட ராமானுஜன் -
சொற்ப நேரம்...

இரு விழிகளின் -
இமைக் கதவங்களைச் சாத்தி;
இதயக்கமலத்தில் - ஆசான்
இணையடிகளை நிறுத்தி;

காவிரிக் கரையில்; திருக் -
கரம்பன் துறையில்;

திரளாய் நிற்கும்
திருவரங்கத்தார் நடுவில் -
திடமான குரலில் - தன்
தீர்மானத்தைத் தெரிவித்தான்;

ஆகாயத்தை -
அம்புவியை -

அப்புவை -
அக்கினியை -
அலையும் காற்றை -
அறுதியான சாட்சியாக வைத்து...

ஒரு -
வாக்குமூலத்தை அறிவித்தான்!

'வேதங்களைத் தொகுத்த -
வியாச பகவானையும்; விஷ்ணு -
புராணத்தை யாத்த -
பராசரரையும்;

மனிதகுலம் -
மறவாதிருக்கச் செய்வேன்;
இருவர் புகழையும் -
இன்னிசைப் பாவில் நெய்வேன்!'

இவ்வாறு
இராமானுஜன் -
உரக்கச் சூளுரைத்ததும் -
ஒரு விரல் நிமிர்ந்தது!

'பராங்குசரின் - திவ்வியப்
பாசுரங்களை...
பாரெங்கும் -
பரப்புவேன்; திருவாய்மொழியால் -
நாட்டார் செவிகளை -
நிரப்புவேன்!'

இப்படி -
இராமானுஜன்
இயம்பியதும் -
இன்னொரு விரல் நிமிர்ந்தது!

'பகவான் வியாசரின்
பிரம்ம சூத்திரத்திற்கு...
விசிஷ்டாத்துவைதத்தின்
வழியில் -
விரிவுரை ஒன்று ஆக்குவேன்;
வைணவ நெறியை ஊக்குவேன்!'

இவ்வாறு -
இராமானுஜன்
மொழிந்ததும் -
மூன்றாம் விரலும் நிமிர்ந்தது!

அடுத்த -
ஆசாரியன்...

'இவனே! இவனே!' என்று
இராமானுஜனை -
ஏத்தியது ஊர்; அலை -
எறிந்து குதித்தது காவிரி நீர்!

**- வளரும்**

# ராமானுஜ காவியம்

கவிஞர் வாலி

## காஞ்சி திரும்பினான்!

கூட்டத்தாரைப் பார்த்துக்
கூடவே இன்னொன்றும் சொன்னான்–
திருப்பெரும்பூதூர் தந்த
திருமகன்;

அனந்தன்
அம்சமாய் –
ஆகாயம் விட்டு
அம்புவி இறங்கிய பெருமகன்!

'ஆசாரிய
அனுக்கிரகம் –
அடியேனுக்கு
அலகு இல்லாது அமையுமாயின்;

அரங்கத்தில்
அரவணை மேல் –
அறிதுயில் கொள்வோனின்
அருளமுதும் வாய்க்குமாயின்;

நோய் –
நொடியின்றி...

உள்வலியும்
ஊக்கமும் கொண்டு – என்
உடம்பு – திடகாத்திரமாக
உலவும்படி இருக்குமாயின்;

பெரியவர் ஆளவந்தாரின் –
பேராவக்கள் மூன்றையும்...

நிச்சயம்
நிறைவு செய்வேன்;

நிறைவு செய்து – இந்
நீணில வாழ்வொழிந்து உய்வேன்!'

இப்படிச் சொல்லிவிட்டு –
இராமானுஜன்...

வையம் விட்டு –
வைகுந்தம் சென்றுவிட்ட
வைணவ வேந்தொடு – அவர்
வாழ்ந்த நாள்களில்...

உடனிருந்து
உபதேசம் பெற வொண்ணாது – தன்
ஊழ் – தனக்கு
ஊறுவிளைத்ததை எண்ணியெண்ணி–
கருத்தழிந்து –
கவன்றான்;

பிறகு – மனத்துள்
பிரலாபிப்பதை விடுத்து –
பக்கம் நிற்கும்
பெரிய நம்பிகளிடம் –



நுவலற்கரிய தன் நோதலை -
நுவன்றான்!

'பெரிய நம்பி ஸ்வாமிகளே!
பொறுத்தருள வேண்டும்;

வடம்பிடித்து
வலித்தாலும் - நிலைக்கு வராது

அடம்பிடித்து
ஆணியடித்தாற்போல் நிற்கும்...

தேர்போல்
தமியேனின் மனம் -
விரக்திச் சேற்றிலேயே
விழுந்து கிடக்கிறது -

முனைந்து நான் எழுப்பியும்
முரண்டு பிடித்தபடி -
மீண்டும்
மீண்டும்!

பெருமாள் தாயாரைக்கூட -
பிறிதொரு சமயம்...

சேவிக்கலாம் என்று - என்னை
சமாதானம் செய்கிறது மனம்;
எல்லோர் மனமும் போல் -
என் மனமும் மர்க்கட இனம்!

பிடித்தால்
பிடித்தபிடி விடாது;

விரக்தியின்
விளிம்பில் இருப்பதால் -
என்ன சொன்னாலும் - இப்போது
என் வார்த்தை எடுபடாது!'

இதற்கு மேல் - அங்குநிற்க
இஷ்டப்படாது..

காவேரிரங்கன் - கால் நீட்டிக்
கிடக்கும் ஊர் விட்டுக்
காஞ்சிபுரத்துக்குக்
கிளம்பி விட்டான்;

வரும்
வழியெல்லாம்

வேதாளம் போல்...
எரிவு காட்டினாள் - தஞ்சம்
எட்டிப் போய் நின்று;

அவளை -
அப்பொழுதே - ராமானுஜன்
அறிந்து கொண்டான் -
அருஞ்சுணங்கன் வால் என்று!

வீட்டுக்கவலை
வறுத்தெடுத் தாலும் -
வழக்கம்போல்
வரதராஜப் பெருமாளுக்கு...
தீர்த்தக் கைங்கரியத்தை -
தினம் செய்து வந்தான்;
எனினும் -
இராமானுஜன்...

ஆசாரியனை
ஆசிரயிக்காமல் -
அத்திவரதனை
ஆசிரயித்துப் பயனில்லையே -

என்று -
எண்ணி எண்ணிவெந்தான்!

தன்னை யறியாமலேயே -
தனக்குள்...
திருக்கச்சி நம்பிபால்
தீராக் காதல் ஒன்று -
தினம் தினம் -
தழைத்துச் செழித்து -

பெருவிருட்சமாய்ப்
பிறங்குவதை -
இதயபூர்வமாக ஓர்ந்த
இராமானுஜப் பெருந்தகை...

அவரையே - தன்
ஆழ்மனத்தில் -
ஆசிரியப் பிரானாக வரித்து -
அவரது...

சேவடிகளில்
சாஷ்டாங்கமாக சேவித்து -

'சிறியேனுக்கு - தேவரீர்தான்
சற்குருவாக இருந்து - நான்
சேமமுற - சாத்திரங்களை
சாதிக்க வேண்டும்!'

என்று -
இறைஞ்ச...

திருக்கச்சி நம்பி -
தீமிதித்தாற்போல் நகர்ந்தார்;
பின் -
பகர்ந்தார்!

'அப்பனே! ராமானுஜா! இது -
அடாத செயல்;

முதல் வருணத்திற்கு -
மூன்றாம் வருணத்தின்மேல்
முகிழ்க்கலாமா - இன்னணம்
முறைகேடான ஒரு மயல்?

ஆருக்கு ஆர் -
ஆசான்?
வர்ணாசிரம தருமத்தை
வஞ்சித்து விட்டு - உனக்கு நான்
வாத்தியாரானால் - தினம் பேசும்
வரதராஜன் என்னோடு பேசான்!

நீ வேதியன்;
நான் வைசியன்;
நானும் -
நீயும் -

சாதிவழிநிற்பதுதான்
நீதி வழி; சனாதனமாய் -
அனுசரிக்கப்படும் - இதுவே
ஆதிவழி!

காக்க வேண்டும் - நாம்

குலம் கோத்திரம்; நம்மால்
மலினப் படுத்தப்படலாமா -
மனுதர்ம சாத்திரம்?

உரிய காலத்தில்
உரிய ஆசானை -
உனக்குப் பெருமாளே
உணர்த்துவார்;

சீடன் என்ன
சாதியோ?
அதே சாதியில் - ஓர்
ஆசானைத் தேர்ந்து...

அவரே -
அவனோடு புணர்த்துவார்!'

இதற்குமேல் - கச்சிநம்பியை
இராமானுஜன் வற்புறுத்தாது..

அவரைத் - தன்
அகத்திற்கு
அமுது செய்ய
அழைத்து -

அவர்
அருள்கூர்ந்து உண்ட -
அன்னத்தின் மீதத்தை
ஆசாரிய சேஷமாக...

தான் புசிப்பது - எனத்
திட்ட மிட்டான்;
அஃதேபோல் -
அவன்...

திருக்கச்சி நம்பியின் -
திருவுள்ளம் நெகிழப்பேசி
ஒருநாள் - அவரது
ஒப்புதலையும் பெற்று -

சன்மம்
சாபல்லியம்
அடைந்துவிட்டதாக எண்ணி -

ஆனந்தப் பட்டான்!

'தஞ்சம்!
திருக்கச்சி நம்பிகள்...

இன்று நம்
இல்லத்தில் - என்
இறைஞ்சுதலுக்கு
இரங்கி...

வருகிறார் -
உணவு அருந்த;

சீக்கிரம்
சிறப்பாகத்
தளிகை செய்து வை - அது
தேவாமுதத்துக்குப் பொருந்த!'
என்று சொல்லிவிட்டு -
இராமானுஜன்...

கோயிலுக்குக்
கைங்கரியம் செய்யப் போனான்;
குதுகலக் குளத்தில் - மனம்
குளித்தவன் ஆனான்!

'நம் வீட்டு
நடுக்கூடத்தில் உட்கார்த்தி -
திருக்கச்சிநம்பிக்குத்
தளிகை பண்ணிப் போடுவதா?

சூத்திரர் ஒருவருக்குச்
சோறுபோட்ட பாவத்தைக் கழுவ -
காசிக்கும்
கங்கைக்கும் ஓடுவதா?'

தஞ்சமாம்பாளுக்கு
தகித்தது நெஞ்சு;
நெஞ்சு நிறைய
நிரம்பி வழிந்தது -
சாதி உணர்வெனும்
சர்ப்பம் துப்பிய நஞ்சு!

**– வளரும்**

## கவிஞர் வாலி

### ஆறு வாசகங்கள்

திடீரென்று
திருக்கச்சி நம்பிகள் வந்து -
தட்டுவார் கதவை என்று
தஞ்சமாம்பாள்..

எதிர்பார்க்காததால்
எதிர் நின்ற நம்பியை -

வியப்பும்
வெறுப்பும் -
விழிகளில்.
வழிய -

ஒப்புக்கு -
வரவேற்று...

'அவர் சொன்னார் - நீங்கள்
அமுதுண்ண வரப்போவதாக;
உங்களை - அதிதியாக
உபசரிக்கும் பாக்கியத்தை
எங்களுக்கு -
இன்று நீங்கள் தரப்போவதாக'

கோயிலுக்குப் போனவரைக்
காணவில்லை இன்னும்;





## 41

என் –
வீட்டுக்காரர்
வரும் வரை…

இந்தத் திண்ணையில் – சற்று
இளைப்பாறினால் –

வேர்க்க
விறுவிறுக்க
வந்திருக்கும் – உங்கள்
வேர்வையை…

காலை நேரத்துக் –
காற்று மெல்ல மெல்லத் தின்னும்!’

என்று – முகத்தில்
எவ்வுணர்வும் இன்றி…

# ராமானுஜ காவியம்



பட்டும் படாமலும் -
பேசினாள் தஞ்சம்;
கீழ்சாதிக்காரரான
கச்சி நம்பியோடு -
உரையாடுவதைக்கூட -
ஒப்பவில்லை அவள் நெஞ்சம்!

மகான் திருக்கச்சி நம்பி -
மெல்லிய புன்னகையை -
இதழ்க்கடையில்
இழைய விட்ட வாறே...

'அம்மணி!
அடியேனுக்கு -
அவர் வரும்வரை - காத்திருக்க
அவகாசமில்லை;

ஆனவரை - எனக்கு
அமுது படைத்து -
அனுப்பி வையுங்கள்; உங்கள் -
அன்புக்கு ஆகாரமா எல்லை?'

என்று சொல்லி - திண்ணையில்
எழுந்தருள...

'அம்மாடி!
ஆசாரம் பிழைத்தது!' என்று -

தஞ்சமாம்பாள் -
திருக்கச்சி நம்பிக்குத்
திண்ணையிலேயே இலை போட்டுத் -
தளிகையைப் பரிமாற...

அவசர
அவசரமாக - நான்குவாய்
அன்னத்தை



அள்ளிப் போட்டுக் கொண்டு...

திருக்கச்சி நம்பி
தஞ்சமாம்பாளிடம் -
விடைபெற்றுக் கொண்டு
வீதி வழி போனார்;

[illegible]ர்
அந்தணர் வீட்டில் - தன்னால்
அபிப்பிராய பேதம்
அரும்பிவிடக் கூடாதென்று -
அவசரம் காட்டி...

நயத்தகு -
நாகரிக மிக்க மனிதர் ஆனார்!

கோயில்
கைங்கரியத்தை -

ஒல்லையாகவும்
ஒழுங்காகவும் -
இனிதே நிறைவேற்றி விட்டு
இராமானுஜன்...

திருக்கச்சி நம்பியைத்
தன் வீட்டு விருந்துக்கு -
அழைத்துப் போக
அவரது மடத்திற்குச் சென்றான்;
அங்கு -
அவரைக் காணாமல்...

வருவார்
வருவார் என்று -
வழிமேல்
விழிகளை வைத்து நின்றான்!

நேரம் -
நீண்டுவிட்டதால்...

இளையாழ்வான்
இராமானுஜன் -
இறுக்கமான உணர்வோடு
இல்லம் சேர்ந்தான்;

நீராடிவிட்டு
நெடிய ஈரக் கூந்தலை -
நீவிக் கொண்டு
நிற்கும் மனைவியைக் கண்டு -

ஏடாகூடமாக -
ஏதோ நேர்ந்ததாய் ஓர்ந்தான்!

'தஞ்சம்!
தீர்த்தமாடி விட்டு
நிற்கும்படி - என்ன
நேர்ந்தது?

துக்ககரமான
தகவல் ஏதும் -
சொந்த பந்தங்களிடமிருந்து
செவிக்கு வந்தா சேர்ந்தது?

திருக்கச்சி நம்பி - வந்து
திரும்பிப் போனாரா?

எதிர்கொள்ளாமல் - நான்
எங்கேயோ போய்விட்டேனென -
புதிர் கொண்டு - மனம்
புழுக்கமாய் ஆனாரா?'

வினா மேல்
வினாவாக -
இராமானுஜன்
இல்லாளை வினவ...

கணவன் சஞ்சலத்தைக்
கருத்தில் கொள்ளாது -

சர்வ
சாதாரணமாக - தஞ்சம்
சொன்னாள் பதில்; அவள்
சலிப்புத் தெரிந்தது அதில்!

'நம்பி வந்தார்;
நாழியாகிறது என்று...

இதோ -
இந்தத் திண்ணையில் -
இலையைப் போடச் சொல்லி
இரண்டே வாய் -

சாப்பிட்டேன் என்கிற மாதிரி

சாப்பிட்டுவிட்டு...
ஓட்டமும் நடையுமாய் -
ஓடிப் போனார்;

அந்தணர் வீட்டு
ஆசாரத்திற்குத் - தன்னால்
அபக்கியாதி வருமோ என்று
ஆடிப் போனார்!

சாதி கருதி - அவர்
சாப்பிட்ட இலையைக் -
கோலால் எடுத்துக்
குப்பைத்தொட்டியில் எறிந்து..

சாப்பிட்ட இடத்தை -
சாணம் போட்டு மெழுகினேன்;
தீட்டுத்
தொலைய -
நானும்
நாலு செம்பு விட்டு முழுகினேன்!'

தஞ்சமாம்பாள் - இன்னணம்
தெரிவித்ததும்...

'இருக்கிறதா மீதி உணவு?' என -
இராமானுஜன் வினவினான்;
வெகுளியை அடக்கிக் கொண்டு -
உள்ளத்துள் முனகினான்!

'அநாசாரம்!
அநாசாரம்!
அவர் சாப்பிட்ட
ஆகாரத்தை - நாம்
ஆராவது - சாப்பிட
ஆகுமா?

சாப்பிட்டால்தான் -
சவம் கட்டையில் வேகுமா?

மிச்சம் -
மீதியிருந்ததை -

பிச்சைக்காரர்களுக்குப்
போட்டேன்;

சோறு
சமைத்த
வெண்கலப் பானையை -
புளிபோட்டு
விளக்காமல்...

சமையலறைக்குள் -
சேர்க்க மாட்டேன்!

துளசித்
தீர்த்தம் -
தெளித்தால்தான்
தீட்டுப் போகும்;
அப்படியே உபயோகித்தால் -
ஆசாரம் என்ன ஆகும்?'

தஞ்சமாம்பாள் -
தூக்கி எறிந்து பேசினாள்;
வார்த்தைக்கு
வார்த்தை - திருக்கச்சி
நம்பிமேல்
நெருப்பள்ளி வீசினாள்!

'அடி பாவி!
ஆசாரம் ஆசாரம் என்று -
அறிவு கெட்டாயே;
பாகவத சேஷத்தைப்
பிச்சைக்காரர்க்குப் போட்டுப் -
பாழ்படுத்தி விட்டாயே!

மகான் நம்பி - தன்
மாணாக்கனாக -
என்னை
ஏற்க மறுத்து விட்டாலும்...

அவரை - என்
ஆசாரியனாக - என்
அந்தரங்கத்தில்
அமர்த்தி -

அத்திவரதனுக்கு
ஆலவட்டம் வீசும் - அந்த
உத்தமரின் உச்சிஷ்டத்தை
உண்ண எண்ணினேன்;

அதற்காகத்தான்
அவரை - நம்
அகத்திற்கு
அமுதுண்ண வரப் பண்ணினேன்!

நாசம் செய்தாய் - என்
நோக்கத்தை;
நீயறிய மாட்டாய்
நம்பிகள் -
எனக்குள்
ஏற்படுத்திய தாக்கத்தை!

திருக்கச்சி நம்பி - ஒரு
தீர்த்தர்; அவரை
தூஷிப்போர் எவரும்
தூர்த்தர்!

அன்றாடம் இரவில்
அத்திகிரி அருளாளனோடு -
வார்த்தையாடும் - அந்த
வைணவச் செம்மல்...

சாதிகளை -
சாத்திரங்களைக் - கடந்த
சோதியன்;

வேதியர்க்கெல்லாம் மேலான
வேதியன்; திருக் -
கச்சி நம்பியா -
கீழ்ச் சாதியன்?

உண்மையை - நீயே
ஓர்ந்து கொள்க உன் ஆய்வால்;
உன்னை நிமிர்த்த - என்
ஒருவனால் ஆகாது; நீ நாய்வால்!'

கோபித்தபடி - ராமானுஜன்
கோயில் நோக்கிப் போனான்;

பரம பாகவதர் ஒருவரின் -
போனகம் செய்த சேடம்
புசிக்கும் பேறு - தெருப்
பிச்சைக்காரர்க்குக் கிட்ட...

அவர்கள்
ஆற்றிய புண்ணியம் கூட - தான்
ஆற்றவில்லையே - எனும்
ஆற்றாமையில் -

அலைப்புண்டு - மேனி
அசக்தனாக ஆனான்!

கோயில் பிரகாரத்தில் - பூக்
குடலையும் கையுமாக...

நேர்வந்த - திருக்கச்சி
நம்பிகளின் திருவடிகளில்
சாஷ்டாங்கமாக விழுந்தான்;
சேவித்து எழுந்தான்!

'மகாபுருஷரே! தங்கள்
மகத்துவம் தெரியாமல்...

அடியேனின்
அகமுடையாள் புரிந்த -
அபசாரத்தை
அருள வேண்டும் பொறுத்து;

கண்வலி
கண்டார் -
கூசத்தானே செய்வர் - ஒளி
கூட்டும் கதிரை வெறுத்து!'

இளையாழ்வான் -
இன்னணம் சொன்னதும்...

'உபசாரம் செய்தாளேயன்றி -
அபசாரம் செய்தாளல்ல -
உன் உத்தம பத்தினி; என்
உண்ணா எழாது அப்படிச் சொல்ல!'

என்று
எடுத்துரைத்தார் கச்சி -
இராமானுஜனின்
இல்லாளை மெச்சி!

'அய்யனே! என்
ஆழ்மனத்தில்...

நெடுநாள்களாக - சில
நினைவுகள் உண்டு;

அவை குறித்து - எனக்கு
அறிவிக்க வேண்டும் - தாங்கள்
அத்திவரதனோடு பேசி -
அவன் திருவுள்ளம் கண்டு!'

இவ்வாறு -
இராமானுஜன் இறைஞ்ச...

அன்றிரவே - திருக்கச்சி
அத்திவரதனோடு பேசி -
அவன் திருவுள்ளத்தை -
ஆறு வார்த்தைகளாக...

மறுநாள் ராமானுஜனிடம்
மொழிந்தார்;
வரதராஜப் பெருமாள் - திரு
வாய் மலர்ந்து அருளிய
வாசகங்கள் ஆறையும் - தேன்
விருஷ்டியாக...

கச்சிநம்பி - அவன்
காதுகளில் பொழிந்தார்!

அத்திகிரி
அருளாளன் -
அருளிய
ஆறு வாசகங்கள்:

பரத்வம் நாமே!
பேதமே தர்சனம்!
உபாயமும் பிரபத்தியே!
அந்திஸ்மிருதியும் வேண்டா!

சரீர அவஸானத்திலே மோக்ஷம்!
பெரிய நம்பி திருவடி பேணல்!

இறைவன் வாக்காக
இராமானுஜனிடம்...

திருமாலடியார்
திருக்கச்சி நம்பிகள் -
அறிவித்த வாசகங்களின்
அர்த்தங்கள் இவை:

அனைத்திற்கும் நாராயணனே -
ஆணி வேர்!

ஜீவாத்மாவும் பரமாத்மாவும் -
ஒன்றல்ல; வேறு!

ஆண்டவனை அடைய ஒரே வழி -
அடைக்கலம் புகுவதே!

நாராயணனை - நாளும்
நம்பி வாழ்பவன் -
உயிர் பிரியும்போது - அவன் பேரை
உச்சரிக்க வேண்டியதில்லை!

அத்தகு அடியார்க்கு -
ஆவி நீத்ததும் வீடு நிச்சயம்!

பெரிய நம்பிகளைப்
பேராசானாகப் பேணி - அவர்
திருவடிகளைத்
தொழுக!

பெருமாள் சாதித்தபடி -
பெரிய நம்பிகள் சேவடி சேர...

அண்ணல் ராமானுஜன் - அன்றே
அரங்கம் புறப்பட்டான்;

புடம் போட்ட
பொன்னே போலும் -
தகத்தகாயமாய்த்
திருமுகம் பளிச்சிட்டான்!

**- வளரும்**



42

# ராமானுஜ காவியம்

முக்கோல் பகவன்.

ஆளவந்தார்
அவாவியபடி —
ஆண்டகை ராமானுஜனை
அழைத்து வந்து —

ஸ்ரீரங்கத்தில் —
ஸ்ரீ வைணவ சாம்ராஜ்ஜியத்தின் —

அடுத்த
அதிபதியாய் —
ஆசாரிய பீடத்தில்
அமர்த்த வேண்டி...

வாழ்க்கைத் துணைவி
விஜயாம்பாளுடன் —
பெரிய நம்பிகள்
புறப்பட்டார் —

திருவரங்கம் விட்டு —
திருக்காஞ்சி நோக்கி!

அதே நாளில் —
அதே நேரத்தில்...
பெரிய நம்பிகளைப்
பேராசானாய் ஏற்று — அவர்
பொன்னடி நீழல் வேண்டிப்

கவிஞர் வாலி

புறப்பட்டான் ராமானுஜன் -
திருக்காஞ்சி விட்டு -
திருவரங்கம் நோக்கி!

ஆசாரியன்
அருமந்த சீடனை நோக்கி;
அருமந்த சீடன்
ஆசாரியனை நோக்கி;

இன்னணம்
இருவரும் பயணிக்க -
கரியமால்தான்
கிரியா ஊக்கி!

மகிழ மரங்கள் மலிந்த -
மதுராந்தகத்தில்...

பெரிய நம்பிகளும் -
பெருந்தகை ராமானுஜனும் -
எதிர்பாராமல்
எதிர் எதிர் சந்தித்ததும்...

'எண்ணியது எண்ணியவாறு - என்
எதிர் வந்து - எனைப் புனிதம்
பண்ணியதே!' என்று -
இராமானுஜன் -
இறும்பூதெய்தி...

குருவடிகளில்; பெரிய நம்பி -
திருவடிகளில்;
தனது ஆகம்
தரை தோயத்
தண்டனிட்டான்; ஆனந்தத் -
தீர்த்தம் விழிவழி விட்டான்!





340

அன்பு கொண்டு – ராமானுஜனை
ஆரத்தழுவினார் நம்பி;
அவரது –
அத்தகு தழுவலில்...

அமைதி கண்டான்
அவலக் கடலில் –
அலைப் புற்று
ஆடிக் கிடந்த அம்பி!

இங்கேயே
இப்பொழுதே – தனக்கு
இதோபதேசம் செய்ய வேண்டி –
இராமானுஜன்...

நம்பிகளிடம் கேட்டான் –
நயந்து;

முழு ஞாயிறு அனைய
மூதறிஞர் நம்பி பார்த்தார் –
எழு ஞாயிறு அனையவனின்
ஏக்கறவை வியந்து!

'ராமானுஜரே! ஏன் –
ரொம்ப அவசரப்படுகிறீர்?
என்னைக் கண்டதும்
ஏன் இன்னணம்...

காதலாகிக்
கருத்தழிந்து –
கண்ணீரைக்
கசிய விடுகிறீர்?

புண்யகோடி விமானத்தின்கீழ் –
பொலிவுற வீற்றிருக்கும்...

அத்திகிரி
அருளாளன் சந்நிதியில் –
உமக்கு
உபதேசம் செய்கிறேன்; வாரும்!

ஆக்கப் பொறுத்தவர்
ஆறப் பொறுக்க வேண்டும் – என
ஒரு வசனம் உள்ளது; அஃதை –
ஓரும்!'

என்றார் பெரிய நம்பி;
ஏற்கவில்லை அரிய நம்பி!

'ஸ்வாமி!
ஸ்வாமி ஆளவந்தார் விஷயமாக -

அடியேன் - போதிய
அவசரம் காட்டியும் -
நான் போகுமுன் - அவர்
வான்போக வில்லையா?

காலமெல்லாம் - நானென்ன -
கொழுகொம்பில்லாத முல்லையா?

தேவரீர் -
தமியேனுக்கு -
திருக்காஞ்சியில் -
தேவராஜன் சந்நிதியில்...

உய்யும் வழியை
உபதேசிக்கத் -
திருவுளம் கொண்டிருப்பது
தண்ணளி ஆகாது;

பொன்னகர் காஞ்சிக்குப் -
போய்ச் சேரும்வரை...

என்னுயிர் -
எனதோ? எமனுடையதோ?
இஃதை -
அறுதியிட்டுக் கூற -
ஆளுளதோ அம்புவி மீது?

காடு போவதற்குள் - ஒருவன்
கற்றறிய வேண்டாமா -
வீடு போவதற்கான - ஓர்
உபாயத்தை?

அரைநொடியில் வரலாம்; நூறு
ஆண்டுகள் ஆகியும் வரலாம்;
ஆரறிவார் முன்னதாக - அந்த
அந்தகன் வரும் அபாயத்தை?

நெருநல்; இன்று;
நாளை;
என்றெல்லாம் பார்த்தா - மறலி
ஏந்துகிறான் வாளை?

ஆதலால்
அடியேனுக்குத் -
தட்சணமே
தேவரீர் அருளவேண்டும்...

பஞ்ச ஸம்ஸ்காரம் செய்து -
பவித்ர மந்திரோபதேசத்தை;

சீடனாய்
சுவிகரித்து - தேவரீருடைய
செய்ய கடாட்சத்தால்
சுத்தி செய்ய வேண்டும்...

மும்மல அழுக்குகள் -
மொய்த்த என் பாதாதிகேசத்தை!'

இன்னணம் -
இளையாழ்வான் பிரார்த்தித்து...
திரும்பவும் - பெரியநம்பி
திருவடிகளில் விழ -

அவர்
அவன் -
முடி பிடித்து எடுத்து
முதுகைத் தட்டிக் கொடுக்க...

ஓர்ந்தான் - தன்னுள்
ஓர் புத்துணர்வு எழ!

மதுராந்தகம் கோயிலில் - ஒரு
மகிழமரத் தடியில்...

இராமானுஜனை
இருத்தி - பெரியநம்பி
அஞ்சு சம்ஸ்காரங்களை -
ஆற்றினார்;

மந்திர ரத்தினம் - என
மதிக்கப் பெறும்
த்வயத்தை - அவன்
திருச்செவியில் சாற்றினார்!

'இராமானுஜரே! நீர் -
இப்போது உபதேசம் பெற்றது...
அடியேனிடம்
அல்ல;

அடியேன் இப்பணியை
ஆற்றினேன் - என்

342

அகத்துள் இருந்து
ஆளவந்தார் ஸ்வாமி சொல்ல!'

உணர்வு பொங்க - நம்பி
உரைத்தார் இவ்வாறு;

ஆக - இளைய
ஆழ்வானைத் - தன்
சீடனாக ஏற்று - அவன்
செல்லக் காட்டினார்...

உய்ய -
உதவுகின்ற ஒரு செவ்வாறு!

பெரியவர்
பெரியநம்பி; அவரது -
வாழ்க்கைத் துணைவி
விஜயாம்பாள்;

இவர்களோடு -
இராமானுஜன்...

வந்து சேர்ந்தான்
வரதன் வாழ் காஞ்சீபுரம்;
வந்த நேரம் - நல்ல நேரமாய்
வாய்த்ததனால் - அவன்
வீட்டில் தஞ்சமாம்பாளால்
விளையவில்லை களேபரம்!

இராமானுஜன் - தனது
இல்லத்து மேல்மாடியில்...

குருவையும் -
குருபத்தினியையும் -
குடியிருக்கச் செய்தான்; ஒரு -
குறைவின்றி அன்பைப் பெய்தான்!

பெரியநம்பி - தன்
பிரியமான சீடனுக்கு
பிரபந்தங்களிலிருந்து -
பாடம் எடுத்தார்;

திராவிட வேதத்தின்
தீந்தமிழ் வெள்ளத்தை -
அள்ளி அள்ளி - அவன்
அருந்தக் கொடுத்தார்!

ஆழ்வார்களின்
அருளிச் செயல்களில் -
இழந்தான்
இளையாழ்வான் தன்னை;

'சதுர் மறையின்
சாறு ஈது!' என -
சொல்லிச் சொல்லி -
சொல்லிச் சொல்லி -
புகட்டினான் அவனுக்குப் -
பெரியநம்பி எனும் அன்னை!

இன்னணம்
இராமானுஜன் -

பெரியநம்பியிடம்
பிரபந்த காலட்சேபம்
பண்ணிக் கொண்டிருந்த - ஒரு
பிற்பகல் வேளையில்...

வைணவர் ஒருவர் - ராமானுஜன்
வீட்டிற்கு வந்து -
'வயிறு பசிக்கிறது!' என
உணவு வேண்டி நின்றார்;

அவருக்கு - சிறிது
அன்னம் இடுமாறு -
இராமானுஜன் தன்
இல்லாளிடம் சொல்ல...

'தீர்ந்துவிட்டது அன்னம்!' எனத்
தஞ்சமாம்பாள் சொல்ல...

வந்த வைணவர்
வந்த வழியே சென்றார்!

அய்யம் வந்து - ராமானுஜன்
அடுப்பங்கரையில் பார்க்க...

அடுக்கு நிறைய -
அன்னம் இருக்கக் கண்டான்;

வந்த -
வைணவரின் -
சாதி கருதி - தஞ்சமாம்பாள்
சோறில்லை எனச் சொன்னதறிந்து...

மனைவிபால் -

மாளா வெறுப்புக் கொண்டான்!

இத்தகு நிகழ்வுகள் -
இராமானுஜனை...

மெல்ல -
மெல்ல -

துறவறத்தை நோக்கித்
துரத்தத் தொடங்கின;

வெகுளியும் -
விரக்தியும் - அந்த
உத்தமன் உள்ளத்தில்
உண்டாகி உண்டாகி அடங்கின!

மாடியில் குடியிருந்த -
மகான் நம்பியும் மனைவியும்...

'இராமானுஜருக்கு -
இப்படியொரு தாரமா?'
என
எண்ணிப் புழுங்கினர்;

குடும்பம் ஒன்று - தம்மால்
குலையக் கூடாது என்று...

எண்ணியதை - வெளியே
எடுத்துரைக்காமல் -
வாய்வரை கொண்டுவந்த
வார்த்தைகளை விழுங்கினர்!

ஒரு
காலைப் பொழுதில் -
கொல்லைப்புறக் கேணியில்...

பெரிய நம்பியின்
பெண்டாட்டி விஜயாம்பாள் -
தண்ணீர் இறைத்துத்
தன் குடத்தை இடுப்பில் வைக்க...

அதிலிருந்து சிறிது நீர் -
அருகிலிருந்த -

தஞ்சமாம்பாள் குடத்தில்
தெறித்து விழ -
விஜயாம்பாளை
வைது தீர்த்துவிட்டாள் -

தஞ்சமாம்பாள்
தன் விழியில் தழல் எழ!

'அடியே! நீ
அந்தணச்சியா யிருந்தாலும்...

உன்குலமும் என்குலமும்
ஒன்றோ? நீ சற்று -
மாற்றுக்குறைந்த குலம்; இதை -
மறப்பது நன்றோ?

தெறித்தது - உன் குடத்துத்
தண்ணீர்; அதனால் -
தீட்டானது - என் குடத்துத்
தண்ணீர்!

ஆசாரிய பத்தினி - எனும்
அகந்தையோ உனக்கு?
உன்னிலும்
உயர்வானது - எங்கள்
அகத்து
ஆசார அனுஷ்டானம் எனக்கு!'

உமிழ்ந்தாள் நஞ்சம்; பிறகு -
உள்ளே போய்விட்டாள் தஞ்சம்!

வெளியே போய்
வீடு திரும்பிய - தன்
புருஷன்
பெரிய நம்பியிடம்...

விஜயாம்பாள்
விவரம் சொல்ல -
வாடிப் போனது - அவரது
வதனமும் மெல்ல!

இராமானுஜன் - வீட்டில்
இல்லாத சமயத்தில்...

பெரிய நம்பி - தன்
பாரியையுடன் -
புறப்பட்டு விட்டார்
பூலோக வைகுண்டத்திற்கு;

இல்லம் திரும்பிய
இராமானுஜன்...

நம்பி மனைவிக்கு
நேர்ந்ததை அறிந்து -
கத்தினான்; அது
கேட்டது ஏழு அண்டத்திற்கு!

'அடியார்களிடம்
அபசாரப் படவே - என் வீட்டுப்
படியேறி வந்த - மா
பாவியே!

ஆயிரம் பாடுபட்டு
அழைத்து வந்த ஆசாரியனை - நீ
வாய்க் கொழுப்பால்
விரட்டி விட்ட பின்...

எங்ஙனம் - பரமபதம்
எய்தும் என் ஆவியே?

நீ என் மனையா? இல்லை
நான் முன் செய்த வினையா?
வாழ்க்கைத் துணை - என்று நான்
வரித்தது ஒரு பேய் தனையா?'

சாதி சாதி சாதி என்று -
சாதிச் செருக்கால்...

திருக்கச்சி நம்பியைத்
திண்ணையில் வைத்தாய்;

சோறிருந்தும் -
சோறு இல்லையென்று -
பசியோடு வந்த
பாகவதனிடம் பொய்த்தாய்;

கொடுமையிலும்
கொடுமை; எனது
குருபத்தினியை - வார்த்தைக்
குத்தூசியால் தைத்தாய்;

என்ன சொல்லி -
என்ன?
கரும்பென்று கடித்தேன்;
காஞ்சிரங்காயாய்க் கைத்தாய்!'

மனைவியைத் - தன்
மனத்திலிருந்து -
இராமானுஜன் - முக்கால்வாசி
இறக்கிவைத்து விட்டான்;
முழுவாசியையும் இறக்கிவைக்க
முளைத்த ஒரு வாய்ப்பைப்
பயன்படுத்தி - துறவறம்
பூண்டிடத் திட்டமிட்டான்!

மாமனாரிடமிருந்து
மாப்பிள்ளை ராமானுஜனுக்கு
மடல் வந்தது - அவனது
மைத்துனன் திருமணம் என்று;

'இது நல்ல வாய்ப்பு!' என -
இளையாழ்வான் நினைத்து...

தான் பிறகு வருவதாக -
தஞ்சமாம்பாளிடம் சொல்லி -
அவளை வில்வண்டியில் ஏற்றி -
அனுப்பினான் வாசலில் நின்று!

அதன்பின் -
அவசர அவசரமாக -
அத்திவரதன் சந்நிதியில் -
அவனாகவே...

துவராடை பூண்டு -
துறவி யானான்;

அர்ச்சகர் மேல் -
ஆவேசமாய் வந்து...

'இன்று முதல் - இவன்
இராமானுச முனி!' எனப் -
பெருமாளே -
பட்டம் அளிக்க;

'எதிகளுக்கு ராஜனே!
எதிராஜனே!' என்று -
திருக்கச்சி நம்பி - தன்
திருவாயால் விளிக்க;

'உடம்பு; உள்ளம்; வாக்கு!' என -
உரைக்கப் பெறும் -
மூன்றையும் கட்டுப்படுத்திய -
முக்கோல் பகவனாகிப் போனான்!

**- வளரும்**

## கவிஞர் வாலி

# ராமானுஜ காவியம்

43

### இரு மாணிக்கங்கள்.

தேவராஜப் பெருமாள்
திருவுள்ளப்படி -
திருக்கச்சி நம்பிகள்
தனியே ஓரிடத்தைத் தேர்ந்து...

அஃதை -
அருள்மிகு -

ஸ்ரீராமானுஜர் எழுந்தருளும்
ஸ்ரீமடமாக ஏற்பாடு செய்தார்;
எதிகளின் ராஜரான -
எதிராஜரின் -
உபதேசங்களை - அங்கு வந்து
ஊரவர் கேட்டு உய்தார்!

அங்கு
அனவரதமும் -
அடியார் கூட்டம்
அலைமோதியது;

அது
அட்டாட்சரத்தை -
அட்டதிக்கும் எட்டும்படி
ஆரவாரத்தோடு ஓதியது!

ஸ்ரீராமானுஜரின் சிந்தையோ -
ஸ்ரீ ஆளவந்தாரைச் சுற்றியே -
சதா
சுழன்றது;

ஆசிரியப் பிரானாகிய
ஆளவந்தார் ஸ்வாமிகளின் -
அனுக்கிரகத்தால்
அல்லவோ...

கழற்ற வொண்ணாத -
குடும்ப விலங்கு கழன்றது!

அத்தகு
ஆசாரியனுக்கு -
அவரது
அந்திமக் கிரியையின் போது...

தான் -
தலையெடுத்து -
முடித்து வைப்பதாய்ச் சொன்ன
மூன்று காரியங்களையும் -

சீக்கிரம் நிறைவேற்ற -
சிரத்தை கொண்ட ஸ்ரீராமானுஜர்...

விசிஷ்டாத்துவைதத்தை
விட்டு விட்டு -
அத்துவைதத்தை
அரவணைத்துக் கொண்ட -

கோவிந்தன் - தன்
கூட இருந்தால் -
தேவலையே - எனத்
திட்ட மிட்டார்;

அவனைத் திருத்தி -
அழைத்து வர...

தாய்மாமன்



திருமலை நம்பியைத் –
திருக்காளத்திக்குத்
தூது விட்டார்!

பழுத்த –
பத்திக்கும்;
சித்த –
சுத்திக்கும்;

சகல
சாத்திரங்களையும் – ஒருமுறை
பயின்றாலே நினைவு கொள்ளும்
புத்திக்கும்;

பிள்ளைப் பிராயத்திலிருந்தே –
பேர் போன...

சித்திமகன் கோவிந்தனின்
சகாயமிருந்தால் – தான்
செய்ய நினைக்கும்
செயல் யாவும் சித்திக்கும்...

என – ஸ்ரீராமானுஜர்
எண்ணினார்;
எனவேதான் –
ஏழு –

மலைமேலிருக்கும் – தனது
மாதுலர் தயவை நண்ணினார்!

சமயம் மாறிவிட்ட – தன்
சகோதரி மகனை அழைத்துவர –
சமயம் பார்த்துக் – கண்கொத்தி
சர்ப்பமாய்...

திருமலையில் காத்திருந்தார்
திருமலை நம்பி; மருகன் –
கோவிந்தன் மனத்தை – மலைவாழ்
கோவிந்தன் மாற்றுவானென நம்பி!

இது – ஒருபுறம்
இருக்க...

ஸ்ரீராமானுஜரின்
சீடர் குழாத்தில் -
இரு மாணிக்கங்கள் - வந்து
இணைந்தன; அவை -

அவரது
அடிக்கமலங்களே -
அடைக்கலம் என்று
அணைந்தன!

ஸ்ரீராமானுஜரின் -
சகோதரிகள் இருவரில்...

பூமி என்பவள் -
புருஷ மங்கலத்தைச் சேர்ந்த -
அனந்த தீட்சிதரை -
அகமுடையானாகப் பெற்றவள்;
உயரிய குணங்களெல்லாம் -
ஒருசேர உற்றவள்!

அவளுக்கு - ஓர்
அன்பு மகன் உண்டு -
'தாசரதி' எனும் -
திருநாமம் கொண்டு!

இந்த தாசரதி - தானே
இஷ்டப்பட்டு - ஸ்ரீ
இராமானுஜரின் மடத்தில்
இணைத்துக் கொண்டார் தன்னை;

இவரது
இதயத்தில் - ஸ்ரீ
இராமானுஜர்
இவருக்கு இன்னோர் அன்னை!

நல்ல -
நாளொன்று பார்த்து...



ஸ்ரீராமானுஜர் - தனது
சகோதரி மகனுக்கு -
பஞ்ச சம்ஸ்காரங்களைப்
புரிந்து...

துவராடை; கமண்டலம்;
திரிதண்டம் தந்து -
தாசரதி என்று - அவரது
தாயிட்ட பெயரைத் தவிர்த்து -

மருமகனுக்கு -
'முதலியாண்டான்' எனும் -
தாஸ்ய நாமத்தை அளித்தார்;
தினம் அங்ஙனமே விளித்தார்!

முதலியாண்டான் -
முதல் சீடர் ஆனார்;

எதிர்காலத்தில்



எதிராஜரின் -
திருவடிப் பாதுகையென்றும்;
திரிதண்டம் என்றும்;

தேசம்
பேசும்படி - இந்த
முதல் சீடர் -
முதல்தர சீடராகிப் போனார்!

இராமானுஜ முனியின்
இரண்டாவது சீடர்...

வரையிலாது
வழங்குவதில் -

வருணனையும் கருணனையும்
விஞ்சிய ஒருவர்;
இருடீகேசனையே - தன்
இதயம் முழுக்கவும் -
இருத்திக் கொண்ட -
இன்னொரு துருவர்!

நீள்விசும்பு நீங்கி -
நிலம் வந்து இமையோர்...

கை தன்னைக்
கூப்பிடும் காஞ்சியிலிருந்து -



கைதட்டிக்
கூப்பிடும் தூரத்தில் இருந்த -

கூரம் - ஒரு
குக்கிராமம்; அந்தக்
கூரத்திற்கு - தன்
கூர்த்த மதியால் - புகழ்
கூட்டியவருக்கு -
'கூரேசன்' என்று திருநாமம்!

வடமொழியில் -
ஸ்ரீவத்சாங்கர் என்றும்;
தென்மொழியில் -
திருமறுமார்பன் என்றும்;

கூரேசரைக்
கூப்பிடுவார் உண்டு;
அவை
அவரது -
குடிப்பெயர் என்பதைத் - தம்
குறிப்பில் கொண்டு!

அவரது
அங்கை பற்றி -
அனல் உமிழும்
அக்கினி சுற்றி -

அம்மி மிதித்து
அருந்ததி பார்த்த
ஆயிழையாள் -



'ஆண்டாள்' என்று
அழைக்கப் பெற்ற
அன்புசால் பெண்டு!

அவ்
ஆண்டாள் - தன்
ஆளன் நலமலாது - வேறு
ஆதொன்றும் வேண்டாள்!

கூரம் வாழ் -
கூரேசருக்கு...

மாடு -
மனை;
நிலம் -
நீச்சு;

தோப்பு -
துரவு;
என - ஐவேஜு
ஏராளம்;

ஆயினும்
அந்த -

தனவானிடமிருந்தது
தமியர்க்கு - அவற்றைத்
தானமாய்த் தந்துதவும்
தாராளம்!

'பொருள் மிகுந்த வாழ்வு
பொருளற்ற வாழ்வு;
அருள் மிகுந்த வாழ்வே
அருத்தமுள்ள வாழ்வு!'

என
ஏந்தல் கூரேசரும் -
அவரது
அருமை மனைவி ஆண்டாளும் -
இருந்த பொருள் அனைத்தையும் -
இரப்பார்க்கு ஈந்துவிட்டு...

ஸ்ரீராமானுஜரின் -
சேவடியை ஆசிரயிக்க -
கூரம் விட்டு -
காஞ்சிக்கு நடந்தனர் -

ஊர்
ஓசை அடங்கிய
ஓர் நள்ளிரவில் -
உடுத்திய
உடுக்கை யோடு;
நடந்த வழியோ -
நெடிய காடு!

'பயமா யிருக்கிறது!' என்றாள் -
பத்தினி;
உலோப முத்திரைக்கு இணையான -
உத்தமி!

'மடியிலே கனமிருப்பின் -
வழியிலே பயமிருக்கும்;
கொணர்ந்திருக்கிறாயா - உன்

கூடவே – ஏதேனும்
விலையுயர்ந்த பொருளை?' என –
வினவினார் கூரேசர்; மகா –
விஷ்ணுவை மனம் முழுக்க –
வைத்துக் கும்பிடும் தாசர்!

'தாங்கள்
தினம் –

பிரியமாக
போஜனம் செய்யப் –
பயன்படுத்தும்
பொன்வட்டிலை மட்டும்...

கொணர்ந்திருக்கிறேன் – என்
கூறையில் மறைத்து!' என்று –

ஆண்டாள் சொல்ல – கூரேசர்
அதைக் கேட்டு வாங்கினார் மெல்ல!

தன்
தலையைச் சுற்றி –
வெகுதொலைவுக்கு
விட்டெறிந்தார் அந்த வட்டிலை;
விட்டெறிந்தபின்
வினவினார் மனைவியை:

'பெண்ணே – இன்னுமா –
பொன்னாசை உன்னை விட்டிலை?'

ஆளனின்
அவ்வுரை கேட்டு –
ஆண்டாள் – நாணம்
பூண்டாள்!

கூரேசர் எனும் –
குணக் குன்றை...

பின்னாளில்
பாகவத உலகம் –

'பொன்வட்டில் பறித்தெறிந்த –
புகழுடையோன் வாழியே!' என்று –
பாடி மகிழ்ந்தது; அவர் –
பேர் சொன்னாலே நெகிழ்ந்தது!

ஆண்டகை கூரேசரும் –
அவர் மனைவி ஆண்டாளும்...

ஸ்ரீராமானுஜரின்
ஸ்ரீமடம் சேர்ந்தனர்;
தொல்வினை –
தீர்ந்தனர்!

ஏற்றதொரு நாள் பார்த்து –
எதிராஜர்...

பரம
பாகவதரான –
பெருமகனார் கூரேசரைப் –
பக்கம் அழைத்து –

கன்றைக் காக்கும்
கறவை போல்; தன் –
பார்ப்பைக் காக்கும்
பறவை போல்;

அளப்பரிய அருளை
அவர்பால் சொரிந்து –
பஞ்ச சம்ஸ்காரங்களைப்
பாங்குடன் புரிந்து –

காவி;
கமண்டலம்;
முக்கோல்; எனும் –
மூன்றும் வழங்கி...

கூரேசரை – தாஸ்ய நாமத்தால்
'கூரத்தாழ்வானே!' எனக் –
கூவினார்; மந்திராட்சதைகள் –
தூவினார்!

ஸ்ரீமடத்தில் – ஒரு நாள்
ஸ்ரீராமானுஜர்...

வழக்கம்போல்
வந்து கூடும் அடியார்க்கு –
உய்யும் வகைக்கான
உபதேசங்களை...

உபமான –
உபமேயங்களோடு –

சாதித்துக் கொண்டிருக்க –
சற்றுத் தள்ளி – ஒரு
சுவற்றில் –

சாய்ந்தபடி...

மூதாட்டி ஒருவர் - எதிராஜரின்
மூதுரைகளைச் செவிமடுத்து -
ஊன் உருக;
உள்ளம் உருக;

கண்கள் வழிக்
கண்ணீர் இழியக்
கேட்டிருந்தார்;
கேட்டு அசை போட்டிருந்தார்!

நிறையக் கற்றிருந்தும்;
நீள்புகழ் பெற்றிருந்தும்;
தன்னுள்
தான் -

மறையக் கற்றிடாத - தன்
மகனை எண்ணி - அந்த
மூதாட்டி வாடினாள்; அவன்
முக்திக்கான வழியை நாடினாள்!

தன்
வீடு சென்றாள்;
தனயனிடம்
வாதாடி நின்றாள்!

'மகனே! நான்
மரணிக்கும் முன்னால்...
உன்னை ராமானுஜரிடம்
ஒப்படைக்க வேண்டும்;

அவரது
அருளிருந்தால்தான் - உன்
ஆன்மா
அவக் கடலைத் தாண்டும்!

கல்விமேல்
கல்வி யென்று - நீ
கற்று - என்ன
கண்டாய்?

அமைதியற்று -
அலைப் புற்று -

வருவாருமின்றி -
வாழ்த்துவாருமின்றி -

விழுந்து கிடக்கிறாய் -
வெட்டுண்ட வாழைத் தண்டாய்!

புறப்படு;
போவோம் எதிராஜ மடம்;

இன்னும் - தனியே
இங்கிருந்து - மனம்
இடிந்து கிடப்பது போல் -
இன்னொன்று இல்லை மடம்!'

முதலில் -
மகன் ஒப்பவில்லை; எனினும் -
மாதா சொல்லுக்கு - எந்த
மறுமொழியும் செப்பவில்லை!

விடவில்லை - அவனை
வயிற்றில் சுமந்த அன்னை;

பிடிவாதம்
பிடித்து -
பெரும்பாடு பட்டு - தன்
பிள்ளையாண்டானை...

கைத்தலம் பற்றிக்
கூட்டிப் போய் -
சாஷ்டாங்கமாக
சேவிக்க வைத்தாள் -

ஸ்ரீமடத்தில் இருந்த -
ஸ்ரீராமானுஜர் தன்னை!

எதிராஜர் - திக்கென
எழுந்து நின்றார்;
புருவங்கள்
பொட்டுக்கு ஏற -
வியப்பின்
உச்சிக்கே சென்றார்!

தன்
தாயோடு வந்து -
'தாசன்' என்று - அவர்
திருவடியில் சேவித்தவர்...

யதி -
யாதவப் பிரகாசர்! அதுதான் -
விதி!

**- வளரும்**

# உயிர் காசு

**தோ**ப்பும் துரவும்
வீடும் கிணறும்
விற்று வாங்கிய
தொகையை
எண்ணிக்கொண்டிருக்கையில்
ஐந்நூறு ரூபாய் நோட்டுகள்
அனைத்திலும்
அப்பாவின் முகம்.

– ந. கண்ணன்




ரூ. 2000

கவிதை 66



## சிம்மாசனாதிபதி

## 44

**யா**தவரை –
யதிராஜர் சீடனாய் ஏற்றார்,

யதிராஜரை –
யாதவர் குருவாய் ஏற்றார்;

வேர் –
விழுதானது;
விழுது –
வேரானது!

கவிஞர் வாலி

356

காலம் – இத்தகு
காரியங்களை ஆற்றும்;
கண்மூடித்தனமாய் – எதையும்
கீழ்மேலாய் மாற்றும்!

காலம் செய்யும்
காரியங்களுக்குக்
காரணங்கள் – நம்மால்
கற்பிக்க ஏலாது; நம்மால் –
கற்பிக்க ஏலாதெனினும்
காரணம் இன்றிக் –

காரியம் எதையும்
காலம் செய்யக் கோலாது!

யாயொத்த கருணையொடு –
யாதவப் பிரகாசருக்கு –
யதிராஜர் –
யக்ஞோபவீதம் அணிவித்து –

பஞ்ச சம்ஸ்காரங்கள்
பண்ணிவைத்து – பின்பு
ஓரெட்டெழுத்தை –



# ராமானுஜ காவியம்



உட்செவியில் அறிவித்து –

'கோவிந்த ஜீயர்!' எனக்
குவலயம் கூப்பிடுமாறு – ஒரு
தாஸ்ய நாமமும்
தந்தார்;

தந்து – அவரது
திருத்தோளில் சாத்தினார் –
துளவுகளால் தொடுத்த –
தண்தார்!

ஆசாரியர் இராமானுஜரின் –
ஆக்ஞைப்படி...

கோவிந்த ஜீயராகி – முக்
கோல் தாங்கி நின்ற யாதவர் –

வைணவக் கொள்கைகளை
விவரித்து – ஒரு நூலை

'யதிதர்ம சமுச்சயம்' என
யாத்தார்;
அகவை எண்பதில் –
அம்புவி வாழ்வை நீத்தார்!

ஸ்ரீரங்கத்தில் இருந்த –
ஸ்ரீவைஷ்ணவர்கள்...

ஆற்றுப்படுத்தி – தம்மை
அழைத்துச் செல்ல – ஓர்
ஆயன் இல்லாத –
ஆநிரை போல் இருக்க –

ஸ்ரீராமானுஜரின் சீர்த்தி –
ஸ்ரீரங்கத்தை எட்டியது;

கிருகஸ்தாஸ்ரமத்தை விட்டு –
காஷாயம் தரித்துக் கொண்டார் –
எனும் சேதியை
ஏந்தி வந்து –
காற்று – எல்லோர்
காதிலும் தேனாய்க் கொட்டியது!

ஊரவர்

உத்தமர் ராமானுஜரின்
திருநாமத்தை – உண்ணா
தித்திக்க உச்சரித்தனர்;

எப்பாடு பட்டாவது –
எதிராஜரை...

அரங்கத்திற்கு
அழைத்து வந்து –
ஆசாரிய பீடத்தில்
அமர்த்த வேண்டி –

நாளும் போதும் – பெரிய
நம்பிகளை நச்சரித்தனர்!

'எதனை –
எவன் முடிப்பானோ –
அதனை –
அவன் கண் விடுக!' எனத் –

தமிழ்மறை –
தெரிவித்தபடி...

ரங்கராஜன் ஊருக்கு – ஸ்ரீ
ராமானுஜரை...

அழைத்துவரும் பொறுப்பை - ஊர்
அரையரிடம் ஒப்படைத்தது;

புகழ்சால் - திருவரங்கப்
பெருமாளரையரும் - 'இஃது -
அரங்கன் ஆணை!' - என
அதனை ஏற்றதும்...

மட்டற்ற -
மகிழ்ச்சியில் -
மகான் பெரிய நம்பியின் - திரு
மார்பு விம்மிப் புடைத்தது!

பெரியவர் - திருவரங்கப்
பெருமாளரையர்...

பாசுரங்களைப் -
பண்ணொடு பாடுவார்;
அவற்றின் பொருளுக்கேற்ப -
அபிநயித்து ஆடுவார்;
உட்கார்ந்து கேட்கும்
ஊரவர் கண்களில் -
உணர்ச்சிப் பிரவாகமாய்
உருமாறி ஓடுவார்!

அரங்கன் ஊரில் -
'அரையர் சேவை'யில்...

சிரசு முதல்
சேவடி வரை - சிலிர்த்து
சொக்காத மக்களில்லை; அதன் -
சுவை சொல்லிடச் சொற்களில்லை!

தெய்வத் தமிழையும்;
தெய்வத் தமிழிசையையும்;
தன்னுடன் எடுத்துக்கொண்டு -
திருவரங்கப் பெருமாளரையர்...

வண்ணநகர் காஞ்சிக்கு
விரைந்து சென்றார்;
அரையர்க்குரிய
அங்கிகளை -
அழகுறப் பாதாதி கேசம்
அணிந்து -

கைத்தாளமும்
கையுமாகக் -
கஞ்சிவரதனின்
கொலுமுன் நின்றார்!

ஸ்ரீராமானுஜர்
சீடர் குழாம் சூழ -
சந்நிதியில் நின்று
சேவித்திருக்கையில்...

அரையர்
அமுதொழுகும் சாரீரத்தில் -

பசுந்தமிழ்ப்
பாசுரங்களைப் -
பல்வகைப் பண்களில்
பாட ஆரம்பித்தார்;

இன்சுவைப் பாடல்களின் -
இறைச்சிப் பொருளை உள்வாங்கி -
அதற்கொப்ப - சதிர்
ஆட ஆரம்பித்தார்!

ஸ்ரீராமானுஜரும்; இதர -
சேவார்த்திகளும்...

விழிகள் செருக;
உள்ளம் உருக;
முற்பகல் வினையெலாம்
முற்றும் கருக...

தமிழ்ப் பாட்டிலும் -
தமிழ்க் கூத்திலும் -
தமையிழந்து போயினர்; தூரிகை -
தீட்டிய படமென்று ஆயினர்!

'அரையரே! யாம் -
ஆனந்தித்தோம்; நும் -
ஆடலையும் பாடலையும் -
அனுபவித்தோம்!' என்று...

அர்ச்சகர்மேல் -
ஆவேசமாய் வந்த -
வரதராஜன் - அரையரிடம்

'வேண்டுவதைக் கோரும்!' என்றான்;

திருவரங்கத் தரையர்
துளியும் தாமதியாது -
தேவராஜப் பெருமாளைத்
தாள்பணிந்து தொழுது...

'இராமானுஜ முனியை -
எமக்குத் தாரும்!' என்றார்!

வழங்கினான்
வரதன்; சொன்ன -
வாக்கைக் காக்கும்
விரதன்!

திருவரங்கத் தரையரோடு -
திருவரங்கம் புறப்பட்டார்...

எதிகளின் ராஜர்
எதிராஜர் - திருக்
கச்சி நம்பி விடைதர; சீடர் -
குழாம் சூழ்ந்து புடைவர!

காஞ்சி -
கண்ணீர் விட்டது;
ஸ்ரீரங்கம் -
சந்தோஷப் பட்டது!

திருவரங்கத்
திருநகரில் -

வடதிருக்காவேரியின்
வளமார்ந்த தென்கரையில் -

ஊரே
ஒட்டுமொத்தமாக நின்று -

எதிராஜரை
எதிர்கொண்டது;
எதிராஜருக்குள்
எட்டெழுத்தானே -

எழுந்தருளியிருப்பதாய்
எல்லோர் கண்ணும் கண்டது!

பெரியவர் - மகாப்
பூரணரான பெரிய நம்பியின்...

அரவிந்த
அடிகளில் முடிபட -
விழுந்து
வணங்கினார் -

இம்பர் போந்த துறவிகளில்
இவர் தனி - என
இவ் வையம் இசைத்து மகிழும்
இராமானுச முனி!

பல்லியமும்
பழமறையும் முழங்க;
சிறௌதிகள்
சுவாகதம் வழங்க;

பூரண கும்பங்களொடு -
புரோகிதர் முகமன் கூற; ஊர் -
பிரஜைகளின் பார்வைகளில்
புது வெளிச்சம் ஏற;

வெகு -
விமரிசையாக நடந்தது...

பெரும்பூதூர் வள்ளலின்
பட்டணப் பிரவேசம்;
பெற்றது திருவரங்கம் - ஒரு
புதிய பிரகாசம்!

ஸ்ரீராமானுஜர் -
ஸ்ரீரங்கமே உடன் வர...

பெரிய வீதிகளைப்
பிரதட்சிணமாக வந்து -
பின் - திருக்கோயில்
புகுந்தார்;

'படிதாண்டாப் பத்தினி!' எனப் -
பிறங்குகின்ற பிராட்டியாம்...

தாயாரை -
தரிசித்ததும் -

கறவையைக் கண்ட கன்றுபோல் -
கண்ணீர் மிகுந்தார்!

அதன்பின் -
அழகிய -
சந்திர புஷ்கரணியின்
சுத்தோதகத்தை சுவீகரித்து...

பிறகு -
பிரதட்சிணமாகப் போய்...

பிரணவாகாரமாய்ப்
பிறங்கும் -
விமானத்தை
வணங்கி...

அதனுள்
அரவணையில் -
அறிதுயிலில் இருக்கும்
அரங்கனை சேவித்து நின்றார்;
ஆன மட்டும் - விழிகளால்
அரங்கத்தமுதைத் தின்றார்!

பெரிய கோவில் -
பட்டர் ஸ்வாமிகளும்...

பரிவட்டம் கட்டி -
பெருமாள் மாலையைச் சாத்தி -

சிரசிலும் - இரு
செய்ய திருத் தோளிலும் -
சடகோபம் -
சாதித்து -

ஸ்ரீபாத தீர்த்தமும் தந்து -
ஸ்ரீரங்கநாதர் சார்பாக -
ஸ்ரீராமானுஜரை -
சிறப்பித்தார்;

ஸ்ரீரங்கநாதரும் -
ஸ்ரீராமானுஜருக்கு -
பட்டர் மூலம் - சில ஆணைகள்
பிறப்பித்தார்!

'இராமானுஜா!
இனி இப் பெரிய கோயிலை...

நீ - ஏற்று
நிர்வகி; இதுகாறும் -
நான் கொண்ட பொறுப்பை -
நீ வகி!

எனக்குடையவை
எல்லாம் - இனி

உனக்குடையவை - என நான்
உவந்து தந்ததால்...

உன்னை -
'உடையவர்' என்று -
ஊர் விளிக்கும்; என்
உள்ளமும் களிக்கும்!'

இன்னணம் - அரங்கன்
இட்ட ஆணையை...

சிரமேற் கொண்டு - வெகு
சிரத்தையாக -
ஸ்ரீராமானுஜர் - கோயிலை
சீர்திருத்தம் செய்தார்;

பழைய
பணியாட்களாயினும் -
புதிய
பணியாட்களாயினும் -

கண்டிப்பும் கனிவும் -
கலந்து பெய்தார்!

பள்ளிகொண்ட -
பெருமாளுக்கு...

நித்யோத்ஸவம்;
பக்ஷத்து உத்ஸவம்;
மாத உத்ஸவம்;
வருஷோத்ஸவம்;

ஆகியவை -

அட்டியின்றி நடக்க
ஆவன புரிந்தார்; உள்ளம் -
ஆகாயமாய் விரிந்தார்!

நிர்வாகங்களை
நன்கு செய்கையில் -
தனது
தமிழ்ப் பற்றையும் காட்டினார்;

பாகவத நம்பிமார்;
கோயில் கணக்கன்;
சடகோபதாசன்;
திருப்பதியார்;
திருப்பணி செய்வார்;
உள்ளூரார்;
விண்ணப்பம் செய்வார்;
திருக்கரகக் கையார்;

என்றெல்லாம்
எம்பெருமான் கைங்கரியத்தில் -
ஈடுபடுவோருக்கு
இன்தமிழ்ப் பேரைச் சூட்டினார்!

திருக்காளத்தி சென்ற
திருமலை நம்பியும்...

படாத பாடுபட்டு
பாசுரங்களைச் சொல்லி -
ஆழ்மனத்தில் இருந்த
அத்வைத உணர்வைக் கெல்லி -

கோவிந்தனைக்
கூட்டிக் கொண்டு -
ஸ்ரீரங்கம் வந்து
ஸ்ரீராமானுஜரிடம் சேர்த்தார்;
மருமகன் மனக்கவலையை -
மாமன் தீர்த்தார்!

ஸ்ரீராமானுஜர்
ஸ்ரீவைஷ்ணவ சாம்ராஜ்யத்தின்
சிம்மாசனாதிபதி ஆனார்; நம்பி -
சிந்தை குளிர்ந்து போனார்!

**– வளரும்**

362

## கவிஞர் வாலி

**உறங்காவில்லி.**

**கோ**ழியூர் என்று
குறிக்கப்படுவது...

உறையூர்! வளமெலாம் -
உறை ஊர்;
திருக் காவிரியின்
தென் கரையில் -
உருக்கொண் டெழுந்ததால்
உலப்பிலாப் புகழ் நிறை ஊர்!

தனது
தலைநகராக -

அவ்வூரை
அமைத்துக் கொண்டு - ஓர்
அரசன்
ஆண்டு வந்தான்;

சோழ
சாம்ராஜ்ஜியத்தின் கீழ் - ஒரு
சிற்றரசு - என
செங்கோல் ஏந்தி நின்றபோதும்...

தனிக் கீர்த்தி - அவன்
தனக்கெனப் பூண்டு வந்தான்!

அவன் பெயர்
அகளங்கன்;

அகளங்கன்
அவ் -
அனங்கன் நிகர்த்த
அழகிய அங்கன்;
ஆய்மையும் வாய்மையும் -
அமையப் பெற்ற ஒரு துங்கன்!

அவனது -
அவையில்...

சொல் யுத்தம் புரிவோர்;
வில்யுத்தம் புரிவோர்;
மல்யுத்தம் புரிவோர்; எனப் -
பல்யுத்தம் புரிவோர்...

பண்டு தொட்டு
உண்டு;
அன்னணம்
அனேகர் -
ஆக்கை வளர்த்தனர்
அரண்மனை உப்பை உண்டு!

ஆர்க்கும்
அவரவர் -
ஆற்றல்
அறிந்து -

கைகொள் ளளவும்; கொண்டுவந்த -
பைகொள் ளளவும்;



பரிசில் கொடுக்கும் -
துரிசில்...

அந்த வேந்து; அவன்
அங்கை சிவந்தவன் ஈந்து!

மன்னனுக்கு - ஒரு
மெய்காப்பாளன்;
மெய்யாகவே - அவன் ஒரு
மெய் காப்பாளன்!

மறந்தும் பொய் பேசான்;
மெய்முலாம் பொய்க்குப் பூசான்;
பட்டவர்த்தனமாகப் -
பேசுவதில் ஒருபோதும் கூசான்!

கொடுத்தால் - அதைக்
காக்கும் சொல்லன்;
குலத்தால் - அவன்
கொலைத்தொழில் வில்லன்;
இருப்பினும் - அத்தொழிலை
இகழ்ந்தொதுக்கிய நல்லன்;
உறையூரே புகழ்ந்து -
உச்சி முகரும் மல்லன்!

'மல்லர்க்கு அரசு!' என்பது -
மன்னன் கொடுத்த விருது;

வையமிசை - மல்லில்
வென்றாரில்லை அவனோடு பொருது;
அவன் -
ஆறறிவு உள்ள எருது;
ஆயினும் - அவனது
அகம் பஞ்சைவிட மிக மிருது!

அந்த
ஆண்டகைக்கு

உற்ற பெயர் - பிள்ளை
உறங்காவில்லி;

உறங்காவில்லி - புகழில்
கிறங்காவில்லி; தனது -
இனிய இயல்புகளை விட்டு
இறங்காவில்லி;

வேழம் நிகர்த்த -
வேங்கை நிகர்த்த -
வலிவும் பொலிவும் -
வாய்த் திருந்தும்...

பிறர் கண்ணுக்கு - முரடனாய்ப்
பிறங்கா வில்லி!

வில்லி மணம் முடித்த
வல்லி - இந்த
நானிலம் கண்டறியாத
நல்லி!

அவள்
அவனது -
ஆசைத் தடாகத்தில்
அன்றலர்ந்த அல்லி;



கண்டும் -
கன்னலும் -
கைக்கும்படி வைக்கும்.
கனிவார்ந்த சொல்லி;

துவர்கொள் திருவாய்முன் -
தோற்கும் தாமரைப் புல்லி;

நிறத்தில் - இளம்
நெல்லி; நேர்வகிடு -
எடுத்த குழலில் குடிகொளும்
எல்லி; அந்த

மைகுழல் மேல் வைத்திருப்பாள்
மல்லி; அதன் மணம் -
காந்தன் மனத்தை - எடுக்கும்
கல்லி;

மொத்தத்தில் - அந்த
மாதரசி -
ஓர் -
உயிர்க் கொல்லி!



அவள்
அவதரித்தது -
கணிகையர் குலம்; ஆயினும் -
கற்புக் கரசி; அவளது
பூவுடல்
பார்த்ததில்லை -
புருஷனல்லால் -
பிறரது விரல் உரசி!

ஆதிமுதல் -
அந்தம் வரை...
பொன்னாட்சி செய்யும் - அவள் பேர்
பொன்னாச்சி; புஜபலம் மிக்க -
மல்லன் உறங்கா வில்லியின் -
மனத்தை ஆண்ட பெரியநாச்சி!

உறங்கா வில்லியின் -
உள்ளத்தை உருக்கியது...

அவனது -
அருமை மனைவியின் கண்ணழகு;
அவன் -
அறிந்த வரையில் -
காசினியில் இல்லை - அப்படியொரு
கண்ணழகு வாய்த்த பெண்ணழகு!

நிலவையும்; நெடுங்கடல் -



**ரா**மானுஜ காவியம் 43-வது அத்தியாயத்தில் (விகடன் 1.9.02 இதழ்) தாசரதியும், கூரேசரும் துறவியானதாக எழுதப்பட்டிருப்பது பெரும்பாலான நூல்களில் குறிப்பிடப்படவில்லை. ஒருசில நூல்களின் அடிப்படையில் எழுதப் பெற்ற அக்கருத்து சரியல்ல என்று நானும் கருதுகிறேன்.

**- கவிஞர் வாலி**

நீலத்தையும்...

தம்முள் வைத்திருக்கும் - அத்
தடங் கண்களில் - சிறு
தூசி படிந்தாலும் - அவன்
துடித்துப் போவான்; அவை -
சற்றே கலங்கினாலும் - அவன்
சாவாமல் சாவான்!

ஸ்ரீரங்கத்தில் -
ஸ்ரீரங்கநாதருக்கு...



வசந்த விழா
வந்தது;
ஊருக்கே - அது ஓர்
உற்சாகத்தைத் தந்தது!

வசந்தோற்சவம் பார்க்க
விரும்பினாள் பொன்னாச்சி;
உத்தம புருஷன்
உறங்கா வில்லியிடம் - தனது
விருப்பத்தை
வெளியிட்டாள்...

இரு விழிகளின்
இமைச் சிறகுகள் -
படபடக்க - அந்தப்
பட்டாம்பூச்சி!

அட்டியின்றி -
அடுத்த நொடியே...

அவன்
அவளை -
அழைத்துப் போனான்
அரங்கன் ஊருக்கு;

புறப்படு முன் -
பூட்டி விட்டான்...

பொலன்கொண்டு - தேர்ந்த
பொற்கொல்லர் செய்த - அணி
கலன்களையும்; சரிகை போட்ட -
ஆறையையும் தன் பொற்றேருக்கு!

'கொளுத்துகிறதே -
கோடை வெயில்!
கத்திரியின்
காங்கை பட்டுக்
கன்றிப் போகுமே - காதலியாள்
கண்ணெனும் அயில்!'

என்று உறங்காவில்லி
எண்ணித் துடித்தான்;

தன்
தாரத்தின் -
தலைக்கு மேல் தாழங்குடையைத்
தாங்கிப் பிடித்தான்!

சிரசைக் காத்தாயிற்று;
சேவடி?

வெயிலை
உள்வாங்கிக்கொண்ட
பூமி -
பாதத்தைச் சுடாதா?



அரவிந்த
அடிமலர்கள்
அனல்வாய்ப் பட்டு -
அவஸ்தைப் படாதா?

உருகினான்
உறங்கா வில்லி -
தனக்குத் தானே - தன்
தாபத்தைச் சொல்லிச் சொல்லி!

வேந்தன்
வெகுமதியாகக் கொடுத்த -

தனது
தடந் தோளில் -
தொத்தித்
தொங்கிக் கொண்டிருந்த -

சித்திரப் பொற்பட்டாலான -
செய்ய உத்தரீயத்தை...

நடை பாவாடையாக
நீள விரித்து - தன்
நெஞ்சுக் கினிய
நங்கை நல்லாளை -

அதன்மீது

அடிமேல் அடிவைக்கச் சொல்லி -
நடத்திக் கொண்டு போனான்;
நாயகன் ஒரு சேவகன் ஆனான்!

'மல்யுத்தத்தில் - பலரை
மல்லாத்த வல்லவன்...

பெண்டாட்டிக்குப்
பிடிக்கிறானே குடை?
வண்ணப் பட்டை - அவள் நடக்க
விரிக்கிறானே நடை?' என்று -

ஊர்
உள்ளுக்குள் நகைத்தது;
பாகவதர் குழு ஒன்று - இதைப்
பார்த்துத் திகைத்தது!

'நடுத் தெருவில் - ஈதென்ன
நாகரீகமற்ற செயல்?'
என்று
எண்ணியது; வில்லியைப் -
பரிகாசம்
பண்ணியது!

பிறகு -
பாகவதர்கள் மூலம் - விஷயம்
ஸ்ரீராமானுஜரின்
செவிக்கு எட்டியது; அவரது
அருள்மிகு விழிகளில் - ஓர்
ஆச்சரியம் தட்டியது!

அவர் - உடனே
ஆள் அனுப்பி...

உறங்காவில்லியையும்; அவன்
உடன்உறை வல்லியையும்; தன் -
மடத்திற்கு வரவழைத்து -
மிகுந்த வாஞ்சையுடன்...

'அப்பா! நீ
ஆர்? - எது
உனது
ஊர்?



பத்தினியின் மேல் - ஒரு
பார்த்தா - அளப்பரிய
பிரியம் வைப்பது
பிழை யன்று;
எனினும் -
இப்படி...



கொண்டவளுக்குக்
குடை பிடிப்பதும்;
நெடிய துண்டால்
நடை விரிப்பதும்;

ஏன் நீ
எண்ணவில்லை - பிறர்
ஏளனத்திற்கு
ஏதுவாகும் என்று?'

எனக் கேட்க -
எடுத்துரைத்தான் பதிலை -
உறங்காவில்லி - எனும்
உண்மை சொல்லி!

'அய்யா!
அடியேன்...
தாரமோடு வசிப்பது -
திருவெள்ளறையில்;
உத்தியோகம் வகிப்பது -
உறையூரில்!

மன்னன் அகளங்கனின் -
மெய்காப்பாளன் நான்; என் -
கைத்தலம் பற்றியது - இந்த
மைத்தடங்கண் மான்!

பெயர் -
பொன்னாச்சி;
வாள் பிலிற்றும் - இவள்
விழிகளின் முன்
வெண்கதிரும் செங்கதிரும்
வெறும் மின்மினிப் பூச்சி!

அழகான -
அற்புதமான -
அருமையான -
அகலமான -

என்னவளின் கண்கள் போல்
எங்கணும் நான் கண்டதில்லை;

368

கடலினும் பெரிய
காரினும் கரிய
கண்களைப் பெற்ற
தந்தைக்கு...

ஏவல் செய்யும் இன்பம் - வேறு
எதுசெய்தும் நான் கொண்டதில்லை!'

எதிராஜர் -
எதுவும் சொல்லாமல்...

அவனை
அழைத்துக் கொண்டு
அரங்கநாதனின்
ஆலயத்திற்குச் சென்றார்;

'கட்செவி மேல்
கிடக்கின்ற -
கரியமாலின்
கண்ணழகைப் பார்!' என்றார்!

உறங்காவில்லி -
உற்று நோக்கினான்...
நீளரவப் பாயலில்
நீளப் படுத்தபடி -
ஈழம் பார்த்திருக்கும்
ஈறிலானின் ஈரக் கண்களை;

ஒருகோடி சூரியன்களின்
ஒளிச் சமுத்திரத்தை -
ஒருசேர வாங்கி நிற்கும்
ஒள்ளியனின் ஓரக்கண்களை;

'அச்சோ!
அச்சச்சோ!' என்றும் -

'அம்மா!
அம்மம்மா!' என்றும் -

பார்த்துப் பார்த்துப்
பிரமித்துப் பிரமித்து -
ஆர்த்து ஆர்த்து
அங்கமெலாம் புளகித்து -

பத்து ஆழ்வார்களும்;
பாவை ஆண்டாளும்; தமது -
முத்தமிழ்ப் புனலில்
முழுக்கவும் -
முழுக்கி எடுக்க முயன்று
முடியாமற் போன...

அழகிய மணவாளனின் -
அரவிந்த நயனங்களை;

கருவறைக்குள் வந்து
கை தொழுவார் தம்மை - மீட்டும்
கருவறைக்குள் புகாவண்ணம்
காக்கும்...

சேஷசாயியின் -
செவ்விய நேத்திரங்களை!

அந்த நிமிடமே
அகம் நெகிழ்ந்து -
அரங்கத்து அரசின்
ஆளாகி...

'ஆஹா! இவையன்றோ -
அழகிய கண்கள்; உய்ய -
உபகரித்து - என்னை
அபகரித்த கண்கள்!' என்று -

ஆர்த்தான்; விழிவழி -
ஆனந்தப் புனல் வார்த்தான்;

உறையூர் மல்லன்
உறங்காவில்லி;
புருஷனைப் போலவே
பாம்பணையான் பக்தையானாள் -
பொன்னாச்சி என்னும்
புனிதவல்லி!

இருவருக்கும் - ஸ்ரீ
இராமானுஜர்...
பஞ்ச சம்ஸ்காரங்கள்
புரிந்து -
பரம
பாகவதர்களாக ஆக்கினார்;

வைணவம்
வையம் தழுவ -
குறுக்கே நிற்கும் - சாதிக்
கோடுகளை நீக்கினார்!

**- வளரும்**

அகளங்க நாட்டாழ்வான்.

ஓடர் குலத்து
ஒருவனை - கோசல
நாடர் குலத்து
நாயகன்...

தன்
தம்பி -
என
ஏற்றது போல்;

ஊன்படைத்த
உயிரெலாம் ஒன்றென்னும் -
நோன்புதனைக் காகுத்தன்
நோற்றது போல்;

வேடர் குலத்து
வில்லியைத் - தன்
சீடர் குலத்துள்
சேர்த்து வைத்தார்...

தரப் பெற்றார்;
வைணவ சித்தாந்தத்தை -
வைகலும் கற்றார்!

விசிட்டாத்துவைதத்தின் -
விசாலமான கண்ணோட்டத்தில்...
மேல் வகுப்பு
கீழ் வகுப்பு - எனும்
நால் வகுப்பும்
நாரணன் நீழலில் - திரு
மால் வகுப்பு - என
மாற்றம் கண்டது; பிரபந்த
நூல் வகுப்பு - என
நூலோர் சொல ஏற்றம் கண்டது!

எதிராஜர் திருமடம் -
'ஏமாம்பாள்' என -
பொன்னாச்சியை விளித்துப்
போற்றியது;

# ராமானுஜ காவியம்

## 46

அன்னையைப் போல்
அன்புக்கு -
உருகும் உள்ளம்
உடையவர் - என
உலகம் சொல்லும்
உடையவர்!

உறங்காவில்லி - 'பிள்ளை
உறங்காவில்லிதாசர்' என்று -
தாஸ்ய நாமம் -

கவிஞர் வாலி

அது -
அவளது...

நிலாக் கொழுந்து
நெற்றியில் -
ஸ்ரீசூரணத்தைக் குழைத்து
சின்ன ஈர்க்கால் தீற்றியது!

அரசன்
அகளங்கனிடம் -
தன்னைப் போலவே
தொண்டு புரிந்து வந்த...
'வண்டவில்லி;
செண்டவில்லி;'

எனும் - தனது
இரு மருமக்களையும் -
உறங்காவில்லிதாசர்
உடையவரின் சீடராக்கினார்;

இருவரையும் -
இளையாழ்வார் ஏற்று...
'வண்டலங்கார தாசர்;

வைதிகக் கூர் ஏற்றுவர்!

எதிராசருக்கு - தம்மை
ஏவிக் கூவிப் பணிகொள்ள
ஏதுவாக எஞ்ஞான்றும்
எதிர் நிற்பது...

'எடுத்த பிறவிக்கு
ஏற்றம் கொடுக்கும்;
அடுத்த பிறப்பும்
அமையாது தடுக்கும்!'

என்று -
எண்ணினர் அம் மூவரும்;

இன்னணம் - ஸ்ரீ
இராமானுஜ தாசராய்...



செண்டலங்கார தாசர்;' என -
தாஸ்ய நாமங்கள்
தந்து -
வைணவ நெறியை
விடாது பற்றிட ஊக்கினார்!

வில்லிதாசரும் - அவரது
வாஞ்சைமிகு மருமக்களும்...

உறையூர் சென்று - தமக்கு
உரிய பணியை ஆற்றுவர்;

மற்றப் போதை
மடத்தில் போக்கி - தம்
லௌகிக மதிக்கு

வேதியரல்லாதார்
விளங்குதல் கண்டு
வெள்கினர் - இதர
வேதிய வைதிகர் யாவரும்!

மூவரும் - தங்கள்
மாதச் சம்பளங்களை...

வாங்கிக் கொண்டு
வந்த கையோடு - உடையவரின்
வண்ணத் திருவடிகளில்
வைப்பர் -
ஸ்ரீமடத்தின்
செலவுகளுக்குப் பயன்பட;

எதிராஜரும் – அதை
ஏற்பார் கண்கள் பனித்திட!

நாளாவட்டத்தில் – ஒருநாள்
நாடாண்ட வேந்தன்...

மல்லன் வில்லியும்; அவனது –
மருமக்களும்; அருளார்ந்த –
வைணவ தாசர்களாய் –
வைதிக நெறியில் தோய்ந்ததை –

அறிய லானான்;
ஆடிப் போனான்!

மூவரையும்
முன்னிறுத்தி –
தண்டனிட்டான்
தார் வேந்தன்;

உறையூர் எனும் – கோழி
ஊர் வேந்தன்!

'பாகவதர்களின் –
பணிகள்...

அரசனுக்கு உரியவை
அல்ல – உங்களை
சேவகம் கொண்டு ஏவல் புரியச்
சொல்ல!

ஆண்டவனுக்கும் –
ஆசாரியனுக்கும் மட்டுமே –
ஆளாகி விட்ட – திருமால்

அடியார்களை...

எனது ஊழியராய் – நான்
ஏற்று ஊதியம் தந்தது –



அறியாமையால் செய்த -
அபசாரம்;
வேலை
வாங்காமலே - இனி
உங்களுக்கு நான்
ஊதியம் தருவதுதான்...
புரிந்த பாவத்திற்குப் -
பரிகாரம்!'
மன்னன் அகளங்கன் - கண்ணீர்
மல்க மல்க ஆற்றினான் உரை;
மாதா மாதம் -
மூவர்க்கும்...
சம்பளத் தொகையை
சன்மானமாகத் தந்து -
போக்கினான் - தனது
பெயருக்கு ஏற்பட்ட புரை!



வழக்கம் போல் - மூவரும்
வந்த பணத்தை -
உடையவர் திருவடிகளில்
ஒப்படைக்க -
எதிராஜர் -
ஏற்க மறுத்தார்;
'ஏன்?' -
எனும் கேள்வியை
அவராகவே எழுப்பி -
அதற்கு விடையிறுத்தார்!
'பரம
பாகவதர்களே!
உங்களிடமிருந்து
ஊழியம் பெறாமலே
உங்களுக்கு - அரசன்
ஊதியம் உதவுகிறான் என்று -
நேற்றுதான் -
நான் கேள்விப்பட்டேன்;
ஆதலால்தான்
அத்தகு தொகையை -
ஏற்பது உசிதமல்ல
என ஒதுக்கி விட்டேன்!
மெய்வருந்த உழைத்து - நம்
கைவரும் பொருளே மெய்த்திரு;
மெய்வருந்த உழைக்காது - நம்
கைவரும் பொருள் பொய்த்திரு!
திருமடத்துத் -
திருப் பணிகள்...
பொழுதும் நடைபெறப் -
பொருள் வேண்டும்; அந்தப்
பொருளைப் பெறுவதிலும் - ஒரு
பொருள் வேண்டும்!
உங்கள் பால் -
உள்ள அளப்பரும் அன்பால்...
மன்னன் தந்ததை

மடம் ஏற்காது;
வியர்வையால் -
வாராத செல்வத்தை -
வைத்துக் கொண்டு - வைணவம் தன்
விரதத்தை நோற்காது!'
இன்னணம் - ஸ்ரீ
இராமானுஜர் சொன்னதும்...
வில்லிகள் மூவரும்
வேந்தன் தந்த பொருளை
வேந்தனிடமே தந்தனர் - அவன்
வெகுண்டாலும் பரவாயிலை என்று;
வேந்தனோ -
வெகுளாது வியப்பெய்தி -
ஆழ்ந்தான் யோசனையில் -
ஆடாது அசையாது நின்று!
'முன்னம் - இந்த
மூவரும்...



என் -
ஆணைக்கு
அஞ்சி நடந்தவர்கள்;
சினக்குறிப்பை - என்முகம்
சிறிது காட்டினாலுமே..
ஓட்டுக்குள் - தன்னை
உள்வாங்கிக் கொள்ளும் -
ஆமைபோல்
அடங்கிக் கிடந்தவர்கள்!
இன்று -
இம்மியளவும் பயமின்றி...
வழங்கிய சன்மானத்தை
வேண்டாமென விடுத்தனர்; நான் -
கொடுத்ததைக்
கொடுத்தபடியே கொடுத்தனர்!
ஆசை இல்லை;
ஆதலால் அச்சமும் இல்லை;
இவர்களுக்கும்
இவர்களது குருவிற்கும் -
வீடுதவிர
வேறெதிலும் இச்சமும் இல்லை!'
எண்ணினான் மன்னன்
இவ்வாறு;
அடுத்த கணம் -
அவன்...
ஸ்ரீரங்கம் சென்று
ஸ்ரீராமானுஜரின் -
திருவடிகளில்
தண்டனிட்டு -
சேர்ந்தான் - வைணவச்
செவ்வாறு!
குடைநிழ லமர்ந்து -
குஞ்சரம் ஊரும்...
அரச போகமும்
அரண்மனை வாழ்வும் -
அகளங்கனுக்கு
அலுத்தது முகந்து; ஓர் -
ஏழை போல்
எதிர் நின்றவனை -
ஏற்றார்
எதிராஜர் உகந்து!
பஞ்ச சம்ஸ்காரங்கள்
புரிந்து...
அரசன் -
அகளங்கனை -
'அகளங்க நாட்டாழ்வான்' என -
ஆக்கி -
திருக்கோயில் சேவகர்க்குத்
தலைமை அதிகாரியாக -
நியமித்தார் உடையவர்;
நெடுங்கருணை மடையவர்!
கிரீடத்தையும்; பட்டுக்
கலிங்கத்தையும்;
கழற்றி எறிந்துவிட்டு - ஒரு
காவலனே...
ஸ்ரீராமானுஜரின்
ஸ்ரீமடத்தில் - ஒரு
சேவகனாய்



சரண் புகுந்த சேதியை...
தேசமெங்கும்
தெரிவித்தது - புஷ்பங்களின்
வாசமெங்கும்

376

வாரி யிறைக்கும் -
பொன்னி நதிக்கரைப்
பூங்காற்று;
வானம் முட்டி
வளர லானது - பூலோக
வைகுந்தத்தில் - எதிராஜர்
வைத்த வைணவ நாற்று!

ஆசாரிய பீடத்தில் -
அமர்ந்து...

ஓய்வு
ஒழிவு இன்றி - நன்னெறியை
ஊரவர்க்கு
உபதேசித்த உடையவர் -
கற்பிப்பதோடு - தானின்னும்
கற்பதுவும் நன்றென எண்ண...

அஃதை
அறிந்த -
பெரியவர்
பெரியநம்பி -

'த்வயம்;
திருமந்திரம்;
இவற்றின்
இரகசிய அர்த்தங்களை -
திருக்கோட்டியூர் சென்று
திருக்கோட்டியூர் நம்பியின் -
திருவடிக்கீ ழமர்ந்து
திருத்தமறத் தெரிந்து வருக!'

என
எதிராஜர்க்கு -
அருள்கூர்ந்து
அனுக்கிரகம் பண்ண...
உடனே புறப்பட்டார்
உடையவர் -
தாங்கொணா - ஆன்ம
தாகத்தை; தவிப்பை; தனது
திருவுளத்தில் தேக்கி -
திருக்கோட்டியூர் நோக்கி!



**- வளரும்**

# ராமானுஜ காவியம்

கவிஞர் வாலி

**திருக்கோட்டியூர் நம்பி.**

மூவுலகு ஆண்ட – கனகனை
முடிக்க – அமரரெல்லாம்
பூவுலகு போந்து...

கோஷ்டி
கோஷ்டியாகக்
கூடி ஆலோசித்த ஊர் – திருக்
கோட்டியூர்; 'உரக –
மெல்லணையான்!' எனும் – பர
மேட்டியூர்!

வைணவத்தின் –
வழி நிற்கும்...

நூலோரும் மேலோரும்
நூறும் எட்டும் என்று – தொழும்
திருப்பதிகள் நூற்றெட்டில்
திருக் கோட்டியூரும் ஒன்று!

பேய்;
பூதம்;
திருமங்கை;
திருமழிசை;

பாண்டியன் சபையில்
பொற்கிழி அறுத்த –
வில்லிபுத்தூர்
விட்டுணு சித்தர்;

மேற்கண்ட ஐவரும்
மங்களாசாஸனம் –
செய்ய தமிழால்
செய்த ஊர்;
பாசுர மழை –





பெய்த ஊர்!

பெருமாள்
பெயர் –
செளமியம் மிக்க
செளமிய நாராயணன்;
தாயார் திருநாமம் –
திருமாமகள் நாச்சியார்!

தீர்த்தம் –
தேவபுஷ்கரணி;
அஷ்டாங்க விமானம் –
ஆலயத்திற்கோர் அணி!

இவை - ஒருபுறம்
இருப்பினும் -
இவற்றையெலாம் விட - ஸ்ரீ
இராமானுஜ முனிகளின்...
திருவுள்ளம் - ஒரு
தாயனையது என்பதை - இந்தத்
திருக்கோட்டியூர்தான்
தெரிய வைத்தது; எதிராஜரை -
'மதப்புரட்சி செய்ய வந்த
மகான்' என்னும் -
மகத்தான உண்மையை - இம்
மண்ணுக்குப் புரிய வைத்தது!

செவ்விய சீயரின் -
திவ்விய சரித்திரத்தில்...

திருக்கோட்டியூர்தான் - புதிய
திருப்பம் தந்தது;
அதன் பிறகே - இவ்
அம்புவி வாழும்...

வருணத்தார் எவர்க்கும்
வருணத்தை ஏற்காத -
வைணவத்தின் பால்
விருப்பம் வந்தது!

இரவு பகலாக -
இடையறாது பயணித்து...

திருக்கோட்டியூர்
திருவீதிக்குள் -
திருவடி பதித்தார்
திரு உடையவர்;
தன்வசம் தாளாண்மை என்னும் -
திரு உடையவர்!

காலை வெயில் - இரு
கால் முளைத்து - முக்
கோலைச் சுமந்து - ஒரு
கோதிலாச் சமயக் குரவராகி...

வீதிவழி
வருகிறதே - என

விழிகளில்
வியப்பை அப்பிக் கொண்டு -

ஊர்ச்சனம்
உற்றுப் பார்க்க;
ஊரவர் சிலரை
உசாவினார் -
உடையவர்
உடல் தெப்பலாய் வேர்க்க!

'திருக்கோட்டி நம்பிகளின்
திருமாளிகை எங்கே?'

உசாவிய
உடையவர்க்கு -

'அதோ!
அந்தக் கூரை!' எனச் -

சுட்டினர்
சிறு கூரை வீட்டை -
சிலர் குரலாலும்;



சிலர் ஆட்காட்டி விரலாலும்!

காய்ந்த தென்னங்
கீற்றுகள் - அழகுற
வேய்ந்த அச்சிறு
வீட்டின் முகப்பில்...

பந்தல் ஒன்று
போட்டிருந்தது;

பலாப் -
பலகை மேல் அமர்ந்தபடி...

கோட்டியூர் நம்பிகள்
காலட்சேபம் சாதிக்க - சீடர்
கூட்டமொன்று - அதைக்
கூர்ந்து கேட்டிருந்தது!

எட்ட நின்று - ஒரு கணம்
எதிராஜர்...

திருக்கோட்டி நம்பியின்
திருமேனியை நோட்டம் விட்டார்;

பட்டுக்கரை போட்ட
பத்தாறு அணிந்து -
பன்னிரு புண்டரங்கள்
பளிச்செனப் புனைந்து -

சதுர்மறையே - ஒரு
சரீரம் தாங்கி -
சிறுகுடில் வாசலில்
சம்மண மிட்டபடி -

வித்தியார்த்திகளுக்கு
வித்தியாதானம்
வழங்குதல் கண்டு...

பெரும்பூதூர்
பிறந்த -
வள்ளல் - தம்மிரண்டு
விழிகளால் தண்டம் இட்டார்!

அழகிய விழிகளில்
ஆர்வு பொங்க;

வெப்பம் துப்பும் மேனியில்
வேர்வு பொங்க;

382

நேராகச் சென்று - கோட்டியூர்
நம்பிகளின்...

செங்கமலச்
சேவடிகளில் - உடையவர்
சாஷ்டாங்கமாக விழுந்தார்;
சேவித்து எழுந்தார்!

விழிகளாலேயே 'யா'ரென்று -
வினவினார் கோட்டியூர் நம்பி;

பவ்வியமும்
பரவசமும் கலந்து -
பதில் சொன்னார்
பண்புகள் கொண்டாடும் நம்பி!

'அடியேன் - தேவரீர்
அடிமலர்க் கீழமர்ந்து...

த்வயம்;
திருமந்திரம்;
இவற்றின் -
இறைச்சிப் பொருள்களை -

உபதேசமாகப் பெற்று
உய்ய வேண்டி...

பெரியவர்
பெரிய நம்பி அனுப்பி - இங்கு
வந்து நிற்கிறேன்; திருவருள் -
வாய்க்குமாயின் கற்கிறேன்!'

உடையவரின்
விண்ணப்பத்தை - ஒரே நொடியில்
திருக்கோட்டியூர் நம்பி
தள்ளுபடி செய்தார்;

வாய்மலர்ந்த
வார்த்தைகளை
உடையவர் மீது - ஒருவகை
உதாசீனத்தோடு பெய்தார்!

'இப்போது சௌகரியப்படாது;
இன்னொரு சமயம் பார்ப்போம்!'

இன்னணம்
இயம்பிவிட்டு -
திருக்கோட்டியூர் நம்பி - தம்
திருமாளிகை புகுந்தார்;
உத்தமர் இராமானுஜர் -
உளவருத்தம் மிகுந்தார்!

இருப்பினும்
இளைக்கவில்லை;
தான் கொண்ட
திட -
சங்கற்பத்தில்
சளைக்கவில்லை!

திரும்பினார்
திருவரங்கம்;

சில நாள்கள்
சென்று -
திருக்கோட்டியூர் நம்பியின்
திருமாளிகை முன் -
வந்து நின்று வேண்டினார்
வைணவச் சிங்கம்!

'இன்னொரு சமயம் பார்ப்போம்;
இன்னொரு சமயம் பார்ப்போம்!'

இப்படியே சொல்லி - ஸ்ரீ
இராமானுஜ முனியை -
திரும்பத்
திரும்பத்
திருவரங்கம்
திரும்பச் செய்தார்...

ஆளவந்தார் எனும்
அரவிந்தம் -
பண்டு
பிலிற்றிய...

அறிவுத்தேனை - முழுதும்
அருந்திய தும்பி - என

தேசம் ஏத்திய
திருக்கோட்டியூர் நம்பி!

ஒருமுறை யல்ல;
இருமுறை யல்ல;
பங்கயப்
பாதம் நோகப் -
பதினெட்டு முறை
போய்ப் போய்த் திரும்பினார்...

உடையவர்! பொறையில் -
உயர்ந்தவர்! உயர் தவர்!
உடையாது - வைணவ வீடு
உறுதியாய் நிற்க உதவு சுவர்!

ஒருநாள்
ஒரு பாகவதர் -
திருக்கோட்டியூரிலிருந்து
திருவரங்கம் வர...

ஏக்கமுற்றிருந்த
எதிராஜர் - ஆழ்வார்
பாசுரம் ஒன்றை - அந்த
பாகவதரிடம் உரைத்தார் -

தன்
தூதாக; திருக்
கோஷ்டி நம்பி -
கேட்கத் தோதாக!

'பொன்னாழிக் கையார்க்கு -
பூந்துழாய் முடியார்க்கு - இங்கு
என்னாவி ஈடழித்தல் -
தகவல என்று இயம்பீரே!'

இராமானுஜ முனி -
இசைத்த பாசுரத்தை -
திருக்கோட்டி நம்பியிடம் -
தொண்டர் போய்த் தெரிவிக்க...

அவரும் -
அதன்பின் அகம் இளகி -

'ஒரு மாதம்

உண்ணா நோன்பிருந்து - பின்
உபதேசம் பெற - எதிராஜரை
வரச்சொல்!' என அறிவிக்க...

திருக்கோட்டியூர்
திருக்கோயிலில் -
உடையவர் - தன்
உண்ணா நோன்பைத் தொடங்கினார்;
நீரின்றி சோறின்றி
நெடிய மேனி -
நாளுக்கு நாள்
நலிந்து மெலிந்து முடங்கினார்!

நகரமே கவலைப்பட்டது;
நம்பி கவலைப்படவில்லை;

'இருந்தால் அடியேனிடம்;
இறந்தால் ஆளவந்தாரிடம்;
இருவரில் ஒருவரிடம்
இராமானுஜர் பாடம் கேட்பார்!'

நிட்டூரமாய் இன்னணம் -
நம்பி உதிர்த்தார் சொல்லை!

உடையவரின்
உண்ணா நோன்பு -
நிறைவுற்றதை
நம்பி அறிந்ததும்...

'உடையவரை -
உபதேசம் பெற வரச்சொல் -
தனியாக -
தண்டு பவித்திரத்தோடு!'

என்று -
எதிர்நின்ற சீடனிடம் -
கோஷ்டி நம்பி
கூறினார்;

கூரேசர்; முதலியாண்டான்;
கூட வர -
உடையவர் - தமக்கு
உபதேசிக்குமாறு...

நம்பியை வணங்கி
நயந்து கோரினார்!

'தண்டு பவித்திரமொடு - உமைத்
தனியாக வரச் சொன்னேனே!'

கொதித்தார் -
கோஷ்டியூர் நம்பி;
கோபத்தைத் தணித்தார் -
கோதண்டன் தம்பி!

'இந்த முதலியாண்டான் -
எனக்குத் தண்டு;
இந்தக் கூரேசன்
எனக்குப் பவித்திரம்!'

இன்னணம் - ஸ்ரீ
இராமனுஜர் விளக்கியதும்...

கோட்டியூர் நம்பி -
குளிர்ந்தார்; அவர்முன் -
உடையவர் பசும்பொன்னாய் -
ஒளிர்ந்தார்!

பிறகு - வலப்
பக்கத்தில் -
உடையவரை
உட்கார்த்தி வைத்துக்கொண்டு...

'உமக்கு நான்
உபதேசிப்பதை - நீர்
பிறர்க்குச் சொன்னால்
பாழ்நரகம் போவீர்!'
என்று -
எச்சரித்து...



செவியில் திருமந்திரத்தைச்
செப்பினார்; குருவாக்கை -
உடையவரும் காக்க -
ஒப்பினார்!

ஆனால் -
அனை அனைய எதிராஜர் -
கொடுத்த வாக்கை மீறினார்;
கோயில் கோபுரம் ஏறினார்!

- வளரும்

# ராமானுஜ காவியம்

**'ஓம் நமோ நாராயணாய'**

உடையவர் -
உபதேசம் பெற்ற கையோடு...

சௌமிய நாராயணனின்
சந்நிதி சென்றார்;
பெறற்கரிய பேற்றைப்
பெற்றுவிட்ட பெருமகிழ்வில் -
நாராயணனுக்கு
நன்றி நவின்று நின்றார்!

ஒரு
திருவிழாவை முன்னிட்டுத்
திரள் திரளாக - மக்கள்
கோயிலில்
குழுமிக் கிடந்தனர்;

உரக மெல்லணையானை
உள்ளத்தில் பதித்து
ஒவ்வொருவராக - சேவிக்க
வரிசையில் நடந்தனர்!

தாயையும் மிஞ்சும்
தண்ணளி மிக்க...

உடையவர்
உள்ளம் -
உய்வழி தேடும்
ஊரவரைக் கண்டு -

வெயிலில் வைத்த
வெண்ணெயாய் உருகியது;
ஏரார்ந்த
எதிராஜரின் -
தடங்கண் வழியே
தண்ணீர் பெருகியது!

"அடடா!
ஆதிப்பிரானை அடையும் வழி...

இவ்வளவு சுலபமாய்
இருக்க; இதனை -
எடுத்தோதுவார்
எவருமின்றி
மன்பதை வாடுகிறதே - வாழ்வை
முன்வினை கருக்க!

ஓதுவாரை நன்னெறிக்குய்க்கும்
ஒரு மந்திரத்தை;
திருவீடு என்னும்
பெருவீடு தன்னைத்
தடையின்றி - பெற்றுத்
தருமந்திரத்தை;

ஊனேறி நின்ற உயிர்

வானேறிச் செல்லுகையில்
வழித் துணையாய்
வரு மந்திரத்தை;

'ஓம் நமோ நாராயணாய' - எனும்
ஓரெட்டெழுத்துள் - பழமறைப்
பிழிவாய்க் கிடந்து - அருள்
பாலிக்கும் திருமந்திரத்தை;

நடந்து
நடந்து -
நீரின்றி
சோறின்றிக் -
கிடந்து
கிடந்து -

அடியேன் பெற்றது போல் -
அனைவரும் பெறல் ஆகுமோ?

சருவ
சாதி
சனங்களும் - ஒரு
சாயுஜ்ஜியம் இன்றிச் சாகுமோ?

இறந்து
இறந்து -
பிறந்து
பிறந்து -



உலகச் சேற்றில்
உழலுமோ? வண்டிச்
சக்கரம் போலவே -
சுழலுமோ?

கரையேற வேண்டாமோ -
கதியற்ற மக்கள்? இவர்கள் -
கீழ்மையை - இன்னதென்று
குறிக்க ஏது சொற்கள்?"

எதிராஜர் இவ்வாறு
எண்ணினார்;
உடனே - கோபுர
உச்சியில் ஏறிநின்று

ஊரவரைக் கூட்டி
உபதேசம் பண்ணினார்!

'பகவான்
பரம காருண்யம் மிக்கவன்;
எளிவந்த தன்மைக்கு
எடுத்துக்காட்டு -
அவன்தான்;
அவனேதான் எனத் தக்கவன்!

சாதி;
சமயம்;
சாத்திரம்;
சடங்கு;

எதையும் அவன்
எதிர்பார்ப்ப தில்லை;
உங்கள் நாவில்
உட்கார்த்துங்கள் –
ஏற்றமிகு அவனது
எட்டெழுத்துச் சொல்லை!

அந்தத் திருமந்திரத்தை
அன்றாடம் சொல்லுங்கள்;
ஓம் நமோ நாராயணாய – எனும்
ஒப்பரிய மந்திரத்தை – தினம்
ஓதி ஓதி ஓதி ஓதி –
ஓயா வினைகளை வெல்லுங்கள்!

சரண் புகுந்தார்க்கு – அவன்
அரண்;
வேறு சடங்குகள்
வேண்டாம்; அவற்றில்
முன்னுக்குப் பின் இருக்கும்
முரண்!

நாராயணா என்னாத
நாவென்ன நாவே?
நாராயணா என்பீரேல்
நமைக் காக்க நேர்வரும் தேவே!

கூவிக்
கூப்பிடுகையில்...

தும்பிக்கு வந்தவன்;
துருவனுக்கு வந்தவன்;
நம்பிக் கூவுங்கள் –
நமக்கும் வருவான்!'

என்று – எதிராஜர்
எல்லா இனத்தார்க்கும் –
பொதுவுடைமை ஆக்கினார்
புண்ணிய நாமத்தை; திருக் –
கோட்டியூர் மாந்தர்க்குக்
கூட்டினார் சேமத்தை!

'வாக்குத் தவறினீர்;
வீழ்வீர் நரகத்தில்!'
என்று –
எரிந்தார் கோட்டியூர் நம்பி;
படபடவெனப் –
பொரிந்தார் கோபத்தில் வெம்பி!

சாந்தமாக – பதில்
சொன்னார் – ஸ்ரீ
ராமானுஜர்; ஸ்ரீ –
ராமனின் அனுஜர்!

'ஆசிரியப் பிரானே!
அடியேன் அறிவேன் –
ஆசாரியரிடம்
அபசாரப் பட்டதால்...

நிச்சயம்
நரகம் புகுவேன் என்று;



'கலியும் கெடும்;
கண்டு கொண்மின்!' என -
நம்மாழ்வார் - முனம்
நவின்றது பலித்தது!

ஸ்ரீராமானுஜருக்கு -
ஸ்ரீரங்கத்தார்...
'திருப்பாவை ஜீயர்' எனும் -
திருநாமத்தையும் தந்தனர்;

மகான் ராமானுஜர் - ஒரு
மடாதிபதியாக இருந்தும்...

பிரதி தினமும்
பிட்சை எடுத்துப்
புசிப்பவ ராதலால் -
திருப்பாவை பாடித்
தெருவழியே வர - அதைச்
செந்தமிழ்த் தேனென ஊரார்
செவிமடுத்து வந்தனர்!

உடையவர் ஒருநாள் -
'உந்து மதகளிற்றன்' எனத் -
தொடங்கும்
திருப்பாவையை ஓதியவாறு -

பிட்சை
பெற - பெரிய
நம்பியின் திருமாளிகைமுன்
நின்றார்;
பாசுரத்தின்
பிற்பகுதியான -



'பந்தார் விரலி! உன் -
மைத்துனன் பேர்பாடச்
செந்தா மரைக் கையால்
சீரார் வளையொலிப்ப -
வந்து திறவாய்!' எனும்...

செந்தமிழ் வரிகளைத்
தன்வச மிழந்து -
பாடிப்பாடி - 'ஆஹா!
பால் சோறு! பால் சோறு!' என்றார்;
கோதைப் பாட்டை - வயிறு
கொள்ளளவும் தின்றார்!

பெரிய நம்பியின்
பெண் -
சின்னஞ்
சிறுமி -
'அத்துழாய்' என்பவள்
அந்நேரம் - தன்
அகத்துள் - பந்து
ஆடிக் கொண்டிருந்தவள்...



பாட்டுச்சத்தம் கேட்டுப்
பந்தும் கையுமாகப்
பரபரப்போடு வந்து - தாள்
போட்டிருந்த கதவைத் -

திறந்து
தெருவை நோக்க - அவளை
உடையவர் கண்டார்
விழிகளில் வியப்பு பூக்க!

பாசுரத்தின்
பயனாய் -
உன்மத்தம்
உச்சிக்கேறிய உடையவர்...

அழகிய பெண் -
அத்துழாய் முன்...

நெடிய திருமேனி
நிலந் தோய -
திடீரென்று
தண்டனிட்டார்;

'இது என்ன கூத்து?' என்று -
இருசாரியிலும் உள்ள -
பெண்டிர்
பெருமூச்சு விட்டார்!

அத்துழாய் -
அலமந்து நின்றாள்;
அடித்தொண்டை கமற -
'அப்பா! அப்பா!' என்றாள்!

**- வளரும்**

# ராமானுஜ காவியம்

**சீதன வெள்ளாட்டி.** **49**

**அ**த்துழாய்
அழைக்க -

வெளியே வந்த நம்பிக்கு -
விவரம் புரிந்து விட்டது;

பந்தும் கையுமாகத் - தன்
பெண்ணைப் பார்த்ததும்...

'பந்தார் விரலி' - எனப்
பாசுரம் சொல்லும் - அந்த
நப்பின்னைப் பிராட்டிதான்
நேர் நிற்கின்றா ளென்று -

எம்பெருமானார்
எண்ணி -
நிலந்தோய சேவித்தது - அவர்
நெஞ்சைத் தொட்டது!

உடையவருக்கு
உணர் வூட்டி...

தேகம்
தொட்டு எழுப்பி - தன்
தோள் துண்டால் - அவரது
திருமேனி தூசிதட்டி...

'வாரும் திருப்பாவை ஜீயரே!
உம்மைப் போல் -

ஆண்டாள் வார்த்தைகளை
அனுபவித்து வசமிழக்க -
ஆராலும்
ஆகாது;
அருந்தமிழ் - அதில்
ஆழ்ந்துபோன உம்மைத் தவிர -
ஆர்நெஞ்சையும் - இப்படி
அள்ளிக்கொண்டு போகாது!'

என்று சொல்லி -
எம்பெருமானாரின்
பாசுர பக்தியைப் -
பெரிதும் போற்றினார்;

அது கண்டு -
அத்துழாய் - ஸ்ரீ
இராமானுஜரின்
இணையடிகளில் விழுந்து...

'அண்ணா! உங்கள்
அன்புத் தங்கையின்
அறியாமையை - மன்னித்து
அருள வேண்டும்!' எனப் -

பிரார்த்திக்க - எம்
பெருமானார் புன்னகைத்து - அவள்
சிரசை மெல்ல நீவி - உடலில்
சிலிர்ப்பை ஏற்றினார்!

இந்த அன்புத்தங்கை
இல்லறம் புகுந்த பின்பு...

புக்ககத்தில் - கேலிப்

394



பேச்சுக்கு ஆளானாள்;
மாமியார் - தன்
மருமகளைக் -
கொடுக்கில்லாமலேயே -
கொட்டும் தேளானாள்!

அத்துழாய் - ஒருநாள்
ஆற்றுக்கு நீராடப் போகையில் -
தன் மாமியாரைத்
துணைக்கு வர வேண்டினாள்;
அதுதான் சாக்கென்று - மாமியார்
அவளைச் சீண்டினாள்!



'நீ -
வாழ்க்கைப்பட்டு - இங்கு
வரும்போது...

ஒரு சீதன வெள்ளாட்டியும்
உடன் வந்திருந்தால் -
துணைக்கு அழைத்துப் போகத்
தோதா யிருந்திருக்குமே!' என்று -

பெரியநம்பியின் ஏழைமையைப்
பரிகசித்துப் பேசினாள் மாமி;
அத்துழாய் குடும்பம்
அரைக்காசு பெறாத குடும்பமென -
அனல் வார்த்தைகளைத் துப்பி
ஆடு ஆடு என்று ஆடினாள் சாமி!

அந்த நாள்களில் -
அநேக தனவந்தர்கள்...

பிறந்தகம் விட்டுப்
புக்ககம் போகும் - தங்கள்
பிரியமான
பெண்களுக்கு -

வீட்டு வேலைகள் செய்ய - ஒரு
வெள்ளாட்டியையும் -
சீதனப் பொருள்களோடு

சேர்த்து அனுப்புவது...
வழக்கம்;
வழி வழி வந்த பழக்கம்!

பெரியவர்
பெரிய நம்பி –
அருட் செல்வரே தவிர –
பொருட் செல்வர் அல்ல; ஒரு –

ஏழை பிராமணரால்
எங்ஙனம் ஆகும் – மகளோடு
வெள்ளாட்டி ஒருத்தியை
உடன்போகச் சொல்ல?

தகப்பனார் மீது
தனிப்பிரியம் வைத்திருந்த –
தனயை அத்துழாய்க்குத்
தாங்கவில்லை;

தந்தையிடம் வந்து
தெரிவித்தாள் –
தன்மாமி தன்மீது
தொடுத்த சுடு சொல்லை!

'அம்மா!
அத்துழாய்!
உனக்கு



ஒரு
சீதன வெள்ளாட்டியை அனுப்ப -
செல்வந்தனா நான்?

உனக்கு - இப்போது
உறவு ஒருவர் உண்டெனில் - அது
உன் தமையனார்
உடையவர்தான்!'



பெரிய நம்பிகள் - தன்
பெண்ணிடம் இப்படிச் சொல்ல..

அடுத்த கணமே
அத்துழாய் அம்மை - மூத்த
சகோதரராகவே - தான்
சுவிகரித்துக் கொண்ட -

எதிராஜரிடம் சென்று - தனக்கு
ஏற்பட்ட அவமானத்தை -
எடுத்துக் கூறினாள்; மழையை -
ஏரார்ந்த கண்ணால் தூறினாள்!

அத்துழாய் -
அழக் கண்டு...

உடையவர் - தன்
உதடுகளுக்கு -
ஒரு புன்னகை ஆடையை
உடுத்தினார்; பிறகு -
அன்புத் தங்கையை
ஆற்றுப் படுத்தினார்!

'அம்மா!
அத்துழாய்!
ஓரளவு நீயுமுன் மாமியாரோடு -
ஒத்துழாய்!

புக்ககத்துப் -
பெரியோர் -
என்ன சொன்னாலும் -
எங்கையே!

நீ
சொல்லுக்குச் சொல்;
சரிக்குச் சரி - என்று
மல்லுக்கு நிற்காமல்
மவுனம் பயில்;
நாளாவட்டத்தில் -
நிலாவாகும் வெயில்!

இதோ!
இந்த முதலியாண்டானை...

உனக்கு வெள்ளாட்டியாக

உடன் அழைத்துச் செல்;
உன் மாமியிடமிருந்து - இனி
வாராது ஒரு வசைச் சொல்!'

எதிராஜர் பேச்சுக்கு
எதிர்ப்பேச்சுப் பேசாத -
மகானும் மருமகனுமான
முதலியாண்டான்...

அத்துழாய் அம்மையோடு
அவளது மாமி வீட்டுக்கு
வெள்ளாட்டியாய்ப் போனார்;
வேண ஊழியம் செய்ய லானார்!

சமைத்தார்;
சேலைகள் துவைத்தார்;
குற்றேவல் புரிவது - தன்
குருவின் குருவின் மகளுக்கென -
எண்ணி - தான்
ஏற்ற பணியைச் சுவைத்தார்!

அவரை அறிந்துகொண்ட -
அத்துழாயின் மாமியார்...

பாவத்தில் பெரும்பாவம்
பாகவத அபசாரம் என்று -
மன்னிப்புக் கோரினாள்
மகான் உடையவரிடம் சென்று!

ஆயினும்
அடிக்கடி -
அத்துழாய் அம்மையை
அவளது பிறந்த வீட்டிலேயே...

இராமானுஜர் பார்த்தார்;
இதோபதேசத்தை வார்த்தார்!

'அம்மா!
அத்துழாய்!

பிறந்த வீட்டில் - ஒரு
பெண் வளர்வது -
புகுந்த வீடு போக; அஃதே போல் -
நாற்றங்காலில் - ஒரு
நாற்று வளர்வது -

சேற்று வயலின் சொந்தம் ஆக!

அப்பன் வீடு - நீ
ஆளன் வீடு சேரும் வரை; பிறகு -
ஆளன் வீடு - நீ -
அந்தகன் வீடு சேரும் வரை!

அழுதாலும் அங்கேயே அழு;
சிரித்தாலும் அங்கேயே சிரி;
விழுந்தாலும் அங்கேயே விழு;
வாராது உனக்கொரு வழு!

எங்கையே!
எந்தப் பெண்ணுக்கும்...

தகப்பன் வீடு
தங்கும் விடுதி;
விடுதியே வீடானால் - அது உனது
வாழ்வுக்குக் கெடுதி!'

இராமானுஜர் -
இவ்வளவு சொல்லியும் கூட...

அத்துழாய் - தன்
அப்பா வீட்டிலேயே -

பெரும்பாலும் இருந்ததாய்ப்
பேசுகிறது குருபரம்பரை;
அத்துழாய் ஒருமுறை -
அரங்கன் தேரை நிறுத்தினாள் -

தன்
தந்தை மேல் -
ஊர் சுமத்திய
ஒவ்வாப் பழியை -

'தவறா? சரியா?' எனப் பெருமாள் -
தீர்ப்புக் கொடுக்கும் வரை!

ஆளவந்தாரின் -
அன்பிற்குரிய -
திருத்தொண்டர் மாறனேர்நம்பி -
திருநாடு அலங்கரித்ததும்...

அவருக்குப் பெரிய நம்பி
அந்திமக்கிரியை செய்தார்;

'பஞ்சமராய்ப் –
பிறந்த மாறனேர் நம்பிக்கு –
பெரிய நம்பி –
பிரேத சம்ஸ்காரம் செய்வதா?'

ஏன – ஊரார்
எல்லோரும் அவரை வைதார்!

வீட்டைவிட்டு – அவர்
வெளிவர முடியாதவாறும்;
வேறு யாரும் – அவர்
வீட்டுள் புக முடியாதவாறும்;

பெரிய நம்பி வீட்டுவாசலில்
போட்டார் முட்களை வெட்டி;
வைதிக ரெல்லாம் – அவரை
விலக்கி வைத்தார் எட்டி!

ஆனால் – தன்
அப்பா செய்தது சரியென்று
அத்துழாய் மகிழ்ந்தாள்; தன்
அப்பாவை எண்ணி நெகிழ்ந்தாள்!

'சாதிகுலம் பார்க்காது
சகல உயிரையும் –
எடுப்பது என்பது
எமதருமம்; அஃதே போல் –
சாதி குலம் பார்க்காது
சகல உயிர்க்கும் – பிரேத
சம்ஸ்காரம் செய்வது
சமதருமம்!'

என்று ஊரறியக் கூவினாள்;
எனினும் உள்ளூரக் கேவினாள்!

ஒருநாள் – அவள்
வீடுவழியே – அரங்கன்
தேர்வர – அதனைத்
தடுத்தாள்; தன் –
தந்தையை – ஊர்
தள்ளி வைத்தது பற்றி –
உற்சவமூர்த்தியிடம் –
வினாக்களைத் தொடுத்தாள்!

"அரங்கா!
அன்று நீ...

கறவை மேய்க்கும் சிறாரோடு
கலந்து சோறு உண்டாய்;
தாழ்ந்த வகுப்பினர் – எனத்
தள்ளி வைக்கப் பெற்ற –
திருப்பாணாழ்வாரைத் –
தன்பக்கம் வைத்துக் கொண்டாய்!

நாதனே! உனைப் பின்பற்றி –
நடந்தார் என் தந்தை;
'இது சரியா? தவறா?'
என்ன உன் சிந்தை?"

அரங்கனை இன்னணம் –
அத்துழாய் கேட்டதும்...

பெருமாள் –
பட்டர்மேல் ஆவேசித்தார்;

'பெரிய நம்பியை – என்
பிரிய நம்பியை –
தோளில் சுமந்து வந்து
தேர்முன் நிறுத்துக!' என்று –

பெரிய நம்பியை விலக்கிய –
பேர்களுக்கு ஆக்ஞாபித்தார்!

இதனை யறிந்த – ஸ்ரீ
இராமானுஜர்...

'அரங்கா! உன் லீலையை –
ஆர் அறிவார்?' என்றார்; திருக் –
கோயிலைச் சீர்திருத்துவதில் –
குறியாக நின்றார்!

எதிராஜர் –
எடுத்த நடவடிக்கைகளால்..

கோயில் சொத்தைத் தின்றோர்க்கு –
கொதித்தது நெஞ்சு; பிட்சைவழி –
உடையவர்க்கு – ஒருநாள்
ஊட்ட நினைத்தனர் நஞ்சு!

– **வளரும்**

## கவிஞர் வாலி

402

50

### உண்ணாநோன்பு

ஸ்ரீமடத்தில் -
ஸ்ரீ இராமானுஜர் முன்னிலையில்...

பெரியவர்
பெரிய நம்பி பேசினார்; தனது -
செயலுக்கு
சான்றுகள் வீசினார்!

'வேலைக்காரி மகன்
விதுரனுக்கு -

தருமபுத்திரன் இயற்றினான் -
தகனக் கிரியை!

விதுரனை விட - மாறனேர்நம்பி
மெலியவரோ? அல்லது -
தருமனைவிட -
தமியேன் பெரியவனோ?

காட்டில் - ஒரு
கழுகுக்கு -

அயோத்திராமன் இயற்றினான்
அந்திமக் கிரியை!

சடாயுவைவிட - மாறனேர் நம்பி
சிறியவரோ? அல்லது -
அயோத்திராமனை விட -
அடியேன் பெரியவனோ?

முன்னேர் போனவழி
பின்னேர் போகும்; அஃதேபோல் -
முன்னோர் போனவழி
பின்னோர் போவர்!

ஆசாரிய பீடத்தில் -
அமர்ந்திருக்கும்...

நமது எம்பெருமானார்
நாராயண மந்திரத்தை -
ஊர் அறிய
ஓதினார்;

வைவார் வையட்டும் -
வாழ்த்துவார் வாழ்த்தட்டும் -
உய்வார் சகலரும் என்று -
வைணவச் சங்கத்தை ஊதினார்!

ஒரு
வானமழை பெய்து
வருணங்களைக் கரைப்பதுபோல் -
இதோ!
இராமானுஜ முனி என்னும்...

ஒரு
ஞானமழை பெய்து
வருணங்களைக் கரைக்கிறது;

வைணவத்தை
வையப் பொதுவாய் வைக்க -

எதிராஜர் வழியே
ஏயது - என
என் உள்மனம்
எனக்கு உரைக்கிறது!'

பெரிய நம்பி -
பேசிய பிறகு...

உடையவர்
உரை ஆற்றினார்;

அரங்கன் கோயில்
அதிகாரிகள் விஷயத்தில் -
நிர்த்தாட்சண்யமாய்
நடப்பேன் எனச் சாற்றினார்!

இராமானுஜர்
இன்னணம் -
உறுதியாக
வற்புறுத்திய ஒழுக்கம் -
பெருமாள் கோயில் -
பெருச்சாளிகளாய்...

ஏற்கெனவே
ஏகப்பட்டதைச் சுருட்டி -
ஏப்பம் விட்ட சிலருக்கு
ஏற்படுத்தியது புழுக்கம்!

பொதுவாகவே மகான்களுக்குப்
பகை முளைக்கும்;
அது
ஆனமட்டும் -
அவர்களுக்கு
ஆபத்தை விளைக்கும்!

நன்னெறி
நடமாடுவதை
புன்னெறி ஏற்காது;
புன்னெறி
பொருதும்; பொருதினாலும்
நன்னெறி தோற்காது!

எவ்வெப்போது தேவையோ -
அவ்வப்போது...

காலம் கொடுத்த
கொடையாக -
உலகு துயரற - சில



404

உத்தமர் தோன்றுவர்; அவர் -

மன்பதையின்
மனத்தை
ஈர நிலமாக்கி - நலம்
ஈயும் அறவிதையை ஊன்றுவர்!

அடுத்தவர்க்காக
அழுவர்; தம்மீது - வசை
தொடுத்தவர்க்காகத்
தொழுவர்;

வேண்டாதவர்க்கும் சேர்த்து
வேண்டிக் கொண்டு -
வல்லான் திருவடிகளில்
விழுவர்;

ஆண்டாண்டு காலம்
அழுந்திக் கிடக்கும் -
எளியோர் - அம்மகான்களால்
எழுவர்!

மகா -
மகான் என்போர்...

வகுப்பு பாராது - ஞான
வகுப்பு நடத்துவர்; அவர் -
காட்சிக்கு எளியராகிக்
கலந்துரையாடி - எஞ்ஞான்றும்
மீட்சிக்கு வழியற்றோரையும்
மோட்சம் கடத்துவர்!

இராமானுஜர் - மண்
இறங்கிவந்த பெருங்கருணை;
பெருங்கருணையின் -
பார்வையில்...

வகுப்பு வாதமும்
வர்க்க பேதமும் -
விதியென்பதாய்
விதிக்கும் நூல் வெறும் சுருணை!

ஆதலால்தான் - அந்த
அருளாளர்...

வேதியரோடும்
வேடுவரோடும்
பேதமின்றி நெஞ்சு கலந்தார்;
பேதங்களைப்
பேணுகின்றோர் - அவரது
பிட்சையில் நஞ்சு கலந்தார்!

எம்பெருமானார்
என்றைக்கும் -
ஏழு வீடுகளில் மட்டுமே
ஏற்பார் பிட்சை;

அந்தளவு
அன்னமே -
அவர் வயிற்றுக்கு
அதிக அளவு ரட்சை!

அம்புவியில் -
அவதரிக்கு முன்...

காற்றை உண்ணும்
கட்செவிக் குலம்; அவர்க்கு -
சோற்றை உண்டா
சேர வேண்டும் பலம்?

ஏழுவீட்டு பிட்சையில் -
ஏதேனும் ஒருவீட்டு பிட்சையில் -

விஷங்கலக்க
வஞ்சகர் எண்ணினர்;
அதற்கு
அனுசரணையாக - ஒரு
துராத்மாவைத்
தேர்வு பண்ணினர்!

அவன் - தன்
அகமுடையாளிடம்...

'நான் தரும்
நஞ்சை -
இன்று பிட்சையாய் - நீ
இடும் அன்னத்தில் கல!' என -

இட்டான் உத்தரவு; அதற்கு
இசையவில்லை அவ் ஒண்ணிலவு;
வற்புறுத்தினான் நச்சரவு;
வளர்ந்தது சச்சரவு!

'ஏ! புருஷனே!
என்னை நீ...

பாவ காரியம்
பண்ணத் தூண்டாதே; பிட்சையில் -
விஷம் கலந்து
வழங்குமாறு வேண்டாதே!

இந்து தருமம் -
இசைப்பது யாதெனில்...

மனைவி செய்யும் பாவம்
மணாளனைச் சேரும்;

நீ சொல்லும்
நீசச் செயலை -
நான் செய்தால்
நீதான் நரகம் புக நேரும்!

ராமானுஜர் - இன்னொரு
ரங்கராஜர்; இராமன் தொழுத -
தீர்த்தர் பரத்துவாஜர் -
தனையொத்த திவ்வியதேஜர்!

அந்த மகானுக்கு -
அன்ன மிட்டால்...
மூப்பெய்தி -
மூச்சடங்கிப் -
போன பின்னும் - நமக்குப்
பிண்டம் கிடைக்கும்;

மாறாக - அந்த
மகான் மரிக்க வேண்டி -
நல்லுணவில்
நஞ்சு பெய்து நாம் இட்டால்...

நாம் இறந்தபின்
நரகம்கூட -
நம்மை ஏற்க
நாணிக் கதவடைக்கும்!'

மனைவி - இவ்வாறு
மன்றாடியும் - அவள்
மணாளன்
மசிய வில்லை;

வேறுவழியின்றி

விஷம் கலந்த உணவை -
எடுத்துக் கொண்டு
எதிராஜருக்கு...

பிட்சை இடப் போனாள் - அந்தப்
பத்தினி முல்லை!

உடையவர் திருமுகத்தை
உற்று ஒருமுறை பார்த்தாள்;

பிட்சையைப் -
பாத்திரத்தில் இட்டுவிட்டு...

திடீரென்று - அவர்
திருவடிகளில் தண்டனிட்டு -
விழிவழி -
வெப்புநீரை வார்த்தாள்!

'இவள் - வழக்கம்போல்
இல்லையே!'
என எண்ணிய -
எதிராஜர்...

இட்ட உணவு - நீலமாய்
இருப்பதைக் கண்டார்;

கொண்ட பிட்சையைக்
கொண்டு போய் -
கொள்ளிடத்து நீரில்
கொட்டிவிட்டு...

உடனே மடம் திரும்பி -
உபவாசம் மேற்கொண்டார்!

பிரதி தினம்
பெறுகின்ற -
பிட்சையை - அறவே
புறக்கணித்து விட்டு...

உடையவர் -
உண்ணாநோன்பை நோற்பது -

ஏன் என
எவருக்கும் புரியவில்லை;

முதலியாண்டான் போன்ற
முக்கிய சீடர்க்கே - எதிராஜ
முனிகளின் இம் முடிவிற்கு -

முகாந்தரம் தெரியவில்லை!

இராமானுஜர்பால் - தமது
இதயத்தையே இழந்து நின்ற...

ஊர்மக்கள் பலர் - தாமும்
உண்பதை ஒழித்தனர்;
அவரவர் அகங்களில்
அமர்ந்த படியே -
நித்ய ஏகாதசியாய்
நாள்களைக் கழித்தனர்!

உடையவர்
உண்ணாவிரதம் பூண்டது -
ஒருநாளல்ல; இருநாளல்ல;
ஒருமாதம் நீண்டது!

தகவல் -
திருக்கோட்டி நம்பியின் -
திருச்செவிகளைத்
தொட...

கோட்டி நம்பி - சீடர்
கோட்டி யோடு -

புறப்பட்டார்
பொன்னரங்கம் -
எனக் கேள்விப்பட்டார்
எதிராஜ சிங்கம்!

ஒருமாத உண்ணா நோன்பில்
ஓரளவு உடல் மெலிவும்;
ஆயாசமும்
அயர்வும் மேவ -

அவற்றால் சற்றே குறைந்த
ஆனனப் பொலிவும்;

துலாம்பரமாகத்
தெரிய...

தன் குருவாகிய -
திருக்கோட்டி நம்பியை -
எதிர்கொள்ள
எதிராஜர் நடந்தார்...

தொண்டர்களோடு
திருக்காவேரி நோக்கி;
பாதக் குறடுகள் அற்ற -
பங்கயப் பாதங்களை -
மேலும் சிவக்க வைத்தது -
மத்தியான வெயில் தாக்கி!

சூரியன் உச்சியில் நின்று -
சுள் ளென்று...

நாலாபுறமும்
நெருப்புக் கங்குகளை
வாரிவிட; காவிரி மணல்
வெந்தணலாய்ச் சுட;

கோட்டி நம்பியை - எதிரில்
கண்டதும்...

'தொப்'பென்று
தணல் மணலில் -
விழுந்து சேவித்தார்
உடையவர்;

விழுந்தவரை எடுத்து
வாரித் தழுவ வில்லை -
கோட்டியூர் நம்பியென்னும்
கல்நெஞ்சம் உடையவர்!

வெய்யிலில் எதிராஜர் - மேனி
வேக வேகக் கிடப்பதை...

கிடாம்பியாச்சான் எனும் சீடர்
கண்டார்;

கோபம்
குடுமிக்கு ஏற...

பாய்ந்து உடையவரைப்
பரிவோடு தூக்கியெடுத்து
உக்கிர விழிகளால் - நம்பியை
உண்டார்!

'ஆசாரியனா நீர்? அல்ல; அல்ல;
அரக்கன்!' என்றார்;
உடனிருந்தோர் - அது கேட்டு
விக்கித்து நின்றார்!

**– வளரும்**

406

# ராமானுஜ காவியம்



கொங்குப் பிராட்டி.

"ஓய்! ஸ்வாமி!
ஒரு மாத இலங்கணத்தால்...

எங்கள்
எம்பெருமானார் திருமேனி -
பாங்கா யில்லை;
பார்த்தால் தெரியவில்லை?

சுடுமணலில்
சரீரம் கிடக்கிறது;
'எழுந்திரும்'
எனச் சொல்லாமல்...

சேவிக்கும்
சிஷ்யனை
சிட்சிக்கும் விதமாகவா - உம்து
சாம்ராஜ்ஜியம் நடக்கிறது?

நல்ல குரு;
நல்ல சீடன்;
உம்மை குருவாக ஏற்பவன் -
வடிகட்டின ஒரு மூடன்!"

உடையவர்பால்
உழுவலன்பு
உடையவர்; உடையவர்க்கு -
உறவினர்; உற்ற சீடர்;

கிடாம்பியாச்சான் - இன்னணம்
கடிந்து - கோட்டி நம்பிகளைக்
கண்களால் எரித்தார்; நம்பி
கலகலவெனச் சிரித்தார்!

'தொண்டரே! நான் -

கவிஞர் வாலி



திருக்கோட்டியூரிலிருந்து...

உம்மைப்போல்
ஒருவரைத் -
தேடிக் கொண்டுதான்
திருவரங்கம் வந்தேன்;

எதிராஜர் மேல் - சிறு
எறும்பு ஊர்ந்தாலும்...

உமது
உத்தம நெஞ்சம் -
உதிரம் வடிக்கும் என்று
உணர்ந்து உளம் உவந்தேன்!

எதிராஜர் -
ஏன் உபவாசம் நோற்றார் -
என்பது எனக்குத் தெரியும்;
ஏது நடந்ததெனப் புரியும்!



இனி - நீரே
இவருக்கு...

திருவமுது சமைத்து
தினம் பரிமாறும்;
ஏழு வீட்டுப் பிட்சை
எதற்கு? உமது
ஏக பிட்சையிலேயே
எம்பெருமானார் பசியாறும்!'

கோட்டியூர் நம்பி -
கிடாம்பியாச்சானுக்கு...

அருளொழுக - இப்படி
ஆணை யிட்டார்;
கிடாம்பி - பொலபொலெனக்
கண்ணீர் விட்டார்!

'பெருமானார்க்கு -
பரிசாரகம் புரிய...

எளியேன்
என்ன பேறு பெற்றேன்!
தேவரீர்
திருவுள்ளத்தைத்
தெரிந்துகொள்ளும்
திறனற்று...

ஆத்திரத்திற்கு - என்
அறிவை விற்றேன்!'

கைகளைக்
கூப்பியவாறு -
கிடாம்பியாச்சான்

கேவினார்; காதலொடு
திருக்கோட்டியூர் நம்பி - அவர்
தலையை மெல்ல நீவினார்!

ஒருமாத கால உபவாசத்தை -
ஒருவழியாக முடித்து வைத்து...

ரங்கநாதரையும்
ரங்கநாச்சியாரையும் -
சில நாள்கள் தங்கி
சேவித்து விட்டு -

கோட்டியூர் நம்பி
கோட்டியூர் திரும்ப...

நகரம் - பழைய
நிலைக்கு வந்தது -

நெஞ்சில் -
நிம்மதி அரும்ப!

எதிராஜர் - பிட்சை
ஏற்றுவந்த காலத்தில்...



'இவர் ஏன் இப்படி -
இரந்துண்டு வாழ்கிறார்?' என
அம்மையார் ஒருவர் -
அதிசயப் பட்டார்;

அதை - ஒருநாள்
அவரிடம் கேட்டும் விட்டார்!

"எம்பெருமானே!
எங்கள் ஊர்...

கொங்குநாட்டில் உள்ள -
'கொள்ளைக்களம்'; நாங்கள் -
கவுண்டர் எனப்படும் -
கொங்குவேளாளர் குலம்!

பலகாலம் - அங்கு
பருவமழை பொய்த்து -
பஞ்சம் வந்து -
பயிர்பச்சை பாழ்பட்டதால்...

நானும் - என்
நாயகரும் -



இவ்வூருக்கு -
இடம்பெயர்ந்து வந்தோம்;
எங்கள்
எதிர்காலத்தை -
அரவணையில் துயிலும்
அரங்கன் கையில் தந்தோம்!

திருவீதி வழியே - தாங்கள்
தினமும்...

பிட்சை ஏற்கப் போவதைப்
பார்க்கிறேன்;

எனக்கு நானே -
'ஏனிப்படி?' எனக் கேட்கிறேன்!

எனக்கு இதுபற்றி -
எழுந்த சந்தேகத்தை...

தாங்கள்
தீர்க்க வேண்டும்;
தக்க பதிலை -
தயைசெய்து வார்க்க வேண்டும்!"

அந்த

அம்மையார் -
இராமானுஜரை இன்னணம்
இடைமறித்து வினவ...

'அம்மணீ!
அடியேனை -

வீதியில் வழிமறித்து
வினவினால் எப்படி?
என் மடத்திற்கு வாரும்; அது -
இங்கிருந்து ஒரு நூறு தப்படி!'

என்றார் ஜீயர்;
எல்லோர்க்கும் நேயர்!

'பிரபோ! அங்கு -
பெரிய பெரிய மனிதரெல்லாம்...

தங்கள்
தரிசனத்திற்குத்
தவமான
தவமிருக்க...

அடியவளோடு பேச - சீயர்க்கு
அவகாசம் ஏது?' எனத் -
தன் பேச்சைத் -
தொடர்ந்தாள் அம் மாது!

'அய்யனே!
அகளங்க சோழன் அனைய -

மன்னரும்; சம் பன்னரும்;
மகா வேதவிற் பன்னரும்;
சகல -
சாதியினமும்;
அம்பு வில் ஏந்தும் -
ஆதியினமும்;

பிரதி தினமும் - தெருவில்
பிட்சை ஏற்று வாழும்...

ஒரு
துறவியின்
தரிசனத்திற்காக -
சமரச உணர்வோடு - ஒரு
சபையில் உட்கார்ந்திருப்பது...

எனக்கு அதிசயமாக

412

இருக்கிறது! அவர்களை -

எது அங்ஙனம்
இழுக்கிறது?'

அம்மையார் இப்படிக் கேட்க -
அதற்கு -

ஒரே வார்த்தையில்
'ஒழுக்கம்!' என்று -

உடையவர்
உரைத்தார் பதில்; விளக்கம்
அனைத்தும்
அடங்கிவிட்டது அதில்!

ஆயினும் - அவ்
அம்மையார் அறியவேண்டி -
அவர் விரிவாய்ப் பேசினார்;
அறிவு வெளிச்சம் வீசினார்!

'ஒழுக்கம் என்னும் -
ஒரு தாயிடத்திலிருந்துதான்...

அறிவு;
அன்பு;
அறம்;
அருள்;

ஆகிய நான்கு சேய்கள்
அவதரிக்கின்றன;

அடக்கம்;
அமைதி;
ஆன்மிகம்;
ஆனந்தம்;

ஆகிய நான்கு அணிகளை
அவை தரிக்கின்றன;

அவா;
அழுக்காறு;
அச்சம்;
ஆத்திரம்;

ஆகிய நான்கு அழுக்குகளை
அவை எரிக்கின்றன;

அவன்;
அது;
இவன்;
இது;

ஆகிய நான்கு பேதங்களை
அவை கரிக்கின்றன!

எனவே
எங்கு
ஒழுக்கம் - கோல்
ஓச்சுகிறதோ...

அங்கு - ஓர்
ஆன்மானுபூதி
உண்டாகி - பேரொளியை
உமிழ்கிறது; அந்தப்
பேரொளி பிலிற்றும் - சத்தியப்
பெரு வெள்ளத்தில்
அனைத்து உயிரும் - ஒன்றாய்
அமிழ்கிறது!

மடமா யிருந்தாலென்ன? மனித -
மனமா யிருந்தாலென்ன?
ஒழுக்கம் -
ஒளிர்விடு மாயின்...

வையமே -
வணங்க வரும்;
நால்வகை பேதமும் - அங்கு
நுணங்கி விடும்!'

இவ்வாறு
இராமானுஜர் சொன்னதும் -
அவரது
அடிமலர் தொழுது...

'சுவாமி! தாங்கள்
சுட்டிய -

சத்தியப் பெரு வெள்ளத்தில்
சிறியவள் நீராட வரலாமா?'

என -
ஏக்கமொடு கேட்டாள் பெண்மணி;

'வாரும் மடத்திற்கு!' என்றார் -
வைணவத்தின் கண்மணி!

அவ் -
அம்மையார் -
மறுநாள் - ஸ்ரீ
மடம் சென்று...



உடையவரிடம்
விண்ணப்பித்து நிற்க - அப்
பெண்மணிக்கு - அவர்
பஞ்ச சம்ஸ்காரம் செய்து -

ஸ்ரீ வைஷ்ணவியாக்கி -
'ஸ்ரீமதி கொங்குப்பிராட்டி' எனும் -
தாஸ்ய நாமமும் -
தந்தார்;

பிறகு - அம்மாது
பஞ்சகாலம் தீர்ந்து -
ஊர்செல்ல வேண்டி - விடைபெற
உடையவரிடம் வந்தார்!

அப்போது - அவ்
அம்மையார்...

'தினம் சேவிக்க
தேவரீரின்
திவ்விய பாதுகைகளைத்
தந்தருள வேண்டும்!' எனக் -
கேட்டுப் பெற்று - தன் ஊரான
கொள்ளைக்களம் சென்றார்;

இன்று -
இருக்கும் -
'கொள்ளேகால'த்தைத்தான் - அன்று
கொள்ளைக்களம் என்றார்!

எதிராஜரின் புகழ் - இப்படி
எட்டுத் திசைகளிலும்...
பாய்ந்து
பரவத்தொடங்கிய -
பொன்னனைய - இத்தகு
பொழுதுகளில்தான்...

'சரணாகதி கத்யம்';
'ஸ்ரீரங்க கத்யம்';
'வைகுண்ட கத்யம்';



என
ஏற்றமிகு -
மூன்று
முக்கிய கிரந்தங்களை -

யதிராஜர் யாத்தார்;
யாண்டும் புகழ் பூத்தார்!

உடையவர் -
ஒருநாள்...
தன் சீடர்களுக்குத்
திருவாய் மொழி சாதிக்கையில் -

'சிந்து பூமகிழும்
திருவேங்கடம்'
என்ற வரியை
எடுத்தோதி விட்டு -



'திருமலையில்
திருவேங்கடமுடையானுக்கு -
நந்தவனம் அமைக்க
நம்முள் யாரேனும் உளரோ?' என -
அடியாரைக் கேட்க -
'அடியேன் அதைச் செய்ய
அருள வேணும்!' என
அனந்தாழ்வான் யாசித்தார்;

உடையவர் - அதற்கு
ஒப்புதல் தெரிவிக்க...

அனந்தாழ்வான்
அடுத்த நாளே
திருமலை சென்று - பின்
திருநந்தவனம் அமைத்து -

வண்ண மலர்களால்
வேங்கடவனைப் பூசித்தார்!

தகவல்
தெரிந்ததும்..
உடையவர் புறப்பட்டார்
உற்ற சீடர்களோடு
ஏழுமலை நோக்கி; வேங்கடவன் -
வாழுமலை நோக்கி!

- வளரும்

# ராமானுஜ

## அனந்தாழ்வானும் வரதாழ்வானும்

52

உடையவரின் -
உள்ளக் கிடக்கைக்கு ஏற்ப...

அனந்தாழ்வான் - தனது
அகமுடையாளுடன் -
அல்லும் பகலும் -
அனவரதமும் பாடுபட்டு...

ஏழுமலையில்
எழுப்பிய -

நறவமும்;
நறுமணமும்;
நாளும் நல்கிய -
நந்தவனத்திற்கு...

'இராமானுஜன்'
என்று பெயரிட்டார்;

அடுத்தபடியாக -
ஆம்பல்; அரவிந்தம்;
ஆகிய நீர்ப்பூக்கள்
அரும்ப...

அழகிய தடாகம் ஒன்று -
அமைக்கப் பிரியப்பட்டார்!

அனந்தாழ்வான்
அன்றாடம் அதிகாலையில்...

முதல் வேலையாக -
மண்வெட்டியைப் பிடிப்பார்;
அந்திவரை -
அகழ்ந்து முடிப்பார்!

கரம் வலிக்கக்
கல்லுவார் நிலத்தை;
கல்லியும்
கண்டாரில்லை சலத்தை!

தடாகப் பணி
தாமதமாவதை ஓர்ந்து...

வெட்டிய மண்ணை
வெளியே கொண்டு போய்க் -
கொட்டும் வேலையைக்
கொடுத்தார் -

தன்னுடைய
தாரத்திற்கு;

அவளால் - கூடையில்
அள்ளிய மண்ணைக் -
கொண்டுபோய்க்
கொட்டிவிட்டு...
வரமுடியவில்லை -
உரிய நேரத்திற்கு!

'பெருமாள் காரியம்;
பேந்தப் பேந்த நிற்காமல்...

வேக வேகமாக
வேலை நடக்க வேண்டி -
வேங்கடவனுக்கு - நெற்றி
வேர்வையை அர்ப்பணி!'

என்று அனந்தாழ்வான் -
எடுத்துச் சொல்லியும்..

அவளால்
அங்ஙனம் - பணி

■ கவிஞர் வாலி

416

# காவியம்

ஆற்ற ஒல்லுமோ?
அவளோ பூரண கர்ப்பிணி!

பிள்ளைத்தாய்ச்சி
படாதபாடு படுவதைப் -
பார்த்தான் ஒருவன்;
பன்னிரு வயதுச் சிறுவன்!

'அம்மா!
அந்தக் கூடையைக் கொடு;
உனக்கு நான்
உதவுகிறேன்;
நீ சற்று
நிழலில் ஓய்வு எடு!' என்று -

அச்சிறுவன் -
அவள் பதிலை எதிர்பாராது...

ஒவ்வொரு முறையும்
உடனுக்குடன் -

கூடை மண்ணைத் தான் வாங்கிக்
கொண்டு போய் கொட்டினான்;
மறுத்துப் பேசிய
மாதரசியை - வெண்
முல்லையனைய - சிறு
முறுவலால் கட்டினான்!

மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க -
மெல்லப் பணியாற்றிய மனைவி...

விரைவாக - எப்படி
வேலையை முடிக்கிறாள் - என
அதிசயித்த
அனந்தாழ்வான் -

ஒரு சிறுவன் -
உதவுவதை அறிந்ததும் -



'ஆசாரிய கைங்கரியத்தை
அடுத்தவரிடம் கொடுக்கலாமா?'
என்று - தன்
இல்லாளைக் கடிந்துவிட்டு...

அச்சிறுவனைத் தேட -
அவன் ஓட -

கோபத்தில் - தன்
கையிலிருந்த மண்வெட்டியை -
வேகமாக -
வீச...

அது
அவன்
மோவாயைப் பேர்க்க; பேர்ந்த -
மோவாய் குருதி வார்க்க;

ஓடி ஒளிந்தான் பையன்;
ஒரு தாய்க்கு உதவிய கையன்!

அடுத்த நாள் -
அர்ச்சகர் அலறி -
கூட்டினார் ஊரை;
காட்டினார்...

கோவிந்தன் மோவாயில்
குருதி கசிவதை;
அனந்தாழ்வான் - சட்டென
அறிந்துகொண்டார்...

சூல்கொண்ட - தன்
சம்சாரத்துக்கு - ஒரு
சிறுவனாய் வந்து உதவிய
செங்கண் மாலின் கனிவதை!

ஒப்பினார் தப்பை;
உகுத்தார் கண்ணீர்;
பச்சைக் கற்பூரத்தைப்
பொடிசெய்து -
அப்பினார் மோவாயில்;
அடங்கியது புண்ணீர்!

பொற்பூறும் திருமுகத்துப்
பெருமாளின் மோவாயில் - பச்சைக்
கற்பூரம் அப்புவதைக்
காணலாம் இன்றும்; கடவுளின் -
சௌலப்பியத்தை - அது
சாற்றும் என்றும்!

தனது
தொண்டர் குழாத்தோடு -
திருவரங்கம் விட்டுத்
திருவேங்கடம் புறப்பட்ட -

எதிகளின் வேந்தாம்
எம்பெருமானார்...

திருவெள்ளறைப் பெருமாளையும்;
திருக்கோவலூர்ப் பெருமாளையும்;
தரிசனம் செய்துவிட்டு -
திருக்காஞ்சி போகையில் -

வழியில்
'வரதாழ்வான்' எனும் -
சீடர் வாழும்
சிற்றூருக்குச் சென்றார்;

சீடர் வீட்டுச்
சாத்திய கதவைத் -



தானே
தட்டி நின்றார்!

வரதாழ்வான்
உஞ்சவிருத்திக்குச் -
சென்றிருந்த
சமய மாதலால்..

அகத்தில் இருந்த
அவரது மனைவி -

தாளிட்ட கதவைச் - சற்றே
திறந்து பார்த்து -
உடையவரைக் கண்டதும்
உடல் வியர்த்து -

கதவுக்குப் பின்
கூச்சமொடு மறைந்தாள்;
ஒன்றும் பேச
வாய்வராமல் உறைந்தாள்!

சரியான ஆடையின்றி - அவள்
சங்கடப்படுகிறாள் என்பதை -
உடையவர்
ஊகித்து அறிந்தார்; உடனே -

தனது
தலைப் பரிவட்டத்தை -
உருவி - அதை
உள்ளே எறிந்தார்!

கிழிந்த ஆடையின்
காரணமாக -
வெளியே வர
வெட்கிக் கிடந்தவள்...
எதிராஜர்
எறிந்த பரிவட்டத்தைக் -
கட்டிக் கொண்டு வந்து
கதவைத் திறந்தாள்;
வாராமல்
வந்த தெய்வமென -
உடையவருக்கு தண்டனிட்டு -
ஒரு விநாடி தன்னை மறந்தாள்!

சில நொடியில் -
சுய நினைவு வரப்பெற்று...
உடையவரை

ஊன் உருக
உயிர் உருக
உள்ளே அழைத்து -

பிய்ந்த
பாக்குப் பாயை விரித்து -
அமரச் சொன்னாள்;
அருந்ததி அன்னாள்!

இராமானுஜர் - அந்த
இல்லத்தை நோட்டம் விட்டார்;
வரதாழ்வான் போன்ற
வைணவப் பெருமகனை -
வறுமை வாட்டுதல் கண்டு
வெகுவாக வருத்தப் பட்டார்!

சுண்ணம் போய் -
சுவர்களில் விரிசல்; வைக்கப் -
போதிய இடமின்றி - பண்டம்
பாத்திரங்களின் நெரிசல்;

ஓடுகளின் ஓட்டைகள் வழியே -
ஒழுகியது சூரியவெளிச்சம்;

வெய்யிலில்
வாடிக் கிடந்தது -
வரதாழ்வானுக்கு
வாழ்க்கைப்பட்ட அனிச்சம்!

'ஸ்வாமி!
ஸ்நானம் முடித்துக்கொண்டு -
தேவரீர் வருவதற்குள்
தயாராகிவிடும் தளிகை!'

வரதாழ்வான் மனைவி -
விண்ணப்பிக்க...

உள்ளூர் குளத்திற்கு
உடையவர் சீடரோடு சென்றார் -
நீராட; கண்களில்
நீரோட!

உபாதானத்தில் -
உண்ணுகின்ற வீட்டில்...

உடையவர்க்கும்;
உடன் வந்த வைணவர்க்கும்;
உணவு சமைக்க - ஏது

உப்பு? புளி? அரிசி?
வார்த்தையைத் தந்துவிட்டு -
வாடினாள் இல்லத்து அரசி!

அவளுக்கு - சட்டென்று
அந்த ஊர் வணிகன் ஒருவன்...

காமம் கொண்டு - தன்மேல்
கண் வைத்திருப்பது -
கவனம் வர - அவனைக்
காண்பதற்குச் சென்றாள்;

வீட்டு
விருந்துக்கு
வேண்டிய பொருள்களை - அவ்
வணிகன் வழங்கினால்...

அன்றிரவே -
ஆசையைத் தீர்க்க
அவன் வீட்டுக்கு -
அவள் வருவேன் என்றாள்!

அடுத்த -
அரை நொடியில்...
வரதாழ்வான்
வீடு தேடி -
வந்தது மளிகை; ஒல்லையாய் -
வஞ்சி முடித்தனள் தளிகை!

உபாதானம் வாங்கிக்கொண்டு -
வீடு திரும்பிய வரதாழ்வான்..

உடையவரைக் கண்டு
உள்ளம் களித்தார்; குருவின் -
காலடியில் தண்டனிட்டுக்
கண்புனலில் குளித்தார்!

அதன்பின் -
அடுக்களைக்குச் சென்று...

உணவு வகைகளைக் கண்டு
வியந்து நின்றார்; தன் -
இல்லாளிடம்; வசதியே -
இல்லாளிடம்...

'இவை - எங்ஙனம்
இங்கு வந்தன?' என்றார்!

ஒன்றையும்
ஒளிக்காமல்;
உள்ளதை
உள்ளபடி..

உரைத்தாள் பத்தினி; ஓர் -
உரைக்குள் அடங்கா உத்தமி!

'உன்னால் -
உயர்ந்தேன் இன்று!' என -
வரதாழ்வான் சொன்னார் - மனைவி
வலக்கரம் பற்றி நின்று!

விருந்து முடிந்தபின் -
வரதாழ்வானும் மனைவியும்...

மளிகை கிடைத்த
மர்மத்தை - ராமானுஜ
முனியிடம் கூறினர்;
மன்னிக்கக் கோரினர்!

'அடடா! திருமால் -
அடியவர் தம்..

குடற்பசி தீர்க்க - இந்த
குணவதி - ஒரு காமுகனின்
உடற்பசி தீர்க்க - மனம்
ஒப்பினளோ?'

என்று - மனத்துள்
எதிராஜர் எண்ணி...

பெருமாள் தீர்த்தத்தையும்;
பாகவத பிரசாதத்தையும்;
வரதாழ்வானிடம் தந்து - 'அவ்
வணிகனிடம் கொடு!' என்றார்;

பின் - விழிகள் மூடி
பகவானை தியானித்து நின்றார்!

இரவு வந்தது; தன்
இல்லாளை அழைத்துக்கொண்டு..

வரதாழ்வான் போனார்
வணிகன் வீட்டுக்கு;
வழிமேல் விழிவைத்து -
வணிகன் நின்றிருந்தான்
வாசலிலேயே - வயோதிகத்திலும்
வாலிப விளையாட்டுக்கு!

– வளரும்



# ராமானுஜ காவியம் 53

## உடையவருக்கு வழி காட்டியவன்!

'வணிகரே! உம்மால் –
வைணவப் பெரியோர்க்கு –

தமியேன் –
ததியாராதனை செய்து – அவர்தம்
திருவருளைப் பெற்றேன்; உமது
தேவையைக் கேள்வியுற்றேன்!

நள்ளிரவு என்பதால் –
நான் என்...

தாரத்திற்குத்
துணை வந்தேன்; என்
தாரம் தந்த வாக்கு
தவறக் கூடாதென்பதால் –

இதோ!
இவளை
இன்றிரவு – உமது
இன்பத்திற்கென்று தந்தேன்!'

வரதாழ்வான் – மலர்ந்த
வதனத்தோடு –
வணிகனுக்குத் தனது
வாய் நிறைய நன்றி சொல்லி...

'எங்கள் ஆசாரியர்

கவிஞர் வாலி

எம்பெருமானார்...

பாகவத சேஷமான
பிரசாதத்தையும்;
பச்சைக் கற்பூரம் மணக்கும்
பெருமாள் தீர்த்தத்தையும்;

உமக்குத் தர – எனக்கு
உத்தரவு இட்டிருக்கிறார்;
உமது
உதார குணம் பற்றி – எமது
குருநாதரும்
கேள்விப் பட்டிருக்கிறார்!'

என்று – தான்
எடுத்துவந்த...

தேவப்பெருமாள்
தீர்த்தத்தை –
வணிகனின்
வலக்கையில் வார்க்க;

அஃதை
அருந்தியவுடன் –
அவன் மேனி புளகித்து
ஆதி அந்தம் வேர்க்க;

பிறகு
பாகவத சேஷத்தை –
வரதாழ்வான்
வணிகனுக்கு உண்ணக் கொடுக்க;

அதை உண்டதும்
அவன் உடலெங்கும் –
புதுக் குருதி
புனல் போல் ஊற்றெடுக்க;

வணிகனின்
விழிகளுக்கு...



வரதாழ்வான் -
விஷ்ணுவாகவும்;
வரதாழ்வான் பத்தினி -
விஷ்ணு பத்தினியாகவும்...

தென்பட; அவனைத்
தின்ற காமம் நீறுபட;
மொத்தத்தில் - அவனது
மனோபாவம் மாறுபட;

தம்பதியின்
திருவடிகளில்...

வணிகன்
விழுந்தான்;

'பெருமாள் தீர்த்தம்
போக்கியது என் பழவினை;
பெற்ற தாயினும்
பெரியவள் -
இனி -
இவ் வணிகனுக்குப் பிறன்மனை!'

எனச் சொல்லி
எழுந்தான்!

வரதாழ்வானோடு சென்று - அவ்
வணிகர் பெருமகன்...

சேவித்தான்
சீயரை;
மன்பதை என்னும்
மந்தையை -
ஆற்றுப்படுத்தும்
ஆயரை!



அவர் -
அவனது -

நாக்கில் அமர்த்தினார் -
நாராயண நாமம்;
அன்று முதல் அவனுக்கு -
ஆரம்பமானது சேமம்!

பிறகு - எம்
பெருமானார் -

கோஷ்டியோடு
காஞ்சிக்குப் போனார்;

முதல் வேலையாக - தனது
முதல் குருவான...

திருக்கச்சி நம்பியின்
திருமடத்திற்குச் சென்று -

கச்சி நம்பிகளின்
காலடித் தாமரைகளை -
முகத்தால்
முத்த மிட்டார்;
நன்றிப் பெருக்கில் - விழிகள்
நீர் உகுக்க - தனது
நெடிய மேனியை - அதில்
நனைய விட்டார்!

பின் - எழுந்து
பேசினார் - திருக்
கச்சியிடம்; தொண்டின் -
உச்சியிடம்!

"அடியேனின் - முதல்
ஆசாரியனே!
ஆரியர்க்கெல்லாம் - மேலான
ஆரியனே!

'பரமேட்டியான
பகவானிடம் -
பரிபூரண நம்பிக்கை வைத்து -
பண்ணுக...

பத்தி; பிர -
பத்தி;

இவை -
இரண்டுமே...
முத்தி - பெற
உத்தி!' என -

எளியேனுக்கு
எடுத்துச் சொல்லி...

கைங்கரியம் வழி - பெறலாம்
கைவல்லியம் எனச் சுட்டி...

அஞ்சனம் கொண்ட விழியாளும்;
அத்தி வரதனும்; தினம் - திரு
மஞ்சனம் ஆட - கிணற்று நீர்
மொண்டு வரப் பணித்து...

அடியேனை -
அன்றாடம்...

ஏவிய கருணைக்கு - நான்
என் செய்வேன் நன்றி? தேவரீரை -
ஏழ் பிறப்பும் -
ஏத்திக் கிடத்தல் அன்றி!"

என -
எம்பெருமானார்
விழிநீர் -
வழிய மொழிய...

'உடையவரே!
உமைப் பணிகொள்ள...

நினைத்தான் வரதன்; அதை -
நிறைவேற்ற நானொரு கருவி;

நீர் - சாலைக்கிணற்று
நீர் சேந்தி வர - உம்மை
நியமித்ததே -
நான்தானெனில் நானொரு கருவி!'

இப்படிப் பேசிவிட்டு -
இதற்கு மேல் - தன்னை
இராமானுஜர் புகழ -

இடங் கொடுக்காமல்...

கச்சிநம்பி - அவரைக்
கோயிலுக்குக் கூட்டிப் போனார்;

வரதராஜனை
வணங்கிவிட்டு - உடையவர்
திருக்கச்சி நம்பியிடம்
திருமலைக்கு விடைபெற லானார்!

'மந்தி பாய் வேங்கடத்து
மலையானை - உள்மனத்துள்
சிந்தித்தவாறு நடந்தார்;
சில காதங்கள் கடந்தார்!

ஓரிடத்தில் - மேற்கொண்டு
வழிதெரியாமல் நின்றார்;

அச்சமயம் - சற்று
அணிமையில்...

பயிருக்கு - நீர்
பாய்ச்சிக் கொண்டிருந்த - ஒரு
விவசாயியிடம் - 'திருமலைக்கு
வழிகாட்ட முடியுமா?' என்றார்!

'அதோ!
அவ்வழி போனால் -
அடையலாம் திருப்பதி!' என்று -
அவன் சுட்டினான்;
உடனே
உடையவர் - அவ்
விவசாயியின் கால்களில்
விழுந்து தண்டனிட...

வெருண்டு - அவன்
வேர்வை கொட்டினான்!

உடன் வந்த சீடர்களையும் -
விவசாயியை சேவிக்கச் சொன்னார் -
ஆர்க்கும் பொதுவென்பதில் -
அந்த ஆகாயம் அன்னார்!

பிறகு -
பயணம் தொடர...

ஒரு சீடர் -
உடையவரைக் கேட்டார்;
'தாழ்ந்த குலத்தவன்; அவனை -
தண்டனிடலாமா?' என்று -
வினவி - அதற்கு
விடையை வேட்டார்!

பெருமானார் சிரித்தார்;
பதில் விரித்தார்!

'நாளும் -
நமக்கு...

வைகுந்தத்திற்கு
வழி காட்டுபவன் - மலை மேல்
சீனிவாசனாய் நிற்கும்
சேஷசாயி;
அந்த சேஷசாயியை
அடைய - நமக்கு
வழிகாட்டியவன் - இந்த
விவசாயி!

அந்த வகையில் - நமக்கு
ஆசாரியன் ஆகிறான்; சாதி -
அடையாளங்கள் -
அற்றுப் போகிறான்!

குருவுக்கு ஏது -
குலம்?
குலங்கள் கடந்ததுதான் -
குருகுலம்!'

இன்னணம்
இயம்பினார் -
சீயர்;
சமூக நேயர்!
தொண்டர்களோடு -
திருப்பதி வந்த உடையவர்...

'ஆதிசேஷன் அம்சம் என்று -
ஆழ்வார்கள் அய்யிருவரும் -
ஏறத் தயங்கிய -
ஏழுமலை மேல் நானும் ஏறேன்!'

எனக் கீழேயே

இருந்து விட்டார்;
ஆனாலும்
அப்படி யிருக்க -
அவரை
ஆர் விட்டார்?

மலைமேல் - அழகிய
மலர்வனம் அமைத்த...

அனந்தாழ்வான் வந்து -
அடம்பிடித்து அழைக்க -

எதிராஜர்
ஏற்றார்.
அவ்
அழைப்பை...

மனம் உவந்தே; ஏறினார் -
மலையை மிதிக்காது தவழ்ந்தே!

உச்சியை அடைந்த
உடையவரை - அவரது
தாய்மாமன் - பெரிய
திருமலை நம்பி...

பெருமாள் -
பிரசாதமொடு எதிர்கொண்டார்;
தண்டனிட்ட உடையவர் -
தாய்மாமன் முதுமை கண்டார்!

'எனை எதிர்கொள்ள - தேவரீர்
எழுந்தருள வேணுமா? சிறியார் -
எவரும் இல்லையா?' என்று
எதிராஜர் வினவ...

'என்னிலும் சிறியாரை - இவ்
ஏழுமலையில் காணேன்!' என்று
பெரிய திருமலை நம்பி -
பவ்வியமாய் விளக்க...

அம்மானின்
அடக்கம் கண்டு - உடையவர்
தொழுதார் மறுபடி - பெரிய
திருமலை நம்பி திருவடி!

அதன் பின் -
அனைவரும் புடைசூழ -
கோவிந்தன்
கோயிலுக்குள் சென்று...

ஸ்ரீ இராமானுஜர்
ஸ்ரீநிவாசப் பெருமாளை -
விழி கொள்ளும் அளவு
விழுங்கினார்:

'நித்ய சூரிகளின் இடம் இது;
நானு மிருப்பதோ இங்கு?' என்று -
சுய பச்சாத்தாபத்தோடு
சிந்தை புழுங்கினார்!

மலைமேல் -
மூன்று நாள்கள்
தங்கியிருந்து விட்டு - கீழ்த்
திருப்பதி திரும்பி...

திருமலை நம்பியின் -
திருமாளிகை புகுந்தார்;
பெரிய திருமலை நம்பியின் -
பிரதான சீடனாக - தனது
ஒன்று விட்ட தம்பி - தன்னுயிர்
ஒரு காலத்தில் காத்த நம்பி -

கோவிந்த பட்டர் - எனும்
கோவிந்தன்...

இருப்பது கண்டு - ஸ்ரீ
இராமானுஜர் உவகை மிகுந்தார்!

ஒருநாள் -
வெயில் தாழும் வேளையில்...

திருமலை நம்பியின்
திருமாளிகையை -
ஒட்டி யிருந்த
ஒரு தோட்டத்தில்...

உடையவர் -
ஒரு காட்சி கண்டு வியந்தார்;
'என்ன ஆகுமோ?'
என்று பயந்தார்!

- வளரும்

428



"மிலிட்டரில இருக்கிற உங்க மாமாவுக்கு ஏன் தலைல வழுக்கை விழுந்துடுச்சு..?"

" 'War'ரும்போது முடி கொட்டிடுச்சாம்..!"



"அந்த ஃபைனான்ஸ் கம்பெனி ரொம்ப நம்பிக்கையானது."

"எதை வெச்சு சொல்றீங்க?"

"பின்னே... அங்கே கடிகாரம்கூட ஓடாதுனா பாருங்களேன்!"





"டி.வி-ல வர்ற மெகா சீரியலுக்கெல்லாம் ஏன் நதியோட பேரையே வைக்கிறாங்க..?"

"பார்க்கறவங்களுக்கெல்லாம் கண்லேர்ந்தாவது தண்ணி விட்டுமேனுதான்..!"

"முடி கொட்டுதுங்க.."

"இந்த தைலத்தைத் தடவுங்க..."

"விக்கை போட்டுகிட்டு இருக்கும்போது தடவணுமா? இல்ல, கழற்றி வெச்சி வெறும் தலையில தடவணுமா..?"



**கோவிந்தன் ஒரு புதிர்!**

கொடிய பாம்பு ஒன்றை –
கோவிந்தன்...

இடக்கையால்
இறுகப் பற்றிக்கொண்டு – தன்
வலக்கையை – அதன்
வாயில் நுழைத்துக்கொண்டு...

'அது –
அவனைப் பற்றியதா? அல்லது –
அவன் –
அதனைப் பற்றினானா?' என்று –

ஏற்ப இயற்றிடுங் கருமம்!

'கோவிந்தா!' என்று –
கூச்ச லிட்டார்;
சில நிமிடங்கள் சென்றபின்
சர்ப்பத்தைக் –
கீழே விட்டுவிட்டு வந்த
கோவிந்தனிடம்...

'என்ன சாகசம் இது?'
என்று வேகப்பட்டார்!

அண்ணனாக இருந்து –
ஆசாரியன் ஆகிவிட்டதால்...

# ராமானுஜ காவியம்

விளங்காவண்ணம் – பரஸ்பரம்
விடாப்பிடியா யிருப்பதை –
எதிராஜர்
எட்டி நின்று பார்த்துத்தான்...
வியந்தார்;
பயந்தார்!

பாம்பின்
பிரதியாக –
பூமி வந்த – எம்
பெருமானாரே...
பாம்பைக் கண்டு
பயந்தார் என்றால்...

அதுதான் –
அவதார தருமம்;
எடுத்த அவதாரத்திற்கு –

54

உடையவரை – கோவிந்தன்
விளித்தான் 'சுவாமி' யென்று;
விளக்கினான் – தன்
விந்தைச் செயலை –
விநயமாய் விலகி நின்று!

'சுவாமி! அந்த –
சர்ப்பம்...

மிகுந்த வேதனையோடு
மண்ணில் புரள்வதைக் கண்டு –
மனம் ஆற்றாது – அதை
மெல்லக் கையில் எடுத்தேன்;

நாகத்தின் –
நாக்கில் முள் இருக்க...

அதை நான்

அறவே நீக்கி; அவ்
அரவத்தின்
அவலம் போக்கி;

மீட்டும் - அதை
மண்ணில் தவழ விடுத்தேன்!'

கோவிந்தன் - இப்படிக்
கூறியதும்...

'பிற உயிர்; தன்னுயிர் எனும் -
பேதம் பேணாத - கோவிந்தன்போல்
அற உயிர் தரைமிசை ஆருளர்?'
என
எதிராஜர் எண்ணினார்;
உடனே - அவனைப் பற்றி
ஒரு முடிவு பண்ணினார்!

இன்னொரு நாள்
இதைப் போல் ஒரு நிகழ்வு;
அதைக் கண்டும் -
அருள்மிகு -
உடையவர் -
உளத்தில் ஒரு நெகிழ்வு!

பெரிய திருமலை நம்பி -
படுக்கும் மெத்தையை...

கோவிந்தன்தான் - தூக்கிக்
கொண்டுபோய்த் தூசு தட்டிக் -
கூடத்தில் விரிப்பான்;
விரித்ததும் - முதல்
வேலையாக - அதில்
அவன்
அப்படி இப்படி -
படுத்து உருண்டு
பார்த்து விட்டு...

மெல்ல - தன்
முகம் மலரச் சிரிப்பான்!

அந்த
அபசாரத்தை -
ஒரு நாள் பார்க்க நேர்ந்த
உடையவர்...

திருமலை நம்பிக்குத்
தெரியப்படுத்த - நம்பி
கோவிந்தனைக்
கூப்பிட்டுக் கேட்க -

'ஆமாம்! தினம் -
அப்படித்தான் செய்கிறேன்!'



என்றான் அவன் - பதிலில் ஓர்
எதார்த்தம் பூக்க!

மேலும் சொன்னான்; தொண்டில் -
மாருதி அன்னான்!

'ஆசிரியப்பிரான் - கண்
அயர்கின்ற படுக்கையில்...

பூச்சிபொட்டு இருந்தால் - அவரை
பாதிக்கும்; இதை எனது -
உள்மனம்
உணர்த்துவதால் - என்
உடம்பு தான்புரண்டு - பூச்சி
உளதா எனச் சோதிக்கும்!

இப்பணியை -
இயற்றுவதால்...

நரகம் வரினும் -
நான் ஏற்பேன்;
தொடர்ந்து இப்பணியைத்
தொய்வின்றி நோற்பேன்!'

கோவிந்தன் -
கூற்றில்...

இராமானுஜ முனியின்
இதயம் களித்தது;
இரு விழிகளின்
இமைகளில் நீர் துளித்தது!

வைணவத்தின் -
வேர்க் கொள்கை...

ஜீவன்கள்பால் காட்டும் -
ஜீவகாருண்யம்; வாய்க்கும் -
ஜீவகாருண்யம் கொண்டார்க்கே -
தேவகாருண்யம்!

பாம்பு நிகழ்வும்
படுக்கை நிகழ்வும் - கோவிந்தன்
ஓம்பு கருணையை
உடையவர்க்குக் காட்ட...



432

கண்டார் - அவனது
கடலனைய பெருவுளம்;
கொண்டார் - அத்தகு
கிருபானந்த வாரியைக்
கூடவே - அரங்கன் ஊர்
கூட்டிச் செல்லத் திருவுளம்!

திருமலை நம்பியிடம்
தருணம் பார்த்து -
கோவிந்தனைக் -
கேட்டுப் பெறுவதென்று...

முடிவெடுத்தார் - எதிராஜ
முனி;
நுவலரிய ஞானத்தின்
நுனி!

ஓராண்டுகாலம் -
உடையவர் -
திருப்பதியில் -
தங்கியிருந்து...

திருமலை நம்பியின் -
திருவடிக் கீழமர்ந்து...

ஆதிகவி
அருளிய -
ராமாயணத்தின்
ரகஸ்யார்த்தங்களை...

பிரதி தினமும்
பாடமாகக் கேட்டார்;
சுலோகங்கள்
சுட்டிய விழுமங்களை -
செவிவழி வாங்கி
சிந்தைக்குள் போட்டார்!

திருப்பதியை விட்டுத் -
திருவரங்கம் புறப்படுமுன்...

கோவிந்தனை - தனக்குக்
கொடுத்தருள - நம்பியிடம்
யதிராஜர் கேட்டார்
யாசகம்;

'தந்தேன் உமக்கு
தானம்!' என்று -
தாய்மாமன் திருவாயில்
தழைத்தது வாசகம்!

பிறகு - உடையவர்
பெரியவரை சேவித்துவிட்டு...

கோவிந்தனோடும்; தொண்டர்
குழாத்தோடும்;



கீழ்த் திருப்பதியிலிருந்து –
கிளம்பி...



வரதன்
வாழும் –
அத்தியூர் என்னும்
அழகிய காஞ்சி சேர்ந்தார்;

சில நாள்கள்
சிரம பரிகாரமாகத் –
தங்கியிருக்க – கச்சிநம்பி
திருமடத்தைத் தேர்ந்தார்!

பெரிய திருமலை நம்பியைப்
பிரிந்த சோகம் –

கோவிந்தனைக்
கொஞ்சம் வாட்டுகிறது –
என்பதை
எதிராஜர் ஊகித்து...

'நீ –
திருமலைக்குச் சென்று
திருமலை நம்பியோடு
சிலகாலம் இருந்துவிட்டு – பின்
சீரங்கம் வா!' என்றார்;



கோவிந்தனைக்
கொண்டுபோய்விட –
பாகவதர் இருவரைப்
பணித்துவிட்டு...

காஞ்சியிலேயே சிலநாள் –
காத்து நின்றார்!

தான் –
தானமாகத் தந்த கோவிந்தனை –
திரும்ப ஏற்க – பெரிய
திருமலை நம்பி விரும்பாது –

'போகச் சொல்லுங்கள் – அந்தப்
பைத்தியக்காரனை!' என்று –
நிட்டூரமாகச் சொல்லிவிட்டார்
நெஞ்சில் நெல்முனை ஈரமில்லாது!

பெரிய திருமலை நம்பியின் –
பாரியை...

'வீடுதேடி
வந்தவனுக்கு – ஒரு வாய்ச்
சோறுகூடப் போடாது – போகச்
சொல்லுவது என்ன நியாயம்?'
என்று கேட்க – நம்பி
ஏளனமாய்ச் சிரித்துவிட்டு...

'அடி பைத்தியக்காரி! சோறு –
அவனுக்குப் போட நாம் யார்?
விற்ற பசுவுக்கு –
வைக்கோல் போடுவாருண்டோ?' என்று –

தானம் தந்ததைத்
திரும்பப் பெறாத – ஸ்ரீ
வைணவ சித்தாந்தத்தை
விளக்கினார் மனைவியிடம்; ஒரு –
தாய்மனம் கொண்டு –
தவித்த தனது துணைவியிடம்!

குரு வார்த்தைக்கு – எதிராக
ஒரு வார்த்தை என்றும் பேசாத –
கோவிந்தன் – உடனே
காஞ்சிக்கே திரும்ப –

எம்பெருமானார் –
எதிராஜருக்கு...

பெரிய திருமலை நம்பி
பேணிக் காக்கும் – ஸ்ரீ
வைணவ தருமத்தை எண்ணி – திரு
வதனத்தில் –

ஒருவகைப்
பெருமிதம் அரும்ப –

அனைவரும்
அன்றே புறப்பட்டனர் – திரு
அரங்கத்திற்கு; வைணவச் –
சுரங்கத்திற்கு!

சீரங்கத்தில் – கோவிந்தனின்

434

**ரா**மானுஜ காவியம் 51-வது அத்தியாயத்தில் (27.10.02 இதழ்) கொங்குப் பிராட்டியை கவுண்டர் என்றழைக்கப்படும் கொங்கு வேளாளர் குலத்தைச் சேர்ந்தவராகக் கவிஞர் வாலி குறிப்பிட்டுள்ளார். மாறாக, கொங்குப் பிராட்டி கொங்கு நாட்டைச் சேர்ந்த அந்தணப் பெண்மணியாவார். அவருடைய கணவரான சுந்தரராஜன், ஸ்ரீராமானுஜரால் ஸ்ரீவைஷ்ணவராகத் திருத்தப்பட்டு கொங்கிலாச்சானாக, 74 சிம்ஹாசனாதிபதிகளில் ஒருவராக நியமிக்கப்பட்டார். தற்சமயம் திருவரங்கத்தில் ஸ்ரீராமானுஜ மடத்தின் நிர்வாகியாக எழுந்தருளியுள்ள ஸ்ரீரங்க நாராயண ஜீயர் சுவாமிகள் கொங்கிலாச்சான் வம்சத்தவராவார்.

– **வி.எல். ராமஸ்வாமி,** ஸ்ரீரங்கம்.

**கொங்குப் பிராட்டி – ஓர் அந்தணப் பெண்மணிதான். தவறுக்கு வருந்துகிறேன்.**

– வாலி

செயல்பாடுகள்...

வித்தியாசமாகவும்;
விசித்திர மாகவும்;
விகார மாகவும்;
விவகார மாகவும்;

பிறர் பார்வைக்குப் –
புலப் பட்டன;

அவை
அவன் போக்கால் –
போகப் போக – இன்னும்
பலப் பட்டன!

இங்ஙனம் –
இருக்கையில்...

கோவிந்தன் தாயார்
கோவிந்தன் மனைவியோடு –
திருவரங்கம் வந்து
தேரோடு வீதியில் –

ஒரு
வீடு பிடித்து –
வைத்தார் குடித்தனம்; அதை –
விரும்பவில்லை மகன் மனம்!

'மகனே! கோவிந்தா! உன் –
மனைவி பக்குவமாகிவிட்டாள்!'
என்று – சூசகமாக
எடுத்துரைத்தாள் தாய்;
தாய் சொன்னதற்குத் –
தலையாட்டிவிட்டு –
கோவிந்தன் – ஒரு
கோரிக்கை வைத்தான் விந்தையாய்!

'இருட்டும் தனிமையும்
இருக்கும் தருணம் –
அவள் வரட்டும்!' என்றான்;
அளவோடு பேசிச் சென்றான்!

ஒருநாள் –
ஓடோடி வந்து...
ஸ்ரீவைஷ்ணவர்கள் சிலர்
ஸ்ரீராமானுஜரிடம் –
தந்தனர்
தகவல் ஒன்று;

ஒரு –
தாசி வீட்டு வாசலில் –
தன்னை மறந்து –
நெடுநேரமாய் – கோவிந்தன்
நிற்கிறான் என்று;

உடையவர் –
உறங்கவில்லை அன்று!

**– வளரும்**

# ராமானுஜ

## 55



**எம்பார்.**

‘வந்ததே -
வரக்கூடாத் நிந்தனை!’ என -
விசனப்பட்டு -
விசாரித்தார் கோவிந்தனை...

மடத்தில் - பலர்
முன்னிலையிலேயே -
உடையவர்; அவன்பால்
உடையா அன்பு உடையவர்!

‘கோவிந்தா! நீ -
கோயில் தேவதாசியின் -

வீட்டு
வாசலில்
வெகுநேரம் நின்றதை - இந்த
வைஷ்ணவர் கண்டாராம்;
உன்போன்ற
உத்தமன் -
அன்னணம் நிற்பது கண்டு
அலமந்து...

காண்பது
கனவா நனவா என்று - தன்
கையால் - தன்னையே
கிள்ளிக் கொண்டாராம்!

உண்மை என்ன?
உரை! உன்
பண்பில் புகலாமா -
புரை?’

கோவிந்தன் - சிறு
குழவிபோல் சிரித்தான்;
உடையவரின்
உசாவலுக்கு -
விநயமாய்
விடையை விரித்தான்!

“ஆசாரியனே!
அடியேனைப் பற்றி...

வைஷ்ணவர் சொன்னது -
வாஸ்தவம்;

தேவ -
தாசியின் வீட்டு வாசலில் -
தமியேனை நிற்க வைத்தது -
தேவரீரின் திவ்விய வைபவம்!

அந்த வீட்டுக்குள்ளிருந்து -
அற்புதமான -

கானம் ஒன்று - என்
காதில் வந்து விழுந்தது;
அதைக் கேட்டதும் - என்
ஆன்மா சிலிர்த் தெழுந்தது!

சாகித்தியமும் -
சங்கீதமும் -
கரம் கோத்துக் கொண்டு -
கள்ளைப் பிழிந்தன;

உண்டு மயங்கியதும் - என்
உலக நினைவுகள் ஒழிந்தன;

கவிஞர் வாலி

சுற்றுப் புறச்
சூழலை -
சற்றும்
சட்டை செய்யாது...

நான்
நட்டகல்லாய் நிற்க -

கங்கையும் -
காவிரியும் -
கரையுடைந்தாற்போல் பெருகி -
கேசாதி பாதம் வழிந்தன; என்

மும்மல அழுக்குகள் -
முச்சூடும் அழிந்தன!

அதற்குக் காரணம் -
அந்த கானம்...

எங்கள் இராமானுச முனியின்
ஏற்றம் பேசியது; பெரும்பூதூர் -
வள்ளல் திருவடிகளுக்கு
வார்த்தைச் சந்தனம் பூசியது!

'இராமானுசரே!

# காவியம்



இன்னுமோர் நூற்றாண்டு இரும்!'
என - அப்பாடலின்
எடுப்பு; தொடுப்பு; முடிப்பு;
மூன்றும் - தேவரீரை
முழுமனத்தோடு வாழ்த்தியது;
அடியேனை - ஓர்
அவசநிலையில் ஆழ்த்தியது!

குரு பேர் சொல்லல்;
குரு பேர் கேட்டல்;
இவை -
இரண்டுமே -
அமுதம் அமுதம் என -
அருந்திட வேட்டல்!

உய்யும்
வகைக்கு -
வேறென்ன
வேண்டும் -
ஒரு சீடனுக்கு? என்னொத்த -
ஒரு மூடனுக்கு?"

கோவிந்தன் இப்படிக்

கூறி முடித்ததும்...

'ஆமாம்!
அந்த வீட்டிலிருந்து...
பெண்பிள்ளை பாடிய -
பாட்டொன்று கேட்டது; அந்த -
கானம் - எனைக்கூடக்
கட்டிப் போட்டது!' என்று -

கோவிந்தன்
கூற்றை -
ஆமோதித்தார்
அவன்மேல் புகார் சொன்னவர்;

'என்ன குருபக்தி!
என்ன குருபக்தி!
எல்லியும் பகலும் -
என்னைப் பற்றியே. சிந்தையா?'

என தனக்குள்
எண்ணி...
கோவிந்தனைக்
கிட்ட அழைத்துப்
புல்லினார் - முக்கோல்
பிடித்திருக்கும் மன்னவர்!

இதற்குப் பிறகு - ஒருநாள்
இராமானுஜ முனியிடம் வந்து...



கோவிந்தன் பற்றி - அவன்தாய்
குற்றப்பத்திரிகை வாசித்தாள்;

பாரியாள்
பெரிய மனுஷி ஆன பின்னும் -
சாந்திக் கல்யாணத்திற்கு
சம்மதிக்காமல்...

தினம்
தன்மகன் -
சாக்குப் போக்கு
சொல்லி வருகிறான் என்றும்;

அது விஷயமாக
அவனுக்கு -
ஆசாரியன்
ஆக்ஞாபிக்க வேண்டுமென்றும்;

யாரும் அறியா வண்ணம் -
யதிராஜரிடம் யாசித்தாள்!

உடையவரும் - அந்த
உத்தமத் தாயின் -
கோரிக்கையை ஏற்று
கோவிந்தனிடம் ஏகாந்தமாய்...

'கோவிந்தா!
கூடு உன் மனையை;
என் ஆணை இது;
ஏற்று முடி வினையை!'

என்று
எடுத்துச் சொல்ல -
'சரி' என்று - அவனும்
சிரம் தாழ்த்தினான் மெல்ல!

ஒருநாள் -
ஒரு ருதுகாலம் பார்த்து...

கோவிந்தன் தாயாரும்
கொள்ளை மகிழ்ச்சியோடு - தனது
நாட்டுப் பெண்ணை
நன்கு அலங்கரித்து...

பால்
பழத்தோடு -
பள்ளியறைக்குப்
போகச் சொன்னாள்;
போய்
புருஷனை வணங்கினாள் -
புதுப்
புஷ்பம் அன்னாள்!



கோவிந்தன் -
கொண்டவளைப் -
பக்கத்தில் உட்காரவைத்து -
பகவானுடைய பிரபாவங்களை...

குக்குடம்
கூவும்வரை பேசினான்;
தாரத்தை - விரலால்
தொடவும் கூசினான்!

புழங்கப் படாத
புத்தம்புதுப் பாத்திரமாய்...

மருமகள்
மறுநாள் வெளியில் வர -
மாமியாருக்கு - அது
மனக்கிலேசத்தைத் தர -

விஷயம் -
உடையவர் காதுக்கு வந்தது;
அவருக்கும் -
அது விசனத்தைத் தந்தது!

'கோவிந்தா!
குருவாக்கைக் கடந்தாயா?
புருஷனாய் நடவாமல் - ஒரு
பவுராணிகனாய் நடந்தாயா?'

உடையவர் இன்னணம்
உசாவ -
கோவிந்தன் - பதில்
கூறினான் - இரு
விழிகளில் - ஒருவகை
வெருவல் உலாவ!

'ஸ்வாமி!
க்ஷமிக்க வேண்டும் என்னை;

தேவரீர் ஆணையைத்
தமியேன் நிறைவேற்றத் -
தேவையான இரு விஷயங்கள்
தனியறையில் வாய்க்காது...

இல்லாளோடு பேசியே கழித்தேன் -
இராப் பொழுது தன்னை!'

மெல்ல - கோவிந்தன்
முனக...

'என்ன -
இரு விஷயங்கள்?'
என -
எதிராஜர் வினவ...

'இருட்டு; தனிமை;
இரண்டும் அங்கில்லை!' என்று -
கோவிந்தன் -
கூற...

'புகுந்தது தனியறை;
பொழுதோ நள்ளிரவு;
உள்ளதை -
உரை!
என்னிடம்
ஏன் ஒளிவுமறைவு?' என்று -

சீயர் -
சீற...

'தனியறைதான்; ஆனால் -
தனிமை யில்லை;
இராப் பொழுதுதான்; ஆனால் -
இருட்டு இல்லை!' என்று -

தன் கருத்தை - கோவிந்தன்
தெரிவிக்க...

'பேசுவதைப்
புரியும்படி பேசு!' என்று -
ஆசாரியர் - சற்று
அழுத்தமாய் அறிவிக்க...

கோவிந்தன் பேசினான்; ஞானக்
கொழுந்தாய் சுடர் வீசினான்!

'ஆசாரியனே!
அடியேன் அறிவித்து...
தேவரீர் தெரிந்துகொள்ள - இத்
தரணிமிசை ஏதும் இல்லை;
எங்கள் எம்பெருமானார் -
எல்லா ஞானத்திற்கும் எல்லை!

அடியேன் இருந்தது - தனி
அறைதான்;

442

ஆனால் – என்
அருகிலேயே
அமர்ந்திருக்கின்றானே –
அந்தர்யாமியான இறைதான்!

ஆதலால் – தனிமை
அற்றது!

நேரம் –
நள்ளிரவுதான்;

ஆனால் – என்
அருகிருக்கும் –
அந்தர்யாமி பிலிற்றினானே –
ஆயிரம் பொன்னிலவுதான்!

அந்தச் சோதி – இருட்டை
அடியோடு செற்றது!

இருட்டு; தனிமை; இவை –
இரண்டும் இன்றி...

எளியேன் –
என் செய்வது?
எம்பெருமானார் சொல்காத்து –
என்னணம் உய்வது?'

இவ்வாறு கோவிந்தன்
இயம்பியதும்...

'திரிகரண சுத்தியாய்;
திருமால் பத்தியாய்;
ஆசாரியன் திருவடியிலேயே –
அமர்ந்த புத்தியாய்;

இருக்கும் உனக்கு
இல்லறம் உகந்ததல்ல;
கொண்டவளோடு – உன்னைக்
குடித்தனம் நடத்தச் சொல்ல!

துவராடை; திரிதண்டம் தாங்கி –
துறவியாய் இங்கு வீற்றிடுக;
எம்பெருமானார்
எனும் –
என் பெயரையே – நீயும்
ஏற்றிடுக!'

என்று –
எதிராஜர் மொழிய...

'துறவறம் ஏற்கிறேன்;
தவம் நோற்கிறேன்;
தேவரீர் நாமத்தை – நான்
தாங்குவது நன்றாமோ?
குப்பைமேடு –
குன்றின் பேர் கொண்டால் குன்றாமோ?'

என்றான் கோவிந்தன் – அன்பு
ஏய் விழியில் நீர் வழிய!

"அப்படியானால்
அதைச் சுருக்கி –
'எம்பார்!' எனக் கொள்; நானே –
என்றும் இருப்பேன் உன் உள்!"

உடையவர் இவ்வாறு
உரைக்கையில்...

ஓடோடி வந்து – அவரது
வாரிச அடிகளில் விழுந்து –
கோவிந்தன் மனைவியும் –
கோரினாள் காவியாடை;
அதனைத் தந்து – 'சிறிய
ஆண்டாள்!' என்கின்ற –

தாஸ்ய நாமமும் – அவளுக்குத்
தந்து ரட்சித்தார்...
எதிராஜர் –
என்னும் காருண்ய ஓடை!

கோவிந்தன் மேல்
கூறிய பழியை – அந்த
வைணவர் – திரும்ப
வாங்கிக் கொண்டதும்...

வேறொரு சாரார் – வைத்தனர்
உடையவர் மீதே ஒரு புகார்;
ஆயாது –
ஆரையும் –
குற்றங் கூறலில் – அவர்களைக்
கூனி; சகுனி கூட மிகார்!

– **வளரும்**

"ஆபீஸ் போகணும்... மணி என்ன?"

"9.55!"

"ஐயையோ... இங்கயே 9.55 ஆ?"

"இப்ப ஆபீஸ்லயும் 9.55தான்!"



பாஸ்கி

"மேடம்... நான் உங்களுக்கு காஸ்ட்யூம் டிசைனரா சேரட்டுமா?"

"வேண்டாம்..."

"ஏன்?"

"அட, நான் காஸ்ட்யூமே வேணாங்கறேன்... அதுக்கு டிசைனர் வேறயா!"

"டாக்டர் சொன்னாருன்னு சொல்லி ஆயில் அவாய்ட் பண்ணேன்... ஷுகர் அவாய்ட் பண்ணேன்... காரமும் அவாய்ட் பண்ணேன்... அப்படியும் உடம்பு சரியாகலே..."

"பேசாம டாக்டரை அவாய்ட் பண்ணிப் பாரு!"





# இது ஜோக்கியா

56

# ராமானுஜ காவியம்

**வில்லியைப் பற்றி...**

'திடப்பொருள்;
திரவப்பொருள்;
ஜடப்பொருள்;
ஜீவனுள்ள பொருள்;

என
எப்பொருளாயினும் -
எட்டெழுத்தா னெனும்
மெய்ப்பொருள் - அப்பொருள்
மேவி நிற்கும்!' எனும் -
கொள்கையைத்தான் - வைணவம்
கூவி நிற்கும்!

ஆன்மா; பரமான்மா - ஒன்றென
அறிவிக்கும் அத்வைதம்;
ஆன்மா; பரமான்மா - வேறென
அறிவிக்கும் த்வைதம்;

இவ்
இரு தத்துவங்களையும்...
ஒருசேரக் கட்டி -
உயிர்; உடல்; இறை - எனும்
மூன்றையும் ஒன்றென
முழங்கும் நெறிதான்...

'விசிஷ்டஸ்ய அத்வைதம்' என -
விரியும் விசிஷ்டாத்வைதம்!

'சித்து அசித்தொடு ஈசன் - என்று
செப்புகின்ற -
மூவகைத் தத்துவத்தின் -
முடிவு கண்ட -
சதுமறைப் புரோகிதன்!' என...

நம்மாழ்வாரை
நாளும் -
சிலாகித்துப் போற்றும்
ஸ்ரீ வைஷ்ணவ உலகம்;

உயிருள்ளதையும் -
உயிரற்றதையும் -
பேதமறப் பார்க்கும்
பார்வை விளைக்குமோ கலகம்?

இதுதான் -
இராமானுஜ சமயம்; இது -
விளங்காத - சில
வைணவர் -

உடையவரின்
உட்கருத்தை ஓராது -
ஒச்சமாகப் பேசினர் -
ஒரு சமயம்!

ஒருநாள் -
வடதிருக் காவேரியில்...

தீர்த்தமாடிவிட்டு - உடையவர்
திரும்புகையில் - வில்லியின்
தோள்களைப் பற்றி நடந்தார்;
திருவீதி அவ்வாறு கடந்தார்!

'உறங்காவில்லி தோளைப் பற்றி
உடையவர் நடப்பதா?
அந்தணர்க்குரிய

கவிஞர் வாலி

ஆசார -
அனுஷ்டானமெல்லாம் - இனி
அனாதையாய்க் கிடப்பதா?

குளித்துக்
கரையேறிய பின்...

முதலியாண்டான் -
முதலிய -

ஈடற்ற அந்தணரைக்கூட
ஈரத்துண்டால் தீண்டும் -
வேதியர் குலத்து
வேந்து -

வேடர் குலத்து வில்லியை
சீடர் என்று ஏற்றதோடன்றி -
தாழ்த்தப்பட்ட - அவனது
தோள்மீது கை வைப்பதா?

நரகல்மேல் - நறு
நெய் வைப்பதா?'

என்று -
இரகசியமாக...

தமக்குள்ளே
துக்கித்தனர் சிலர்;
தெருவுக்குத் தெரு - கூடிநின்று
தர்க்கித்தனர் சிலர்!

உடையவர் செவிக்கும் -
உறங்காவில்லி செவிக்கும் -
கடையவர் பேச்சு எட்டியது;
கவலை முகத்தில் தட்டியது!

ஸ்ரீ மடத்தில்
ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு - ஒரு
காலைப் பொழுதில் - உடையவர்
காலட்சேபம் நடத்துகையில்...

'விபீஷண சரணாகதி' குறித்து -
விளக்குகையில்...

உறங்காவில்லி எழுந்து
உடையவரிடம் - தனக்கு
உற்ற ஐயப்பாட்டை - வெகு
வினயமாகக் கூறினார்; அதற்கு
உரிய விளக்கத்தை
உதவுமாறு கோரினார்!



'அடுத்தவர் தாரத்தை - தன்
அண்ணன் அபகரித்தது -
அடாத செயலென்று -
அருமைச் சோதரனை விடுத்து...

வீரராகவனை
விபீஷணன் சரண் புகுந்தான்;
சரணடைந்த - அவனை
சந்தேகித்து...

அடித்து நொறுக்க -
ஆயத்தமாய் -
கல்லும்;

கைத்தடியும் எடுத்து -

வானரர் நிற்கக் கண்டு -
வருத்தம் மிகுந்தான்!

சித்த சுத்தியோடு
சரணாகதி செய்ய வந்த -
அன்பன் விபீஷணனுக்கே
அந்த கதி என்றால்...



அற்ப நீசனாகிய
அடியேன் -

தேவரீர்
திருவடி நிழலின்கீழ் -
நீண்ட காலம்
நிலைபெற்றிருக்க முடியுமோ?

தொடர்ந்து -
தங்களது -
திருப்பார்வை - இத்
தமியன்மேல் படியுமோ?'

பிள்ளை உறங்காவில்லி
பேசியது கேட்டு...

இராமானுஜர்
இலேசாகச் சிரித்தார்; வில்லி -
கருத்தை மறுத்து - தன்
கருத்தை விரித்தார்!

"பிள்ளாய்!
பயம் விடும்;
கூடை
கூடையாய்க் -
குப்பை கூளங்களைக்
கொட்டினாலும்...

அக்கினியா
அழுக்குப் படும்?

பகவானும்
பாகவதர்களும் -
ஒரே சங்கிலித் தொடராய்
உள்ளனர் எனும் போது...

ஏற்றத்தாழ்வு
என்பது ஏது?

உண்மையை
உரைக்கப் போனால்...

உம்முடைய தவம்
உயர்வானது -

என் தவத்தைவிட; எனக்கு
எண்ணம் வருமா உம்மை விட?

எந்நேரமும் பெருமானை
ஏத்தியிருந்த...

பெரியாழ்வார் தவத்தைவிட -
பெரியாழ்வாரைச் சார்ந்திருந்த -
அவரது அருமைப் பெண் -
ஆண்டாள் தவம் மேலல்லவா?

'பல்லாண்'டிலும் சுவையானது -
'பாவை' நூலல்லவா?

நீர் -
இரும்தமிழ் போல் - என்னுடன்
இரும்; உமது
இருப்பு - இந்த
இராமானுஜனின் - சம
திருஷ்டிக்கு - ஏற்றம்
தரும்!"

உடையவர் இன்னணம்
உரைத்த பிற்பாடு -
உறங்காவில்லி பெரிதும்
உணர்ச்சி வசப்பட்டு...



'அய்யனே!
அடியேனுக்கு -
தேவரீர்
திருப்பெயரே திருமந்திரம்;

தேவரீர்
திருவடியிணையே திவ்யதேசம்!'
என்று -
எதிராஜரை சேவித்தார்; அந்த -
எட்டெழுத் தண்ணலே -
எதிர்நிற்பதாய் பாவித்தார்!

உடையவர்க்கும்
உறங்காவில்லிக்கும் -
உள்ள நெருக்கம்
உறுத்திக்கொண்டுதானிருந்தது...

மடத்தில் உள்ள - ஒருசில
மடையர்கள் கண்களை;
கண்கள் எனும் பெயர் -
கொண்டிருந்த புண்களை!

எதிராஜர் -
எண்ணினார்...

வில்லி பெருமையை
விளக்க; அந்த
வீணர் சிறுமையை
விலக்க!

ஒருநாள் -
ஒரு ஸ்ரீ வைஷ்ணவரை அழைத்து -

கொல்லைப்புறத்துக்
கொடியில் -

உலர்த்தியிருந்த
ஒருசிலரின் துணிகளிலிருந்து -
ஒரு சாண் கிழித்து வர
உத்தர விட்டார்;

ஸ்ரீ வைஷ்ணவரும்
ஸ்ரீ ராமானுஜர் சொற்படி -
செவ்வனே
செயல் பட்டார்!

தமது
துணிகளிலிருந்து -

ஒரு சாண் கிழிக்கப்பட்டதை
ஒரு பெரிய இழப்பாகக் கருதி...

பாதிக்கப்பட்ட
பிராமணர்கள்
பெருங்கூச்சல் போட்டனர்;

மடத்துப் பணியாளர்களை -
முன்னிறுத்தி...

'இந்தப் பிழையை
இழைத்தது யார்?' என்று -
ஒவ்வொருவரையும்
உருட்டி மிரட்டிக் கேட்டனர்!

வாயால் பேசக்கூடாத -
வார்த்தைகளைப் பேசினர்;

வேதம் ஓதும்
வாயால் - ஒரு
விவஸ்தையின்றி
வேண மட்டும் ஏசினர்!

ராமானுஜர் - அவர்களது
ரௌத்திரம் கண்டு...

'மிலேச்சரும் பேசக் கூசும் -
மொழிகளைப் பேசுகிறீர்;
திருமடத்தில்
திருத்தொண்டு புரியும் -
திருத்தொண்டருக்கெல்லாம்
திருட்டு முலாம் பூசுகிறீர்!

எண்சாண் மேனி - இனி
எடுப்பதைத் தவிர்க்காது
ஒரு சாண் துணிமீது - இவ்வளவு
ஒட்டுதலா? சிறு -
கௌபீனம் அளவு
கிழிந்ததற்கு - மலையளவு
மௌடீகம் கொண்டு - பரஸ்பர
முட்டுதலா?'

என்று கண்டித்தார்; தன்
ஏளன நகையால் தண்டித்தார்!

'ஒரு கல்லில்
இரு மாங்காய்' -
என இருந்தது

எதிராஜர் குறி;

பிள்ளை உறங்காவில்லியின்
புனித பாகவத உளத்தையும்;

அதே நேரம்
அவரது மனைவி -
பொன்னாச்சியாரின்
பொன்னனைய குணத்தையும்;

இனம் குலம் பார்த்து
இனும் குருடாயிருக்கும்...

ஊரவர்க்கு
உணர்த்த வேண்டுமென -
உடையவர்க்கு
உண்டாயிற்று ஒரு வெறி!

வேடர் குலமும்
வேதியர் குலமும் - திருமால்
சீடர் குலமெனச்
சேர்ந்த பின்னாலே...

பேதம் பேசும் வாயில் -
வேதம் பேசுமா?

பேசினால் - உயிர்ப்
பொதுமை என்னும் - ஞான
வெளிச்சம் தன்னை
வைணவம் வீசுமா?

சிந்தித்தார் - இராமானுச
சீயர் இவ்வாறு; சாதியை -
நீட்ட விரும்பும் ஈனர்க்குக்
காட்ட விரும்பினார் செவ்வாறு!

புறம் பேசிய
பிராமணர் இருவரை - அந்திப்
போதில் ஒரு நாள் - தன்
பக்கலில் இருத்தி...

தெரிவித்தார் - தன்
திட்டத்தை;
இரகசியமாய் - தன்
இட்டத்தை!

'பணப்
பற்றாக்குறையால்...

நமது மடம் -
நாளுக்கு நாள் -
நலிந்து வருகிறது; இது என் -
நெஞ்சுக்குக் கவலை தருகிறது!

இப்படியே போனால் -
இந்த ஆண்டைச் சமாளிப்பது -

சொல்லொணாத -
சிரமமா யிருக்கும்;

போதிய அளவு -
பொருள் இருந்தால்தான்...

வைதிக -
லௌகிக -
காரியங்கள் யாவும்
கிரமமா யிருக்கும்!



எனவே -
எவ்வழியிலாவது...

தேவையான செல்வத்தை - நாம்
தேட வேண்டும்;
தங்கு
தடையின்றி -

வைணவம் என்னும்
வண்ணத் தேர் -
ஓரிடத்திலும் நின்றுவிடாது
ஓடவேண்டும்!

பணம்
பண்ண -

ஒரு வழி
உண்டு; சொல்கிறேன் -
கேளுங்கள்
காது கொண்டு!' என்று...

இராமானுஜர் - அந்த
இரு பிராமணர்களின் செவியில் -
ஓதினார் - மெல்ல
ஒரு சேதியை;

உடனே அவர்கள் முகங்கள்
உமிழ்ந்தன பீதியை!

– வளரும்

# கவிஞர் வாலி

# ராமானுஜ காவியம்

## 57

**ஒரு விவாக ரத்து.**

'ஊர்
உறங்கிய பிறகு -
உறங்காவில்லி
உறையும் வீட்டிற்கு...

நீங்கள் இருவரும் -
நுழைநரி போல் சென்று...

உறங்கும் பொன்னாச்சியின்
உடம்பில் இருக்கும் -
ஆபரணங்களை
அபகரித்து வாருங்கள்;

விடுவிடுவென்று - இங்கு
வந்து சேருங்கள்!

நள்ளிரவு வரை
நான்...

உறங்காவில்லியை - இங்கேயே
உட்கார்த்தி வைக்கிறேன்;
அவரைக் கொண்டு - ஓர்
ஆயிரம் தொன்னைகளை -
நான்
நடுச்சாமம் வரை தைக்கிறேன்!

எனவே - நீங்கள்
இருவரும்...
வில்லி பற்றிய அச்சத்தை
விடுக;

பயமின்றி -
பொன்னாச்சியார் நகைகளைப்
பறிக்கும் வேலையைப் -
பக்குவமாய்ச் செய்திடுக!'

இவ்வாறு -
இராமானுஜர்
தங்கள் செவிகளில் - மெல்லத்
தெரிவித்ததால்தான்...

அந்தணர் இருவரும்
அஞ்சி நின்றனர்;

ஆசாரியரே
அடுத்தவர் பொருளை
அபகரிக்கச் சொல்கிறாரே - என
அதிர்ச்சி யுற்றாலும்...

குரு வார்த்தைக்குக்
கட்டுப்பட்டு -
உறங்காவில்லியின்
வீட்டுக்குச் சென்றனர்!

மூடிக் கிடந்த
மூங்கில் படலை...
ஓசையின்றித் திறந்து
உள்ளே புகுந்து பார்த்தனர்;

ஓலைப் பாயில்
ஒருக்களித்தவாறு -
படுத்திருந்த
பொன்னாச்சியாரைக் கண்டு...

ஒருகணம் -
வெருவலால் வேர்த்தனர்!

பின்பு - மனத்தைப்
பாறையாக்கிக் கொண்டு...

ஒருக்களித்து உறங்கும் - அந்த



ஒண்டொடியின் -
ஒருபக்கத்து அணிகளை மட்டும்
உருவினர்;

இன்னொரு பக்கத்தில்
இருக்கும் நகைகளை எடுக்க -
மெல்ல அவளது
மேனியைப் புரட்டினால் -

விழித்துக் கொள்வாளோ - என
வெருவினர்!

ஆனால்
அறிதுயிலில் இருந்த
பொன்னாச்சி - ஒரு
பக்கத்து நகைகளை...

அவர்கள் களையும் வரை
அசையாது இருந்து விட்டு -

'பாவம்! இந்த
பாகவதர்களுக்கு -
தாளாத வறுமை போலும்; நகைகள்
தேவைப் படலாம் மேலும்!' என்று...

புரண்டு உறங்குதல் போல் - மறு
புறம் திரும்பிப் படுக்க -

'அம்மை விழித்துக் கொண்டாள்' என -
அந்தணர் ஓட்டம் எடுக்க -

உடையவர் கைக்கு -
வந்து சேர்ந்தது நகை; அவர் -
உதடுகளில் -
உண்டாயிற்று இள நகை!

உடனே
உறங்காவில்லியை -
விடை கொடுத்து
வீட்டுக்கு அனுப்பி விட்டு...

வில்லிக்குத் தெரியாமல்
வில்லியைப் பின்தொடரும்படி -
இரு பிராமணர்களிடமும்
இராமானுஜர் கூறினார்;

உறங்காவில்லியும் - அவரது
உத்தம பத்தினியும் -
என்ன பேசுகிறார்கள் என்பதை -
எங்காவது மறைந்திருந்து -

கவனமாகக் -
கேட்டு வரும்படி கோரினார்!

வில்லி - தன்
வீட்டுக்குள் நுழைந்ததும்...

முக
முறுவலோடு -
மணாளனை வரவேற்ற
மனைவியிடம் -

'உன் -
ஒருபக்கத்து நகைகளைக் -
காணவில்லையா? அல்லது நீ -
பூணவில்லையா?'

என்று வினவினார்;
ஏமாம்பாள் விளக்கினாள்!

"நாதா!
நான்...
ஓலைப்பாயில் - சற்று
ஓய்வாகப் படுத்திருக்க -

ஏழை பாகவதர் இருவர்
என்பால் வந்து -
ஒருபக்கத்து நகைகளை
உருவிக் கொள்ள -

'அய்யோ! பாவம்!
அவர்களுக்கு - என்ன
வருத்தமோ?
வறுமையோ?' என்று -

இதயம்
இளகி
இரக்கமுற்று - அவர்கள்
இன்னொரு புறத்து
நகைகளையும் -

எடுத்துக் கொள்ள
ஏதுவாக - சற்று
புரண்டு



456

படுத்தேன் மெள்ள!

என் -
அதிர்ஷ்டக் குறைவு;
அந்த பாகவதோத்தமர்கள் -
நான் - துயில்
நீங்கியதாய் நினைத்து -
ஓடி விட்டனர்; என்
ஒருபாதி நகைகளை விட்டனர்;

பரம
பாகவதர்களுக்கு -
பொன்னை ஈயாத நரகில்
என்னை இட்டனர்!"

பொன்னாச்சி -
புகன்றதைக் கேட்டு...

வில்லி
வெகுவாக வெகுண்டு -
உள்ளம் கூசினார்; பின்
உத்தம பத்தினியை ஏசினார்!

"உன் செயல் - எனக்கு
உடன்பா டல்ல;
வெட்கப் படுகிறேன் - உன்னை என்
வாழ்க்கைத் துணையெனச் சொல்ல!

'என் நகைகள்' - என நீ
எண்ணியதே மடமை;
என்னிடமும் உன்னிடமும்
எவை உளவோ -
அவை
அனைத்தும் பாகவதருடைமை!

பெண்ணுக்கு உள்ள - நகைப்
பைத்தியம் -



பொன்னாச்சியே! உன்னையும் -
பீடித்திருக்கிறது;

நானும் நீயும் - ஒரு
நல்லாசான் நிழலிலிருந்தும் -
நகைப் பித்து - உன்
நெஞ்சுள் நீடித்திருக்கிறது!

அம்மா!
அடியேன் இனி -
உன்னோடு வாழ்தல்
உதவாது;

பாகவதர்களை
பயமுறுத்திய - நீ
பற்றுமேல் - இன்னும்
பற்று வைத்துள்ள ஒரு மாது!"

என்று -
எரிந்து -

உறங்காவில்லி - ஒரு வாய்
உணவு கொள்ளாமலே -
வீட்டை நீங்கினார்; பொன்னாச்சி -
விழித்தபடியே தூங்கினார்!

இரு பிராமணர்களும் -
இந்தத் தகவல்களை...

உடையவரிடம் -
வந்து கூற -

அவர்
ஆர்ப்பரித்து எழுந்தார் -
வார்த்தை வாளால் - அந்த
வேதியர்களைக் கோற!

'கட்டும் வேட்டியில் - ஒரு சாண்
கிழிந்ததற்கே...
அலைப்புற்று -
அல்லற்பட்டு -



ஆற்றாது -
ஆராரையோ...

நாக்கில்
நரம்பின்றி -
வைத - போலி
வைதிகர்களே!

கோவணத் துணிக்குக்
கூச்சல் போட்ட நீங்கள் எங்கே?

பொன்னைப் -
புழுதி யென்றும்;
பாகவத அனுக்கிரகமே -
பெருஞ் சொத்து என்றும்;

ஓர்ந்து -
வாழ்ந்திருந்த
வில்லியும் - அவரது
வாழ்க்கைத் துணையும் எங்கே?

நான் -
நீராடி வருகையில்...

தாழ்ந்த குலத்து வில்லியின்
தோள்களைப் பற்றினேனென்று -
புறம் -
பேசினீர்கள்;
ஆசாரம்
அடியோடு கெட்டது - என
என்னையே
ஏசினீர்கள்!

வில்லியின் தோளை விட - நான்
விரும்பிப் பற்ற - ஓர்
உயர்ந்த தோள் - இங்கு
உங்களில் உண்டா?

ஒருவனை
உயர்த்துவது - அவன்
பிறப்பா? அல்லது
பற்றற்ற தொண்டா?

உங்களுக்கு - இதை
உணர்த்தவே...

நான்தான் -
நீங்கள் -

உலர்த்திய துணிகளிலிருந்து
ஒரு சாண் கிழிக்கும்படி -
உத்தரவு இட்டேன்; உங்களை -
உள்ளபடி கண்டு விட்டேன்!'

இன்னணம் ராமானுஜர் -
இடித்துரைத்ததும்...

458

போலி வைதிகர் –
பார்த்தனர் நிலம்;
விகசித்தது
வைணவ குலம்!

வில்லியும் – அவரது
வாழ்க்கைத் துணையும் –
விலகி நிற்கும்
விஷயம்...

எம்பெருமானாருக்கு
எட்டியது; இரு
உத்தமர் பிரிவை
உன்னி – அந்த
உத்தமர் உள்ளத்தில்
உதிரம் கொட்டியது!



வில்லியையும் பொன்னாச்சியையும் –
வரவழைத்துக் கேட்டார்;

'பொன்னாசை பிடித்த
பொன்னாச்சியை –
இனி –
ஏற்பதற்கில்லை!' என்று...

உறங்காவில்லி –
ஓரே போடாகப் போட்டார்!

சீயர் –
சிறிது யோசித்துவிட்டு...

காலட்சேப மண்டபத்தில்
கூடியிருந்த கூட்டம் –
வேடிக்கை பார்க்க
வினவினார் வில்லியை;

ஓரக்கண்ணால் பார்த்தார் –
ஒதுங்கி நின்ற வல்லியை!

'வில்லிதாசரே!
விலக்கிவிட்டீர் –
பொன்னாச்சியை – உமது
பெண்டாட்டி இல்லையென்று;

உமது – குல
வழக்கப்படி...

அவள் மறுமணத்திலும்
ஆட்சேபம் இல்லையென –
அறிவித்து விட்டீர்;
அதுவும் நன்று!

தக்கவர்க்குப் – பொன்னைத்
தானம் செய்வது போல் – நான்
பொன்னாச்சியை – ஏற்றதொரு
புருஷனுக்கு...

தத்தம் செய்தால்
தப்பிதமா?
உமக்கு இது –
ஒப்பிதமா?'

இப்படி –
இராமானுஜர் கேட்டதும்...

'தேவரீர் –
திருவுள்ளம் –
எதைச் செய்யினும் சரி;
எம்பெருமானார் சொல் வேத வரி!'

என்றார் வில்லிதாசர்;
ஏரார்ந்த வைணவ நேசர்!

உடனே –
உடையவர்...

'அவையோரே!
அடியேன் –
பொன்னாச்சிக்கு உகந்த
பாத்திரமாய் –

வில்லியைத் தேர்ந்து – இந்த
வல்லியை – அவருக்கே
வழங்குகிறேன் தானமாய்; இனி –
வாழட்டும் வேத கானமாய்!'

என்று –
எடுத்துரைத்து...

இருவரையும்
இணைத்தார்;

ஒருவரை விட்டு
ஒருவர் –
விலகா வண்ணம்
வைணவ விலங்கால் பிணைத்தார்!



– வளரும்

# சிரிப்பே



"நடந்தா மூச்சு வாங்குது டாக்டர்!"

"இந்த மாத்திரையைச் சாப்பிடுங்க..."

"இதைச் சாப்பிட்டா மூச்சு வாங்காதா டாக்டர்..?"

"இல்லே... நடக்க முடியாது!"



"டாக்டர்... என் கணவருக்கு ஞாபகமறதி அதிகமாப் போச்சு! ஞாயித்துக்கிழமை அன்னிக்கு மறந்துபோய் ஆபீஸ் போயிடறாரு!"

"அதனாலென்ன... போயிட்டுத் திரும்பிவரட்டுமே.. இதுக்குப் போய் ஏன் ரொம்ப வருத்தப்படறீங்க..?"

"நீங்க வேற டாக்டர்! மத்த நாளெல்லாம் ஞாயித்துக்கிழமைனு நினைச்சு, ஆபீஸுக்குப் போகமாட்டேங்கிறாரு!"

"டாக்டர்! என் பையன் 1992-ம் வருஷம் ஒரு ரூபாய் காயினை முழுங்கிட்டான்..."

"பத்து வருஷம் கழிச்சு இப்ப ஏன் வர்றீங்க?"

"இல்லை டாக்டர்! இப்பத்தான் 1992-ம் வருஷம் வெளியிட்ட ஒரு ரூபாய் காயினை முழுங்கிட்டான்னு சொன்னேன்!"



# ராமானுஜ

## அமுதனார்!

அற்றை நாளில் - திரு
அரங்கன் திருக்கோயில்
அதிபராக இருந்தவர் -
அமுதனார் எனும் அத்துவைதி;

பின்பு - பரம
பாகவதோத்தமராக - அவர்
பரிணமிக்க நேர்ந்தது - ஊர்



58

கவிஞர் **வாலி**

462

# காவியம்

பேசிய ஓர் அதிசயச் செய்தி!

அமுதனாரின் -
அன்னையார்...

இப் புவிமிசை
இருந்த நாள்களில் -
இராமானுஜரின்
இதோபதேசங்களை...

வெகுவாக
விரும்பிக் கேட்பாராம்;
கேட்டுக் கேட்டுக்
கண்ணீர் மல்கி -
கேட்டதையே - மீட்டும்
கேட்க வேட்பாராம்!

ஆதலால்
அமுதனார் -
தனது
தாயாரின் சிராத்தத்திற்கு...

'போக்தா'வாக - அதாவது
பிதிர் ஸ்தானத்தை ஏற்பவராக -
வைணவர் ஒருவர் -
வாய்ப்பா ராகில்...

அன்னையாரின்
ஆன்மா சாந்தியடையும் -
என
எண்ணினார்;
இதற்கு உதவுமாறு - அவர்
இராமானுஜரை நண்ணினார்!

உடையவர்
உடனே -
கூரேசனைக்
கூப்பிட்டு...

'போக்தாவாய் - நீர்
போய் வாரும்;
அதனால் -



அமுதனாருக்கும் -
நமக்கும் -
நன்மை சேரும்!' என்றார்;

குருவின் ஆணையைக்
கூரேசன் ஏற்று -
அமுதனார்
அகத்திற்குச் சென்றார்!

'போக்தா'வாகப்
புசித்த பின்பு...

தட்சிணையைப் பெற்று -
திருப்தி தெரிவிக்க வேண்டும் -
'த்ருப்தோஸ்மி' என்று; கூரேசன் -
தெரிவிக்கவில்லை அன்று!

அமுதனார்
அள்ளி அள்ளி -
தட்சிணை
தந்தும்...

கடைசிவரை -
கூரத்தாழ்வான் -
திருப்தி எனும் சொல்லை -
தெரிவிக்கவே இல்லை!

அமுதனார்
ஆடிப் போனார்;
அன்னையார்
ஆன்மா
அமைதியுறாதே - என
ஆனனம் வாடிப் போனார்!

"எது கொடுத்தால்
எளியேன்பால் இரங்கி -
தேவரீர்
'த்ருப்தோஸ்மி' என்பீர்?" என்று -

வெகு
விநயமாகக் கோரினார்;
'கோயில் திறவுகோல்!' என்று -
கூரேசன் கூறினார்!

அமுதனார் ஓர்ந்தார் - திரு
அரங்கனின் லீலை;
அன்னையாரின்
ஆத்மசாந்தியை முன்னிட்டு -
கூரேசனிடம் தந்தார் - திருக்
கோயிலின் திறவுகோலை!

'த்ருப்தோஸ்மி' என்று -
தெரிவித்தார் கூரேசன்;
புன்னகைத்தான்
பன்னகத்தின் மேல் -



466

படுத்திருக்கும்
பரம்பொருளான சருவேசன்!

அமுதனார்
அகமகிழ்ந்து போனார்;
ஸ்ரீ ராமானுஜரின்
ஸ்ரீ மடத்து சீடராக ஆனார்!

அமுதனார் - வெறும்
ஆலய அதிபர் மட்டுமல்ல;
அருந்தமிழில்
அந்தாதி பாடுவதில் -
ஆருமில்லை
அவருக்கு நிகரென்று சொல்ல!

'இராமானுச நூற்றந்தாதி'
இசைத்து...

உடையவர் புகழை
உச்சத்தில் வைத்தார்;
அந்த
அந்தாதி -
வண்ணத் தமிழில் - இன்றளவும்
வாடாத வாசத்தார்!

தான் - இந்தத்
தகவு பெற...
உதவிய கூரேசனை -
உள்ளத்தில் போற்றினார்;

'மொழியைக் கடக்கும் -
பெரும்புகழான்; முக்குறும்பாம் -
குழியைக் கடக்கும் - நம்
கூரத்தாழ்வான்!' என்று...

குளிர் தமிழில் -
கூரேசன் மேன்மை சாற்றினார்!

'சாதிச் செருக்கு' -
'செல்வச் செருக்கு' -
'கல்விச் செருக்கு' -
எனும்
இந்த -
மூவகைச் செருக்கே - வஞ்ச
முக்குறும்பு என்றும்;

மூன்றும் - ஒருவன்
முன்னேறும் -
வாழ்க்கைப் பாதையில் - உள்ள
வஞ்சப் படுகுழிகள் என்றும்;

அவற்றை -
அபாயமின்றிக் கடக்க -
தனக்கு உதவிய -
தேவு கூரேசன் என்றும்;

அமுதனார் குறித்தார் - தன்
அந்தாதியில்;
எதிராஜர் -
எதிரிலேயே -
அரங்கேற்றிய -
அந்தத் தேதியில்!

'பிரபந்த காயத்ரி!' என - அது
பேசப் படுகிறது; அதை
ஓத
ஓத - ஸ்ரீ
வைஷ்ணவர்களின்
வினை விடுகிறது!

இன்னணம் - ஸ்ரீ
இராமானுஜரால்...

அனேகர்
ஆட்கொள்ளப்பட -
முக்கியமான
முகாந்தரம்...

எதிராஜரின்
எளிவந்த தன்மை;
சின்னஞ்
சிறாரிடமும் -
அன்பு பாராட்டும்
அவர் இதயம்...

மெல்லிய -
மலரினும் மென்மை!

ஒரு நாள்
உடையவர் - திரு
வீதி வழி

வருகையில்...

நண்டுஞ்சிண்டுமாய்
நாலைந்து பிள்ளைகள் -
விளையாடிக் கொண்டிருந்தனர்
வீதிப் புழுதியில்...

'இது கோயில்' என்றும்;
'இது கோபுரம்' என்றும்;
'இது பிராகாரம்' என்றும்;
'இது பெருமாள்' என்றும்;

குறுக்கும் நெடுக்கும் -
கோடுகள் போட்டு;
பாடினர் கொச்சையாய் -
பல்லாண்டு பாட்டு!

இராமானுஜர் - சற்று நின்று
இவற்றை ரசிக்க...

சிறுவன் ஒருவன் -
'ஜீயரே! இதோ உமது பெருமாள்!'
என்று -
ஏதோ ஒரு கோட்டைக் காட்ட...

'இதோ! இந்த -
இரண்டும்தான் - பெருமாளின்
திருவாழி;
திருச்சங்கு!' என்று -

இன்னொரு பையன் - வேறு
இரு கோடுகளைக் காட்ட...

உடனே
உடையவர் - உளத்தில்
உவகைப் பெருவெள்ளம்
ஊற்றெடுக்க -

'தமர் உகந்த தெவ்வுருவம் -
அவ்வுருவம் தானே!' என்று -
செந்நா தித்திக்கச்
சொல்லிக் கொண்டு -

சிறுவர்கள்
சுட்டிய -
கீறல்களை நோக்கிக் -

கீழே விழுந்து சேவித்தார்;

புழுதியில்
புனைந்த கோடுகளை -
பெருமாளாகவே
பாவித்தார்!



பிறகு - ஒரு
பையன்...

கொட்டாங்கச்சியில் -
கொஞ்சம் மண்ணை எடுத்து -

'பெரிய பெருமாளின்
பிரசாதம்!' என்று கொடுக்க -

மண்ணை -
மகாப் பிரசாதமாக -

சீயர் - தன்
செங்காவி மேலாடையில் -
ஏற்றுக் கொண்டார்; அதில்
எம்பெருமானையே கண்டார்!

கைகொட்டிக் -
குதுகலித்தனர் பிள்ளைகள்;
கள்ளம் கபடு -
கடுகளவுமிலாக் கிள்ளைகள்!



பிள்ளைகளோ -
பெரியவர்களோ -
கல்லாரோ -
கற்றாரோ -
கீழ்வகுப்போ -
மேல்வகுப்போ -

எல்லாப் பிறவிகளையும்;
எல்லா ஜீவராசிகளையும்;

ஒருநோக்கு - எனும்
பெருநோக்கு கொண்டு -
பார்க்கும்
பரந்த மனம்...

இராமானுஜருக்கு
இருப்பது - அவரது
ஒவ்வொரு செயலிலும்

486

உறுதி யானது;

அவரது
அளப்பரும் கருணையை...

இமயம் தொட்டு
குமரி மட்டும் -
காற்று
கொண்டு போனது!



விறுவிறுவென்று
விரிவடைந்தது -
வைணவப் பேரரசு; சதுர் -
வர்ணத்திற்குமான ஓரரசு!

'பஞ்சமர் ஆயினும் - அவர்
பரம பாகவதர் ஆவரேல் - நம்
நெஞ்சமர் நேயரே!' எனும் -
நெறி நின்றார் எதிராச சீயரே!

'மனிதனை -
மனிதனாகப் பார்க்கும் - முதல்
மனிதனே!' என்று
மனிதம் துதித்தது அவரை;

மன்பதை
மொத்தத்தையும் -
சிந்தாமல்
சிதறாமல்...

ஒருசேரத் - தன்னுள்
வைத்துக் காத்த மனத்தவரை!

ஆண் பெண்
அடங்கலாக -
ஜீயர் மடத்தில்
ஜேஜே என்று -

நாட்பட
நாட்பட -
சீடர் குழாம் பெருகியது; அது -
சீயரைக் கண்டாலே உருகியது!

திருவனந்தபுரத்து அம்மை;
திருவாட்டாற்று அம்மை;
திருக்கண்ணபுரத்து அம்மை;

திருநறையூர் அம்மை;
திருவண்பரிசாரத்து அம்மை;

என்றெல்லாம் -
எதிராஜர் அவையில்...

பழுத்த -
பக்தமணிகள் - எனப்
பிறங்கினர் - பல
பெண்மணிகள்!

ஆறு ருதுக்களும்
ஆறு தடவைக்கு மேல் -
வந்து வந்து போயின;
வருடங்கள் ஆயின!

கால்கள் இன்றிக்
காலம் ஓடியது;
ஆண்டுதோறும் -
ஆர்க்கும் கூடுதல் போல் -
அருள்மிகு உடையவர்க்கும் -
அகவை கூடியது!

வந்து
வணங்குவார்...

கவலைக் கடலைக்
கடியும் எதிராஜர் - தானே
கவலைக்கடல் வீழ்ந்தார்; சதா -
கடுஞ்சிந்தனையில் ஆழ்ந்தார்!

'வருகிறதே - அடடா!
விருத்தாப்பியம்; அதற்குள் -
வரைய ஏலுமோ - அந்த
விரிவான காப்பியம்?'

என -
ஏகாந்தத்தில் -



கங்குலும் பகலும்
கவன்றார் அதுபற்றி;

ஆசாரியரின்
அவஸ்தை என்ன - என்று
அறியாது நின்றது
அடியார் குழாம் அவரைச் சுற்றி!

– வளரும்

# ராமானுஜ காவியம்

59

**ஸ்ரீநகரில் – ஸ்ரீ ராமானுஜர்.**

உடையவரை
உருக்கிய –
வியாகுலம்
வேறொன்று மில்லை; இனியும் –
நாள் கடத்தாமல்
நிறைவேற்றியாக வேண்டும்...

ஆசாரியர் – ஸ்ரீ
ஆளவந்தாருக்கு –
அன்று –
அவர் தந்த சொல்லை!

காக்க வேண்டும் – ஒருவருக்குக்
கொடுத்த வாக்கை; ஆனால் –
காப்பதில் உள்ள
கஷ்ட நஷ்டங்களைக்
கருதுகையில்தான் – ஒருவித
கலக்கம் ஏற்பட்டு...

உடையவருக்கு – அது
உண்டாக்கியது மனச்சிக்கை!

ஒப்புக்கொண்ட வேலை –
ஒன்றும் எளிதான வேலையல்ல;

அனேக விஷயங்களை
ஆய்வு செய்து – ஒரு
முடிவு கண்ட பின்பே – அதில்
மூக்கை விடவேண்டும் மெல்ல!

'பகவான் வியாசர்
படைத்தருளிய –
பிரும்ம சூத்திரத்திற்கு
பாஷ்யம் எழுதுவேன்!'

என்பதுதான்
எதிராஜர் – அன்று
எல்லோர் முன்பும்
எடுத்துக் கொண்ட சூள்; அதைச் –

செவ்வனே
செய்யாவிடில் – அவர்
சேமித்து வைத்திருக்கும்
சகல பாண்டித்தியமும் தூள்!

ஏனெனில் –
ஏற்கெனவேயே...

பல
பெரியோர்
பண்ணி வைத்துளர்
பாஷ்யம் –

தாம்
தழுவிய சாத்திரத்திற்கு –
அனுகூலமாய்
அந்த சூத்திரத்திற்கு!

ஆளவந்தார் ஸ்வாமி
அவாவியதோ –
ஆக்கப் பெறுகின்ற
அந்த பாஷ்யம்...

---

கவிஞர் வாலி

விசிஷ்டாத்வைதப்
பேருரையாக -
விளங்க வேண்டும் என்றுதான்;

ஆளவந்தார்
அத்வைதி அல்லவே;
ஆகவே - அப்படி
அவர் எண்ணியது நன்றுதான்!

போதாயன பாஷ்யம்;
த்ரமிட பாஷ்யம்;
குஹாதேவாசாரியர் பாஷ்யம்;
ஆசாரிய பாருசி பாஷ்யம்;

பகவத் -
ஸ்ரீவத்ஸாங்கமிச்ரர் பாஷ்யம்;





இன்னணம் - பல
இருப்பினும்...

போதாயன பாஷ்யத்தைப்
பார்க்கப் பிரியப்பட்டார் -
எம்பெருமானார் - தான்
எழுதத் தொடங்கு முன்பு;

அந்த பாஷ்யத்தின் மீதுதான் -
அவருக்கு அதீத அன்பு!

அதற்குக் காரணம் -
அந்த போதாயனர்...

வேதங்களை
வகுத்துத் தந்த -
வியாசரின் நேர் சீடர்; அந்த
வகையினில் அவர் விசேடர்!

புகழ்பெற்ற - அந்த
போதாயன பாஷ்யத்தைக் -
காண வேண்டுமானால் -
காஷ்மீரம் போக வேண்டும்;

அந்த தேசத்து
அரசர் பிரானின் -
கடாட்சத்தால்தான்
காரியம் ஆகவேண்டும்!

நீண்ட
நெடிய -
யாத்திரை பற்றித்தான்
யதிராஜர் கவலைப்பட்டார்;

பெரியநம்பி முதலிய
பெரியவர்களோடும்;
முதலியாண்டான் முதலிய
முக்கிய சீடர்களோடும்;

கலந்து ஆலோசித்து -
கடைசியில் -
காஷ்மீரம் புறப்பட - நாள்
குறித்தபின் கவலை விட்டார்!

அரங்கன்
அனுமதி -
மானசீகமாகக் கிடைத்த - ஒரு
மகோன்னதமான நாளில்...

கூரத்தாழ்வானைக் - கூடக்
கூட்டிக்கொண்டு -
பல கூண்டு வண்டிகளையும்
பூட்டிக்கொண்டு -

ஏவலுக்கும் காவலுக்கும்
ஏராளமான பேர் உடன்வர -
எதிகளின் ராஜர் எதிராஜர்

472

ஏறினார் பல்லக்கு; ஒரு
வைணவர் கூட்டமே
விரைந்தது வட திக்கு!

இடையிடையே - சற்று
இளைப்பாறி;

நாராயண
நாமத்தை -
உற்ற துணையாய்
உரக்கக் கூறி;

பல நாள்கள்
பயணித்து - தன்
பரிவாரங்கள்
புடைசூழ...

ஸ்ரீ ராமானுஜர் சேர்ந்தார்
ஸ்ரீநகர்; வெண்பனி -
வர்ஷித்தபடியும் -
வண்ண வண்ணப் பூக்கள்
புஷ்பித்தபடியும் -
பொலிகின்ற பூநகர்!

பூரண கும்பத்தோடும்; வேத
பாராயணத்தோடும்; மற்றும்
பல்வகைப்
பல்லியங்களோடும்;

எதிராஜரை
எதிர்கொண்டழைத்தான் -
காஷ்மீர வேந்து; உரிய
கவுரவம் ஈந்து!



உடையவரும்; அவர்
உடன் வந்தோரும்;
இளைப்பாறவும் -
களைப்பாறவும் -

மாபெரும் - மணி
மண்டபமொன்றை
மன்னன் தந்தான்; மறுநாள்
மரியாதை செலுத்த வந்தான்!

மகா
மந்திராட்சதை தந்து...

அருள்கூர்ந்து
ஆசீர்வதித்தார்
காவி அரசு; கைகுவித்தான்
காணி அரசு!

பின் -
பவ்வியமாக...

'துதிக்கத் தகுந்த
துறவரசே!
தேவரீர் வருகையால்
தமியேன் தன்யனானேன்,
தொட்டுத் தொடரும்
தீவினை யாவும் தீர்ந்து போனேன்!

என்ன விஷயமாய் - இங்கு
எழுந்தருளியுள்ளீர்கள் -
என்று
எளியேன் அறியலாமா?
ஆன்றோர்க்கு உதவ - என்றும்
அவாவுறும் என் அந்தராத்மா!'

என்று
எதிராஜரிடம்
வினவினான் கொற்றவன்; பதில்
விரித்தார் நற்றவர்!

'வேந்தே!
வேத வியாசரின்
பிரும்ம சூத்திரத்திற்கு
பாஷ்யம் எழுத உத்தேசம்;

அதன்பொருட்டு
அடியேனுக்கு - நீ
உதவினால் - உன்னால்
உயர்வுறும் இத்தேசம்!

மகரிஷி போதாயனரின்
மகா பாஷ்யம் இங்கு உள்ளது;
அடியேன் -
அதை -
ஒருமுறை படிக்க
உபகரித்தால் நல்லது!

சரஸ்வதி பீடாதிபதிகளின்

சம்மதத்தைப் பெற்றால்தான்
அது சாத்தியம்; ஏனெனில் -
அது அவர்கள் பாத்தியம்!'

இராமானுஜரின்
இந்த வேண்டுகோளை...

அரசன் சொல்லியும்
அங்குள்ள பண்டிதர்கள் -
ஏற்க மறுத்தனர்; அவர்கள்
எதிராஜரையே வெறுத்தனர்!

'அரசர்பிரானே! இந்த
அந்தண சிரேஷ்டர்...

போதாயன கிரந்தத்தைப்
படிப்பதற்கு - நாம்
உதவுவது - அவ்வளவு
உசித மாகாது;



ஆயிரம் படித்தாலும்
ஆயிரம் கேட்டாலும் -
அவரவர் நம்பிக்கை
அவரவரை விட்டுப் போகாது!

நாங்கள்
நாளும் போதும் -
கண்ணெனக் காக்கும்
கொள்கைகளுக்கு இவர் அயல்;

இந்த -
இராமானுஜர்...

விசிஷ்டாத்வைதம் எனும்
வைணவக் கொள்கையை -
வைய மெங்கும்
வர்ஷிக்க வந்துள்ள புயல்!

எங்களுக்கும் இவர்க்கும் -
எந்த வகையில் ஒத்துவரும்?

இவர்
இஷ்டத்தை - அரசர்
பூர்த்தி செய்தால் - புதிய
பிரச்சினைக்கு வித்து வரும்!

போதாயனரை - இவர்
படிக்க விரும்புவது...

அதை
அறவே மறுத்து -
ஒரு கிரந்தம் செய்கின்ற
உள்நோக்கமாய் இருக்கலாம்;

காலம் காலமாய் - நாம்
கட்டிக் காக்கும் - அந்தக்
கனகக் காவியம் - இவர்
கைச்சூடு பட்டுக் கருக்கலாம்!'

பண்டிதர்கள் - இவ்வாறு
பிடிவாதமாய்ப் பேசினர்;

பொருந்தாத
பொய்க் காரணங்களை -
சீயர் மேல்
சகட்டுமேனிக்கு வீசினர்!

அரசன் அவர்களுக்கு -
அறிவுரை கூறினான்;

'நெடுந் தொலைவிலிருந்து
நம்மை நம்பி -
இங்கு வந்திருப்பவர் - இந்த
இராமானுஜ நம்பி!

நீங்கள் மறுப்பது
நியாய மல்ல;
அனுமதியுங்கள் -
அந்த கிரந்தத்தை - இவர்
ஒருமுறை - இங்கிருந்து
வாசித்துவிட்டுச் செல்ல!'

என்று - அந்த
ஏந்தல் -
பண்டிதர்களிடம்
பரிவோடு கோரினான்!

'அரசே!
அதைப் படிக்க -
சரஸ்வதியின்
சம்மதத்தைக் கேட்டு -

474

ஓர்
ஓலையை –
இவர்
எழுதித் தந்தால்...



அதை
அப்படியே –
சரஸ்வதி
சன்னிதானத்தில் வைத்து –
தாளிடுவோம்
திருக் கதவம்;

காலையில் –
கதவைத் திறந்தால் –
கலைமகள்
காட்டுவாள் திருவுள்ளம்!'

இவ்வாறு – பண்டிதர்
இயம்ப;
அரசனும் –
அந்த யோசனைக்கு இசைய...

ஓர்
ஓலையில் –
கலைமகளுக்குத் – தன்
கோரிக்கையை...

எதிராஜர்
எழுதித் தந்தார்;

பண்டிதர்கள் – அதைப்
பெற்று –
சன்னிதானத்தில் வைத்து
சாத்தியபின் –

உடையவர் – தன்
விடுதிக்குத் திரும்பி வந்தார்!

சரஸ்வதி பீடமுள்ள
சன்னிதானத்தின் –
கதவைக்
காலையில் திறந்து பார்த்தால்...

எதிராஜர்
எழுதிய ஓலை –
கலைமகளின்
காலின்கீழ் இல்லாமல் – அவள்
திருமுடி மேல்
தென்பட்டது;
பண்டிதர்களை – அவர்களது
புத்தியே சுட்டது!

கிரந்தச் சுவடிகளை –
கூரேசன் –
ஒருமுறை
உட்கார்ந்து படித்தார்;
செவிமடுத்து –
சீயர் கண்ணீர் வடித்தார்!

அரசன்
அதிசயித்து –



'இராமானுஜரே!
இந்த கிரந்தம் –
இனி உமதெனக் கொள்க;
எடுத்துச் செல்க!' என்றான்;

எம்பெருமானாரின்
எழிலார்ந்த –
முகவிலாசத்தில் –
முற்றும் மயங்கி நின்றான்!

போதாயனர் பாஷ்யத்தை –
பத்திரமாக எடுத்துக்கொண்டு...

ஸ்ரீ ராமானுஜர் –
ஸ்ரீநகர் எல்லை தாண்டி –

உடன் வந்த
உற்ற சீடர்களோடு –
இரவில் – ஓர்
இடத்தில் கண்ணுறங்குகையில்...

பண்டிதர் கூட்டம் – அதைப்
பறித்துச் சென்றது; காட்டில்
வீசிய கூதல் – அதைக் கண்டு
வீசாது வருந்தி நின்றது!

**– வளரும்**

கவிஞர் வாலி

பராசர பட்டர்.

பல மாதங்கள் -
பல காதங்கள் -
படாத பாடுபட்டுப் -
பயணித்து...

காஷ்மீரம் சேர்ந்து - அங்கு
கண்டெடுத்த
காவியப் புதையல் - இன்னணம்
களவு போனதே என்று -

ஏகமாய்க் கலங்கினார்
எதிராசர்;

ஒப்பிக்கும் அளவு...

கேட்டது
கேட்டபடி - என்
கருத்தில் வாழும்
கால் ஊன்றி நின்று!'

இவ்வாறு கூரத்தாழ்வான்
இயம்பியதும் - அவரை
இராமானுசர்
இறுகத் தழுவினார்;

உள்ளத்தில்
உண்டான
உவகைப் பெருக்கே - ஓர்
உந்துசக்தியாக...

பகலிரவு

# 60 ராமானுஜ

'தேவையில்லை கலக்கம்' என்று -
தேற்றினார் அவரைக் கூரேசர்!

'சுவாமி!
சிறியேன் - அந்த
போதாயன பாஷ்யத்தைப்
படித்தேனல்லவா ஒருமுறை;

வரிக்கு வரி -
வார்த்தைக்கு வார்த்தை - அதை
உள்வாங்கி
வைத்துளது என் உளச்சிறை!

எம்பெருமானாருக்கு
ஏற்கெனவேயே தெரியும் -
எளியேன் - ஓர்
ஏகசந்தக்கிராகி என்று;

ஒருமுறை கேட்டால் - அதை

பாராது - தன்
பரிவாரத்தோடு - ஒல்லையாய்ப்
பொன்னரங்கம் திரும்பி...

ஆளவந்தார் ஸ்வாமிக்கு
அளித்த வாக்குப்படி -
ஸ்ரீ பாஷ்யத்தை
ஸ்ரீ ராமானுஜமுனி எழுதினார்!

ஓர்
ஒப்பற்ற கிரந்தத்தை
வைணவம் பெற்றது;
வையம் பயனுற்றது!

அதை
ஆக்கிமுடித்த கையோடு...

'வேதாந்த தீபம்';
'வேதாந்த சாரம்';

'வேதார்த்த ஸங்கிரகம்';
மற்றும் 'கீதா பாஷ்யம்';

ஆகிய –
அற்புதமான நூல்களையும்...
யதிராஜர்
யாத்தார்;

விழுமிய கருத்துக்களை – தன்
விசாலமான அறிவுச்சரட்டில் –
கோலமணி மாலையாய்க் –
கோத்தார்!

நாள்கள்
நகர்ந்தன; காலம்
போட்ட போட்டில் – பற்பல

உபாதானம் எடுத்து
உண்டு வந்தவர்;
ஊன்; உயிர்; உளம் – மூன்றையும்
உடையவர்க்கே தந்தவர்!

ஒருநாள் – அவர்
உபாதானம் செல்ல முடியாமல்...
ஆகாயம் பொத்துக்கொண்டு –
அடைமழையாய்ப் பொழிந்தது;

ஓயவில்லை;
உச்சிப் பொழுதும் கழிந்தது!

உஞ்சவிருத்திக்கு
உரியதான –

காலமும்

# காவியம்

பொழுதுகள் தகர்ந்தன!

போதாயன கிரந்தத்தைப் –
பொட்டை நெட்டுருப் போட்டு...

அதில் உள்ளதை
அவ்வப்போது –
எதிராஜருக்கு
எடுத்து உதவிய கூரேசர்...

பிறவிப்
பணக்காரர்; எனினும் –

அனைத்தையும் துறந்துவிட்டு
அன்பு மனைவி ஆண்டாளுடன் –
அரங்கத்தில் குடிபுகுந்த
ஆன்மசாதகர்; அருந்திரர்!

நித்தியப் படி –
நான்கு திருவீதிகளிலும்...



கடந்து விட்டது;
வீட்டில் சோறாக்கும்
வழக்கம் முன்பே விடுபட்டது!

உண்ணும் சோறும்; மனம்
உவந்து பருகும் நீரும்;
திருவாய்மொழியே என்று -
தினம் கருதும் கூரேசர்...

பாசுரங்கள் சிலவற்றை

பக்தியோடு சொல்லிவிட்டு -

பட்டினியாகவே
படுத்துக் கொண்டார்;
படுத்தபடியே - இன்னும் சில
பாசுரங்களை உண்டார்!

அப்போது - திரு
அரங்கநாதன்
அமுது கொள்வதற்கு -
அறிகுறியாக...

திருக்கோயில்



480

திருச்சின்னம் ஊதப்பெற்றது;

குணவதியான
கூரேசரின் மனைவி -
ஆண்டாளின் செவியில்
அவ்வோசை விழ...

அவள் மனம் -
அரங்கன் மேல் சினமுற்றது!

பெருமாள்
படுத்திருக்கும்
திசை நோக்கிப் பேசினாள்; சற்று -
தடித்த சொற்களை வீசினாள்!

'அன்பார்ந்த - என்
அகத்துக்காரர்; உமது -
பரம பக்தர் - எனும்
பெரிய பேரர்...

உபாதானம் செல்ல -



ஒண்ணாதபடி மழை பெய்கிறீர்;

அத்தகு
அடியார் -
கொலைப் பட்டினியில் - இங்கு
கிடக்க...

அண்டா
அண்டாவாக -
அக்கார அடிசிலை
அங்கே நீர் அமுது செய்கிறீர்!

ரங்கனாதரே! உமது
ராஜாங்கம் நன்று;
அதன் லட்சணத்தை
அறிந்தேன் இன்று!'

ஆண்டாள் - இப்படி
அரற்றுகையில்...

திருவரங்கம்
திருக் கோயில் -
ஊழியருள் ஒருவரான
உத்தமநம்பி என்பவர்...

கூடைப் பிரசாதத்தைக்
கொண்டு வந்தார்;
'கொள்ளீர் ஆழ்வானே!' என்று -
கும்பிடு போட்டுத் தந்தார்!

கொடுக்க வந்தவர் -
கொடுத்துவிட்டுப் போனதும்...

'பெருமாளிடம் - நான்தான்
புருஷனுக்காக விண்ணப்பித்தேன்!'
என்று - ஆண்டாள்
எடுத்துச் சொன்னதும்...

கூரேசர் - சற்று
கூனிக் குறுகினார்;
சாந்தமுள்ள திருமுகம்
சிறிது இறுகினார்!

பிறகு - தன்

பத்தினியைப் பார்த்து...

'உன்
விண்ணப்பத்தில்
வந்த பிரசாதம்; எனவே -
இதில் நீ
இரண்டு பாகம் கொள்; நான் -
உண்பதற்கு
ஒரு பாகம் போதும்!' என்று -
கூரத்தாழ்வான்
கூற -



ஆண்டாள்
அவ்வாறே உண்டாள்;
மணாளன் சொல்
மறையெனக் கொண்டாள்!

அய்யிரு மாதங்களில் -
ஆண்டாள் அம்மை...
பெற்றெடுத்தாள்
பிள்ளைகள் இரண்டு;

பகவத்
பிரசாதமே - இரட்டைப்
பிள்ளைச் செல்வமாய்ப்
போந்தன திரண்டு!

விவரம் அறிந்து - கூரேசர்
வீட்டுக்கு வந்தார் -
உடையவர் என்று - வைணவ
உலகு தொழும் பெருந்தகை;

'பராசரர்' - எனும்
பெயரை -
மூத்ததாய் வந்த
மகவுக்கும்;

'பகவான் வியாசர்' - எனும்
பெயரை -
மூத்ததன் பின் வந்த
மகவுக்கும்;

அழகுறச் சூட்டி;
அய்ம்படைத் தாலி மாட்டி;

ஆசி கூறினார் -
அவ் அருந்தகை!

'பராசர பட்டர்' எனப் -
பலரும் விளித்த - பிள்ளை
பராசரர் - தன்னைப்
பெற்றவரே வியக்கும்படி...



அகவை ஐந்திலேயே
அசாத்திய மேதையாய்
விளங்கினார்; ஞான -
வெளிச்சமொடு துளங்கினார்!

பெரிய பெருமாள்
பிரசாதம் அல்லவோ -
பிள்ளையென - ஒரு
பெண் வயிற்றில் விளைந்தது;

அந்தப் பிள்ளை - ஓர்
அந்திப் போதில்...

திருவரங்கம் -
திருவீதியில் -
விளையாடியபடி - புழுதியை
விரல்களால் அளைந்தது!

அவ்வமயம் -
அத் தெரு வழியே...



காவலர் -
கைகளில் ஏந்திய
காளங்களை ஊதிக் -
கட்டியம் கூற...

'ஸர்வக்ஞபட்டன்' என்போன் -
சிவிகையில் ஏறி வந்தான்;

தான் எனும்
தருக்கையும் செருக்கையும் -
தனது
திருஷ்டிகளிலேயே தந்தான்!

'விருது ஊதி;
வண்ணச் சிவிகை ஏறி;

4 82

இப்படி ஒருவன் -
இலச்சை யின்றி;

ஆழ்வார்;
ஆண்டான்;
எம்பார்;
எம்பெருமானார்;



ஆகிய
அநேக பெரியோர் -
வாழும் இடத்திற்கு
வருதல் என்ன துணிவு? அவன் -
விடுத்த தென்ன பணிவு!'

அகவை
அஞ்சு ஆன -
பராசர பட்டர் - அவனைப்
பரிசோதிக்க எண்ணினார்; பிடி -
மண்ணள்ளிக் கொண்டு - அவன்
முன்பாக மெல்ல நண்ணினார்!

"அய்யா!
அறிஞர்க்கு அறிஞரே! என் -
வினாவிற்கு - தக்க
விடையளித்துவிட்டு - பின்
விருதை ஊதியபடி
வீதிவழி போகலாமே?
'சர்வக்ஞன்' எனும் பட்டமும் -
சாஸ்வதம் ஆகலாமே?" என்று -

அறிவித்துவிட்டு - தான்
அங்கையில் அள்ளிய -
புழுதி மண்ணைப்
பராசரர் அவனிடம் காட்டி...

'இது -
எவ்வளவு?'
என்று வினவ; சிவிகை
ஏறிவந்த வித்துவான் - 'சிறுவன்
ஏந்திய புழுதி மண்ணை -
என்னணம் எண்ணிச் சொல்வது?'

என்று -

ஏகமாய்க் குழம்பி - தன்
மனத்துள் -
முனக;

பராசரர் - அவனைப்
பார்த்து...

'ஒரு கைப்புழுதி என்று -
விடையிறுக்க மாட்டாத -
நீரா ஸர்வக்ஞர்!' என்று
நகைக்க; வித்துவான்
திகைக்க;

சுற்றி நின்றோர்
சிரித்தனர்;
வித்துவானின் எடுபிடிகள்
வெகுண்டு -
பராசர பட்டரைப்
பார்வையால் எரித்தனர்!

சிவிகையிலிருந்து - அந்த
'சர்வக்ஞன்' இறங்கி...
பராசரரைப்
பாசமொடு தழுவி -



'குழந்தாய்! நீயென்
குரு; குட்டிக் குருநாதன்!' என -

உச்சி மோந்தான்;
உப்பு முத்தங்கள் ஈந்தான்!

விஷயம் அறிந்த -
உடையவர்...

'ஸ்ரீ வைஷ்ணவ -
விசிஷ்டாத்வைதத்தின் புகழ் -
உமது மகனின் லீலையால் - இனி
உயரும் மண்மிசை -

என்பதற்கு - இது
ஏற்றதொரு மங்கள முற்குறி!'
என்றார் கூரேசனிடம்; குறை -
ஏதுமிலாக் குணக் குன்றிடம்!

- வளரும்

# ராமானுஜ

## திவ்ய தேச யாத்திரை

கீர்த்திமிகு
கிரந்தங்கள் - எழுதிப்
பூர்த்தியான
பிற்பாடு...

ஸ்ரீராமானுஜர் -
ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்தை -
ஊர்
ஊராகச் சென்று -
உத்தாரணம் செய்ய
உத்தேசம் கொண்டார்; தன் -
அடியார்களின் அவாவும்
அஃதே எனக் கண்டார்!

முதலில் சோழநாடு - என
முடிவாகியது;
பெருமாள் தாயாரிடம்
பிரார்த்தித்துக் கொண்டு
பெருங்கூட்டம் - எம்
பெருமானாரோடு புறப்பட...

வீதி மட்டுமல்ல -
வானும் புழுதி வடிவாகியது!
தொடர்ந்து வரும் -
தொண்டர் குலம்...

நான் மறையையும்;
நாலாயிரத்தையும்;
நாராயணனின் - சஹஸ்ர
நாமங்களையும்;

வாய்விட்டு
ஓத - பல்வகை
வாச்சியங்கள்
வழங்கு ஓசை வான் மோத -

'தண்டிகை ஏறி - நம்
துறவரசு வருகிறான்; இது -
பண்டிகை நாள்!' என...

நகரத்தார்
நெகிழ்ந்து - ஊர்
எல்லையில்
எதிர்கொண்டு -

கவிஞர் வாலி



486

# காவியம்

முகமன் கூறி
முதல் தாம்பூலம் தர...

சோழ
சாம்ராஜ்ஜியத்தில் –
வைணவ தரிசனம்
வேர் பிடித்தது;
உடையவர் திருவடியே – நமை
உய்விக்கும் திருவடி – என
ஓர்ந்து – அதை



ஊர் பிடித்தது!

திருக்குடந்தை;
திருநறையூர்;
திருச்சேறை;
திருக்கண்ணமங்கை;

என -
ஏகப்பட்ட...

திருப்பதிகளை
திருப்தியாக சேவித்துக் கொண்டு -
திருக்கோயில்களின்
திருமண்டபங்களில் - இதர
சித்தாந்த வித்வான்களோடு
சொற்போர் நடத்தி வெற்றி கண்டு...

பாண்டிய மண்ணில்
பாதம் பதித்தார் -
தமிழ் தேயம் - கை கூப்பித்
தொழும் வைணவச் சீயம்!



கன்னல் நிகர்த்த
கன்னித்தமிழை நிதம்பாடி -
தென்னல் நடக்கும்
திருமாலிருஞ் சோலையில்...

கொலுவமர்ந்து
கோயில் கொண்டிருக்கும் -
கள்ளழகரை; கொள்ளை அழகு
கொள்ளழகரை;

தண்டனிட்டுத்
தொழுதபின்....

ஸ்ரீராமானுஜர்
ஸ்ரீவில்லிபுத்தூர் சேர்ந்தார்;
சூடிக் கொடுத்த
சுடர்க் கொடியாம் -
பாவை பாடிய
பாவையின்...

நிறைவேறா ஆசை ஒன்றை -
நினைவு கூர்ந்தார்!

வடபத்ரசாயியின்
வலக்கரம் பற்றி -
வாழ்க்கைப் பட
விழைந்த ஆண்டாள் -

தனது
திருமணத்தின் போது...

அண்டாக்கள் நூறில்
அக்கார அடிசில் செய்து -
சீராக - அதனை
சீதரனுக்கு அர்ப்பணிக்க -

கொண்டிருந்த - ஆசை
கூடாமல் போனது; அவள் -
சந்நிதியில் நின்று -
சேவிக்கையில் -
எதிராஜருக்கு - அந்த
எண்ணம் வந்து...

விழி -
வெள்ள மானது!

488

உடனே –
உடையவர்...

தன்
தங்கைக்கு – ஒரு
தமையன் தருகின்ற
திருமணச் சீராக...

நூறு அண்டாக்களில்
நெய் ஒழுக ஒழுக –

அக்கார அடிசில்
ஆக்கி –
வடபத்திரசாயிக்கு
வழங்கினார் –

தித்திக்கத்
தித்திக்க; இளைய
சகோதரியின் அபிலாஷை
சித்திக்க!

அக்கணமே – ஸ்ரீ
ஆண்டாள் –
அவரது
அகக்கண்முன் தோன்றி...

'எம் அண்ணாவே!'
என்று –
வாஞ்சையோடு விளித்தாள்;
விளித்துக் களித்தாள்!

இந்த நிகழ்வை ஒட்டித்தான் –
இன்றளவும்...

வில்லிபுத்தூர் ஆண்டாளின்
வாழித் திருநாமத்தில் –

'பெரும்பூதூர் மாமுனிக்குப்
பின்னானாள் வாழியே!' என்று –
அனுசந்தானம் செய்வர்; செய்து
அடியார்கள் உய்வர்!

ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து
ஸ்ரீராமானுஜர்...

தமது
தொண்டர் குழாத்தோடு – மேலும்
தெற்கு நோக்கிப் பயணித்து – பின்
திருநகரி போய்ச் சேர்ந்தார்;

'இதுவோ திருநகரி!
ஈதோ பொருநல்!
இதுவோ பரமபதத்து எல்லை!
இதுவோதான் –
வேதம் தமிழ் செய்து –
மெய்ப்பொருட்கு முப்பொருளால் –
ஓதும் சடகோபன் ஊர்!'

என்று
ஏத்தி ஏத்தி –
தன்
தாபம் முற்றும் தீர்ந்தார்!

மாறன் என்றும்;
வகுளா பரணன் என்றும்;
குருகைப் பிரான் என்றும்;
குருகூர் நம்பி என்றும்;
பராங்குசன் என்றும்;
பிரபன்ன திலகன் என்றும்;
சடகோபன் என்றும்;
சேவிக்கப் பெறுபவரும்...

ஆசாரியர்களுக்கெல்லாம்
ஆசாரியர் என்று –
பரம வைணவர்களால்
பாவிக்கப் பெறுபவரும்...

இன்னும் –
இவைபோல் –
நவிலவொணாக் கீர்த்தியுடைய –
நம்மாழ்வார் வாழ்ந்த ஊர்...

திருநகரி; ஆழ்வார் –
திருநகரி; அவ்வூரை –
தரிசித்தாலே வரும் – ஆர்க்கும்
தமிழ் லகரி!

புளிநிழல்
போயமர்ந்த –

மாறன் என்னும்

மெய்ஞ்ஞானப் பூ - முனம்
நாளும் - தமிழ்
நறவம் பிலிற்றியதால்...

அவ்
அழகிய ஊரில்...

மண் சுமக்கும் புழுதியிலும்
பண் மணக்கும்;
கா சுமக்கும் பூவினிலும்
பா மணக்கும்;

நிலமெலாம் தமிழ் நாற்று;
நதியெலாம் தமிழ் ஊற்று;:
நகரெலாம் தமிழ்க் காற்று;
நாவெலாம் தமிழ்க் கூற்று!

இராமானுஜர் - அங்கு
இருந்த சில நாள்களில்...

பெரிய திருமலை நம்பியின்
புதல்வனான 'பிள்ளா'னுக்கு -

நம்மாழ்வாரின் - திரு
நாமத்தைச் சூட்ட விரும்பி -

'திருக்குருகைப் பிரான்' எனும் -
திருப் பெயரை இட்டார்;

பின்னாளில்
பிள்ளான் -
அவ் வணமே
அழைக்கப் பட்டார்!

ஒருநாள் -
உடையவர்...

திருநகரியில் - நீராடும்
துறையான சங்கணித்துறையில் -
குளிரக் குளிரக்
குடைந் தாடினார்; பின் -
கரை யேறிக்
காவி யுடுத்தி -
திருமேனியில்
திருமண் காப்பு சூடினார்!

அதன்பின்
அடியார்களோடு -
ஆழ்வார் கோயிலுக்கு
அவர் கிளம்புகையில்...

'சட்'டென்று - ஒரு
சலவைத் தொழிலாளி வந்து -
சாஷ்டாங்கமாக - அவரது
சேவடிகளில் சேவித்து விட்டு -

தன்னைப் போலவே
தன் பிள்ளைகள் நால்வரும் -
உடையவரை
வணங்க வேண்டுமென்று...

வெகுவாக
விரும்பினான்; சற்றுத்
தொலைவில்
துணிகளை -
வெள்ளாவியில்
வைத்துக் கொண்டிருக்கும் -
பிள்ளைகளை அழைக்கப் -
பக்கவாட்டில் திரும்பினான்!

'சடகோபா!'
'காரிமாறா!'
'வகுளாபரணா!'
'குருகூர் நம்பி!'



என்று - தன்
எச்சங்களை -
சத்தம் போட்டு அழைத்து -
'சாமிடா! கும்பிடுங்க!' என்றான்;

பிள்ளைகள் நால்வரும் - எம்
பெருமானாரைக் கும்பிட - அந்த
ஈரங் கொல்லி - விழிகளில்
ஈரம் கசியக் கசிய நின்றான்!

தளிர்களின்
தலைகளை...

வாஞ்சையோடு
வருடிக் கொடுத்து -
வாய் நிறைய
வாழ்த்தினார் -

490

எதிகளின் வேந்து;
ஏகாலிக்கும் வேண ஆசி ஈந்து!

சலவைத் தொழிலாளி
சென்ற பின்பு -
சில நொடிகள் எதிராஜர்
சிந்தனை வயப் பட்டார்;
உடனிருந்த -
வைணவர் ஒருவர்...

'ஆசாரிய ஸ்வாமிகளே!
ஆழ்ந்த யோசனை என்னவோ?'
என -
விநயமாய்
வினவ - தன்
உள்ளக்கிடக்கையை
உடையவர் வெளியிட்டார்!

'அதோ!
அந்த ஈரங்கொல்லியைப் போல் -

இல்லறத்தைத் தழுவி
இனிய மகவுகளைப் பெற்று -
அமுது ஊறும் - நம்
ஆழ்வார் திருப் பெயர்களை
அவர்களுக்கு இட்டு -
ஆர்வமுடன் அழைக்கும்...

பேறு -
பெற்றேன் இல்லையே; இப்படிக் -
காவிதாங்கிப் - பொழுதைக்
கழித்தேன் ஒல்லையே!'

இன்னணம் -
இராமானுஜர் இயம்பிவிட்டு...

நதிக்கரையை
நீங்கினார்; அந்த -
ஏகாலியின் ஆகூழை
எண்ணி நெடுமூச்சு வாங்கினார்!

பிறகு - ஒரு
பகற் பொழுதில்...

ஆழ்வார் திருநகரியை விட்டு -
அடியார்களுடன் - தனது
சிவிகையில் ஏறிச்
செல்ல லானார்...

'கண்ணி நுண் சிறுத்தாம்'பை -
கவனம் செய்து -
மன்பதைக்கு அருளிய -
மதுரகவியாழ்வாரின் ஊரான -

திருக்கோளூர் நோக்கி; ஆழ்வார் -
திருவடிகளை நெஞ்சில் தேக்கி!

ஊர் எல்லை வந்ததும் -
உடையவர்...

தண்டிகையிலிருந்து இறங்கி
தரையில் நடந்தார் மெல்ல;
நா -
நலந்தரும் -
நாராயணனின் -
நாமங்களைச் சொல்ல!

அவ் வமயம் -
அவ் வூரிலிருந்து...

ஒரு பெண்
வந்தாள்;
எதிராஜரை
எதிரில் கண்டதும் - அவரது
மலரடிகளைத் தொழுது
மரியாதை தந்தாள்!

அந்த
அம்மையார் -

திருக்கோளூரிலிருந்து வருவதை -
தெரிந்துகொண்ட உடையவர்...

"பெண்ணே! பக்தர்க்குப் -
'புகும் ஊர் திருக்கோளூரே!' எனப்
பாசுரம் பேசுகிறது; உனக்கது -
புறப்படும் ஊரானதோ?" என்று -

வினவினார் வியப்பாக; அவள் -
விடை சொன்னாள் வித்தியாசமாக!

**- வளரும்**

**விஷ்ணுவா? சிவனா?**

'அய்யா! என்னை –
அதிசயமாகப் பார்க்கிறீர்!
புகும் திருக்கோளூர் விட்டுப் –
போவது ஏன் என்று கேட்கிறீர்!



62

பயனற்ற – முயல்
புழுக்கை...

வயலில் கிடந்தென்ன?
வரப்பில் கிடந்தென்ன?

ஆன்ம ஞானம்
அற்றவள் –
கோளூரில் கிடந்தாலென்ன?
கோளூர் தாண்டி நடந்தாலென்ன?

அறிஞர் கூட்டத்திலோ;
அடியார் கூட்டத்திலோ – வைத்து
எண்ணப்பட –
எனக்கென்ன தகுதி?

ராமானுஜ காவியம்

என்னை ஒரு பொருட்டாய்
எம்பெருமான் கருதி -
இவ்வாறு வினவுகிறீரே -
இதுவே என் தகுதிக்கு மிகுதி!'

என்று - அப்பெண்
எதிராஜருக்கு பதில் சொல்லி...

தொடர்ந்து
தன்னிலை விளக்கமாக -
பழகு தமிழில் - ஒரு
பாட்டைப் பாடியதாக -

கூறுகின்றன - சில
குருபரம்பரைச் சுவடிகள்;

இதோ! அவள்
இசைத்தவற்றில் சில அடிகள்!

'அகம் ஒழித்து விட்டேனோ -
விதுரரைப் போலே?
தாய்க்கோலம் செய்தேனோ -
அநுசூயை போலே?

பிஞ்சாய்ப் பழுத்தேனோ -
ஆண்டாளைப் போலே?
அந்தரங்கம் சொன்னேனோ -
திரிசடையைப் போலே?

தெய்வத்தைப் பெற்றேனோ -
தேவகியாள் போலே?
ஆயனை வளர்த்தேனோ -
யசோதையாள் போலே?

அவல்பொரியை ஈந்தேனோ -
குசேலரைப் போலே?



ஆயுதங்கள் ஈந்தேனோ -
அகஸ்தியரைப் போலே?

இடைகழியில் கண்டேனோ -
முதலாழ்வார் போலே?
வழிஅடிமை செய்தேனோ -
இளையாழ்வார் போலே?

அக்கரையில் விட்டேனோ -
குகப்பெருமாள் போலே?
கண்டுவந்தேன் என்றேனோ -
திருவடியைப் போலே?

யான் சிறியேன் என்றேனோ -
திருமலை நம்பியைப் போலே?
அந்தாதி பாடினேனோ -
அமுதனாரைப் போலே?'

மேற்கண்டவாறு - அந்த
மாது சிரோமணி -
பாடிக்கொண்டே போனாள்; தானே தன் -
பாட்டில் கரைந்தவள் ஆனாள்!

இன்னணம் - அவள்
இசைத்த பாட்டில் -
இறுதியாய் வந்த -
இரண்டு வாக்கியங்கள்...

உடையவரை -
வியக்க வைத்தன; திருமலை -
நம்பியை; அமுதனாரை; அவரது -
நினைவுகள் மொய்த்தன!

'என்னைக் காட்டிலும் சிறியனை -
என்னால் காண முடியவில்லையே!'
என்று -
எதிராஜரிடம் - முன்பு
திருமலை பெரியநம்பி
தெரிவித்ததும்;

அரங்கத்து
அமுதனார் -
இராமானுஜ நூற்றந்தாதி -
இயற்றியதும்;

தெற்கே -
திருக்கோளூரில் வசிக்கும் -
ஒரு பெண்
ஓர்ந்திருக்கிறாள் என்றால்...

எதிராஜர் புகழ் - தேசம்
எங்கிலும் பரவியுளது - என
எல்லாச் சீடர்களும் -
எண்ணி -

மகிழ்ந்தனர்;
மனம் நெகிழ்ந்தனர்!

திருக்கோளூர் வாசம் - சில
தினங்களில் முடிய -

மாறன் அல்லால் -
மற்றொரு தேவு காணா -
மதுரகவி நினைவால் - விழியில்



மகிழ்ச்சிக் கண்ணீர் வடிய -

எதிகளின் ராஜர் -
எதிராஜர்...

தண்டிகை
தன்னில் ஏறி -
திருப்பதிசாரம் எனப்படும்
திருவண்பரிசாரம் சென்றார்;

நம்மாழ்வாரின்
நற்றாய் -
உடைய மங்கையாரின்
ஊராதலால்...

அவ்வூரைக் கண்டதுமே -
அங்கம் புளகித்து நின்றார்!

பிறகு - ஸ்ரீ
பெரும்பூதூர் வள்ளல் -

திருக்குறுங்குடி;
திருவாட்டாறு; முதலிய -
தலங்களுக்குப் போய்ப் - பின்
திருவனந்தபுரம் புகுந்தார்;

பத்மநாபஸ்வாமி கோயிலில் -
பூஜை முறையில்...

சில திருத்தங்கள்
செய்ய முயன்றும் - நம்பூரி
அந்தணர்கள்
அஃதை விரும்பாததால் -

உடையவர் - சற்றே
உளம் வருந்தினாலும் -
உரகசயனனை சேவித்து -
உணர்ச்சிகள் மிகுந்தார்!

பின்பு -
பல்லக்கில் உட்கார்ந்து -
மேலைக் கடலோரமாக -
மெல்ல ஊர்ந்து...

வடதேசத்தில் -
வைணவ சித்தாந்தத்தை -
விதைத்தார்; பிற சமயிகளின் -
விதண்டா வாதத்தைச் சிதைத்தார்!

வடமதுரை; துவாரகை;
வாரணாசி; பிரயாகை;
குருக்ஷேத்திரம்; கயா;
கோசலம்; மிதிலை;
பதரி; ஹரித்வாரம்; எனப் -
பலப் பல...

இடங்களில்
இராமானுஜர் -
சஞ்சாரம்
செய்து...

மாதக்கணக்கில் - தன்
மெய் வருந்த வைணவத்தின்
மகத்துவத்தை -
மாந்தர்க்கு விளம்பினார்;

அனந்தனின்
அவதார மானதால் -

வடபுலத்து
வேத விற்பன்னர்கள் -
வாதுக்கழைத்த போதெல்லாம்
வான்மிகம் நீங்கி...

'உஸ்'ஸெனச் சீறும் -
உரகம் போல் கிளம்பினார்!

திருமாலின் - கருளத்
துவசத்தை...

விசிஷ்டாத்வைதத்தின்
வெற்றிப் பதாகையாக -
ஊர் ஊராகச் சென்று
வான்தொடப் பறக்க விட்டார்;

மன்பதைக்கும் - விஷ்ணு
மதத்திற்கும் பாலம் இட்டார்!

இரண்டாம் முறையாக -
இராமானுஜர் -
காஷ்மீரம் போனார்; வேந்தனின் -
கவுரவ விருந்தினர் ஆனார்!

ராஜா -
ராஜோபசாரம் செய்தான்;

எதிராஜரின்
எழிலார்ந்த -
பாதப் பங்கயங்களில்

புஷ்பமாரி பெய்தான்!

பிறகு – எம்
பெருமானார்
சரஸ்வதி பீடம் சென்றார்;
சேவித்து நின்றார்!

பாமடந்தை
பிரசன்ன மானாள்;

ஸ்ரீ ராமானுஜருக்கு –
'ஸ்ரீ பாஷ்யகாரர்' எனும் –
விருது வழங்கி –
வாழ்த்திப் போனாள்!

அரசன் –
அவருடைய சீடனாகி –
அன்றாடம் – சீயரின்
அருளுரைகளைக் கேட்டான்;

வீடு பெற உதவும்
விழுமிய கருத்துக்களை
வாங்கி வாங்கி – உள்ள
வங்கியில் வைப்பாய்ப் போட்டான்!

இச் செய்கையால் –
இராமானுஜர் மீது...
அரசவைப் புலவோர்
அழுக்காறு கொண்டனர்;

உடையவரை
ஒழித்துக் கட்ட –
மந்திர தந்திரங்களால்
மார்க்கம் கண்டனர்!

உக்கிரமான – மந்திர
உச்சாடனம் செய்து –
துர்தேவதைகளைத்
தருவித்து...



எதிராஜர் மேல்
ஏவி விட்டனர்;
அவை – திருப்பி
அவர்களையே தாக்க –
அந்த துராத்மாக்கள்
அம்மணமாக –

தலைமுடியைப் பிய்த்தபடி
தெருக்களில் ஓடி –
தம்மைத் தாமே
தாக்கிக்கொண்டு தறிகெட்டு...

அலைந்து திரிந்து –
அவமானப் பட்டனர்!

ராஜன் –
ராமானுஜர் முன்...
கண்ணீர் துளும்ப –
கைகூப்பி நின்றான்;

'அய்யனே! இந்த
அற்பப் புழுக்கள் – இவ்வாறு
அழுக்காறு கொண்டு – தங்களிடம்
அபசாரப் பட்டதற்கு –

நான் மன்னிப்புக் கோருகிறேன்;
நலம் செய்வீர்!' என்றான்!

'மன்னவா! இதில் –
மன்னிக்க என்ன இருக்கிறது?
அவரவர் வினை –
அவரவரை அறுக்கிறது!



எவன்மீது துர்தேவதை
ஏவப்படுகிறதோ –
அவன் – அது
அணுக முடியாதபடி –
அப்பழுக்கற்ற –
அகமுடையோனாயிருந்தால்...

ஏவப்பட்ட தேவதை
ஏவியவனையே தாக்கும்; இந்த –
உண்மையை – இந்த நிகழ்ச்சி
ஊர்ஜித மாக்கும்!'

என்று –
எதிராஜர் விளக்கிவிட்டு...

தனது – ஸ்ரீபாத
தீர்த்தத்தை – அந்தப்
புலவர்கள் மீது
புரோட்சிக்க...

அவர்களது
அறிவு –
சுவாதீனத்திற்கு வந்து

438

சரணடைந்தனர் –

உடையவரை; தண்ணளி –
உடையவரை! இன்னணம் –
இராமானுஜர் காத்தார் –
இழிகுணம் உடையவரை!

பிறகு –
புரவலனும்;
புலவர்களும் –
பிரியா விடை தர...

உடையவர் புறப்பட்டு –
வாரணாசி; ஸ்ரீ கூர்மம்;
அகோபிலம்;
ஆகிய ஊர்கள் வழியாக...

திருவேங்கடத்தான் உறையும்
திருமலை வந்து சேர்ந்தார்;

அங்கு
அவ்வமயம் – ஒரு
சர்ச்சை நடைபெறக் கண்டு
சித்தம் சோர்ந்தார்!

கோயிலுள் –
கொலுவிருக்கும் மூர்த்தம்...

சிவன் என்று –
சைவர்களும்;
விஷ்ணு என்று –
வைணவர்களும்;



விடாப்பிடியாய்
வாதாடி நின்றனர்;

அவரவர்
அடுத்தவரை –
ஆவேசமாக விமர்சிக்கும்
அளவுக்குச் சென்றனர்!

சிவபக்தர்கள் – தமக்குச்
சாதகமாக –
பேயாழ்வார்
பாடியிருக்கும் –

'தாழ் சடையும் நீள்முடியும்
ஒண் மழுவும் சக்கரமும்
சூழ்அரவும் பொன் நாணும்
தோன்றுமால் – சூழும்
திரண்டருவி பாயும்
திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய்
இசைந்து'

எனும் பாசுரத்தை –
எடுத்துக்காட்டிப் பேசினர்;
வைணவர் – இந்த
வாதத்தைக் கேட்டுக் கூசினர்!

முன்னம் – ஒரு
மன்னன் இருந்தான் –
'தொண்டைமான்' எனும் –
திருநாமம் தாங்கி நின்று;

விஷ்ணு பக்தனாகிய – அவ்
வேந்தன்...

பகைவர்களோடு –
போரிடப் போகையில் – சீனிவாசப்
பெருமாள் அவனுக்கு – தன்
பால்வெண் சங்கை; சக்கரத்தை;

'கொண்டு போ!' எனக் –
கொடுத்திருந்தார் அன்று!

எனவே –
ஏழுமலையான்...



சங்கு சக்கர மின்றியே
சந்நிதியில் நின்றதால் –
சைவத்தைச்
சார்ந்தோ ரெல்லாம் –

அவன்
அரன்தான் என்று –
உறுதியாய்க் கருதினர்;
வைணவரோடு பொருதினர்!

இவ்வழக்கில் –
இராமானுஜர்...

நடுவரா யிருந்து
நல்கினார் ஒரு யோசனை; அது –
'திருமாலா? சிவனா?' எனத்
தீர்மானித்தது சீனிவாசனை!

**– வளரும்**

## ● கவிஞர் வாலி

**கிருமி கண்டன்.**

இரு சாராரையும் –
இராமானுஜர் அழைத்து...

'நாம் – இன்று
நடை சாத்தும்போது –

சிவச்
சின்னங்களான –
மழு; உடுக்கை;
முதலியவற்றையும்...

சீதரன்
சின்னங்களான –
ஆழி; சங்கம்;
ஆகியவற்றையும்...

தெய்வத்தின்
திருமுன் வைத்து –
கர்ப்பக்கிரகத்தின்
கதவைப் பூட்டுவோம்;

காலையில் – நாம்
கதவு திறந்து பார்க்கையில்...

எதை – தெய்வம்
ஏற்று நிற்கிறதோ –
அதைக் கொண்டு

அரியா? அரனா? என்பதை –
நாம் –
நிலைநாட்டுவோம்!'

என்று செப்பினார்;
எல்லோரும் ஒப்பினார்!

'வினாவிற்கு – தெய்வமே
வழங்கும் விடையை' –
என –
எண்ணி –
அவ்வாறே வைத்து –
அடைத்தனர் நடையை!

காலையில் – கோயில்



502

கதவு திறந்து பார்க்கையில்...

சிவச்
சின்னங்கள் -
இருந்த
இடத்திலேயே இருக்க -

சங்கு
சக்கரம் -
ஏந்திக்கொண்டு
ஏழுமலையான் காட்சி கொடுக்க -

'கோவிந்தா! கோவிந்தா!' எனக் -



புலவர்களும்; வேத
பண்டிதர்களும்; அந்த -
சாசனத்தில் - கையெழுத்து
செய்ய வேண்டும் என்று...

பிரகடனப்
படுத்தினான்; கையொப்பம்
போடாதவரை - படாத பாடு
படுத்தினான்!

அரசன் -
ஆணைக்கு அஞ்சி...

மற்ற
மதஸ்தர்களும் -
கண்ணை மூடிக்கொண்டு
கையெழுத்து இட்டனர்;

வேறு சில
வேத விற்பன்னர்கள்...

ராஜபக்திக்குப் பரிசாக
ராஜாவிடம் -
வீடு -
வாசல்;
காடு -
கழனி;



பெறலாம் எனும் -
பேராசையால்
கையெழுத்திட்டு - கவுரவத்தை
காற்றில் விட்டனர்!

மன்னனின் - இந்த
மதோன்மத்தமான செயலுக்கு...

'நாலூரான்' எனும்
நாமம் கொண்ட -
ஒருவன்தான்
உந்துசக்தி; மிக -
அற்பத்தனமானது
அவன் புத்தி!

இதில் வேதனை யாதெனில் -
இந்த நாலூரான்...
அரசனின்
அமைச்சன் மட்டும் அல்ல;

கூரத்தாழ்வானின்
கூடவே சீடனாயிருந்து - தன்
குருவுக்கே
குழிபறித்தான் மெல்ல!

தான்
தயாரித்த -
சாசனத்தில்
சகல பண்டிதரும்...

கையெழுத்திட்டுவிட்ட
களிப்பில் - மார்
விம்மிக் கிடந்தான்
வேந்து;

அது
அறிந்து -
அரசனுக்கு
அறிவுரை சொன்னான் -
அமைச்சன் நாலூரான்
அங்கு போந்து!

"அரசே! அந்த
ஆடவல்லான்தான் - நம்
அனைவருக்கும்
அருந் தெய்வம்;

ஓம் நமசிவாய - என
ஓதி ஓதித்தான் -
நாம்;
நம் மக்கள் உய்வம்;

அதை விடுத்து -
ஆரேனும்...

எட்டெழுத்தானே -
எங்கள் பிரான் என்று -
நெட்டெழுத்திட்டு - நம்முன்
நீட்டினால் நாசம் செய்வம்;

ஐயெழுத்தானை - தம்
ஐயன் என்றொப்பிக் -
கையெழுத்திடாதார் -
கையைக் கொய்வம்!



இதுதான் - நமது
இலட்சியம்;

506

எனினும் - நாம்
ஏற்றுக்கொண்ட இலட்சியம் -
நூறு விழுக்காடு
நிறைவேறாதிருப்பதை -
கவனியாது - நாம்
காட்டலாமா அலட்சியம்?

பல்லாயிரம்
பண்டிதர்கள் - நாம்
காட்டிய இடத்தில்
கையெழுத்திட்டு என்ன லாபம்?

மிக மிக -

இதுகாறும் - கையொப்பம்
இடச்சொல்லிப் பெறவில்லையே -
என்பதுதான் -
என்னுடைய பிரலாபம்!

நானும்
நீங்களும் -
எது சொன்னாலும்
ஏற்றுக்கொண்டு -

மண்டையை ஆட்டும்
மாட்டிடமும் ஆட்டிடமும் - கை
ஒப்பங்கள் வாங்கிவிட்டு
உள்ளுக்குள் மகிழ்வதா?

சைவ
சமயத்திற்கு - இது
நற்காலம்; பொற்காலம்; என -
நெஞ்சு நெகிழ்வதா?

வையம் முழுவதும் -
வைணவம் வேரோட
வழிவகை செய்துவிட்டு -
விச்சிராந்தியாய்...

திருவரங்கத்துத்
திருமடத்தில் -
உட்கார்ந்து கொண்டிருக்கும்
உடையவரிடமும்;

உடையவருக்கு
உற்ற துணையாய்க் -
கூட இருக்கும்
கூரத்தாழ்வானிடமும்;

'அஞ்செழுத்தே -
அருமந்திரம்;
அர்த்தநாரியே -
அருந்தெய்வம்;

தில்லையே -
திருக் கோயில்; 'சங்கரா' எனும் -
திருவாசகமே -
பெருவாசகம்;

திரிபுராந்தகனை மிஞ்சித் -

திரிவிக்கிரமன் - ஒரு
தேவே இல்லை!'

என்று -
என்றைக்கு நாம்...
கையொப்பம்
கேட்டுப் பெறுகிறோமோ -
அன்றுதான்
காரியசித்தி ஆனதாகக்
கொள்ளலாம்;

அவர்கள் -
அங்ஙனம்...
ஒப்ப மிட
ஒப்பா விடில் -
கைது செய்து
காராகிரகத்தில் தள்ளலாம்!"

அரசனிடம்
அமைச்சன் நாலூரான் -
இன்னணம்
இயம்பியதும்...

'கைப்பிடியாக ராமானுஜரைக் -
கொண்டு வருக!' என்று -

அரசன்
ஆணையிட்டான்;
அக்கணமே
அறிவு கெட்டான்!

- வளரும்





1 "வாய்ல ஏன் இவ்வளவு புண்?"

"நான் 'நாகஸ்வரத்துல புன்னாகவராளி வாசிச்சா பாம்பு வரும்'னு சொன்னதுக்கு, பாம்பு வராததால என் வாய் 'புண்ணாகற' வரைக்கும் வாசிக்க வெச்சுட்டாங்க...!"

2 "பாடும்போது ஒரு காதைத்தான் சாதாரணமா மூடிப்பாங்க. இவர் ஏன் ரெண்டு காதையும் மூடிக்கிறார்?"

"அவர் பாடறதை கேட்க அவருக்கே கர்ணகடூரமா இருக்கோ என்னவோ?!"

- வெ. சீதாராமன்

3 "முன்வரிசைல ஏன் இப்படி வதவதன்னு கையில் டிபன்பாக்ஸும் குழந்தைகளுமா லேடீஸ் வந்து உக்காந்துட்டாங்க!"

"பாடுறப்ப உங்க 'அங்க சேஷ்டை'களைக் குழந்தைகளுக்கு வேடிக்கை காட்டி சாப்பாடு ஊட்ட உக்காந்திருக்கறதா சொல்றாங்க சார்!"

- கிரிஜா மணாளன்



## வைணவத்தின் விழிகள்!

கவிஞர் வாலி

புலரியில் - திருமடத்துப்
புழைக்கடைக் கேணியில்...

தண்ணீர் சேந்தி - உடையவர்
தீர்த்தமாடிக் கொண்டிருக்க..

அரசு
ஆணையைக் காட்டி - ஸ்ரீ
ராமானுஜரை அழைத்துச் செல்ல
ராஜபடர்கள் வந்தனர்;

மடத்து சீடர்கள்
மலங்க மலங்க விழித்தபடி -
உள்ளே
ஓடிச் சென்று...

கூடத்திலிருந்த
கூரத்தாழ்வானைத் -
தனியே அழைத்து
தகவல் தந்தனர்!

அரசு
ஆணையின் -
உள்நோக்கத்தை
உணர்ந்துகொண்ட....

கூரேசர் -
கூச்சம் கிஞ்சித்தும் இன்றி -

உடையவருக்கு
உரிய -

துவராடையையும்
திரிதண்டத்தையும் -
தானே
தரித்துக்கொண்டு...

வெளியே -
வந்து நின்றார்; 'நானே -
ராமானுஜன்' என்றார்;
ராஜபடர்களுடன் சென்றார்!

அக்கணம்
அங்கிருந்த -
பெரியவர்
பெரிய நம்பி...

'ஆழ்வான் தனியே போவதோ?' என -
அச்சத்தில் அரைக்கணம் -
உறைந்து கிடந்தார்; அதன்பின் -
உடன் அவரும் நடந்தார்!

பெரியவர்
பெரிய நம்பிக்கு -
அப்போது
அகவை நூற்றைந்து; ஆயினும் -
அவரது அகத்தில்
அசாதாரண மைந்து!



கூரத்தாழ்வான்
கூடவே –
தன்
தந்தையார் –
பெரிய நம்பியும்
போவதைக் கேள்விப்பட்டு...

அவரது மகள்
அத்துழாய் அம்மையும் –
உடன்
ஓடினாள்;
அரசு
அதிகாரிகளோடு
மல்லாடத் தெம்பின்றி – அந்த
மாது சிரோமணி வாடினாள்!

கங்கைகொண்ட சோழபுரத்துக் –
காவலனின் சபைநடுவே...

காவியுடை தரித்த
கூரேசரும்;
பெரியவர்
பெரிய நம்பியும்;

நிர்க்கதியாய்
நின்றிருக்க;
அத்துழாயை
அச்சம் தின்றிருக்க;

கொலுமண்டபம் புகுந்தான்
கொற்றவன்;

உடன் –
வந்தான்...

அவனது
அமைச்சனாகிய –
நாலூரான் எனும் –
நாயினும் கீழ்மை உற்றவன்!

ராமானுஜரை –
ராஜா பார்த்ததில்லை என்பதால்...

ஏரார்ந்த முக்கோலை
ஏந்தியபடி –
எதிர் நின்ற கூரேசரை
எதிராஜர் என்றே எண்ணினான்;

'அடடா! திரு –
ஆனனத்தில் –

என்ன தேஜஸ்!
என்ன தண்ணளி!
இவரன்றோ துறவி!
இசைமிகுந்த பிறவி!' என –

உள்ளூர வியந்து –
உபசாரங்கள் பண்ணினான்!

இருவர்க்கும்
இருக்கைகள் கொடுத்தான்;

விநயமாகவே –
வினாக்களைத் தொடுத்தான்!

"எம்பெருமானார் – என



512

எல்லாரும் ஏத்துவதும்;

எதிராஜர் - என
எதிகளே ஏற்றிருப்பதும்;

உடையவர் - என
ஊரவர் திருவடி தொழுவதும்;

இராமானுச முனி - என
இருபிறப்பார் துதிப்பதும்;

உம்மைத் தானோ? நீர் -
உகப்பது திருவாய்மொழித் தேனோ?
உமக்கு - விஷ்ணுதான்
உயர்ந்த தேவோ?
சிவமதம் - உமது
சிந்தைக்கு நோவோ?

நான் -
மன்னனாயிருந்து கோலோச்சும்
மண்ணில் வாழ்கிறீர்;
'கோன் எப்படி?
குடியும் அப்படி?' எனும் -
மூதுரை யறியாது - ஏன்
மூடத்தனத்தில் ஆழ்கிறீர்?

எட்டெழுத்தானை விட -
ஏற்றம் மிக்கவன் -
அஞ்செழுத்தான் என்பதை
அட்டியின்றி ஒப்பும்;

நான் -
நீட்டும் ஓலையில் -

இமய வல்லியை மணந்த -
இமய வில்லிக்கு மேலாக - ஓர்
இறை இல்லை என்பதை ஏற்று -
இராமானுசரே! இடும் ஒப்பம்!"

என மன்னன்
எடுத்துரைத்தான்;
அருகிருந்த
அமைச்சன் நாலூரான் -

'தவறு மன்னா!' என்று
தடுத்துரைத்தான்!

வியந்தான் -
வேந்து; அமைச்சன் -
விளக்கினான் -
வேந்துக்கு விவரம் ஈந்து!

'அரசே! நான் -
அஞ்சுகிறேன் சொல்ல;
இவர் - அந்த
இராமானுஜர் அல்ல!

உடையவரை - நம்
ஊழியர்கள்...

பார்த்தறியாததால் - இந்தப்
பிழை நேர்ந்து விட்டது;

இவர்கள்
இருவரையும் -
இங்கு பார்த்த பின்புதான்
இந்தப் பிழை...

பளிச் சென்று - என்
புத்திக்குப் பட்டது!

காவியுடுத்திக்
கோல் ஏந்தி நிற்கும் -
இவர்
இராமானுஜர் அன்று; இவரைக் -
கூப்பிடுவார்கள்
கூரத்தாழ்வான் என்று!

உண்மையை
உரைப்பதாயின் - இந்த
ஆழ்வான்
அடியேனின் குரு;
வித்தையிலும் -
விநயத்திலும் -
விசிஷ்டாத்வைதத்தை
வியாக்கியானம் செய்வதிலும்...

இவர் -
இராமானுஜரின் இன்னோர் உரு;

வைணவம் - வெகுவாக
விரிந்து பரந்த தரு;

இவர்தான் அத் தருவுக்கு
இட்டார் எரு!

தரு -
தந்த கோடரியே -
தருவைத்
தகர்ப்பது போலே...

இவரது நிழலின்கீழ்
இருந்து பயின்ற நானே -
குருவெனும் தருவைக்
கோறும் கோடரி யானேன்!

இது -
இழிவெனத் தெரிந்தும்...

மன்னனை
மகிழ்விப்பது
மந்திரி கடன் - என்று
உங்கள்
உளமறிந்து செயல்பட்டேன்
உடனுக்குடன்!

கண்ணனைய உடையவரைக் -
காப்பாற்ற வேண்டி...

அவரது
ஆடைகளை
அணிந்து கொண்டு - நம்
அரசு ஊழியர்களிடம்...

இவர் - தன்னை
இராமானுஜன் என்று
செப்பினார்; இராமானுஜர் -
தப்பினார்!

உடன்
வந்திருக்கும்...
பெரியவர் பெயர்
பெரிய நம்பி; இவர் -
ஆழ்வானுக்கு - என்ன
ஆகுமோ என்று அஞ்சி - நாம்
விரித்த வலையில் - வந்து
வலிய விழுந்த தும்பி!

அதோ! நிற்கிறாளே -
அவள் பேர் அத்துழாய்; நன் -
மணத்திலும் - தெய்வ
குணத்திலும் - மன்னா!
உண்மையிலேயே - இவளுக்கு
உவமையாகும் அத் துழாய்!'

நாலூரான் - இன்னணம்
நவின்றதும்...

மன்னனுக்கு -
மண்டை கொதித்தது;

தன்
திட்டம் -
தோற்கடிக்கப்பட்டுத்
தவிடு பொடியானதில்...

வெகுளி மீறி - அவன்
வீசை மூக்கின் கீழ் குதித்தது!

'ஓடுங்கள்;
உடையவரைத் தேடுங்கள்!'
என்று - ஆட்களை
ஏவினான்; ஆத்திரத்தில்
குய்யோ முறையோ என்று
கூவினான்!

நாலூரான்
நமட்டுச் சிரிப்பு சிரிக்க;
ஆழ்வானின் கண் -
அவனை அக்கினிபோல் எரிக்க;
பெரிய நம்பியும் - அவர்
புத்திரி அத்துழாயும் -
செய்வ தறியாது
சஞ்சலத்தில் சஞ்சரிக்க;

மெல்லப் பேசலானான்
மன்னன்; புகழ்சால் -
சோழர் குலத்தில் பிறந்த
சின்னன்!

'உங்கள்
உடையவர்...

514

எங்கள்
ஏவலர் கைகளில் -

எப்படியோ
ஏதோ ஒரு நாளில்...

அட்டியின்றி
அகப்படுவார்;
அப்போது
அவர் கையெழுத் திடுவார்!

இப்போதைக்கு - நீங்கள்
இருவரும்...

வாசியுங்கள் - இந்த
ஓலையை; இதில்
கைச்சாத்து இட்ட
கையோடு -
ஊர் திரும்பிப் - பாருங்கள்
உங்கள் வேலையை!' என...

அரசு சொன்னதும்
அமைச்சன் நீட்டினான் -
ஓலையை; வைணவர்களை
ஓட்டப் பிழியும் ஆலையை!

வாங்கி -
வாசித்தார் கூரேசர்;
'மறந்தும் புறம்தொழா
மாந்தர்' வரிசையில் -
முன்னிற்கும் - இராமானுச
முனியின் விசுவாசர்!

'சிவனுக்கு மேலொரு -
செம்பொருள் இல்லை!' - என
வண்ணத் தமிழில் - பொருள்
வரும்படி...

அந்த -
அரச ஓலையில் -

'சிவாத் பரதரம் நாஸ்தி' என
சொல்லப்பட்டிருந்தது -
ஆழ்வானுக்கு
அதிர்ச்சி தரும்படி!

கூரேசர் - கோபத்தில்
கருகினார்; ஒரு
குறும்பு செய்யக்
கருதினார்!

'சிவம்' எனும்
சொல்லுக்கு -
'குறுணி' என்றும் - பொருள்
கொள்ளலாம்;

'த்ரோணம்' எனும்
சொல்லுக்கு -
'பதக்கு' என்றும் - பொருள்
படுவதாகக் கொள்ளலாம்!

கூரேசர் - இதைக்
கருத்தில் கொண்டு...

'குறுணியைக்
காட்டிலும் -
பதக்கு
பெரியது!' என்பதை...

'சிவாத்பரதரம் நாஸ்தி -
த்ரோணமஸ்தி தத: பரம்!'
என - சமஸ்கிருதத்தில்
எழுதி நீட்டினார்;
தன்னை எரிக்க - தானே
தணலை மூட்டினார்!

வேந்தன்
வெகுண்டு -
'இருவர் விழிகளையும்
ஈர்ந்திடுக!' என ஆணையிட...

பெரிய நம்பி விழிகளைப் -
பணியாளர் பறிக்க; தன் -
விரல்களாலேயே - தன்
விழிகளிரண்டையும் -
கூரேசர் பறித்தெறிந்தார்
குருதி தெறிக்க!

– வளரும்




'ஒன்று நீ நினைக்க – அதை
ஒழித்து –
மற்றொன்றை –
மானுடம் நினைக்குமோ?
அன்னணம் நினைப்பினும் –
அது நடக்குமோ?'

518




**வெள்ளை உடுத்தினார்!**

திருமடத்துக் கேணியில் –
தீர்த்தமாடி விட்டு...

உடை மாற்றிக்கொள்ள –
உடையவர் –
உள்ளே வந்து – கூடத்தில்
உலரப் போட்டிருந்த...

தனது –
துவராடையைக் காணாது –
பார்வையை – நாலா
பக்கமும் ஓட்டினார்;

ஓடிவந்த முதலியாண்டான் –
'ஓ'வென அழாத குறையாக...

நேர்ந்ததை
நேர்ந்தபடி சொல்ல –
தெம்பும்
திராணியும் இன்றி –

உதடுகள்
உலர;
வார்த்தைகள்
உளற;

வெருவலில்
விழிகள் வெளிற;
வேர்வை
வெள்ளமாய் வழிய;

பிரமை
பிடித்தவர் போல் நின்று – எம்
பெருமானார் முகத்தில்
பரவிக் கிடந்த...

வியப்பிற்கு – மேலும்
வலு ஊட்டினார்!

'என்ன நடந்தது?
ஏது நடந்தது?

கேவியும் அழாமல் –
கூவியும் அழாமல் –
பொலபொலவெனக் கண்ணீர் –
பொசிவானேன்?

அலகை
அடித்தாற்போல் –
அச்சம்
உச்சம் ஏற...

**கவிஞர் வாலி**

ஒன்பது கோணலாய் - உடம்பு
ஒசிவானேன்?'
இன்னணம் -
இராமானுஜர்...

முதலியாண்டானை - சற்று
முனிந்து கேட்க -
முதலி வாய்திறந்தார் -
முத்துமுத்தாய் வேர்வு பூக்க!

"தேவரீரைத்
தம்முடன் -
அழைத்துப் போக
அரச ஆணையோடு...

சோழ மன்னனின்
காவியுடையை தரித்து;
திரிதண்டத்தையும்
தன் கரத்தில் வரித்து;

'இராமானுஜன் நானே;
இட்டுச் செல்க!' என்று...
புறப்பட்டார் - ராஜ
படர்களோடு;

பெரியவர் -
பெரியநம்பியும் - அவரைப்
பின்தொடர்ந்தார் - முதுமைப்
பிராயத்தைப் பொருட்படுத்தாது...

சொட்டு நீர் சுமந்த - விழிச்
சுடர்களோடு!"



சிப்பாய்கள் வந்து வினவ -

நான்
நடுநடுங்கி - இச்செய்தியைக்
கூரேசர்
காதுகளில் முனக -

அந்த
அபாயத்திலிருந்து -
தேவரீரைத்
தப்புவிக்க...

கூரேசரே - தேவரீரது
முதலியாண்டான்
மொழிந்தது கேட்டு...

உடையவர் -
உடைந்தார்;
கண்ணீர் மத்தால் - தமது
கண்களைக் கடைந்தார்!

'அன்புக்குரிய - என்
அணுக்கத் தொண்டனும்;
ஆராதனைக்குரிய - என்
ஆசிரியப் பிரானும்;

என் பொருட்டு
எதிர்கொள்வதா ஆபத்தை?
இச்செயல் - இந்த
இராமானுஜனுக்குக் -
கூட்டி வைக்காதா
கொடிய பாபத்தை?

இதோ! நான் -
இப்பொழுதே செல்கிறேன்;
எதிராஜன் நான்தான் -
என்று வேந்திடம் சொல்கிறேன்!'

உறுதிபட -
உரைத்தார் உடையவர்; தான் -
உடைந்து - வயலுக்கு
உணவூட்டும் மடையவர்!

எதிராஜரிடம் கண்ட - இந்த
எதிர்பாராத திருப்பத்தில்...

அதிர்ந்த முதலியாண்டான்
அவசர அவசரமாகத் - தன்
விழிநீரை -
வழித்தெறிந்து விட்டு...

பெரியவர்
பெரியநம்பியின் -
திருவுள்ளத்தைத்
தெரிவித்தார்...

எதிராஜரிடம்;
எதிகளின் ராஜரிடம்!

'ஆசாரியரே! தேவரீருக்கு -
ஆசாரியரான -
பெரியவர்
பெரியநம்பி -

ஆக்ஞையிட்டாற்போல் - ஒன்றை
அருளிப் போயிருக்கிறார் - தான்
கூரேசர்
கூடப் போகையில்;

தேவரீர் - வெள்ளை
தரித்து - சில காலம்
திருவரங்கம் விட்டு -
தூர தேசம் போய்...

வாழ்ந்தால் தான் -
வைணவத் துவசம் -
விண்ணுயரப் பறக்குமாம் - இவ்
வையமிசை வாகையில்!

மன்னன் கையில்
மாட்டி...



தேவரீர்
திருமேனிக்கு -
ஏதேனும் பங்கம்
ஏற்படுமாயின்...

விசிஷ்டாத்வைதம் எனும்
விருட்சம் -
வேரற்று
வீழுமாம்;

தேவரீர்
திருமேனி -
பாங்கா யிருந்தால்தான்
பல்லுயிர்க்கும் நிழல் தர -

அந்த விருட்சம் -
ஆயிரம் காலங்கள் வாழுமாம்!

உலக க்ஷேமத்தை
உத்தேசித்து...

ஆதிசேஷன்
அம்சமாகிய -
தேவரீரைத்
திருப்பாற்கடல் நாராயணன் -

மானுடர் வாழும்
மண்ணுக்கு அனுப்பியுள்ளான்;

இட்ட பணி
இன்னணம் இருக்க -
நட்ட நடுவில் தேவரீர்
நிலம் நீங்கினால்...

ஒரு நாளும் - வைகுந்தன்
ஒவ்வாததை ஒப்புக்கொள்ளான்!

கிளைகள்
கழிக்கப் பெறலாம்; காற்றால் -
இலைகள்

இலையென அழிக்கப் பெறலாம்;

பூக்கள் –
பறிக்கப் பெறலாம்;
பூச்சிகளால் –
புசிக்கப் பெறலாம்!

அத்தகு –
அவலங்களுக்கு ஆளான...
மரம்
மறுபடி தழைக்கும்; ஆனால் –

அதன்
ஆணிவேர் –
பட்டுப் போனால் – அப்
பூமரம் எவ்வாறு பிழைக்கும்?

தேவரீர் – நம்
தருமத்தின் வேர்;



தேவரீர்
தாங்கி நிற்கும் –
விஷ்ணு தத்துவம் – மகா
விருட்சத்துக்கு நேர்!

இவற்றை – தேவரீரிடம்
எடுத்துரைக்கச் சொன்னவர்...
பெரியவர்
பெரியநம்பி;

வெள்ளை உடுத்தி – தேவரீர்
வெளியேற வேண்டும் –
பெரியநம்பியின்
பெருவாக்கை நம்பி!'

ஆசாரியர் பெரியநம்பியின்
ஆக்ஞை ஈதென்று...

முதலியாண்டான்
முன்னெடுத்து வைத்தும் –
உடையவர்
உள்ளம்...

வெள்ளை உடுத்தி
வெளியேற விரும்பவில்லை;

தான் அறப்பெய்து – மாயும்
தடமுகில் அனைய – அவரது
திருவுள்ளத்தில் –

தான் மட்டும் தப்பும் எண்ணம்...

அவ்வளவு சுலபமாய் –
அரும்பவில்லை!

முதலியாண்டான் –
மேலும் பேசினார்;
தன் கருத்தாய் – சில
தர்க்க நியாயங்களை வீசினார்!

'சுவாமி!
சோழ மன்னன்...

தனது ஊழியர்கள்
தவறான நபர்களை –
அழைத்து வந்ததை
அறிந்து...

ஆத்திரமுற்று
அவர்களைத்தான் –
கண்டிப்பான்;
தண்டிப்பான்!



வேடம் புனைந்து
வேந்தனை –
ஏய்த்தார்
எனக் குற்றம் சாட்டி...

கூரேசரை –
காராகிரகத்தில் –
ஓரிரு நாள்கள்
வைத்திருந்து விட்டு –

அதன்பின் –
அனுப்பிவிடுவான்;
திரும்பவும் –
தேவரீரைப் –
பிடித்து வரவே – தன்
பிரதானிகளுக்கு ஆணையிடுவான்!

எனவே –
இக்கணமே...

கூரேசர்; பெரியநம்பி;
கவலையை விட்டு –
தேவரீர் புறப்படுதல் நலம்;
தழைக்கும் வைணவ குலம்!'

முதலியாண்டான் – இன்னமும்

522

மொழிந்தபின்...

தான் –
தினமும்
திருவாராதனம் செய்யும் –
தேவராஜப் பெருமாளின் –

சேவடிகளை – உடையவர்
சிந்தித்தார்;
விழிகளை மெல்ல மூடி –
வந்தித்தார்!

'பெருமானே!
பேரருளாளா!
பெருந்தேவி நாச்சியார் –
பிரியமுடன் தழுவும் தோளா!

ஒன்று நீ நினைக்க – அதை
ஒழித்து –
மற்றொன்றை –
மானுடம் நினைக்குமோ?
அன்னணம் நினைப்பினும் –
அது நடக்குமோ?

அரங்கம் விட்டு
அகலா திருக்க –
அடியேன்
ஆசைப் படலாம்;

வெள்ளை உடுத்தி – நான்
வெளியேற வேண்டும் –
என்பதுதான் –
என் அய்யா! உன் உள்ளமாயின்...

அஃதை
அடியேன் –
என்னணம்
எதிர்த் திடலாம்?

இப்போது – என்
இதயம் தெளிந்துவிட்டது;

உலகு
உன் சித்தப்படிதான் –
ஆடும்; ஓடும்; எனும்
அரிய உண்மை...
என் –
எண்ணத்திற்குக்
கொஞ்சம் –
குழம்பிய பின்தான் பட்டது!'

உடையவர் –
உள்ளம் தெளிவு பெற்றார்;
இருந்த இடத்திலேயே
இருந்தபடி...

அரவுமேல்
அரங்கன் –
துயில் கொளும்
திருக்கோயில் நோக்கி –

கூப்பினார்
கரத்தை;
சிந்தையில் – அரங்கன்
சேவடி பதித்து –
சற்றே குனித்தார்
சிரத்தை!

பிறகு – கொல்லைப்
புறத்துக் கொடியில்...

காய்ந்து கொண்டிருந்த
கூரேசரின் –
வெள்ளையை எடுத்து
உடுத்திக்கொண்டு...



தொண்டர்கள்
தொடர;
விழிகளில் – மெல்லிய
வருத்தம் படர;

மெல்ல நடந்தார் – உடையவர்
மேற்குத் திசை நோக்கி;

நகர் எல்லையைவிட்டு
நகர்ந்தபின்...
குதிரைகளின்
குளம்புச் சத்தம் கேட்க –
உடன் வந்த –
உடையவர் அடியார்களை –

அது –
அச்சத்தில் போட்டது தூக்கி!

**– வளரும்**

## கவிஞர் வாலி

### நீலமலைச் சாரலில்...

குளம்புச் சத்தம் கேட்க -
குதிரைகளில் வருவது -

அரசன்
அனுப்பிய
ஆள்கள் - என
அறிந்து...

பொறைக்குப்
பொருளாய் இருந்த -
எதிராஜரே
எரிந்தார்;

சார்ங்கம் -
சக்கரம் -



திருக்கரங்களில் தாங்கும் -
திருமாலை தியானித்து...

பிடியளவு
புழுதிமண் எடுத்து - அப்
புல்லர் வரும்
பாதையில் எறிந்தார்!

புரவி வீரர்கள் -
போக்கறியாது -
'பொக்'கென நின்றனர்;

தம்மை மறந்து
தம்பித்தவர் - நினைவு
திரும்பிய பின்
தாம் வந்த வழியே...

துரகங்களை ஓட்டிக்கொண்டு -
திரும்பிச் சென்றனர்;
தமக்குத்
தாமே -
'பார்ப்பார் ஏதோ -
பண்ணார் மந்திரம்!' என்றனர்!

உடையவரும் - அவர்
உடன் வந்தோரும்...

நெடுநாள்
நடந்து நடந்து -
நீலகிரிச் சாரல் சேர்ந்தனர்;

தொடர்ந்து நடக்கத்
தெம்பின்றி -
தேகம் மிகவும் சோர்ந்தனர்!

# ராமானுஜ காவியம்

## 66

526

மலைக்காற்று - அவர்கள்
மேனி எங்கணும்...

குடம் குடமாய்க்
குளிரைக் கொட்டியது; அதன் -
வீரியம் - ஒரு
விருச்சிகம் போல் கொட்டியது!

வெடவெடத்தனர்;
படபடத்தனர்;
கையே
கம்பளியாக -
மெய்யை
மெல்லப் போர்த்திக் கொண்டு...



மரவட்டையாய்ச் சுருண்டு -
மலைப்பாறை மேல் படுத்தனர்;
ஆற்றொணா அளவு -
ஆடுசதைகள் கடுத்தனர்!

அவர்கள்
அவ்வாறு -
ஒதுங்கி
ஒடுங்கிய இடம்...

பரிச்சயம் இல்லாத - ஒரு
பாதசாரி -



பாதம் பதிக்க – வெகுவாய்
பயப்படும் வேடசேரி!

ஆம்!
அது...

வில்லேந்தும்
வில்லிகள் பூமி;
அதில் – ஓர்
அதிசயம் யாதெனில்...

வைணவராகிய – அவ்
வேட்டுவர் யாவரும் –

இடத்தில் –
தெரிவிக்க வேண்டும்
திருமலை நல்லான் பற்றி;
அவர்
அடிநாளிலிருந்தே...

மயர்வறு
மதிநலம் பெற்று –
உயர்ந்தவர்
உடையவர் திருவடி பற்றி!

எம்பெருமானாரின்
ஏரார்ந்த தரிசனத்தை;



நாளும் வழிபடுவது –
நாராயண சாமி!

'நெற்றியில் திரு நாமம்;
நெஞ்சினில் திருமால் நாமம்!'
என –
எஞ்ஞான்றும் –
வாழும் – அவ்
வைணவ வேடர்கள் –
நல்லான் சக்கரவர்த்தியின் –
நம்பிக்கைக்குரிய சீடர்கள்!

இந்த

எவ்வுயிர்க்கும் ஏயதாய் – அது
ஏற்றிருக்கும் கரிசனத்தை;

ஊர்
ஊராய்;
பட்டி
பட்டியாய்;

வாய்வலிக்க
விளம்பியவர்;
அதன் பொருட்டே
அரங்கம் விட்டு – ஓர்
அதிகாலையில்

528

ஆவேசித்துக் கிளம்பியவர்!

'சாதி
சமய -
வெப்பத்தால்
வெந்து கிடக்கும் -

மன்பதை
மறுபடியும் தழைக்க;
பட்டொழிந்து
போகாது பிழைக்க;

எதிராஜ மேகமல்லால் - வேறு
எவர் வந்து பெய்யக்கூடும் -
சம திருஷ்டி - எனும்
சகலருக்குமான ஒரு விருஷ்டி?'
என - நல்லான்
எண்டிசை கேட்க -
சொல்லிப் போனார்; தான் சொன்ன -
சொல்லுக்குத் தானே சான்றா யானார்!

மதுரை
மாநகரில் -
வைகை
வெள்ளத்தில்...

சண்டாளனின்
சவமொன்று -
மிதந்து வந்து
மெல்லக் கரை ஒதுங்குகையில்...

பிரேதத்தின் -
பணை அனைய -
இருதோள்களிலும் - திருமண்
இட்ட தழும்புகள் தெரிய...

அக்கணமே - நல்லான்
ஆற்றில் பாய்ந்து -
சண்டாளன் -
சவத்தைக் கரை சேர்த்தார்;
ஒரு
வைணவனுக்குரிய...

சகல
சம்ஸ்காரங்களையும் செய்து -
தானே அதற்குத்
தணல் மூட்டி -

'அநாதைப் பிணம்' என்னும் -
அபவாதத்தைத் தீர்த்தார்!

ஊரில் உள்ள
உயர்சாதிக்காரர்கள் -
சண்டாளனுக்கு
சம்ஸ்காரம் செய்த - நல்லான்
சக்கரவர்த்தியை
சாதிப் பிரட்டம் செய்தனர்;
'வேதியன் கெட்டான்!' என -
வசைமாரி பெய்தனர்!

பகவான் - ஒரு
பிராமணர் மீது ஆவேசித்து..

'இந்த
இளகிய நெஞ்சினன் -
எல்லோர்க்கும் பொல்லான்;
எனக்கு நல்லான்!' என்று -

சொல்லிச்
செல்ல...

சாதாரண - திருமலை
சக்கரவர்த்தி - அன்றுமுதல்
நல்லான் சக்கரவர்த்தி - என
நாமம் பெற்றார்;
நாட்டவர்
நல்லானிடம் -
உடையவர் சித்தாந்தத்தை
வழுவறக் கற்றார்!

அத்தகு நல்லானை
ஆசாரியனாக ஏற்றுத்தான்..

வைணவர் ஆயினர் - நீலகிரி
வாழும் வேடுவர்;
கண்ணால்
காணாமலேயே - எதிராஜர்மேல்
காதலாகிக்

கசிந்துருகி...

அவ்வப்போது - அவர் புகழை
ஆசையோடு பாடுவர்; ஆடுவர்!

வேடசேரிக்கு
வெகு அண்மையில் -

தனது -
தொண்டர் குழாத்தோடு -
தூறலிலும் சாரலிலும் -
துயில இடமின்றித் -
துடித்துத் துவண்டபடி...

நித்தம் - தாங்கள்
நெஞ்சில் வைத்து -
ஏத்தும் இறைவன்
எழுந்தருளியிருப்பது...

தெரியவந்தது - வேடர்
தலைவனுக்கு;
பரிசனங்களோடு
பதைபதைத்து ஓடிப்போய் -
பாஷ்யகாரரைத் தொழுது
பாதங்களில் பரவி -

தோத்தரித்து நின்றான் - தன்
தொல்வினைகள் தொலைவதற்கு!
பிறகு -
பிரார்த்தித்தான்..

உடையவரையும்
உடன் வந்தவரையும் -
தன் குடிலில்
தங்க;
அன்பும்
ஆதுரமும் -
பார்வைகளில்
பொங்க!



புளிஞர் குலத்துப் -
புரவலன் அழைப்பை...

எதிராஜர்
ஏற்றுக் கொண்டார்;

குளிர்காயக்
கணப்பு மூட்டி --
உபசார வார்த்தைகளால்
உற்ற சோர்வை ஓட்டி -

வேடர் தலைவன்
வழங்கிய...

தேனைத்
தினைமாவை -
உடையவர்
உளம் உவந்து உண்டார்!

காட்டு வாசிகளின்
களங்கமற்ற வாஞ்சையில்...

ஆசாரிய பக்தி
அருவியாய் வழிந்தது;
இனிய சூழலில்
இரவு கழிந்தது!



திருவரங்கத்திலிருந்து
தன்னுடன் வந்த -
நாற்பத்தைந்து
நல்லடியார்களோடு...

எதிராஜர்
ஏறினார் -
மறு நாள்
மலைக்கு மேலே;
ஆறுகாத தூரம்
ஆன பின்...

வேறொரு
வேடர் தலைவன் -

உடையவரை
உபசரித்து -
தாங்கினான்
தலைக்கு மேலே!

அதன்பின் - அவன்
அவர்களை அழைத்துக்கொண்டு...

சற்றுத் தொலைவிலிருந்த
சிறு கிராமத்தில் சேர்க்க..

அவ்வூரிலிருந்த - ஓர்
அந்தண மாது -

உடலெலாம் புளகம் எய்த
உடையவர் திருவடிகளில் -
விழுந்து வணங்கினாள்
விழிகள் புனல் வார்க்க!

'தேவரீர்
திருத்தொண்டர்களோடு -
அடியேன் இல்லத்தில்
அமுது செய்ய வேண்டும்!
ஆசாரியரின்
அன்ன சேஷத்தை
அருந்தி - இந்த
அடியாள் உய்யவேண்டும்!'

என்று
எதிராஜரிடம் -
விண்ணப்பித்துக் கொண்டாள்
விநயமாக;
கூடவே - '
கூறினாள்...

தான்
திருவரங்கத்தில் - முனம்
தங்கியிருந்த
தகவல்களை விவரமாக!

அந்த -
அம்மையார்தான்...

வீதி
வழி -
உபாதானம் எடுத்து
உடையவர் வருகையில்...

வழிமறித்து - அவரை
வேந்தர்; வெள்ளாளர்; ஒருசேர -
வழிபட வருகின்ற
விந்தை பற்றிக் கேட்டவர்;

பின்பு - சீயரிடமே
பஞ்ச சம்ஸ்காரங்கள் பெற்று...

கொங்கு நாடு திரும்புமுன் - தான்
கொண்டுசென்று துதித்திட -
பாஷ்யகாரரின் - திருப்
பாதுகைகளை வேட்டவர்!

அந்த
அம்மையாரின் இல்லத்தில்...

ஒரு சில நாள்கள்
உடையவர் தங்கி -
கொங்குப் பிராட்டியின்
கோதறு அன்பில் முங்கி -

பின்பு -
பழையபடி...

திரிதண்ட காஷாயாதிகளைத்
தரித்துக் கொண்டு -
தமது
திருத்தொண்டர் குழாத்தோடு -

மைசூர்ச் சீமைக்குள் - ஒரு
மன்னவன் செங்கோலோச்சும் -
தொண்டனூரில் -
திருவடி பதித்தார்;
அங்கிருந்த
அவரது சீடரான...

தொண்டனூர் நம்பி
தலைக்குமேல கரங்கூப்பி -
தண்டனிட்டு - உடையவரின்
திருவடி துதித்தார்!

அவ்வூர்
அரசன் -
விட்டலதேவராயன்
வாழ்க்கையில் -
எதிராஜரால்
ஏற்பட்டது ஒரு திருப்பம்;
சமண
சமயத்தைச் சேர்ந்த -
வேந்தனுக்கு வந்தது
வைணவத்தின் பால் விருப்பம்!

– வளரும்

# ராமானுஜ காவியம்

67



**விஷ்ணு வர்த்தனன்.**

உடையவரின் –
உற்றசீடர் தொண்டனூர் நம்பி...

ஒவ்வொருநாளும்
உபாதானத்திற்காக –
வேந்தன்
விட்டல தேவனின் –

வண்ண மாளிகைக்குச் செல்வது
வழக்கம்; அந்த
வழக்கத்தின் காரணமாக
வேந்தனின் தர்மபத்தினி –
சாந்தல தேவியுடன்
சிறிதளவு பழக்கம்!

பேரரசிக்கு ஒரு
பெண்; அப்பெண் –
சித்த சுவாதீன மற்று
சதா சர்வகாலம் –
அலகை பற்றினாற்போல்
அலறிக் கொண்டிருந்ததால் –

அளப்பரிய
அவலத்தில் –
ஆழ்ந்திருந்தது
அரசியின் கண்!

மன்னனுக்கும் – அதுபற்றி
மாளாக் கவலை; அவனது
விழி
விளிம்பிலும் –

கசிந்து கொண்டிருந்தது
கண்ணீர்த் திவலை!

தொண்டனூர் நம்பி – அரசமா
தேவியாரிடம்...

'அம்மா! எங்கள்
ஆசாரியர் –

எதிராஜர் – இவ்வூரில்
எழுந்தருளி யுள்ளார்;

அவரை –
அரசர்பிரான்
அரண்மனைக்கு அழைத்தால்



அவ் அழைப்பை...

சமண மன்னனாயிற்றே - என்று
சீயர் பெருமான் தள்ளார்!

இணையிலாத் தண்ணளிமிக்க
இராமானுஜரின்...

திருஷ்டியும் -
திருவடியும் -
தங்கள்
தனயை மீது பட்டால் -
நலமாகும்; பீடித்த
நோய் நீங்கிப் போகும்!'

என்று -
எடுத்து மொழிந்தார்;
தொண்டனூர் நம்பியே - ஒரு
தயாசாகரமாய் வழிந்தார்!

அரசி -
அரசனிடம் சொல்ல -
ஆழ்ந்தான்
அவன் யோசனையில் மெல்ல!

சமண குருக்களால்
சரிப்படுத்த முடியாத - தன்

**கவிஞர் வாலி**

மகளின் மனநோயை - வைணவ
மகான் ஒருவர் நீக்குவதா?

சமணத்தை விட
சக்தி வாய்ந்தது -
வைணவம் என்று
வையம் பேசும்படியான -

ஒரு கருத்தை - மனம்
ஒப்பி நாமே ஊக்குவதா?

இன்னணம் -
இரண்டொரு நாள்கள் -
எண்ணினான் வேந்து;
எண்ணத்தில் அலை போந்து!

ஏற்கெனவேயே - அவன்
எண்ணத்தில்...

விட்டல தேவனின்
விரல் ஒன்றை மட்டும் -
அரிந்தெடுத்து
அவமானப் படுத்தி விட்டு...

அவனைத் - திருப்பி
அனுப்பி விட்டான்;

'விரலிழந்த
வேந்து!' என -
விட்டல தேவன் - அன்று முதல்
விளிக்கப் பட்டான்!

அங்கஹீனனோடு
அன்னம் அருந்துதல் -
சாஸ்திர
சம்மதமில்லை என்று...



சைன
சமய -
மார்க்க குருமாரிடம் - ஒரு
மனத்தாங்கல் உண்டு;
அவர்கள் -
அவனோடு அமர்ந்து -
அமுதுண்ண மாட்டார்கள் - அவன்
அங்கஹீனன் எனக் கண்டு!

தில்லி பாதுஷா - விட்டல
தேவனோடு...

முன்பு ஒரு முறை - பகை
மூண்டு - தேவனை
செருவில் வென்றான்; வென்று -
சிறைப்பிடித்துச் சென்றான்!

வேந்தன் தரும்
விருந்துகளை -
அமண குருக்கள்
அங்கீகரிக்க வில்லை;

வேறு வழியின்றி -
வேந்தன்
தாங்கி நின்றான் - அந்தத்
தவசிகளின் சொல்லை!

இத் தருணத்தில்தான் -
இராமானுஜரைப் பற்றி...

அரசி -
அரசனிடம் கூறினாள்;
அவரை
அரண்மனைக்கு

அழைக்க வேண்டுமென்று - தன்
ஆளனிடம் கோரினாள்!

உடனே -
உடையவரை -
அரண்மனைக்கு
அழைக்காமல்...

சில நொடிகள்
சஞ்சலித்தான்; பின்பு -
சீயரை அழைக்கச்
சம்மதித்தான்!

உடையவர்
வந்தார்; தன்
ஸ்ரீபாத தீர்த்தத்தை - ஒரு
சீடரிடம் தந்தார்!

அச்சீடர் -
அரசகுமாரி மேல் -
அந்தத் தீர்த்தத்தை -
அங்கையில் அள்ளித் தெளித்தார்;

மறுகணம் -
மன்னன் மகள் - மன
நோய் நீங்கி
நலம் பெற்றது கண்டு...

ராஜனும் - பட்டத்து
ராணியும் மனங்களித்தார்!

சமண
சமயத்தை -
வேந்தன் கை கழுவினான்;
வைணவத்தைத் தழுவினான்!

விட்டல தேவன் -
'விஷ்ணு வர்த்தனன்' ஆனான்;

ஆசாரியன்
அருளிய
தாஸ்ய நாமத்தைப் பெற்று -
தலையாய தொண்டனாகிப் போனான்!

மன்னன் எவ்வழி?
மக்கள் அவ்வழி!
அமண மதத்தை விட்டு

அனேக மாந்தர் -
விலகி வந்து - ஏற்றனர்
வைணவம் காட்டும் செவ்வழி!
மன்னன்
மதம் மாறியது கண்டு...

சமண குருமார்கள்
சினம் கொண்டனர்; அவர்கள்
கொற்றவன் மீது
கோபம் கொள்ளாமல் -

அரசனை
அன்னணம் மாற்றிய
பாஷ்யகாரரைத் - தங்கள்
பகையெனக் கண்டனர்!

உடையவரை
வாதிட்டு வெல்ல -

பன்னிரண்டாயிரம் அமணர்
புறப்பட்டனர்;

இராமானுஜர் -
இளமுறுவல் காட்டி -
தர்க்க ரீதியாக - அவர்களது
தத்துவங்களைத் தகர்க்க -
தோல்வியைச் -சமணத்
துறவிகள் ஒப்புக் கொண்டு...

வாதத்தையும் - பிடி
வாதத்தையும் கை விட்டனர்!

பிறகு - ஸ்ரீ
பாஷ்யகாரர் -
தொண்டனூரிலேயே - சில
திங்கள்கள் தங்கி...
விசிஷ்டாத்வைத
வியாக்கியானம் செய்தார்;

உயிர்க்கும் -
உயிரற்றவைக்கும் -
உலகுக்கும் -

உள்ளுறைப் பொருளாக
உள்ளவன் -

536

நாராயணனே என்று
நாளும் காலட்சேபம் சாதித்து...

மதமெனும்
மப்பால்;
வினையெனும்
வெப்பால்;
தருக்கெனும்
தப்பால்;
அறங்களுக்கு
அப்பால்;

வாடி
வருந்திக் கொண்டிருக்கும்
மன்பதை மேல் - சன்
மார்க்க மழையைப் பெய்தார்!

தொண்டனூரில் -
தொண்டர் குலம் பெருகியது; அது -
உடையவர் திருவருளை
உன்னி உன்னி
நாளும் உள்ளம் - அனலிலிட்ட
நவநீதம் போல் உருகியது!

இப்படி -
இருந்து வருகையில்...

உடையவருக்கு
ஒரு கவலை வந்தது;

திருவரங்கத்திலிருந்து
தம்முடன் -
கொண்டுவந்த திருமண்
குறைந்து வருகிறது என்று...

அடியார்கள் சொன்ன சொல்தான் -
அந்தக் கவலையைத் தந்தது!

இன்னணம்
இராமானுஜரைக்
கொஞ்சநாள்தான் - பெருமாள்
கவலையில் வைத்துச் சோதித்தார்;

பின்பு -
பெருமாளே -

ஒருநாள்
உடையவர் கனவில் வந்து...

'யதுகிரிக்கு உம்வரவை
யாம் எதிர்பார்த்து நிற்கிறோம்;
நீர் தேடும் திருமண் -
நிரம்ப இங்கு உண்டு!' என்று -

அவரது செவிகளில்
அருள் கூர்ந்து சாதித்தார்!

எம்பெருமானார்
ஏகமாய் மகிழ்ந்தார்;
தயாநிதி எனும்
திருநாமத்திற் கேற்ப -
அவ்வப்போது
அடியார் படு துயரழிக்கும்...

திருமாலின் -
தண்ணளி எண்ணி நெகிழ்ந்தார்!

பாஷ்யகாரர் -
பயணிக்க...

மன்னன் -
முத்துப் பல்லக்கும்;
எம்பெருமானார்
ஏவிக் கூவிப் பணி கொள்ள -
ஏராளமான
ஏவலர்களும்;

உதவினான்
உடனே;
தன்
தனயையைக் காத்த
அருளாளருக்கு - தீர்த்தான்
அங்ஙனம் தன் நன்றிக் கடனே!

யதிராஜர் ஏறினார் -
'யதுகிரி' எனப்படும் -

புதர்கள் அடர்ந்த
பர்வதத்தின் மீது;

இவ்விடம் அவ்விடம் இன்றி -
எவ்விடத்திலும் -

மணம் வீசும் துளசிச் செடிகள் -
மண்டிக்கிடப்பது கண்டு...

துளவ மாலை
தொடுத்து -
அன்றாடம்
அருள்மிகு வடபத்ரசாயிக்கு..

வழங்கிய
வில்லிபுத்தூரார் நினைவு
வந்தது -
உடையவருக்கு அப்போது!

திடீரென்று -
துளசிச் செடிகளின் நடுவே...

பேரொளி ஒன்று
புறப்பட -
பாஷ்யகாரர் - மெல்லப்
புற்று மண்ணை நீக்கிப் பார்க்க -

திருமால் விக்கிரகம் ஒன்று -
தென்பட்டது கண்ணில்; ஆம்!
திருநாராயணன் தான் -
தோன்றினான் அன்னணம் மண்ணில்!

அழகிய விக்கிரகத்தை
அங்கையில் அள்ளி எடுத்தார்;
ராமானுஜருக்கு -
ரோமாஞ்சனம் ஏற்பட -
அவசநிலை எய்தி
ஆனந்த பாஷ்பம் பெய்து -

விக்கிரகத்தின்
வண்ணத்திருவடிகளை
விரல்களால் - மெல்ல
வருடி வருடி...
பாதக்கமலங்களுக்குப் -
பிரியமாய் முத்தம் கொடுத்தார்!

ஏராளமான திருமண்
எங்கும் தென்பட -
தொண்டரோடு சேர்ந்து
தானும் திரட்டினார்;
விஷயங்கள் அனைத்தையும்
வேந்தனுக்குத் தெரிவிக்க -
உடன் வந்த ஏவலர்களை
விரையுமாறு விரட்டினார்!

விஷ்ணு வர்த்தனன்
வெண்புரவி ஏறி...

யதுகிரிக்கு வந்து
யதிராஜரை சேவித்தான்;
அவரைப் பொறுத்தவரையில் - தான்
அரசனல்ல - ஓர்
அடிமை என்றே - தன்
அந்தரங்கத்தில் பாவித்தான்!

இராமானுஜர்
இயம்பினார்:

'திருநாராயணருக்கு - இங்கு
திருக்கோயில் கட்டுக;
இந்த
இறைப்பணியில் -
மக்கள் அனைவரும்
முனைந்து செயல்பட -
வேண்டி -
வீதிவீதியாய் முரசு கொட்டுக!'

எதிராஜர் ஆணையை ஏற்று -
எழுப்பினான் கோயில் -
விஷ்ணு வர்த்தனன் எனும்
வேந்து;

உடையவர் வாழ்த்தினார் - அவன்
உச்சி மோந்து!

எதிராஜருக்கு -
ஏற்பட்டது - கவலை ஒன்று;
ஓர் -
உற்சவ மூர்த்தி இலையே என்று!

உடையவர் கனவில்
வந்தார் பெருமாள்;
உற்சவ மூர்த்தி
உள்ள இடம் பற்றிய -
தகவலைத்
தந்தார் பெருமாள்!

**- வளரும்**




"கல்யாணத்துல பொண்ணு புடவை மேல ஆரத்தி கொட்டினதுக்கு மாப்பிள்ளை ஏன் கோபப்படறாரு?"

"நாளைக்கு அவருதானே அந்தப் புடவையைத் துவைக்கணும்!"



"என்ன உன் கணவர் துணி துவைக்கறாரு... வேலைக்காரி அதை உட்கார்ந்து வேடிக்கை பார்த்துட்டு இருக்கா?"

"வேலைக்காரி டிரெயினிங் பீரியட்ல இருக்கா!"



"எங்க வீட்டு குக்கர் பிரஷர் தாங்காம தூக்கி அடிச்சுடுச்சு.."

"ஐயையோ... உன் கணவருக்கு ஒண்ணும் ஆகலையே..?"

# ஐயோ பாவம், கணவர்கள்!

"நம்ம மகன், 'கல்யாணம் பண்ணி வைங்கப்பா'ன்னு கேக்க கூச்சப்படறான்..."

"அதெப்படி தெரிஞ்சிட்டீங்க?"

"'அப்பா... சமையல் கத்துக் கொடுங்கப்பா'ன்னு நாசூக்கா கேக்கறானே!"

- 'காசி' சக்திவேலன்



**டில்லி விஜயம்.**

"எதிராஜரே!
எனது உத்ஸவ விக்ரகம்...

'ராமப்ரியர்' - துருக்க
ராஜாவின் அரண்மனையில் -
இந்திரப்பிரஸ்தத்தில்
இருக்கிறார்; டில்லி -
மாநகரம் சென்று - அதை
மீட்டுவர வல்லார் -
உமையல்லால் - எவர்
உலகின்கண் இருக்கிறார்?"

சொப்பனத்தில் - பெருமாள்
சாதித்ததும்...

பாஷ்யகாரர் - தன்
பரிசனங்களோடு
புறப்பட்டார் டில்லி;
புரவலனை சிவிகை தரச் சொல்லி!

ஒல்லையாகப் பயணித்து -
ஓரிரு பவுர்ணமிகளில்...

இராமானுஜர்
இந்திரப்பிரஸ்தத்தைத் -
தொட்டார்; மன்னனுக்குத்
தகவல் விட்டார்!

பாஷ்யகாரரை -
பாதுஷா...

அரண்மனைக்கு
அழைத்து - அவர்
அமர்ந்திட - பிரத்தியேக
ஆசனம் இட்டான்;

சிவந்த திருமேனி -

செந்தண்மை ஒழுகும் திருவிழி -
துவாதச புண்டரங்கள்
துப்புகின்ற பொலிவு -

ஆகியவற்றால் - அவர்பால்
அவன் ஈர்க்கப் பட்டான்!

மதங்கள் கடந்த
மகானாய்க் கண்டான்;

'அய்யா! உமக்கு -



■ **கவிஞர் வாலி**

542

ஆவதென்ன எம்மால்?'
என -
எதிராஜரிடம் -
கூறுமாறு
கேட்டுக் கொண்டான்!

'ராஜனே!
ராமப்பிரியர் எனும் -
உற்சவமூர்த்தி
உன்வசம் உள்ளது; அதை -
உள்ளம் வைத்து - எனக்கு
உதவினால் நல்லது!

இறை - உன்பங்கில்
இருக்கும்;
இச் செயல் - உன்
இசையைப் பெருக்கும்!'

என -
எடுத்தோதி -

# ராமானுஜ காவியம்

## 68



பாதுஷாவை ஆசீர்வதித்தார் -
பாஷ்யகாரர்; எவர்பாலும்
பிறப்பால் பேதங்காணாத -
பெருங்கருணை பாத்தியதாரர்!

அரசன் -
அவருக்குத் -
தன் விக்கிரக சாலையைத்
திறந்து காட்டினான்;

'ராமானுஜரே! உமது -
ராமப்பிரியர் -
இங்கு
இருந்தால் - நீர்
எடுத்துச் செல்வதில்
எனக்கு ஆட்சேபணை இல்லை!'

என -
எல்லா விக்கிரகங்களையும் -

அவருக்குச் சுட்டி - சிலவற்றை
அவர்முன் எடுத்து நீட்டினான்!

தேடிவந்த விக்கிரகம்
தென்படாமல்...

உடையவர் - தன்
விடுதி திரும்பினார்;
விசனம் மேலிட -
விழிநீர் அரும்பினார்!

அன்றிரவு - கண்
அயர்ந்த பின்...

ராமானுஜர் கனவில்
ராமப்பிரியர் காட்சிதந்து -

'எதிராஜரே! நான்
எழுந்தருளியிருக்கும் இடம் -

சுல்தான் மகளின்
ஜனானாவில்;
அவளுக்கு - என்மேல்
அவ்வளவு பிரியம் - ஒரு
பாதுஷாவின்
புத்திரியாய் -

ஜனித்த போதும் - இந்த
ஜன்மாவில்!

அவளது
அந்தப்புரம் சென்று - என்னை
அழைத்தால் வருவேன்
அழகு நடை பயின்று!'

என்று சாதித்தார்;
எதிராஜர் சந்தோஷித்தார்!

மறுநாள் -
மன்னனிடம் சென்று...

உடையவர் - தனக்கு
உற்ற கனவைச் சொல்ல -
அதில் -
அவ்வளவாக
நம்பிக்கையற்ற சுல்தான் -
நகைத்தான் மெல்ல!

எனினும் -
எதிராஜரை...

அரசகுமாரியின்
அந்தப்புரத்திற்கு -



544

அரசன்
அழைத்துப் போனான்;
அடுத்த கணம் -
அங்கு -
நேர்ந்தது கண்டு - அவன்
நிலைகுலைந்தவன் ஆனான்!

ஜல்ஜல் என -
சலங்கை சத்தம் கேட்க -
மைவண்ண நறுங்குஞ்சி -
மெல்லக் காற்றாட -

கவின் மிகு - சிறு
கஞ்சுகம் ஒளிர -
கஸ்தூரித் திருநாமம்
கருபுருவங்களிடையே மிளிர -

ராமப்பிரியர் - வெகு
ரம்மியமாக நடைபயின்று -

அரசகுமாரியின்
அந்தப்புரத்திலிருந்து வந்து -

நவாப் இட்ட - பொன்
நாற்காலியில் -
எழுந்தருளியிருந்த
எதிராஜர் மடிமேல் -
உட்கார்ந்தார்;
உடையவர் துயர் தீர்ந்தார்!

'என் செல்வப்பிள்ளையே!'
என்று...
ராமப்பிரியரை -
ராமானுஜர் -
ஆரத்தழுவினார்; கண்ணீரால்
அப் பெருமாளைக் கழுவினார்!

அந் நேரம் -
அரசகுமாரி -
அந்தப்புரத்தில் இல்லாதது
அனுகூலம் ஆக...

உற்சவமூர்த்தியை
உடையவரிடம் தந்து -
ஊருக்கு அனுப்பிவைத்தான்
ஊராளும் அரசு;

பெருமாளைத் - தனிப்
பல்லக்கில் இருத்தி -
திருநாராயணபுரம் நோக்கித் -
துவக்கினார் பயணத்தை...

உள்ளம் குளிர - வைணவ
உலகாளும் அரசு!

அந்தப்புரம் திரும்பிய -
அரசகுமாரி...

அன்றாடம் - தன்
அருகில் வைத்துக்கொண்டு -
அழகிய
ஆடைகளும்;
அவிர்ந்திடு
ஆபரணங்களும்;

அணிவித்து -
அழகு பார்த்து -
ஆதி அந்தம்
ஆலிங்கனம் புரிந்து;

ராதைபோல் - கொஞ்சிய
ராமப்பிரியரைக் காணாது -

தனது -
தந்தையிடம் ஓடி -
'எங்கே ராமப்பிரியர்?'
என விசாரிக்க...

மகளுக்கு - நடந்தவற்றை
மன்னன் விவரிக்க...

பாதுஷாவின்
புத்திரி -
பித்துப்
பிடித்தவள் போல் ஆனாள்;
புரவியில் ஏறி - ராமப்
பிரியரைத் தேடிப் போனாள்!

ராமானுஜரும்;

ராமப்பிரியரும்;
பயணிக்கும்
பல்லக்குகளை -

நெருங்கி - தடுத்து
நிறுத்தினாள்;

'பிரியரைப்
பிரிந்து வாழ்தல் அரிது!'
என -
எதிராஜரிடம் -
நீண்ட உரையை -
நெக்குருக நிகழ்த்தினாள்!

ராமப்பிரியர்பால் -
ராஜகுமாரி கொண்டிருக்கும்...

கள்ளம் கபடமற்ற
காதலைக் கண்டு -
உடையவர்
உருகிப் போனார்;

மாற்று -
மதத்துப் பெண்ணுக்குத் - தன்
பகவானிடம் - இத்துணை
பிரேமையா? - என

வியந்து -
வேந்தன் மகள்பால் -
நந்தகுமாரனை
நேசித்த
நப்பின்னையின் சாயல்கண்டு -
நெஞ்சு இளகியவர் ஆனார்!

'ராஜகுமாரியே! நீயும் -
ராமப்பிரியனோடு -
பல்லக்கில் - ஒன்றாகப்
பயணிக்கலாம்!' எனப்
பரிவோடு மொழிந்தார்; கருணைப்
பிரவாகமாய் வழிந்தார்!

மன்னன் மகள்
மட்டற்ற மகிழ்வு கொண்டாள்;
அழகிய ராமப்பிரியனை

ஆரத் தழுவியபடி -

சிவிகையில் அமர்ந்து - தன்
சிவன் உய்யக் கண்டாள்!

சிறிது தூரம் -
சிவிகை சென்றதுமே -

ஏவலர்கள் - அதன்
எடை குறைவதை உணர்ந்து -
எதிராஜரிடம் சொல்ல - அவருள்
எழுந்ததோர் எண்ணம் மெல்ல!

தன் -
தண்டிகை விட்டு இறங்கி...

ராமப்பிரியரும் -
ராஜகுமாரியும் -
பயணித்த
பல்லக்கின் -
பட்டுச் சீலையை நீக்கிப்
பார்த்தார்;
ராமப்பிரியர் மட்டும் இருக்க -
ராஜகுமாரியைக் காணாது -
வியப்பில் - விழிகள்
வேர்த்தார்!

ராமப்பிரியரோடு
ராஜகுமாரி -
ஒன்றிவிட்டதை
ஓர்ந்து -
பெரிதும்
பரவசப் பட்டார்;

'தேவி! உன்
திருவுருவத்தை -
விக்கிரகமாக
வடித்து -

பெருமாள் திருவடி நிழலிலேயே -
பீ பீ நாச்சியாராகப்
பிறங்குமாறு -
பிரதிஷ்டை செய்வேன்!'

546

என –
எக்களித்து –
உணர்ச்சி வசமாகி –
உரக்கக் கூச்சலிட்டார்!

பின் –
பல்லக்குகள் –
தொடர்ந்து பயணித்தன –
திருநாராயணபுரம் நோக்கி;

நாளும் பொழுதுமாய் –
நல்லடியார் நடந்தனர் –
தோள்வலி பாராது –
தண்டிகைகளைத் தூக்கி!

ஒருநாள் இரவு –
ஒரு திருடர் கூட்டம்...

பதுங்கியிருந்து – பின்
பல்லக்குகளைத் தாக்க;
பக்கம் குடியிருந்த
பஞ்சமர்கள் வந்து காக்க;

பஞ்சமர் ஆற்றிய
பேருபகாரத்தை எண்ணி –

நன்றி நவில
நாவெழாமல் – எதிராஜர்
நீள நயனங்களில்
நீரொழுக நின்றார்;

கள்வர்களிடமிருந்து – தன்னைக்
காத்த –
கீழ்க்குலத்தாரைக்
கிட்ட அழைத்து...

'விழுந்து – உங்களை
வணங்கத் தோன்றுகிறது –
என் ஆழ்மனத்திற்கு!'
என்றார்!

'அய்யா!
அது தகாது!' என
அவர்கள் பேசினர்;

அண்டி நிற்கக் கூசினர்!

சியர் – அவர்கள்
சமீபம் சென்று –

வாஞ்சை ததும்ப
வார்த்தையாடினார்;
உயிர்களில் பேதம்
உதவாது எனச் சாடினார்!

"பெருமாளையும் –
பாகவதர்களையும் –
உரிய தருணத்தில் காத்த –
உங்களை – பஞ்சமர் என
உரைத்தாலும் விளித்தாலும் – என்
உள்மனம் நோகும்;

'திருக்குலத்தார்' எனும் –
திருநாமம் சூட்டி –
உங்களை கவுரவிப்பதே –
உசிதம் ஆகும்!

திருநாராயணபுரம் –
திருக்கோயிலில் –

பிரமோத்ஸவ காலத்தில் –
பெறலாம் நீங்கள் –

பகவத் தரிசனம்; நீங்கள் –
பாகவதர்; அல்ல அரிசனம்!"

இன்னணம் –
இராமானுஜர்தான்...

ஆயிரம்
ஆண்டுகள் முன்னமேயே –
அரிஜனங்களின்
ஆலயப் பிரவேசத்திற்கு...

போட்டார் –
பிள்ளையார் சுழி;
போக்கினார் –
பன்னெடுங் காலப் பழி!

– வளரும்



பவுன்சர் பந்தை
சிக்ஸர் அடிச்சே
ஆகணும்!



ஒரு
'பைஸ்'கூடப்
போகாமல்
இருக்க...



பௌலருக்கு
எக்ஸர்சைஸ்
இப்படி
இருக்கணும்..!

548

# குடிக்கிறாய்ங்க!



"டாக்டர்! படுக்கையிலிருந்து எழுந்து ஒரு பத்து நிமிஷத்துக்கு தலை பயங்கரமா சுத்துது. என்ன பண்ணலாம்?"

"பத்து நிமிஷம் லேட்டா எழுந்திருங்க!"

- பாஸ்கி



"நான்தான் அப்பவே சொன்னேனே... அந்த மருந்தைச் சாப்பிட்டா தொந்தி படிப்படியா குறைஞ்சிடும்னு.."

- கோவி. கோவன்



"எனக்கு அரையில புண் இருக்கு சார்!"

" 'அரை'ன்னா என்னதுய்யா?"

" 'ரெண்டு கால்' டாக்டர்!"

- ராஜபாளையம் பேச்சியப்பன்



# ராமானுஜ காவியம்

**திருவரங்கம் திரும்பினார்!**

சீயர் – தன்
'செல்வப் பிள்ளை'யை...

திருநாராயணபுரம்
திருக்கோயிலில் –
உற்சவ மூர்த்தியாய்
உட்கார்த்திப் பார்த்தார்; தன் –
அபிலாஷை நிறைவேறிய
ஆனந்தத்தில் ஆர்த்தார்!

விழாக் காலங்களுக்கான
விதிகளை வகுத்தார்;
சாங்கோ பாங்கமாக –
சம்ப்ரோக்ஷணம் நடத்தி –
நித்யப்படி பூஜைகளுக்கான
நியமங்களைத் தொகுத்தார்!

வேந்தன் –
விஷ்ணுவர்த்தனன்...

எதிராஜர் –
'எள்' என்றவுடன்
எண்ணெயாய் நின்றான்;

ஏவல் புரிந்து –
எம்பெருமானார் அருளால்
எல்லா வினைகளையும் வென்றான்!

பன்னிரண்டு ஆண்டுகள்
பாஷ்யகாரர் –
திருநாராயணபுரத்தில்
தங்கியிருந்து...

ஸ்ரீபாஷ்யத்தை
சாதித்தார்;
செவிமடுத்த
சாது ஜனங்களின்
போகூழ் அனைத்தையும் – தன்
பிரவசன வாளால் சேதித்தார்!

பவுத்தர்களோடு
பத்மகிரியில் வாதித்தார்;
வென்று – அவர்களுக்கு
வைணவத்தை போதித்தார்!

திருநாராயணபுரத்தில்
தன் பெயரால்...

'யதிராஜ மடம்' என -
யாண்டும் விளங்குமாறு -
எழுப்பினார் - ஓர்
எழிலார்ந்த மடம்;

பலரும் - அங்கு
பயின்று -
பிடிக்கலாயினர் - வைணவப்
பொற்றேரின் வடம்!

இன்னணம் -
இருக்கையில்...

பெரியவர் பெரிய நம்பி -
பார்வை பறிக்கப் பெற்று -







பரமபதம் -
போய்ச் சேர்ந்ததையும்;

கூரேசரும் - தனது
கூரிய நகங்களால் -
தன் கண்மலர்களைத்
தானே கிள்ளியெறிந்துவிட்டு...

திருமாலிருஞ்சோலையில் -
தனித்து வாழ நேர்ந்ததையும்;

கிருமிகண்ட சோழன்
கழுத்து புழுத்து - ஒரு
கிராமத்தில் இருக்கையில்
காலமாகி விட்டதையும்;

மேய்ப்பனில்லா
மந்தை போல் - அடியார்கள்
திருவரங்கத்தில்
தனித்துவிடப் பட்டதையும்;

ஸ்ரீரங்கத்திலிருந்து வந்த
ஸ்ரீவைஷ்ணவர் மூலம் -
உடையவர் கேள்விப்பட்டார்;
உளமுருகி கண்ணீர்விட்டார்!

அதற்குமேல் -

அவ்வூரில் -
இராமானுஜருக்கு
இருப்புக்கொள்ளவில்லை;

திருநாராயணபுரம் விட்டு -
திருவரங்கம் செல்லத் -
தீர்மானித்தார் - பிறர்வினை
தீர்த்தருளும் ஞானக்கொல்லை!

பாகவதர்கள் -
பிரார்த்தித்துக் கொண்டபடி...

உடையவர் - தன்
உருவத்தை - ஒரு
விக்கிரகமாக
வடிக்கச் செய்தார்;
அதில் தனது -
அருளை முற்றும் பெய்தார்!

'தமர் உகந்த திருமேனி' எனும் -
திருநாமத்தோடு - இன்றளவும்
திருநாராயணபுரத்தில் - அது
திகழ்கிறது; அதற்கு -
நித்திய பூஜை - அங்கு
நேர்த்தியாய் நிகழ்கிறது!

திருநாராயணபுரம் நீங்கி

552

திருவரங்கத்திற்கு -
எம்பெருமானார்
எழுந்தருளும் போது...

அகவை நூறுக்கு மேல்
ஆகிவிட்டது; அவரது -
திருமேனி - சற்றே
தளர்ந்திருப்பது கண்டு -
திருவரங்கமே -
தினமும் வியாகுலப் பட்டது!

'வாராதா மழை?' என -
வான்பார்த்து...

நின்று -
நித்தம் -
நெடுமூச்செறிந்த
நிலம் -
எனும்படி இருந்தது
எதிராஜரை - வைகலும்
எதிர்பார்த்துக் கிடந்த
ஏரார்ந்த பாகவத குலம்!

வாடிய
வயலை - ஒருநாள்
சூல்கொண்ட மேகம்
சூழ்ந்து கொண்டாற்போல் -

கால்கொண்ட
கருமுகிலாய் - முக்
கோல்கொண்ட
கோமான்...



நேர்
நிற்கக் கண்டு -

பொன்னரங்கம்
பூரித்துப் போனது;
உற்சவம் போல் -
ஊர் -
விழாக்கோலம் பூண்டு
வீதியெல்லாம் -

வாரி இறைக்கப்பெற்ற
வண்ண வண்ணப் -
பொடிகளால்
புழுதி மயம் ஆனது!

மாந்தர் வழங்கிய
மகத்தான வரவேற்பில்...

உடையவர் -
உள்ளம் செல்லவில்லை;
ஆயினும் - தன்
அடிமலர்களில் -
வரிசை வரிசையாய்
வந்து நின்று -



சேவிப்போரிடம் - அவர் தனது
சிந்தாகுலத்தைச் சொல்லவில்லை!

நான்கைந்து நாள்கள் - ஊரவர்
நல்கிய வரவேற்பை -
நயத்தகு
நாகரிகம் கருதி -

நின்று
நிதானமாகப் -
பெற்றுக்கொண்டு
பிறகு ஒருநாள் போனார்...

குஞ்சுகளைப் பார்க்கத் - தன்
கூடுதேடி - தாய்ப்பறவை
போவது போலே - பெரியவர்
பெரிய நம்பி வீடு தேடி!

ஆதிநாளில் - தன்னை
ஆற்றுப் படுத்திய...

ஆசாரியரின்
அருமந்தப் புதல்வி -
அத்துழாய்
அம்மைக்கும்;

பெரிய நம்பியின்
புதல்வரும் - தனது
பிரிய சீடருமான
புண்டரீகருக்கும்;

அவர்கள் - தம்
அத்தனை இழந்த
அவலம் தீர -
ஆறுதல் கூறினார்;

அன்னணம் -
ஆறுதல் கூறுகையிலேயே...

பெரியவர்
பெரியநம்பியின் -
பிரபாவங்களில்
பாஷ்யகாரரும் ஊறினார்!

ஆளவந்தாரின்
அச்சாக இருந்து -

மதுராந்தகத்தில் - ஒரு
மகிழமரத்தடியில் -
தனக்குத்
திருமந்திரம் உபதேசித்ததும்...

பிறகு - அவர்தன்
பாரியையுடன் -
தனது இல்லத்திலேயே
தங்க உத்தேசித்ததும்..

அதன்படி -
ஆறுமாதங்கள் - தன்
வீட்டு மாடியில் - அவர்
வசித்ததும்...

அவரிடம்
அனுதினமும் -
தான்
திருவாய்மொழி வாசித்ததும்...

ஆளவந்தாராகவே - தான்
அவரை விசுவாசித்ததும்...

இன்னும்
இவைபோன்ற நிகழ்வுகள் -
உடையவர் உள்ளத்தில்
ஒன்றன் பின் ஒன்றாய் எழ -
திருக்கண்களிலிருந்து - நீர்த்
திவலைகள் தெறித்து விழ -

அவ்விடத்தில்
அவ்வமயம் - ஓர்
அசாதாரணமான
அமைதி நிலவியது; பின் -
மெல்ல மெல்ல - அம்
மூவர் மனத்துள் இருந்த -
துக்கம் -
தூர விலகியது!

இராமானுஜர் - தன்
இருப்பிடம் திரும்பி...

கூரேசரைக்
கூட்டிவர -
திருமாலிருஞ் சோலைக்கு - ஒரு
திருத்தொண்டரை...

அவசர அவசரமாக
அனுப்பி வைத்தார்;
மூப்பினால்
மட்டுமல்லாமல் -

கூரேசரைக்
காணும் வரை - உடையவர்
திருமேனி -
தினம்தினம் எய்த்தார்!

ஓரிரு -
வாரங்களுக்குப் பின்...



கூரத்தாழ்வாரைக்
கூட்டிக்கொண்டு -
திருமாலிருஞ் சோலையிலிருந்து -
திருத்தொண்டர் வந்தார்;

தன்முன் வந்து -
தண்டனிட் டெழுந்த...

ஆழ்வாரின்
அந்தகக் கோலம் கண்டு -

எம்பெருமானார்
எதிராஜர் -
செங்கற் சூளைபோல்
சிந்தை வெந்தார்!

554

ஆழ்வாரை
அள்ளி எடுத்து
ஆகமும் ஆகமும் புல்லுமாறு -
ஆரத் தழுவினார்;
எதிராஜர் - தன்னுள்
எழுந்த தாபத்தை...

கண்ணற்ற கூரேசர்
கண்டுகொள்ளும்படி -
தன் விழிநீரால் - தொண்டர்
திருமேனியில் எழுதினார்!

ஆசாரியனின்
அன்புப் பிரவாகம் -
முடிமுதல் அடிவரை - தன்னை
முச்சூடுமாய் முழுக்காட்ட...

கூரேசர் - மயிர்க்
கூச்செடுத்து நடுங்கினார்;
பேச நா எழாது - எம்
பெருமானாரின் -
பாசப் பிடிக்குள் - ஒரு
பந்தாய்ச் சுருண்டு ஒடுங்கினார்!

'கூரேசரே! நான் -
கூவிப் பணிகொள்ளும் நேசரே!
திருமால் தாசரே! நம்
தரிசனத்தின் விசுவாசரே!

சோழ மன்னன் -
சபையில்...

வையம் புகழும் - நம்
வைணவம் -
விழுந்துபடக் கூடாதென்று -
வீர வாசகம் பேசி...

உமது விழிகளை -
உமது உகிர்களாலேயே -
கொடிமலர்கள் கொய்வது போல்
கொய்தீரா?

குடம்
குடமாய்ப்
புண்ணீர் -
பெய்தீரா?

பிடுங்கிய விழிகளையே - கூர்ப்
பகழிகளாக்கி -
ஏமாப்புடன்
எதிர்நின்ற -
வேந்தன்
வீழுமாறு எய்தீரா?



சைவத்தின்முன்
சரணடைந்து -
சிரந் தாழ்த்திச்
சேவகம் செய்ய...

ஒருநாளும்
ஒருபோதும் - நம் வைணவம்
ஒருப்படாது - என
ஒல்காத் துணிவொடு -

ஆழி சூழ் - இவ்
அகிலம் அறியச் செய்தீரா?

அய்யா! உம்மிலும்
அடியார் உண்டோ?
விசிஷ்டாத்வைதம்
விரிந்து பரந்து விளங்க -
துருவ நட்சத்திரம் போல்
துல்லியமாய்த் துலங்க -

என்னொத்த
எதிகள் -
தினம் தினம் ஆற்றும்
தொண்டெல்லாம் ஒரு தொண்டோ?

ஆழ்வாரே! நீர்?
அரியவர்;
என்னிலும் -
எவ்வளவோ பெரியவர்!'



உடையவர் - இவ்வாறு
உடைந்து போனார்;
குலுங்கிக் குலுங்கி - ஒரு
குழந்தைபோல் அழலானார்!

**- வளரும்**

# ராமானுஜ காவியம்

**'வரதராஜஸ்தவம்!'**

'ஊழிற் பெருவலி யாவுள' என்று -
உலகப் பொதுமறை யாண்டும் -
ஓதுவதை
ஓர்ந்து...

நேர்வதெல்லாம்
நாம் -
நேற்று விதைத்தவைதான் - என
நெஞ்சறியத் தேர்ந்து...

சந்தோஷத்தையும் -
சிந்தாகுலத்தையும் -
சம எடையில் வைத்து -
சமாதானம் அடைக என்று -

நற்றவத்தார்
நல்கிய நூல்கள் -
நடுநிலை சித்தாந்தங்களை
நமக்குப் படைக்கின்றன;

ஆயினும் -
அன்னணம் உபதேசித்தோர்
அவதார புருஷர்களாயினும் -
அவலங்கள் நேருகையில்...

அழுவதும்;
அரற்றுவதும்; சோகத்தில்
விழுவதும்;
விழுந்து பிரலாபிப்பதும்; பின் -

அவர்களே - தம்மை
ஆசுவாசப் படுத்திக் கொண்டு -
ஆடவந்த நாடகத்தில் -
அடுத்தடுத்து நேரும்...

இன்ப துன்பங்கள்
இயல்பானவையே என்று -

உலக நியாயத்தை
உணர்ந்து -
விசனங்களிலிருந்து
விடுபடுவதற்கான -
வழிமுறைகளை
வகுத்துக் கொள்வதும்;

சமுகத்தில் உள்ள
சராசரி
சனங்களைப் போலவே - அச்
சான்றோர்கள் பிறங்குவதும்;

பல -
புராணங்களில் -
பரவலாகப்
பார்க்கக் கிடைக்கின்றன!

ஆதலால்தான் -
ஆதிசேஷனின் அவதாரமாய் - ஓர்
அன்னை வழி -
அம்புவி இறங்கிய...

இளையாழ்வார் -
இராமானுஜரும் -
பெரிய நம்பியைப்
பிரிந்தது குறித்தும்;
கூரேசரின் கண்கள்
குருடானது குறித்தும்;
சமதிருஷ்டியுள்ள - ஒரு

■ கவிஞர் வாலி

சந்நியாசியா யிருந்தும் -
சராசரி மனிதனைப் போல்
சஞ்சலப் பட்டார்; ஒரு -
கிருகஸ்தனைப் போல் -
கண்ணீர் விட்டார்!

ஏற்றுக்கொண்ட பாத்திரம் -
எப்படி?
அதற்கேற்ப செயல்பட்டார் -
அப்படி!

செய்யாள் -
சீதையைப் போல் - ஒரு
பாத்திரம் ஏற்றுப்
புவியில் இறங்கியதால்தான்...

மானுடனை மணந்து -
மானுடப் பெண்ணுக் கேற்ப - ஒரு
கனக மானைக்
கண்டதும்...

அதை -
அடைய ஆசைப்பட்டாள்;
ஆசைப்பட்டு -
அதனால் அவதிப்பட்டாள்!

அஃதேபோல் -
அனந்த சயனனும்...

மனித உருக்கொண்டு - ஒரு
மன்னன் மகனாய் உதித்து -

தான்
தாங்கிய வேடத்திற்கேற்ப -
சம்சாரத்தை இழந்த
சராசரி புருஷனைப் போல்...

கேவினான்; 'சீதா! சீதா!' எனக் -
கூவினான்!

ஆக - இவையெலாம்
அவதார தருமங்கள்;
தரித்த
தோற்றத்திற் கேற்ப -
அணுவளவும் பிசகாது
ஆற்ற வேண்டிய கருமங்கள்!

பகவத் கீதைக்கு -

பாஷ்யம் எழுதிய -

உடையவர் -
உணர மாட்டாரா...
ஆன்மாவிற்கு -
அழிவில்லை என்பதையும்; ஓர்
ஆக்கைக்குள் புகுந்து -
அது -
வினைக்கேற்ப - இன்ப துன்ப
விளைவுகளைத் தின்பதையும்!



மனிதனோடு -
மனிதனாகக் கலந்து -
மனிதன் போல் அழுது -
மனிதன் போல் சிரித்து -

மனிதனுக்குரிய
மாண்புகளை போதித்து;
மனிதன் கடைத்தேறும்
மார்க்கங்களை சாதித்து;

ஊரவரை
உய்வடையச் செய்யத்தானே -
உடையவர்
உண்டாக்கப் பட்டார்;
திருமால் -
தனக்கிட்ட பணியை...
எதிராஜர்
ஏற்றமுறச் செய்து -
விரைவில் வான்திரும்பவே
விருப்பம் கொண்டு -

சில -
சில -

முக்கியக் காரியங்களில்
மௌனக்கெட்டார்!

அதில் ஒன்று - கூரேசரின்
அந்தகத் தன்மையை நீக்குவது;
ஆழ்வானைப் - பழைய
ஆழ்வானாய் ஆக்குவது!



தன் பொருட்டு -
திருஷ்டியை இழந்த...
கூரேசர் - மீண்டும்

560

கண்ணொளி பெற வேண்டும் – என்று
கருதிய –
கருணைக் கடல்...

பார்வையால் – கூரேசரைப்
பாதாதிகேசம் மொய்த்தார்; பின் –
ஆழ்வானின் கைகளை
அன்பொழுகப் பற்றி – தன்
வேண்டுகோளாய் – ஒரு
விண்ணப்பத்தை வைத்தார்!

'கூரேசரே! நான் –
கூறுவதைக் கேளும்;
இனியும் –
இருட்டில் உழலாமல் – இந்த
ஆசாரியன் சொல்கேட்டு
அந்தகாரத்திலிருந்து மீளும்!

என்னால்தான் – பிடுங்கி
எடுத்தெறிந்தீர் விழி;
என்னை உறுத்துகிறது –
என் மேல் விழுந்த பழி!

திரும்ப – உமக்கு
திருஷ்டி வந்தாலன்றி...

குற்றஉணர்வில்
குறுகுறுக்கும் என் நெஞ்சம் –

ஊண் –
உண்ணாது;
கண்ணுறக்கம்
கொள்ளாது;
ஆகவே – என்
ஆலோசனையை –
தயை கூர்ந்து கேளும் – புறம்
தள்ளாது!



காஞ்சியில்
கோயில் கொண்டிருக்கும்...

அத்திகிரி –
அருளாளன்; நம்
அன்னை பெருந்தேவியின் –
அன்பு ஆளன்;

துளப மாலை –
துவளும் தோளன்;
தொழுவார்க்கு – நிழல்தரும்
தூமலர்த் தாளன்!

வரதராஜனை வேண்டி – விழிக்கு
வெளிச்சத்தைக் கோரும்;
கண்ணொளி பெற்று –
கடுகி என்முன் வாரும்!



பெருமாள் உள்ளம் –
பாகாய்க் கரைய...

வந்தித்து –
சிந்தித்து –

பனுவல் ஒன்று
புனையும்; புனைகையில் –
அந்த
அருளாளனின்
அரவிந்த
அடிகளை...

நெஞ்சுருக நெக்குருக –
நினையும்;

பாடப் பாடப்
பாடப் பாடப் –
பரவசம் மேலிட்டு – அந்தப்
பிரவாகத்தில்...

தலைமுதல் அடிவரை –
தெப்பமாய் நனையும்;
இன்றே – அவனது
இசையை விளம்பும் –
பதிகத்தைப்
பாட முனையும்!



புனைந்த
பாடலை – திருக்
காஞ்சி சென்று – திருக்
கோயில் சந்நிதிமுன் நின்று...

ஓய்வு ஒழிவின்றி
ஓதும்; அது –
தேவராஜப் பெருமானின்
திருச்செவியில் மோதும்!

விலகும் – உடனே

விழி இருட்டு;
இன்றே -
இப்பொழுதே -
இயற்றும் துதியை -
இந்த ஆசாரியனின் பொருட்டு!'

இமைவிளிம்பில் -
இலேசாக ஈரம் கசிய -
இராமானுஜர்
இவ்வாறு வேண்டியும் கூட...

ஆழ்வான் -
அதற்கு உடன்படவில்லை;
அவரது
அந்தரங்கம் -
ஆசாரியனின்
ஆக்ஞையாக இருந்தபோதும்..



ஒப்பமறுத்தது -
உடையவர் சொல்லை!

'ஆசாரியனே! நான்
ஆராதிக்கும் ஆண்டவனே!

எனக்கு -
எதற்கு புறக்கண்கள்?
அநித்தியங்களைக் காணுவதும்;
அவைமாட்டு காதல் பூணுவதும்;
கடைவழிக்கு உதவாக் -
கனவுகள் தோணுவதும்;
கனவுகள் மெய்ப்படக் -
களவுவழி சென்று -
காரியங்கள் கைகூடாது -
கடந்ததை எண்ணி நாணுவதும்;

இத்தியாதி
இத்தியாதி
இழிவுக்கு இலக்காக்கும்
இவையா அறக்கண்கள்?

உய்யும்
உயிர்க்கு
ஊனம் விளைக்கும் - இந்த
ஊனக்கண்கள் போனால் என்ன?
அனைத்தும் எனக்கு -
அந்தகாரமாய் ஆனால் என்ன?

மீட்டும் - அவற்றைக்
கேட்டுப் பெற்று என்ன லாபம்?
இச்சை வைத்து இச்சை வைத்து -
இன்னும் கூடும் மகாப்பாபம்!

குருநாதர் - அருள்
கூர்ந்து கொடுத்த...

என் ஞானக் கண்களை -
எவரால் அழிக்க ஏலும்?
வைகுந்தம் -
வைகும் -
வைனதேய வாகனனைக் காண -
வைகலும் அகக்கண்ணே சாலும்!

ஆசாரியனே!
அடியேன் குருடனல்ல;
ஆசாரியன்
அனுக்கிரகத்தால் -
ஞாயிறு ஒளிபோல் - நான் பெற்ற
ஞான வெளிச்சத்தை என் சொல்ல!'

இப்படிச் சொன்ன - தன்
இனிய சீடரை எண்ணி
எதிராஜர் -
ஏமாப்புற்றார்;
எனினும் - தன்
எண்ணத்தைக் - கூரேசர்
ஏற்காததை எண்ணி
ஏமாற்ற முற்றார்!

இருப்பினும் -
இரண்டொரு நாள்கள் கழித்து...

கூரேசர் -
கண்பெற வேண்டி -
வரதராஜன் மீது
வாழ்த்துக்கவி பாட -

உடையவர் -
வெகுவாக நிர்ப்பந்தித்தார்;
இனியும் - ஆசாரியன்
இட்ட ஆக்ஞையை -
மறுதலிப்பது
முறையல்ல என்று...

ஆழ்வான் -





அத்திகிரியானை சிந்தித்தார்!

ஏடு எடுத்து - ஒருவரை
எழுதப் பணித்து...

கூரேசர்
கூறிக்கொண்டே போனார் -
'வரதராஜஸ்தவம்' எனும்
வான்புகழ் கொண்ட துதியை;

அதில் -
அழகிய -
உவமைகளும்;
உருவகங்களும்;
மாண்புகளும்;
மதிப்பீடுகளும்;



துல்லியமாகத்
துலங்க -
வாய்மணக்கப் பாடினார் -
வைகுந்தம் வைகும் மாநிதியை!

பாடிமுடித்து - அந்தப்
பனை ஓலைச் சுவடியோடு -
வழித்துணைக்குத் - தன்மகன்
வியாசனையும் அழைத்துக்கொண்டு...

கூரேசர் -
காஞ்சிக்குப் புறப்பட்டார்;
அங்கே - அத்திகிரி
அருளாளன் சந்நிதியில் -
அவர் - தான்
ஆக்கிய...

'வரதராஜஸ்தவ'த்தைப் பாடி -
விழிநீர் விட்டார்!

அர்ச்சகர் மேல் -
ஆவேசித்த வரதனிடம்...

கூரேசர் - தனக்குக்
கண்ணொளி கேட்கவில்லை;
எவரும்
எதிர்பாராத -
ஒன்றைக் கேட்டார்
ஒப்பரிய அந்த ஞானக் கொல்லை!

**- அடுத்த இதழில் நிறைவு பெறும்**

5764

# ராமானுஜ காவியம்

71



: கவிஞர் வாலி



: கோபுலு

: மாருதி



**தானான திருமேனி!**

**கா**ஞ்சியிலிருந்து -
கூரேசர்...

தன் மகனுடன்
திருவரங்கம் -
திரும்பிய பிறகுதான்
தெரியவந்தது -

எதிராஜருக்கு - கூரேசர்
என்ன வரம் கேட்டார் என்று;

உடனே -
உடையவர் - தன்
உத்தரீயத்தை
உயர வீசி...

ஆனந்த



ஆரவாரம் செய்தார் -
உவகை வெறி
உச்சந்தலைக்குச் சென்று!

கண்ணொளியை - வரதனிடம்
கேட்டுப் பெறாமல்...

கண்ணிழக்கக்
காரணமான -
தனது
தொண்டன் -

'நாலூரானும் பெற வேணும் -
நான் பெறும் பேறு!' என்று -
கேட்டாராம்
கூரேசர்;
அடுத்துக் கெடுத்த - அந்த
அற்பனுக்கும்...



'இன்னா செய்தார்க்கும் -
இயற்றுக நன்னயம்' எனும் -
வாக்குப்படி - அந்த
வாகீசர்!

கெட்டவனோ நல்லவனோ -
குருவைச் சார்ந்த சீடன் -
உய்ந்து போகிறான் - எனும்
உயரிய -

வைணவ சித்தாந்தம்
வையமிசை - கூரேசரால்
உத்தாரணம் செய்யப்பட்டதில்
உடையவருக்கு...

ஆனந்தமோ -
ஆனந்தம்;
அளப்பரிய -
ஆனந்தம்!

கூரேசர் எனப்படும்
கூரத்தாழ்வார்..

அரவு மேல்
அறிதுயில் கொள்ளும் -
அரங்கனின்
அடிமலர்களில் யாசித்து...

ஒருநாள்
ஒப்பரிய -
பரமபதத்தைப்
பெற்றார்;

தன்
திருத்தொண்டர் -
திடீரென்று
திருநாடு அலங்கரித்ததில்..

இராமானுஜர்
இடிந்து போனார்;
அகவை நூற்றிருபது - ஏறத்தாழ
ஆகிவிட்ட நிலையில்...

அதிகம்
அழக் கூட -
ஆகாத
அசக்தர் ஆனார்!

ஆழ்வாரின் -
அணுக்கத் தொண்டரான...

உறங்காவில்லி தாசர் -
உன்மத்தம் பிடித்தாற்போல் -
ஊருக்குள்
உலா வந்தார்;

பேராசானான கூரேசரின்
பிரிவைத் தாளாமல் -
நித்த நித்தம்
நெஞ்சு வெந்தார்!

ஒருநாள் - அத்தகு
வில்லிதாசரும்...

எம்பெருமானார்
எதிராஜரின் -
திருவடி நிலைகளைத்
தம் முடிமேல் வைத்தபடி -

பரமபதம்
போனார்;

நித்ய சூரிகளின்
நிரலில் ஒருவராய் ஆனார்!

'துணை காணேன்; ஊரும் -
துஞ்சிற்று; உலகமும் -
துயின்றது...
தேரும் போயிற்று;
திசைகளும் மறைந்தன;
செய்வதொன்று அறியேனே!' என -

தீந்தமிழில்
திருமங்கை மன்னன் -

பாடியருளிய
பாசுரத்தைப் -
பாடியவாறே
'பொக்'கென விழுந்து...

உயிர்
உகுத்தாள் -
'பொன்னாச்சி' எனும்
புண்ணிய வதி;
புடைவை கட்டி உலவிய
பக்தி நதி!

இராமானுஜர் முன்நின்று -
இருவரையும்...

பொன்னிக் கரையில் - ஒருசேரப்
பள்ளி படுத்தி - அந்திமக்
கிரியைகளைப் புரிந்தார்;
கண்ணீரைச் சொரிந்தார்!



பரமபதம்
புகும் நோக்கம் -
பாஷ்யகாரரையும்
பற்றிக் கொண்டது;

ஓரளவு - இதை
ஓர்ந்த -
சீடர் கூட்டம் - அவரைச்
சுற்றிக் கொண்டது!

தம் பிரிவைத்
தாளாது - தம்
திருத்தொண்டர்
தவிப்பர் என்பது...

உடையவர்
உணர்ந்திருந்ததால் -
கிடுகிடுவென்று - சில
காரியங்களைச் செய்தார்;

தன்னைப் போலவே
தத்ரூபமாய் - ஒரு
விக்கிரகத்தை
வடிக்கச் சொல்லி...

அதை
ஆரத் தழுவி -
அதனுள் - தன்
அருட்சக்தியைப் பெய்தார்!

'தான் உகந்த -
திருமேனி!'

என
ஏற்றம் பெற்ற -

அந்த விக்ரகத்தை - தன்
அவதார ஸ்தலமான - ஸ்ரீ
பெரும்பூதூரில் -
பிரதிட்டை செய்யுமாறு...

முதலியாண்டானின்
மைந்தர் -
கந்தாடையாண்டானிடம்
கூறினார்;

இன்னணம் -
இராமானுஜப் பெருந்தகை...

தம்
தொண்டர் குழாத்திற்குத் -
தொட்டனைத்து ஊறும்
தண்ணளிக் கேணியாய் ஊறினார்!

எதிராஜர் - தான்
ஏற்றிருந்த -
சர்வ
சக்தியையும்...

பெரும்பூதூர் விக்கிரகத்தில்
புகுத்திவிட்டு - திவ்வியத்
திருமேனி நாட்பட நாட்படத்
தளர்வு பட்டு -

தன்
திரு -
முடியை - எம்பார்
மடியிலும்; தன் திரு
அடியை - வடுக நம்பி
மடியிலும்;

வைத்தபடி ஒருநாள்
வைகுந்தம் ஏகினார்; திரு -
மாலின் படுக்கையாய்
மறுபடி ஆகினார்!



அரங்கன் –
அவரைத் –
திருப்பள்ளி படுத்த –
தனது –
வசந்த மண்டபத்தையே
வழங்க;
'வாழி! எம்பெருமானார்!' என
வையம் முழங்க;

ஸ்ரீரங்கத்தில்
ஸ்ரீவைஷ்ணவர்கள்...

அருளார்ந்த
அந்த இடத்திலேயே –
எதிராஜருக்கு – ஒரு சந்நிதி
எழுப்பினர் அன்று;

'தானான திருமேனி'யாய் – அது
திகழ்கிறது இன்று!

உடையவர் –
வாழ்ந்த காலத்தில்...

பரம பாகவதர்களாய் –
பன்னீராயிரம் பேரும்;
எதிகளாய் –
எழுநூறு பேரும்;
இருந்ததாக
இயம்புகிறது...



குருபரம்பரை; தொடர் அறாத –
ஒரு பரம்பரை!

ஸ்ரீவைஷ்ணவ மதம் –
சீரும் சிறப்புமாய் –
புவிமிசை
பிறங்க...

தமது
திருத்தொண்டர்களில் –
எழுபத்து நான்கு மாணிக்கங்களை -
எதிராஜ முனிகள் –
சிம்மாசனாதிபதிகளாகச்
செய்தார் நியமனம்; அந்த
நியமனத்தால் – இன்றளவும்
நறுமணம் பிலிற்றி –
வாடாது நிற்கின்றது
வைணவப் பூவனம்!



'எழுத அரிய பெருமான் என்று –
எண்ணாது, எழுதியிருந்தேனே!'
என்று –
ஏந்திழை ஒருத்தி...

காதல் கொண்ட தன்
கரியமாலின் –
திருவுருவத்தை – ஓவியமாய்த்
தீட்ட முயன்று...
அதில் தோற்றுப் போய் –
அங்கலாய்ப்பதாய் –

தன் –
திருவரங்கக் கலம்பகத்தில் –
பிள்ளைப் பெருமாளையங்கார்
பாடினாற் போல்...

எதிராஜர் வரலாற்றை
எளியேனும் எழுதப் புகுந்து –
ஏட்டில் –
எழுத்தில் –

'உட்கார்த்த ஒண்ணாதது – திரு
உடையவர் சீர்த்தி' என்று –
ஓர்ந்தேன்; ஓர்ந்து
சோர்ந்தேன்!

ஆசைவயப்பட்டு – என்னால்
ஆனமட்டும் புனைந்தேன்;
புனைந்த நாளெல்லாம் –
பேரருட் புனலில் நனைந்தேன்!

பிழையிருப்பின் – வைணவப்
பெரியோர்கள் – வசைபாடாது
பொறுத்தருள வேண்டும் – எனப்
பொன்னடி போற்றுகிறேன்
யாண்டும்!

**ஸ்ரீமதே ராமானுஜாய நம:**

